## தாள் 1: ஒப்பிலக்கியம்

# பிரிவு – 1 ஒப்பிலக்கியம்

## கூறு 1

### ஒப்பிலக்கியத் தோற்றமும் வளர்ச்சியும்

**எண் பாடத்திட்டம் - பொருளடக்கம் பக்கம்**

## பிரிவு – 2 : ஆய்வுகள் - கோட்பாடுகள்

**கூறு 5**

**ஒப்பிலக்கிய ஆய்வுகள் - பொதுநிலை**



**கூறு 6**

**அடிக்கருத்தியல் - இலக்கிய வகை - இணைநிலை – தாக்கம்**

6.4. இலக்கிய வகை

6.4.1. இலக்கியவகை, காலப்பகுதி. இயக்கம்

6.4.1.1. அடிப்படை வகைகள்

6.4.1.2. உத்தி வகைகள்

6.4.1.3. வடிவ வகைகள்

6.4.1.4. மைய வகைகள்

6.4.1.5. உணர்ச்சியனுபவ வகைகள்

6.5. மையப்பொருள் வகைகள்

6.5.1. இணை நிலைக் கோட்பாடு

6.5.2. இணைநிலையும் பிறதுறைகளும்

6.5.2.1. இலக்கியத்தைத் தொடர்பற்ற மற்றோர் இலக்கியத்துடன் ஒப்பிடுதல

6.5.2.2. பொது மூலங்களைத் தேடுதல்

6.5.2.3. பொது நியதிகளை ஆராய்தல்

6.5.2.4. சமுதாய வரலாற்றுப் பின்னணியை ஆராய்தல்

6.5.2.5. கருத்தின் உலகளாவிய தன்மையை ஆராய்தல்

6.6. தாக்கம்

6.6.1. செல்வாக்கும் தாக்கமும்

6.6.2. இலக்கியத் தாக்கத்தை அறிவதற்கான வழிகள்

6.6.2.1. நேரடியான தாக்கத்தைக் காண்பது

6.6.2.2. மூல இலக்கியம் ஏற்படுத்திய உந்துல்களைக் காணுதல்

6.6.2.3. தொடர்புகளில் ஏற்பட்ட தாக்கத்தைக் காணுதல்

6.6.2.4. தன்வயமாக்கல் நிலைகளைக் காணுதல்

6.7. அடிக்கருத்தியல் - இலக்கிய வகை - இணை நிலை – தாக்கம் - விளக்கம்

**வினா – விடை – பயிற்சி**

**கூறு 7**

## ஒப்பிலக்கிய ஆய்வுப்பரப்பு

7.1. முன்னுரை

7.2. நோக்கம்

7.3. யாப்பு வடிவம்

7.4. இலக்கிய வரலாறு

7.5. தாக்கக் கோட்பாடு

7.6. ஏற்றல் கொள்கை

7.7. உருக்காட்சி

7.8. படிமம்

**கூறு: 9**

**அமெரிக்க கோட்பாடு**



## பிரிவு – 3: மொழிபெயர்ப்பு – பிறகலைகள்

**கூறு: 10**

**ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும்**

**கூறு 11:**

**இலக்கியமும் பிற கலைகளும் - இலக்கியமும் வரலாறும்**

11.8. வரலாற்று நோக்கில் இந்திய இலக்கிய வரையறையும் அணுகு முறைகளும்

11.8.1 . இந்திய மொழிச் சூழல்

11.8.2. இந்திய இலக்கியத்தில்இந்தியத்தன்மை

11.8.3. இந்திய இலக்கியம் - வரலாற்று அணுகுமுறை

11.8.4. இந்திய இலக்கியம் - ஒப்பீட்டு அணுகுமுறை

11.9. இலக்கியமும் பிற கலைகளும்-இலக்கியமும் வரலாறும் விளக்கம்

**வினா - விடை பயிற்சி**

## பிரிவு – 4: பிறதுறைகள் - காலமும் இலக்கியமும்

**கூறு-12:**

### உளவியலும் இலக்கியமும் - பிற துறைகளும்

12.1 முன்னுரை

12.2 நோக்கம்

12.3 உளவியலும் இலக்கியமும்

12.3.1 நினைவுத்தொடர் அல்லது சிந்தனை இயல்பு

12.3.2 குறிஞ்சிப்பாட்டு – ஓர் உளவியல் பாட்டு

12.3.3 அகப்பாடல் மரபுகள்

12.4 ஒப்பிலக்கிய நோக்கில் உளவியல் அடிப்படையில் நாட்டுப்புறப்பாடல் ஆய்வு

12.5. உளவியல் அணுகுமுறையில் ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் (Comparative literature and Translation)

12.5.1 ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும்

12.6 ஒப்பிலக்கியத்தில் திறனாய்வு நோக்கில்

12.6.1 படைப்பு வழிமுறை

12.6.2 ஒத்துணர்வு

12.6.3 வாழ்க்கை வரலாற்றுத் திறனாய்வு

12.6.4 ஓடிபஸ் மனவுணர்வு

12.6.5 சொல்லும் உத்தியும்

12.6.6 நனவோடை

12.6.7 வாசகன்

12.6.8 உளவியல் திறனாய்வாளர்கள்

12.7. உளவியலும் இலக்கியமும் - பிற துறைகளும் - விளக்கம்

**வினா – விடை- பயிற்சி**

**கூறு 13**

**இலக்கியமும் அறிவும் - இயற்பியல் கோட்பாடு**



**கூறு: 14**

**சார்பியல் கோட்பாடுகள் காலமும் இலக்கியமும்**

# பிரிவு – 1

# ஒப்பிலக்கியம்

## கூறு-1: ஒப்பிலக்கியத் தோற்றமும் வளர்ச்சியும்

### 1.1 முன்னுரை

இலக்கியம் என்றால் என்ன? இச்சொல் தமிழில் எங்ஙனம் தோன்றிற்று ஆங்கிலத்தில் எவ்வாறு பயன்படுத்தப்பெற்றது. எப்படி ஒப்பிலக்கியம் என்ற சொல் தோற்றம் பெற்றது அதன் வளர்ச்சி அமைந்த விதம் ஆகியவற்றைக் காண்போம்.

### 1.2. நோக்கம்

- இலக்கியம் என்ற சொல்லின் தோற்றம்
- ஒப்பிலக்கியம் என்ற சொல்லின் தோற்றம்
- ஒப்பிலக்கியத்தனை மறுத்தமை, அதன் இலக்கணம், அதை பற்றிய புரிதல், அவற்றின் பயன் மற்றும் வளர்ச்சி குறித்துத் தெளிவடையலாம்.

### 1.3. ‘இலக்கியம்’ எனுஞ்சொல்

தமிழில் இன்று பெருவழக்காக உள்ள ‘இலக்கியம்’ எனும் சொல்லைத் தொல்காப்பியர் பயன்படுத்தவில்லை. திருவள்ளுவருக்குத் தெரியாத சொல் இது. காப்பியக் கலைஞர்களான இளங்கோவடிகளும் கம்பனும் கேட்டறியா சொல், இச்சொல் முதன் முதலாக மாணிக்கவாசகரால் ‘இலக்கிதம்’ எனும் வடிவில் வழங்கப்பட்டுள்ளது. வருமாறு, ‘‘பேசும் பொருளுக்கிலக்கிதமாம்’ எனும் அடியினில்’’ (திரு-6327) ‘இலக்கியம்’ என்று நூலைச் சுட்டவில்லை. ‘மேற்கோள்’ ‘எடுத்துக்காட்டு’ ‘பிரமாணம்’ எனும் பொருளிலேயே இச்சொல் வழங்கப்பட்டு இருப்பதைக் காணலாம்.

கி.பி.10-ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 11-ஆம் நூற்றாண்டிலும் வாழ்ந்ததாக அறியப்படும் நம்பியாண்டார் நம்பி ‘ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்’ எனும் நூலில், ‘வரலாறு பிழைப்பினின் வாழி யிலக்கிதமாம்’ (திருமுறை 11∴38:36) எனுந்தொடர் இடம் பெற்றுள்ளது. இச்சொல்லும் மேற்கண்ட பொருளிலேயே வழங்கப்பெற்றுள்ளது.

முதன்முதலாக ‘இலக்கியம்’ எனும் வடிவத்தில், தோலாமொழித்தேவர் (கி.பி.9.நூ.ஆ.இறுதி) இச்சொல்லைப் பயன்படுத்தி உள்ளார். “காம நூலினுக்கு இலக்கியம் காட்டிய வளத்தால்’’ (சூளாமணி:459) எனும் அடியிலும் ‘எடுத்துக்காட்டு, ‘உதாரணம்’ எனும்

பொருளிலேயே இச்சொல் வழங்கப்பெற்றுள்ளது. பேரகத்தியத்திரட்டு மேற்கோள்(1)-ல்



குறிப்பு

**“இலக்கியம் இன்றி இலக்கணம் இன்றே**
**எள்இன்று ஆகில் எண்ணெயும் இன்றே**
**எள்ளினின்று எண்ணெய் எடுப்பது போல்**
**இலக்கியத்தினின்று எடுபடும் இலக்கணம்”**

இப்பாடலின் காலம் அறிதற்கில்லை. இப்பழம் பாடலில்தான் கற்பனை வளமும், கலையழகும் வாய்ந்ததொரு படைப்பு ‘இலக்கியம்’ எனும் பெயரால் சுட்டப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

எனினும் 19-ஆம் நூற்றாண்டில் மேற்கு நாட்டுக் கல்வியைப் பயின்று சிறந்த மாயூரம் வேதநாயகம் பிள்ளை அவர்களும் பேராசிரியர் பெ.சுந்தரம் பிள்ளை அவர்களும் ஆங்கிலத்தில் வழங்கி வரும் ‘லிட்டிரேச்சர்’(Literature) என்னும் சொல்லிற்குப் பொருத்தமான தமிழ்ச்சொல்லாக ‘இலக்கியம்’ என்ற சொல்லை வழக்கிற்குக் கொண்டு வந்துள்ளனர்.

இலக்கியம் எனுஞ் சொல் அரிஸ்டாட்டிலுக்கும் தெரியாது, பண்டைய ரோமானியக் கவிஞரான ஹாரஸ் (Horace) கூட ‘இலக்கியம்’ எனும் பொதுப்பெயரை அறியவில்லை.

ஏறக்குறைய ஐரோப்பா முழுவதிலும் 17-ஆம் நூற்றாண்டு முடியும் வரையில் இதுவே தொடர்ந்தது.

இங்கிலாந்தில் 17-ஆம் நூற்றாண்டில் சிறப்புற்று விளங்கிய நாடகப் பேராசிரியர் ஷேக்ஸ்பியர் (Shakespeare) அவருக்கும் ‘லிட்ரேச்சர்’ (Literature) எனும் சொல் தெரியாது.

**லிட்ரேச்சர் எனும் சொல்லாட்சி**

ஆங்கிலத்தில் ‘இலக்கியம்’ எனும் பொருள் பயக்கும் (Literauture) சொல் கி.பி.1812 இல்தான் வழக்கிற்கு வந்ததாக ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி அறிவிக்கிறது. (Oxford Shorten E.D:1:1152)

## 1.4. ஒப்பிலக்கியம்

### 1.4.1. ‘ஒப்பிலக்கியம’ எனுஞ்சொல் (Comparative Literature)

அரிஸ்டாட்டில் அறிமுகம் செய்த ‘இலக்கியம்’ வளர்ச்சி நெறி, காலந்தோறும் வளர்ந்து கனிந்து அறிவியல் துறைகளிலும் செல்வாக்குப் பெற்றது. இதன் பயனாக கருவியல், உடற்கூறு ஒப்பியல், மரபுவழிப்

பண்பியல் (Embryology, Comparative Anatony, Genetics) என்பனவற்றின் அடிப்படையில் உயிரினங்கள் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றுகின்றன என்ற உயிரின வளர்ச்சி நெறியை ப.ஃ.பன் (Buffon:1749-1804) என்பார் நிறுவினார். அறிவியல் ஆய்வுக்குத் துணைநின்ற இலக்கிய வளர்ச்சி நெறி, சமூகவியல் வளர்நெறியை நிறுவக் கைகொடுத்தது. ஆதிமனிதனின் பண்புகள் காலந்தோறும் படிப்படியாக வளர்ந்து வந்த சமூகவியல் சூழல்களை ரூசோ (Rousseav:1712-78) ஆராய்ந்தார்.

இத்தகு உயிரியல் ஆய்வு முடிவுகளும் சமூகவியல் ஆய்வு முடிவுகளும் இலக்கிய வளர்ச்சியை அறிய முற்பட்ட திறனாய்வாளர்களுக்குப் புதிய பாதையை வகுத்துத் தந்தன. Comparative Anatomy, Comparative Physiology என்றெல்லாம் அறிவியல் ஒப்பீட்டுத் தொடர்கள் நல்ல புழக்கத்திற்கு வந்தபின்னரே Comparative Literature என்ற தொடர் அறிமுகமானது.

## 1.4.2. ஒப்பிலக்கியத் தோற்றம்

**சேக்ஸ்பியரின் 'Henry IV'**

இலத்தீன் மொழியிலுள்ள Comparativus என்ற சொல்லே ஆங்கிலத்தில் Comparative என்று மாறியது. ஆங்கிலப் படைப்பிலக்கியத்தில்தான் இச்சொல் முதன்முதலாகக் காணப்படுகிறது என்பர். சேக்ஸ்பியர் இயற்றிய Henry IV என்ற நாடகத்தில் 'the most Comparative rascalist, Sweet young prince' என்று ஒரு இளவரசனைப் பற்றிய மதிப்பீடாக Comparative என்ற சொல் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இதன்பின் Comparative என்பது ஒப்பீடு, ஒப்புநோக்கு என்ற தனிச்சொல்லாகவே கையாளப்பெற்றுள்ளது.

**மேத்யூ அர்னால்டு (Mathew Arnold)**

ஒப்பீட்டு இலக்கியம் அதாவது 'Comparative Literature' என்ற சொல்லை முதன் முதலில் கையாண்டவர் ஆங்கில இலக்கிய மேதை மேத்யூ அர்னால்டு (Mathew Arnold) என்பவர் ஆவார். இவரின் நண்பருக்கு 1848-ல் எழுதிய கடிதத்தில் அக்கால இலக்கிய ஒப்பீடுகளைப் பற்றிக் கருத்துரைக்கும் பொழுது 'Comparative Literature' என்ற சொல்லைப் பயன்படுத்தி உள்ளார்.

**ஹெச்.எம்.பாஸ்நெட் 'வளர்த்த விதம்'**

'Comparative Literature' என்ற பெயரில் பிரெஞ்ச் மொழியில் நூல் ஒன்றை 1886 இல் வெளியிட்டு ஆய்வுமுறை பற்றிய சொல்லாக இதை ஒரு தனி துறையாக வளர்த்துக் காட்டியவர். இவரின் உருவாக்கத்தில் தோன்றிய நூலே இத்துறையின் முதல் நூலாகக் கருதப்பெறுகிறது. இதற்குப்பின் இப்பெயரே இத்துறையைக் குறிக்கும் சொல்லாயிற்று.

குறிப்பு

**பால்வான் தீகம் அவர்களின் பணி**

1931 இல் La Literature Compare (The comparative literature) எனும் புகழ்பெற்ற நூலை பிரெஞ்சு தேசத்து ஒப்பிலக்கிய அறிஞரான பால்வான் தீகம் எழுதி வெளியிட்டார். இந்நூல் ஒப்பிலக்கிய ஆய்வில் முக்கியமானதொரு நூலாகக் கருதப்படுகிறது. இவர் 'பல்வேறு இலக்கியங்கள் ஒன்றிற்கொன்று கொண்டுள்ள உறவுகளைப் பற்றிய ஆய்வே ஒப்பிலக்கியம்' என்று ஒப்பிலக்கிய ஆய்வுக்கான வரையறையை வகுத்தார். இவரைத் தொடர்ந்து உலக அளவில் ஒப்பீட்டு ஆய்வு முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வந்தன. அத்தகு ஆய்வாளர்களுள் ஹெர்டர், ஷ்லெகல் இரட்டையர்கள், கிரிம் சகோதரர்கள் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவார்.

**ஹெர்டர்**

ஜெர்மானியரான ஹெர்டர் 18-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலக இலக்கிய வரலாறும் வளர்ச்சியும் பற்றிய ஆய்வை மேற்கொண்டார். இவர் உலக இலக்கியங்களுக்கிடையே பொதுத்தன்மைகள் சிலவற்றைக் கண்டார். அதேசமயம் அவற்றுக்கிடையே நிலவும் வேறுபடு பண்புகளையும் கண்டறிந்தார். இலக்கியங்களுக்குள் பல வேறுபடு தன்மைகள் இருந்தாலும் அவற்றுள் பொதுத்தன்மையும் உள்ளது. இதனை உறுதிப்படுத்தும் நோக்கில் 'இலக்கியம் எனப்படும் மிகப்பெரிய இசை நிகழ்ச்சியில் ஒவ்வொரு நாடும் தனக்கே உரிய குரல் அமைதியுடன் பங்கு கொள்ள வேண்டும் என்று கருத்துரைத்தார்.

**ஷ்லெகல் இரட்டையர்கள்**

உலக இலக்கிய வரலாற்றை ஷ்லெகல் இரட்டையர்கள் எழுத முனைந்தபொழுது, ஐரோப்பிய நாட்டு அதாவது இங்கிலாந்து, பிரான்சு, ஸ்பெயின், போர்ச்சுகல் நாட்டு இலக்கியங்களோடு கிழக்கு ஐரோப்பிய நாட்டு 'போலந்து, செக்கோஸ்லோவாகியா, யூகோஸ்லாவியா இலக்கியங்களையும், சமஸ்கிருத இலக்கியங்களையும் தங்கள் ஆய்வுக்கு எடுத்துக்கொண்டார். இதனால் பிரெஞ்சு இலக்கியம், ஜெர்மன் இலக்கியம் என்ற குறுகிய வட்டத்திற்குள் சுழன்று கொண்டிருந்த ஒப்பிலக்கியப் பார்வை விரிவு கண்டது குறிப்பிடத்தக்கதாகும். இதனால் இவர்கள் எழுதிய இலக்கிய வரலாறு 'உலகப்பொது இலக்கிய வரலாறு' (Universal Narrative Literary History) என்று அழைக்கப்படுகிறது. உலக இலக்கியப் பார்வையோடு தேசிய இலக்கியப் பார்வையும் வேண்டும் என்ற கருத்தினை இவர்கள் வலியுறுத்தினர். 'உலகப்பொதுஇலக்கியம், தேசிய இலக்கியத்தை அடிப்படையான உறுப்பாகக் கொண்டது என்று இவர்கள் அறிவுறுத்தினர்.

**கிரிம் சகோதரர்கள்**

19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சார்லஸ் டார்வின் (1809-1882) என்ற ஆங்கில உயிரியியல் வல்லுநர் கூர்தலறக் கொள்கையை

(Theory of Evolution) வெளியிட்டார். இது உயிரின வளர்ச்சிக் கோட்பாட்டில் ஒரு திருப்புமுனையாகக் கருதப்பட்டது. உயிர்கள் வாழ்வதற்காகப் போராடுகின்றன (Struggle for existence) என்பதும், அப்போராட்டத்தில் தக்க வெற்றி பெற்றுத் தம் வாழ்க்கையை நிலை நிறுத்துகின்றன (Survival of the fittest) என்பதும் டார்வின் வெளியிட்ட கூர்தலறக் கோட்பாட்டின் தலையாய கூறுகள் ஆகும். இதனைத் தொடர்ந்து இதே அடிப்படையில் ஸ்பென்சர் (Edmund Spencer) என்ற சமூகவியல் அறிஞரும் சமூகங்களின் வளர்ச்சியைக் கூர்தலற அடிப்படையில் நிறுவுவதில் வெற்றிகண்டார். இதனைத் தொடர்ந்து உயிரின வளர்ச்சியை நிலைநாட்டிய கூர்தலறக் கோட்பாடு இலக்கிய வளர்ச்சி நெறியை நிறுவதற்கும் பயன்பட்டது.

**ஜான் அடிங்டன் சைமாண்ட்ஸ்**

இங்கிலாந்து நாட்டவரான ஜான் அடிங்டன் சைமாண்ட்ஸ் (John Addington Symonds-1834) என்பார் எலிசபெத்திய காலத்து நாடக வளர்ச்சியை அறிவதற்குக் கூர்தலறக் கோட்பாட்டைப் பயன்படுத்தினார். தம் ஆய்வில் உயிரினத்துக்குரிய வளர்ச்சி நிலைகள் அனைத்தும் இலக்கியத்திற்கும் பொருந்தி வருவதைக் கண்டார். இதனால், 'இலக்கியமும் ஓர் உயிரியே' என்ற உண்மையை அவர் நிறுவினார். உயிரினங்களின் வளர்ச்சி போன்றே, எலிசபெத்திய நாடகங்கள் தோற்றம், வளர்ச்சி, மலர்ச்சி, தளர்ச்சி (Germination, Expansion, Efflorescence and decay) ஆகிய வளர்நிலைகளைக் கொண்டிருப்பதைத் தம் ஆய்வு முடிவாகச் சொன்னரர். ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சியில் சைமாண்ட்சின் ஆய்வு ஓர் மைல் கல்லாகக் கருதப்படுகிறது.

**அலெக்ஸாண்டர் வெசிலாவீஸ்கி**

சைமாண்ட்ஸைத் தொடர்ந்து ரஷ்யாவில் அலெக்சாண்டர் வெசிலாவ்ஸ்கி (Alexander veselovsky-1870) என்பார் செய்த ஆய்வு குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படுகிறது. இவர் 'அடிக்கருத்துக்கள் நாடுவிட்டு நாடு இடம் பெயர்ந்து (Migration of Themes) சென்று இலக்கியங்களில் பொதுத்தன்மையைப் படிய வைக்கின்றன என்பதைக் கண்டறிந்தார். ஒரு வகையில் இவரது ஒப்பிலக்கிய ஆய்வு கிரீம் சகோதரர்கள் செய்த ஆய்வை அடியொற்றியது எனலாம்.

**புருனடியார்**

பிரெஞ்ச் நாட்டு ஒப்பிலக்கிய அறிஞரான பெர்டினாண்ட் புருனடியர் 1930-இல் பாரிசில் நடைபெற்ற முதல் உலக இலக்கிய மாநாட்டில் கூர்தலற அடிப்படையில் இலக்கிய வளர்ச்சி (Evolution of literature) என்ற தலைப்பில் ஓர் கட்டுரை படித்தளித்தார். அக்கட்டுரை இன்றளவும் ஒப்பிலக்கிய ஆய்வு நெறிக்கு வழிகாட்டுதலாய் உள்ளது.

**ரெனே வெல்லக்**

'பிரரெஞ்சு நாட்டவரின் ஏகபோக உரிமையாகவே ஒப்பிலக்கிய ஆய்வு இருக்கிறது' என்று ஒப்பிலக்கிய ஆய்வில் பெருங்குறை இருந்தது. அதற்கு காரணம் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நிகழ்ந்த ஒப்பிலக்கிய ஆய்வுகள் பெரும்பாலும் மேற்கு ஐரோப்பிய நாட்டு (பிரெஞ்ச், இத்தாலி, போர்ச்சுகல், ஸ்பெயின்) இலக்கியங்களை பற்றியே இயற்றியமை எனலாம். பிறநாட்டைச் சார்ந்தவர்களில் அமெரிக்கர்கள் இத்துறையில் ஈடுபட்டு உழைத்தாலும் அவர்களுக்கு அங்கீகாரம் கிடைக்கவில்லை.

**ஒப்பிலக்கிய மாநாடு**

அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர் ரெனேவெல்லக் (Rene welleck) ஒப்பிலக்கிய ஆய்வு உலக அரங்கில் பரவலாகப் பேசப்படுவதற்குப் பாதை வகுத்தவர். தன் ஆய்வுக் கருத்தை கூற கிழக்கு ஐரோப்பிய நாட்டினர் ஏற்பாடு செய்திருந்த ஒப்பிலக்கிய மாநாட்டை தன் வாய்ப்பாக பயன்படுத்திக் கொண்டார். அதன்மூலம் ஒப்பிலக்கிய மாநாடுகளில் பிறநாட்டவர்க்கு எவ்வாறு மேடை மறுக்கப்படுகிறது என்பதை வருத்தமுற உரைத்தார். நீண்ட போராட்டத்திற்குப் பின்னர் 1958-இல் நடைபெற்ற ஒப்பிலக்கிய மாநாட்டில் மேடையேறிய ரெனேவெல்லக் "ஒப்பிலக்கியத்தின் நெருக்கடி" (The crisis of comparative literature) என்ற ஆய்வுக்கட்டுரையை வழங்கினார். இது குறுகிய நோக்குடைய ஒப்பிலக்கிய அறிஞர்கள், ஆய்வாளர்கள் கண்களைத் திறந்தது, பரந்துபட்ட பாதை வகுக்கப்பெற்றதால் அமெரிக்காவிலும் பிற நாடுகளிலும் ஒப்பிலக்கிய ஆய்வு புதுவெள்ளம் போல் பாயத்தொடங்கிற்று.

## 1.5. ஒப்பிலக்கியம் சொற்றொடர் மறுப்பு Comparative Literature

ஒப்பிலக்கியம் - சொற்றொடர் தோன்றியபோதே கருத்து மோதல்கள் வரத்தொடங்கின. 'ஒப்பிலக்கியம்' என்ற பொருள்தரும் 'Comparative Literature' என்ற ஆங்கிலத்தொடரை முதன் முதலில் மாத்யூ அர்னால்டு 1848 இல் பயன்படுத்திய பொழுது ஆங்கில அறிஞர்கள் மத்தியில் மனநிறைவு பெறவில்லை. ஏனெனில் 'Comparative Literature' என்ற ஆங்கிலத்தொடரில் உள்ள 'Comparative' என்னும் முன் ஒட்டை இலக்கியம் என்ற சொல்லுடன் பொருத்துவது ஆங்கில மொழி இலக்கணப்படி சரியல்ல என்றனர். 'Literature' இலக்கியம் என்ற சொல்லின் பொருண்மை ஆங்கிலத்தில் காலந்தோறும் மாறி வந்துள்ளது. இச்சொல்லின் சொற்பிறப்பியல் (Etimology) கூறும்பொழுது, கிரேக்க மொழியில் வழங்கி வந்த 'gramattica' என்ற சொல்லை முதலில் இலத்தீனில் 'Literature' என்று

மொழிபெயர்த்தனர் என்றும் இந்த மொழிபெயர்ப்பின் அடிப்படையில் தான் ‘Literature’ எனும் ஆங்கிலச் சொல் உருவாயிற்று என்றும் கூறுவர்.





‘Literature’ எனுஞ் சொல் ஆங்கிலத்தில் எழுதப் படிக்கத் தெரிந்திருப்பதைக் குறித்தது. இதற்கு அடுத்த நிலையில் Letters என்னும் ஆங்கிலச் சொல்லும் பல்துறை நூல்களை பொதுப்படக் குறித்தது. பின்னரே இன்றுள்ள பொருளில் இலக்கியப் படைப்புகளை கற்பனை, முருகியல், இணைந்த கவிதை – உரைநடை நூல்களைக் குறிப்பதாயிற்று.

இன்று ‘இலக்கியம்’ எனுஞ்சொல் படைக்கப்பெறும் அனைத்து இலக்கியங்களையும் ஒரு சேரக் குறிக்கின்றது. ‘ஒருமையில் அமையாது பன்மைப் பொருளில் உலகம் முழுவதிலும் எழுதப்பெற்றப் படைப்புகளைப் பொருளாகக் கொண்டுள்ளது.

கல்வியறிவு இலக்கிய ஆய்வு என்ற பொருண்மைகளைக் கொண்டிருந்த நிலையிலிருந்து இலக்கியங்களைக் குறிக்கும் நிலைக்கு மாறியபொழுது (Literature) இலக்கியம் என்ற சொல்லுடன் ஒப்பீட்டு(Comparative) என்ற சொல் பொருந்தவில்லை என்றனர். ஒப்பீட்டு இலக்கியக் கல்வி (Comparative literary study) எனும் தொடர் குறிப்பதுபோல ஒப்பீட்டு இலக்கியம் (Comparative Literature) எனும் தொடரில் பொருள் பொருந்த வில்லை என்றனர்.

**லேன் கூப்பரும் & எஸ்.எஸ். பிராவரும்**

லேன் கூப்பர் (Lane Cooper) 1920-இல் இதை ‘ஒரு வெற்றுத்தொடர்’ என்றார். இதில் பொருளும் இல்லை. இலக்கணத் தொடர்பும் இல்லை. இதைப்போன்றே நீங்கள் ‘ஒப்பியல் உருளைக்கிழங்கு’ என்றோ ‘ஒப்பியல் உமிகள்’ என்றோ கூட அழைக்கக்கூடும் என்று கேலியாகக் கூறினார்.

எஸ்.எஸ்.பிராவரும் (S.S.Prawer) லேன் கூப்பரைப் போன்றே கருதினார். இவர் ‘ஒப்பிலக்கியக் கல்வி’ (Comparative Literary study) என்ற தொடரே சரியான பொருளமைதி உடையது என்றார். எனினும் இத்தொடர் நயமற்றதாகத் தோன்றினாலும் பொருள் சிறப்புடையதாகவும் சரியான விளக்கத்தைத் தருவதாகவும் உள்ளது என்றார். ஒப்பிலக்கியக் கல்வி பற்றிய தன் நூலில் சில நேரங்களில் சொற் சுருக்கத்திற்காக ‘ஒப்பிலக்கியம்’ என்ற தொடரையும் எடுத்தாளுகிறார்.

**குரேசேயின் கருத்து (Benedetto Croce)**

இத்தாலியப் படைப்பாளியும் முருகியல் திறனாய்வாளருமான குரேசே ஒப்பிலக்கியம் என்ற தொடர்(Literatura Comparata) ஒரு தனி இயலைக் குறிப்பிடுகின்றது என்ற கருத்தை வன்மையாகக் கண்டித்தார்.

ஒப்பிலக்கியம்

குறிப்பு

**பாசுநெட்டின் பணி**

முதன் முதலில் 'Comparative Literature' என்னும் தொடரைப் பொருள் பொதியுமாறு ஆண்ட பெருமை பாசுநெட்டையே சேரும் (Hutcheson Macaulay )இவர் 'ஒப்பியல் இலக்கியம்' என்ற தலைப்பிட்ட நூலை வெளியிட்டார். பிறமொழிகளில் ஒப்பிலக்கியம் ஆங்கிலத்தில் அமையும் முன்னே. பிரெஞ்சு, ஜெர்மானிய மொழிகளில் இத்தொடர் வழக்கத்தில் வந்துவிட்டது.

லிட்டரேச்சர் (Literature)எனும் சொல் ஆங்கிலத்தில் இலக்கியத் தொகுதியைக் குறிக்கிறது. பிரெஞ்சு மொழியில் இலக்கியக் கல்வியைக் குறிக்கவே வழங்கப்பட்டது. எனவே அங்கு 19-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் (Literature Comparee) லிட்டரேச்சர் கம்பாரி என்ற தொடர் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளும் விதத்தில் எளிதில் அமைந்திருக்கிறது. 1800இல் அறிவியல் அறிஞரான கூவியர;(Cuvier) ஒப்பியல் உடற்கூற்றாய்வு (Anatomic Compare) என்ற புகழ்மிக்க தொடரைப் பயன்படுத்திய பின்னரே இது மாதிரியான தொடர் அமைப்பு இலக்கியவாதிகளிடையே வழங்க ஆரம்பித்தது. 1828-1829 இல் வில்லமெயின் (Abel.Francais villemain)Etude de Literarue Comparee என்னும் தொடரைப் பயன்படுத்தினார். இந்நீண்ட தொடரைச் சுருக்கி செயிண்ட் பியூவ் (Sainte Beuve) என்பவர் 1869இல;(Literature Comparee) என மிக அழுத்தமாகப் பயன்படுத்தினார்.

**ஜெர்மன் மொழியில்**

ஆங்கிலத்தில் உள்ள இத்தொடரை விட ஜெர்மானியரும் டச்சுக்காரர்களும் பயன்படுத்திய தொடர் மேலும் பொருந்தமுடையதாக அமைந்தது என்பார் எஸ்.எஸ்.பிராவர். வெர்கிலி சென்டே லிட்டரேச்சர் விஸ்ஸென் சா.்.ப்ட் (Vergle Chande Literature Geschichta) என்ற தொடர் அமைப்பை உருவாக்கிக் கொண்டனர்.

**தமிழில் ஒப்பிலக்கியம் எனும் சொல்**

ஆங்கிலத்தில் 'ஒப்பியல் உடற்கூற்றாய்வு' (Comparative Anotomy) என்னும் தொடர் ஒப்பீடு எனும் முன்னொட்டைக் கொண்டு முதலில் பழக்கத்திற்கு வந்தது போலத் தமிழில் 'ஒப்பியல் மொழி நூல்' எனும் தலைப்பிட்ட ஞா.தேவநேயப்பாவாணரின் சொல்லாட்சி தான் தமிழில் இத்தொடரை அறிமுகப்படுத்தியது என்பர். 'தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி நிலை' எனும் பகுதியில் இதனை விரிவாகக் காணலாம்.

## 1.6. ஒப்பிலக்கியம் : வரைவிலக்கணம்



குறிப்பு

ஒப்பிலக்கியம் என்பது காரண காரியத் தொடர்புடைய ஓர் அறிவியல் அணுகுமுறை. ஆயின் 'எதனை எதனோடு ஒப்பிடுவது ஒப்பிலக்கிய அணுகுமுறை' என்ற வினா எழும்புகிறது அல்லவா? ஒப்பிடுதலில் பல நிலைகள் உள்ளன.

1. தமிழ் இலக்கியத்தைத் தமிழ் இலக்கியத்தோடு ஒப்பிடுதல் (எ.கா) திருப்பாவை – திருவெம்பாவை ஓர் ஒப்பீடு.
2. தமிழ்ப் படைப்பாளரை இன்னொரு தமிழ்ப் படைப்பாளரோடு ஒப்பிடுதல் (எ.கா) அகிலன்- ஜெயகாந்தன் ஒப்பீடு.
3. ஒரு தமிழ் இலக்கிய வகையை ஒன்றோடொன்று ஒப்பிடுதல் (எ.கா) தமிழில் பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் ஒப்பீடு, 'பள்ளுநூல்கள் - ஒப்பீடு' 'குறவஞ்சிநூல்கள் ஒப்பீடு'

இவையெல்லாம் தமிழ் என்னும் ஒருமொழி எல்லைக்குள் நின்றுவிடுவதால் இவை ஒப்பிலக்கிய ஆய்வுகள் ஆகாது.

ஒருமொழி இலக்கியத்துடன் மற்றொரு மொழி இலக்கியத்தையோ, ஒருமொழி படைப்பாளரோடு மற்றொரு மொழி படைப்பாளரையோ, ஒரு மொழி இலக்கிய வகையுடன் பிறமொழி இலக்கிய வகைகளையோ அறிவியற்பூர்வமாக ஒப்பிட்டு நோக்குவதே ஒப்பிலக்கிய ஆய்வாகும்.

(எ.கா)

1. ஒருமொழி இலக்கியத்துடன் மற்றொரு மொழி இலக்கியத்தை ஒப்பிட்டுக் காணுதல்.

உதாரணம்:- கம்பராமாயணமும் எழுத்தச்சன் ராமாயணமும் - ஒப்பியல் நோக்கு.

2. ஒருமொழி ஆசிரியருடன் மற்றொரு மொழி ஆசிரியரை ஒப்பிட்டறிதல்.

உதாரணம்:- பாரதிதசான் - நஸ்ருல் இஸ்லாம் பாடல்களில் புரட்சிப் போக்கு.

3. ஒருமொழி இலக்கிய வகையை மற்றொரு மொழி இலக்கிய வகையோடு ஒப்பிடுதல்.

உதாரணம்:- தமிழ் - கிரேக்க முல்லைப் பாடல்கள் ஒப்பாய்வு.

4. ஒருமொழி இலக்கியக் கொள்கையைப் பிறமொழியில் அதே நோக்குடைய இலக்கியக் கொள்கையோடு ஒப்பிடுதல்.

(எ.கா) தொல்காப்பியரின் மெய்ப்பாட்டியலும் பரதரின் இரசக்கோட்பாடும்.

இலக்கியத்தை இதுபோன்று பிறதுறைகளுடன் ஒப்பிட்டு நோக்குதலும் ஒப்பிலக்கிய ஆய்வின் பாற்படும்.

## 1.7. ஒப்பிலக்கியம் பற்றிய புரிதல்

*ஒப்பிலக்கியம்*

ஒப்பிலக்கியத்தின் இத்தகு வரன்முறையை அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர் ஹெச்.ஹெச்.ஹெச்.ரிமாக் (H.H.H.Remak) அவர்களின் கூற்று தெளிவுபடுத்துகிறது. அவர் கூற்று வருமாறு.

**குறிப்பு**

‘ஒப்பிலக்கியம் என்பது ஒரு குறிப்பிட்ட நாட்டின் எல்லைகளுக்கு அப்பால் விளங்குகின்ற பிறிதொரு நாட்டின் இலக்கியங்களை ஒப்பிட்டு ஆராய்வதாகும். இலக்கியத்தை மனித அறிவின் பிற துறைகளான ஓவியம், சிற்பம், கட்டடக்கலை முதலிய கவின் கலைகளுடன் தத்துவம் வரலாறு, அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றுடன் ஒப்பிட்டு இலக்கியத்திற்கும் இவற்றுக்கும் உள்ள தொடர்புகளைக் கண்டறிவதாகும். சுருங்கக்கூறின் இலக்கியத்தைப் பிறிதொரு இலக்கியத்துடனோ ஏனைய மனித உணர்வு வெளிப்பாட்டுத் துறைகளுடனோ ஒப்பிடுவது ஆகும்.

பிரெஞ்சு ஒப்பிலக்கிய முன்னோடியான பால்வான் தீகம் (Paul van Tiegam)’ஒப்பிலக்கிய ஆய்வு என்பது வெவ்வேறு இலக்கியங்களிடையே ஒன்றற்கொன்று உள்ள தொடர்புகளை ஆராய்வது’ என்று கூறுகிறார். அதே நாட்டைச் சார்ந்த மற்றொரு ஒப்பிலக்கியப் பேரறிஞராகிய ஆல்பர்ட் கயார்டு (Albert Guyard) என்பார். ‘பன்னாட்டு இலக்கியங்கள் ஒன்றற்கொன்று கொண்டுள்ள உறவுகளைக் காண்பதே ஒப்பிலக்கிய ஆய்வு’ என்கிறார். ஆங்கில நாட்டு ஒப்பிலக்கிய அறிஞரான எஸ்.எஸ்.பிராவர்(S.S.Prawar) என்பார். ’ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளில் உள்ள இலக்கியங்களை நுணுகி நோக்குதலே ஒப்பிலக்கிய ஆய்வு’ என்று மொழிகிறார்.

இக்கூற்றுகளின் வழி ‘ஒரு பொதுக்கூறு பொதிந்துள்ளது தெரியவருகிறது. ‘ஒரு நாட்டு இலக்கியத்தை இன்னொரு நாட்டு இலக்கியத்தோடு ஒப்பிடுவது’ என்கிறார் ரிமாக், ‘வெவ்வேறு இலக்கியங்களை ஆராய்வது என்கிறார் பால் வான்தீகம், ‘பன்னாட்டு இலக்கியங்களின் உறவைக் காண்பது’ என்கிறார் கயார்டு. ‘ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளில் உள்ள இலக்கியங்களை ஆராய்வது என்கிறார் பிராவர். இக்கூற்றுக்களினால் ஒப்பிலக்கிய ஆய்வுக்கு இருமொழி இலக்கியங்கள் அவசியம் என்பது புலானகிறது. அது ஒரு நாட்டிலுள்ள இருமொழி இலக்கியங்களாகவும் இருக்கலாம். எல்லைகடந்த வெவ்வேறு நாட்டிலுள்ள இருமொழி இலக்கியங்களாயும் இருக்கலாம்.

1. ஒரே நாட்டிலுள்ள இருமொழி இலக்கிய ஆய்வுக்குச்சான்று → தமிழ் மலையாள நாவல்களில் நெய்தற்களச் சித்திரிப்பு
2. இருவேறு நாட்டிலுள்ள இருமொழி இலக்கிய ஆய்வுக்குச் சான்று – தமிழ் - பிரெஞ்சு. இலக்கியங்களில் இயற்கை இகந்த நிகழ்வுகள்.

## 1.8. ஒப்பிலக்கியத்தின் பண்புகள்

ஒப்பிலக்கியம்

ஒப்பிலக்கியத்தின் தலையாய பண்பு 'அது இலக்கியங்களை உலக நோக்கில் காண்பதேயாகும். 'இது தமிழ்மொழி இலக்கியம், இது கன்னட மொழி இலக்கியம், இது கிரேக்க இலக்கியம், இது ஆங்கில இலக்கியம் என்ற மொழிவாரியப் பாகுபாடு ஒப்பிலக்கியத்திற்கு இல்லை. ஒப்பிலக்கிய ஆய்வுக்கு ஒப்பிடப்படும் பொருள்களைக் காட்டிலும் அதன் விளைவும், முடிவும்தான் முக்கியம்.

குறிப்பு

ஒப்பிலக்கிய ஆய்வில் ஒப்பிடப்படும் மொழி இலக்கியத்தைப் பற்றிய கவலையில்லை. ஆனால் ஒரு மொழியில் உள்ள முல்லைப் பாடல்கள் மற்றொரு மொழியில் உள்ள முல்லைப் பாடல்களோடு ஒத்திருக்கின்றனவா? அல்லது வேறுபட்டிருக்கின்றனவா? என்பதுதான் ஒப்பிலக்கிய ஆய்வாளருக்கு முக்கியம். 'ஒத்திருக்கின்றன' என்றால் எந்த அளவுக்கு?' எவ்வெவ்வகைகளில் ஒத்திருக்கின்றன? என்றும் வேறுபட்டிருந்தால் அது எந்த அளவுக்கு! எவ்வெவ்வகைகளில் வேறுபட்டிருக்கின்றன? என்பதை அறிவதும் ஒப்பிலக்கிய ஆய்வாளரின் கடமையாகும். இருமொழி இலக்கியங்களும் ஒத்திருந்தால் அவற்றிற்குக் காரணம் வேறுபட்டிருந்தால் அதற்குரிய காரணம் என்ன என்று ஒப்பிலக்கிய ஆய்வு பல புதிய முடிவுகளை எட்டுகிறது. இம்முடிவுகள் மொழியைக் காட்டிலும் நுவல் பொருளுக்கே முதன்மை தருவதை உணரலாம். எனவே, 'இது தமிழ் முல்லைப் பாடல்,' இது கிரேக்க முல்லைப் பாடல் என்று மொழிநோக்கில் பார்க்கின்ற போக்கு அகன்று, இது தமிழ் மொழியில் உள்ள முல்லைப்பாடல் 'இது கிரேக்க மொழியில் உள்ள முல்லைப்பாடல் என்று வகைநோக்கில் பார்க்கின்ற இலக்கியப் பொதுமைச் சிந்தனை வளரும். திருக்குறளைத் தமிழ் நூலாகப் பார்ப்பது இலக்கிய ஆய்வாகும். இந்நூலை அறநூலாகப் பார்ப்பது ஒப்பிலக்கிய ஆய்வாகும். இப்படிப் பார்த்தால்தான் திருக்குறளைப் பிற உலக அற நூல்களோடு ஒப்பியல் நோக்கில் பார்க்க முடிகிறது. இஃது ஒப்பிலக்கியத்தின் பிறிதொரு பண்பாகும்.

## 1.9. ஒப்பிலக்கிய வளர்ச்சி

ஒப்பிலக்கியத் தோற்றம் என்பது நாளடைவில் பெரியதொரு வளர்ச்சியை எட்டிப் பிடித்துள்ளது. இதற்கு ஆங்கில மொழி பெருந்துணையாயிற்று. ஆங்கில மொழியின் வழியிலும் அல்லது தாமே அந்த மொழியைக் கற்றும் பிற மொழிச் செய்திகளை இலக்கிய ஒப்பீடுகளைத் தம்மொழிக்கு கொண்டு செல்கின்றனர். இன்று உலகளாவிய பெருங்கவிஞர்கள், அறிஞர்களின் சொற்களை ("Whats App-Status") வாட்ஸ் -ஆஃப் -ஸ்டேட்டஸ் வரை இளைஞர்கள் நாடு, மொழி, இனத்திற்கு அப்பாற்பட்டு நின்று பயன்படுத்துவதோடு மற்றவர்கள் அறியுமாறு செய்கின்றனர்.

(எ.கா) ‘‘புகழை மறந்தாலும் நீ பட்ட அவமானங்களை மறக்காதே…! அது இன்னோரு முறை நீ அவமானபடாமல் காப்பாற்றும்’’ - **ஹிட்லர்.**

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

**“எதற்கும் தயாராக**
**இருக்க வேண்டும்**
**ஒருநாள் நமக்கான**
**வாய்ப்பு வரும்”** **- ஆபிரகாம் லிங்கன்**

**உன் இரகசியங்களைப்**
**பிறருடன் பகிர்ந்து கொள்ளாதே**
**அது உன்னை அழித்துவிடும்**
**நீயே காப்பாற்றமுடியாத**
**“உன் இரகசியத்தை,**
**மற்றவர்கள் வெளியே**
**சொல்லாமல் இருப்பார்கள்**
**என எதிர்பார்க்காதே”** **- சாணக்கியர்**

‘‘**மனிதனின் தீய குணங்களை**
**இயல் மாற்றம் செய்தைவிட**
**புளுட்டோனியத்தை இயல்மாற்றம் செய்வது**
**சுலபமானது”** **- ஐன்ஸ்டீன் பொன்மொழிகள்**

**“உனக்கு சிரிப்பதற்கும் பேசுவதற்கும்**
**நேரம் இல்லையென்றால்**
**நீ உன் வாழ்வில்**
**முன்னேறிக்கொண்டு இருக்கிறாய்**
**என்று அர்த்தம்.”** **- அலெக்சாண்டர்**

‘‘போராடும் வரை வீண்முயற்சி என்பார்கள், வென்ற பின்பு விடாமுயற்சி என்பார்கள்.’’ –பிடல் காஸ்ட்ரோ

குறிப்பு

I failed in

Some subjects

in exam, but

My Friend

Passed In All

Now he is an

Engineer in

Microsoft and I

am the owner

of Microsoft **- Bill Gates.**

(‘Success motivation Tips.com’)

என வலைதளங்களிலும் இத்தகைய சொல்லடுக்குகள் பகிரப்பெறுவது ஒப்பிலக்கிய உலகில் ஒரு மைல்கல்’ எனலாம்.

## 1.10. ஒப்பிலக்கியத் தோற்றமும் வளர்ச்சியும் - விளக்கம்

மொழியை கற்றுக் கொள்வதால் மட்டும் ஒப்பிலக்கிய உலகில் வளர இயலாது. அந்த மொழிபேசும் மக்களோடு மக்களாக வாழ்ந்து மொழியைக் கற்று இலக்கியத்தை தம் தாய் மொழியோடு ஒப்பிட்டு எழுதினால் ஒப்பிலக்கியம் உண்மையான வளர்ச்சியை பெறும். காந்தி திருக்குறளை மூல மொழியில் படிக்க விரும்பி தமிழ் மொழியைக் கற்க நினைத்தார் எனில் மூலமொழி இலக்கியம் தரும் உணர்ச்சி பிழம்புகளை அப்படியே சுவை குன்றாது தம் மொழிக்கு மொழிபெயர்த்து, தம் மொழி இலக்கியத்தோடு அதை ஒப்பிட்டு ஆராயும் பணி செய்யப்படுமானால் அத்தகைய ஒப்பிலக்கிய படைப்புகளின் வருகைதான் ‘ஒப்பிலக்கிய வளர்ச்சி’ நிலையை காலூன்ற வைக்கும்.

## கூறு:1 வினா – விடை - பயிற்சி:

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

1) **இலக்கியம் எனுஞ்சொல்லை முதன் முதலில் தமிழில் கையாண்டவர் யார்?**

தோலாமொழித்தேவர்

2) **Literature-என்ற சொல்லை ஆங்கிலத்திலிருந்து ‘இலக்கியம்’ என மொழிபெயர்த்தவர்கள் யாவர்?**

மாயூரம் வேதநாயகம் பிள்ளை, பேராசிரியர் பெ.சுந்தரம்பிள்ளை.

3) **Literature-என்ற சொல் எந்த ஆண்டு ஆங்கிலத்தில் வழக்கிற்கு வந்தது?**

1812

4) **Comparative Literature என்ற சொல்லை முதலில் பயன்படுத்தியவர் யார்?**

மேத்யூ அர்னால்டு(1848)



5) **'ஒப்பியல் மொழி நூல்' ஆசிரியர் யார்?**

ஞா.தேவநேயப்பாவாணர்.

**II. ஐந்து மதிப்பெண்-வினா விடை**

1) **Literature-என்ற சொல் குறித்து விவரி.**

(1.3 - இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

2) **Comparative Literature -என்ற சொல்லின் தோற்றம் பற்றி விவரி.**

(1.4 - இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

3) **Comparative Literature (ஒப்பிலக்கியம்)-என்பதை முதலில் மறுத்தவர்கள் யாவர்?**

(1.4 - இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக.)

**III. கட்டுரை வடிவில் விடைதருக. (பத்துமதிப்பெண்)**

1) ஒப்பிலக்கியத் தோற்றமும் - வளர்ச்சியும் பற்றி கட்டுரை எழுதுக. (கூறு 1-ல் உள்ள செய்திகளைச் சுருக்கி எழுதுக.)

# கூறு-2: தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி நிலை

## 2.1. முன்னுரை

தமிழில் ஒப்பியல் இலக்கியம் என்ற தொடரைக் கலாநிதி கைசாலபதி அவாகள் வெளியிட்டார். இவரே தமிழில் முதன் முதலில் ஒப்பியல் இலக்கியக் கோட்பாடுகளை விளக்கியவர் ஆவார். ரெனிவெல்லாக்கும் ஆஸ்டின் வாரனும் எழுதிய "Theory Of literature" என்ற நூலை குளோரியா சுந்திரமதி மொழிபெயர்த்து அளிக்கும் போது Comparative literature என்ற சொல்லுக்கு ஒப்பு இலக்கியம் என மொழி பெயர்த்துத் தந்தார். இன்று தமிழில் ஒப்பு இலக்கியம் என்ற தொடராட்சி அதிகமாக பயன்படுத்தப்பெறுகிறது.

## 2.2. நோக்கம்

- தமிழண்ணல் தந்த சொல்லாக 'ஒப்பிலக்கியம்' எனுஞ் சொல் விளங்குவதை அறிதல்.

குறிப்பு

- ஒப்பியல் தமிழ் குறித்து காணல்
- தமிழில் ஒப்பியலக்கிய வளர்ச்சி நிலையை ஆராய்ந்தறிதல்.
- இதழ்களின் பங்களிப்பு
- அயல்நாடுகளில் தமிழ் ஒப்பிலக்கிய வளர்ச்சி உள்ளிட்ட செய்திகளை படித்தறிதல்.

## 2.3. தமிழண்ணல் - தந்த சொல்

'ஒப்பு - இலக்கியம்' என்ற தொடரை மேலும் தெளிவுடைய தொடராக்கி 'ஒப்பிலக்கியம்' என்று பயன்படுத்தியவர் தமிழண்ணல் இவரின் 'ஒப்பிலக்கிய அறிமுகம் எனும் நூலில் 'ஒப்பிலக்கியம்' என்ற தெளிவுடையத் தொடரைப் பயன்படுத்தினார். இத்தொடர் இலக்கியத்தின் ஒருமையை சுட்டிக்காட்டுகிறது என விளக்கினார். இவருக்குபின் ஒப்பிலக்கியம் என்ற 'தமிழ்த்தொடர்' ஆழமாகக் காலூன்றியது.

## 2.4. ஒப்பியல் தமிழ் எனும் சொல்

ஆங்கில ஒப்பிலக்கியப் பேராசிரியரான கைலாசபதி 'ஒப்பியல் தமிழ' என்னும் சொல்லாட்சியைக் கையாளுகிறார். 'ஒப்பிலக்கியம் என்ற சொல் ஆய்வு முறையையும் ஆய்வுக் களத்தையும் இணைத்துச் சுட்டும் சொல், இதையே 'ஒப்பியல் இலக்கியம்' என்று கைலாசபதி குறிப்பிட்டுள்ளார். தமிழில் இப்புதிய இயலை 'ஒப்பியல் தமிழ்' எனவும் கூறலாம் எனக் கூறும் இவர் 'ஒப்பியல் தமிழ்' எனும் தன் நூலின் முன்னுரையில், ஏற்கனவே தமிழில் 'ஒப்பிலக்கியம்' 'ஒப்பியல் இலக்கியம்' எனும் சொற்கள் இருக்க 'ஒப்பியல் தமிழ்' எனும் சொல்லாக்கத்தின் தேவையையும் நோக்கத்தையும் கூறுகிறார். 'ஒப்பியல் தமிழ்' 'ஒப்பிலக்கியம் இவையிரண்டும் தனி மொழிச் சார்பில்லாமல் இதை ஒரு பொது இலக்கிய வகையாகச் சுட்டுகின்றன. அதையே தமிழில் ஒரு அங்கமாக, பின் நெடுங்காலமாக வளர்ந்து வரும் இயற்றமிழின் ஒரு புது மலராகக் காண்பதுதான் புதுப்பெயரின் நோக்கம். டாக்டர் வ.செ.குழந்தைசாமி 'தமிழில் அறிவியல்' என்பதற்கு பதிலாக 'அறிவியல் தமிழ்' என்று அழைப்பதையும் இங்கு குறிப்பிடவேண்டும். அறிவியல் பொதுதான், ஆனால், அதைத் தமிழில் ஏற்கும்போது ,பேசும் போது அது அறிவியல் தமிழாகிறது. 'ஒப்பிலக்கியம்' என்று கூறும்போது இலக்கியத்தின் ஒப்பியல் தன்மையை வலியுறுத்தினால், ஒப்பியல் தமிழ் எனக் கூறும் போது ஒப்பிலக்கியத்தின் தமிழ் வடிவத்துக்கு முதலிடம் தருகிறோம். இலக்கியத்தை மையமாக கொண்ட பார்வையில் 'ஒப்பிலக்கியம்' 'ஒப்பியல் இலக்கியம்' என்றும், தமிழை மையமாக கொண்ட பார்வையில் 'ஒப்பியல் தமிழ்' என்றும் குறிக்கலாம் என்று கூறுகிறார்.

## 2.5. தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| ஐரோப்பியத் தமிழறிஞர்களின ஒப்பிலக்கியப்பணி | திராவிட மொழிகளில் | பிறஇந்திய மொழிகளில் | தமிழ்நாட்டில் ஒப்பிலக்கிய வளர்ச்சி |

என்கிற நான்கு நிலைகளில் தமிழ் ஒப்பிலக்கிய வளர்ச்சியைக் காணலாம்.

## 2.5.1. ஐரோப்பியத் தமிழறிஞர்களின் ஒப்பிலக்கியப்பணி

தமிழ் கற்ற ஐரோப்பிய அறிஞர்கள் தமிழ் இலக்கியத்தில் ஒப்பியல் ஆய்வு நிகழ்த்துவதற்கு முதற்காரணமாக இருந்துள்ளனர். அவர்களுள் தலையானவர் ஜி.யு. போப் ஆவார். இவர் திருக்குறளையும், திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

திருவாசகத்தை மொழி பெயர்க்கும்போது உள்ளங் கரைந்துருகிக் கண்ணீர் மல்க அதன் சிறப்புகளை எழுதினார். புறநானூற்றுப் பாடல்கள் சிலவற்றை (Tamil Heroic Poems) என்ற தலைப்பிட்டு மொழிபெயர்த்தார். அப்போதுதான் புறநானூற்றுப் பாடல்களும் கிரேக்க இலக்கியங்களும் உள்ளடக்கம், வடிவம், சமூக அமைப்பு ஆகியவற்றில் ஒற்றுமை உடையன என்று குறிப்பிட்டார். அவரின் தமிழ்ப்பற்றுக்கு அவர்தம் கல்லறையில் எழுதப்பெற்ற வாசகங்கள் துணை நிற்கின்றன. அவை வருமாறு:

"This stone has been placed here by his family and by his Tamil friends in South India. In loving Admiration of his life long labours in the cause of orient literature and philosophy"

செக் நாட்டு அறிஞரான சுமில் கவலபில் தமிழ் இலக்கிய ஆய்வுக்குப் புதிய பரிமாணத்தை நல்கியவர் ஆவார். இவர் எழுதிய Tamil literature என்ற நூல் தமிழ் இலக்கிய வரலாற்றை வகை நோக்கில் ஆராய்கிறது. மேலும் இவரது The Akam Convention in Tamil literature , Tiru murugan ஆகிய நூல்களில் ஆங்காங்கே ஒப்புநோக்குப் பார்வையைக் காணலாம். எட்டுத்தொகை நூல்களைப் பற்றிய ஆய்வை நிகழ்த்திய ஜான் மார் (John Marr) என்பாரும் தம் நூலில் ஒப்பீட்டுப் பார்வையைக் குறிப்பாகப் பதிவு செய்துள்ளார். தமிழ் அகப்பாடல்கள் சிலவற்றையும் புறப்பாடல்கள் சிலவற்றையும் தேர்ந்தெடுத்து Poems of Tamil Anthologies என்ற பெயரில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்ட ஜார்ஜ் ஹார்ட் என்பார் தம் நூலில் தமிழின் சங்கப் பாடல்களை சமஸ்கிருத பாடல்களுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். புதுமைப்பித்தன் கதைகளை செக்காவ் கதைகளுடன் ஒப்பிட்டுக்

கட்டுரைகள் எழுதிய ரஷ்யப் பெண் திறனாய்வாளர் லூபா(அன்பு) வும், விதாலி.ஃபூர்னிகாவும் இதில் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இவ்வாறு அயல்நாட்டு அறிஞர்கள் தமிழ் ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சிக்குக் குறிப்பிடத்தக்கப் பெரும்பணிகளைச் செய்துள்ளனர்.



## 2.5.2. திராவிட மொழிகளில் தமிழின் ஒப்பிலக்கிய வளர்ச்சி

குறிப்பு

கால்டுவெல் ஐயரின் நூல் தமிழில் இயற்றப்பெற்ற பொழுது அது 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் எனப்பட்டது. இதன் மறுதலையாகவே ஒப்பிலக்கியம் என்ற தொடர் தோன்றியது.. இன்று ஒப்பியல், ஒப்பாய்வு, இலக்கிய ஒப்பீடு, ஒப்பிலாய்வு என்பனவெல்லாம் பல்வேறு நிலைகளில் இடத்திற்குத்தக்க ஒரு பொருட்சொற்கள் போல் ஆளப்படுகின்றன. ஒப்பிலக்கணத்தின் மூலம் அம்மொழிக் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பழைய எழுத்துச் சான்றுகளை விட ஆயிரம் அல்லது ஆயிரத்து ஐநூறு ஆண்டு காலத்திற்கு முற்பட்ட மொழி நிலையைத் தெரிந்து கொள்ளமுடியும் என்று இன்று கருதுகிறார்கள். ஒப்பிலக்கண ஆய்வு தொடங்கிய காலத்தில் "ஒப்பிலக்கண ஆய்வு மூலம் மொழியின் தோற்றத்தையே கண்டுபிடிக்க முடியும் என்று நம்பினார்கள். ஆனால் கால்டுவெல் தம் நூலில் திராவிட மொழிகளை ஒப்பிட்டு மூல வடிவத்தை உறுதி செய்தபிறகு ஏனைய உலகமொழிகளோடு ஒப்பிட்டுள்ளார். இன்று மொழியின் தோற்றத்தை ஆராய மொழியியல் அறிவு மட்டும் போதாது என்று உணர்ந்துள்ளனர்.

மேலும், ஒப்பிலக்கண ஆய்வு, கிளைமொழி ஆய்வு, சொற்கோவைப் புள்ளியியல் ஆய்வு என்னும் துறைகள் வளர்வதற்குக் காரணமாக இவரது நூல் அமைந்தது. இந்த அடிப்படையில் தென் திராவிடம் , நடுத்திராவிடம், வடதிராவிடம் என்ற முப்பெரும் பிரிவுகளைப் பிரித்து ஒற்றுமை, பண்பு, பிரிந்து வந்தமை ஆகியவை சுட்டப்பெற்றுள்ளன.

**கன்னடம்**

கன்னட மொழியறிஞரான ஏ.கே. ராமானுஜன் தமிழ் இலக்கியத்தின்பால் ஆழ்ந்த பற்றுள்ளவர். இப்பற்றின் காரணமாகத் தமிழிலுள்ள வைணவ இலக்கியங்களைப் பற்றிய ஆய்வு நூலும் நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றிய கட்டுரைகளும் வெளியிட்டார். சங்கப்பாடல்கள் சிலவற்றை Poems of Love and war என்ற தலைப்பில் மொழி பெயர்த்து வெளியிட்டார். அந்நூலுக்கு அரிய வகையிலான முன்னுரையும் பின்னுரையும் (Epilogue) எழுதினார். இதன் மூலம் சங்கப் பாடல்களில் ஆழங்காற்பட்டமை அறியமுடியும்.

இலக்கிய ஒப்பீடு, உளவியல் ஒப்பீடு, கருத்து ஒப்பீடு, புலப்பாட்டு நெறி ஒப்பீடு எனப் பல நிலைகளிலும் கிரேக்கப் பாடல்களையும் சங்கப் பாடல்களையும் இவர் ஒப்பிட்டுக் காட்டினார். 'மன்னர் அடிப்படையிலும், நிகழ்வுகள் அடிப்படையிலும் புறநானூற்றுப் பாடல்களை தொகுக்க முடியுமானால் பல குறுங்காப்பியங்கள் கிடைக்கும்' என்றார். 'கிரேக்க

வாய்மொழிப் பாடல்களை ஒருங்கிணைத்து இலியட், ஒடிசி என்ற காப்பியங்களை உருவாக்கிய ஹோமர் போன்று தம்முள் பொருள் இயைபும், வரலாற்று இயைபும் கொண்ட புறநானூற்றுப் பாடல்களை ஒருங்கிணைத்துக் குறுங்காப்பியங்களாகத் தொகுக்க தமிழ்நாட்டுக்கு ஒரு ஹோமர் வாய்க்கவில்லை' என்று இவர் இந்நூலில் சுட்டிக்காட்டியுள்ளார்.



**மலையாளம்**

தமிழ்மொழிக்கும் மலையாள மொழிக்குமான உறவு, தாய் மகள் உறவா? அல்லது அக்காள் தங்கை உறவா? என்பது பற்றிய சர்ச்சை இன்றும் தொடர்ந்து வருகிறது. என்றாலும் தமிழும் மலையாளமும் வட்டார அடிப்படையிலும் பண்பாட்டு அடிப்படையிலும் நெருக்கமான தொடர்பும் உறவும் உடையன. இருமொழிகளும் அம்மொழிகளில் உருவான இலக்கியங்களும் ஒப்புமையும், தாக்கமும் பெற்றவனவாக உள்ளன. இதன் காரணமாக தமிழ் மலையாளம் இலக்கியங்களுக்கிடையே உள்ள ஒப்பாய்வுக்களம் பரந்து பட்டதாகவும் உள்ளது.

தமிழ் இலக்கிய வரலாறு ஈராயிரம் ஆண்டு பழமை உடையது. மலையாள இலக்கிய வராலாற்றில் முதல் நூலாக அமைவது, 'இராமசரிதம்' எனும் காப்பியம் ஆகும். இதன் காலம் கி.பி.13 ஆம் நூற்றாண்டு ஆகும். இதற்கு முந்தைய மலையாள இலக்கிய வரலாறு சேர நாட்டார் தமிழிலும் வடமொழியிலும் படைத்த இலக்கியங்களின் வராலாறாகவே கருதப்படுகிறது. இளங்கோ, சேராமான் பெருமாள் நாயனார், வேணாட்டடிகள் போன்று சேரநாட்டார் செந்தமிழில் இலக்கியம் படைத்துள்ளனர். இராமசரிதத்திலிருந்து தொடங்கும் முறையான மலையாள இலக்கிய வராலாறு இரண்டு முரண்பட்ட சக்திகளாக மோதலாக இயங்கியல் தன்மையில் வளர்ந்து வந்திருப்பதை அறியலாம். 'பாட்டு' (தமிழ்மரபு) மணிப்பிரவாளம் வடமொழி மரபு என்னும் இரு மரபுகளின் மறைமுகமான மோதல்களையும் அதன் விளைவான வளர்ச்சியினையும் மலையாள இலக்கிய வரலாற்றில் 19ஆம் நூற்றாண்டு வரை பார்க்க முடியும்.

மலையாள பாட்டிலக்கியப்பிரிவில் ஏராளமான நாட்டார் பாடல்களும் நாட்டார் கதைப்பாடல்களும்இடம் பெற்றுள்ளன. நாட்டார் பாடல்களில் வேலன் இனத்தாரின் நோய் தீர்க்கும் பாடல்கள், பாணர்களின் துயிலுணர்த்தும் பாடல்கள், புள்ளுவரின் அரவப்பாட்டு, புலையர்களின் தொழிற்களப்பாடல்கள் என்பன பெருவழக்குடையன. இவற்றில் பாணர் வேலன் இனத்தவரின் பாடல்கள் சங்க இலக்கிய பண்பாட்டு மரபின் பின்னணியில் சமூக உள்ளடக்கமும், வருணிப்பு தன்மையும் ஒப்பிடத்தக்கன.

மலையாள இலக்கியத்தில் தமிழ் மரபின் தாக்கம் தொடர்கிறது. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் கேரளத்தில் பெரும் சமூகப் பண்பாட்டு எழுச்சியை ஏற்படுத்திய ஸ்ரீ நாராயண குருவின் எழுத்துக்களில் சித்தர், வள்ளலார் பாடல்களின் தாக்கத்தைக் காணலாம். அதே போல அவரது

குறிப்பு

சீடரான மகாகவி குமாரன் ஆசானின் பக்திப்பாடல்களில் காணப்படும் தேவாரத்தின் தாக்கமும் கவனத்திற்கு உரியது. தற்போது வாழும் கவிஞரான குஞ்ஞுண்ணியின் கவிதைகளில் திருக்குறளின் தாக்கம் தெரிகிறது. தாக்க அடிப்படையில் மட்டுமின்றி இணை நிலையாகவும் தமிழ் மலையாள இலக்கியங்களை ஒப்பிட்டு ஆராய்வதற்கு ஏராளமான களங்கள் உள்ளன. தொன்ம இலக்கிய வகையில்

**எ.கா**

| **தமிழ்** | | **மலையாளம்** |
|---|---|---|
| 1. கம்பராமாயணம் | - | 1. இராமப்பணிக்கரின் ‘கண்ணச இராமாயணம்’<br>2. எழுத்தச்சனின் ‘அத்யாத்ம இராமாயணம்’ |
| 2. ஸ்ரீ வில்லிபுத்தூரார் பாரதம் | - | கண்ணச பாரதம் -<br>எழுத்தச்சனின் பாரதம்<br>(16 ஆம் நூற்றாண்டு ) |
| 3. செவ்வைச் சூடுவார் பாகவதம் | - | கண்ணச பாகவதம்,<br>செறுசேரியன் ‘கிருஷ்ண கதை<br>(15 ஆம் நூற்றாண்டு ) |
| 4. நளவெண்பா | - | குஞ்ஞுன்தம்பியாரின் ‘நளசரிதம்’ (பாட்டு)<br>உண்ணாயி வாரியாரின் ‘நளசரிதம்’<br>(ஆட்டக்கதை) |
| 5. குசேலோ பாக்கியானம் | - | குசேல விருத்தம<br>(இராமபுரத்து வாரியர்)<br>(மீனாட்சி சுந்தரம் பிள்ளை) |

ஆகியன சிறந்த ஒப்பீட்டுக் களங்களாக அமைந்து தமிழின் ஒப்பிலக்கிய வளர்ச்சிக்கு துணை புரிகின்றன.

**தெலுங்கு**

தமிழகமும் ஆந்திரமும் அண்டை மாநிலங்கள் இவை மொழி, பண்பாடு, அரசியல், வரலாறு, சமூகம், இலக்கியம் ஆகியவற்றில் பன்னெடுங்காலமாக தொடர்புகளும் உறவுகளும் உடையன. பல்லவர், சோழர், சாளுக்கியர், நாயக்கர் ஆகிய மன்னர் பரம்பரையினர் இவ்விரு நிலப்பகுதிகளிலும் ஆட்சிபுரிந்துள்ளனர். இதன் காரணமாக மக்கள் குடிப்பெயர்ச்சியும் நிகழ்ந்துள்ளது. இப்பின்னணியில், தமிழ் - தெலுங்கு இலக்கியங்களுக்கு இடையிலான ஒப்பீடு இயல்பானதாகவும், சமூகப்பண்பாட்டு அடிப்படை உடையதாகவும் அமைகிறது. இந்தியாவில் பெரும்பான்மையான மக்களால் பேசப்படும் மொழிகளுள் இரண்டாவது இடத்தைப்பெற்றுள்ளது. தெலுங்குமொழி.

இராஜராஜ நரேந்திரனின் (கி.பி.1051-1061) அவைப்புலவரான நன்னய்யாவின் ஆந்திர மகாபாரதம் தான் தெலுங்கின் முதல் காப்பியமாகும். இவருக்குப்பின் கி.பி.12, 13ஆம் நூற்றாண்டுகளில் நன்னிசோடா, பாலகுரிகி சோமநாதர், மல்லிகார்ஜூன பண்டிதர் ஆகியோரால் வீர சைவ இலக்கியங்கள் இயற்றப் பட்டுள்ளன. இவர்களின் 'சிவகவியுக' த்திற்குப்பின் பதினைந்தாம் நூற்றாண்டு வரை சமஸ்கிருத செல்வாக்குமிக்க புராணக்காப்பியங்கள் பல படைக்கப்பட்டுள்ளன. காப்பியக் கவிஞர்களில் ஸ்ரீ நாதர் குறிப்பிடத்தக்கவர். கி.பி.16 ஆம் நூற்றாண்டில் கிருஷ்ணதேவராயர் ஆட்சியில் தெலுங்கு மொழியும் இலக்கியமும் உன்னதம் பெற்றன. இக்காலம் பிரபந்த இலக்கியக் காலம் 17, 18 ஆம் நூற்றாண்டுகளில் தெலுங்கு இலக்கியம் தமிழகத்திலும் மைசூரிலும் வளர்ச்சி பெற்றது. இந்தத் 'தென்னகத் தெலுங்கு' இலக்கியத்தில் உரைநடை, கீர்த்தனைகள், யஷக்கானங்கள் போன்ற புதிய வடிவங்கள் செல்வாக்குப் பெற்றன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மேனாட்டு இலக்கியத்தின் செல்வாக்கால் தற்காலத் தெலுங்கு இலக்கியம் செழித்து வளர்ந்துள்ளது. தமிழ் - தெலுங்கு இலக்கியஒப்பீட்டில் புராண இதிகாச பாடுபொருள் கொண்ட படைப்புக்களை பின்வருமாறு ஒப்பிட்டு ஆராயலாம்.

**எ.கா.**

| **தமிழ்** | | **தெலுங்கு** |
|---|---|---|
| ஸ்ரீ வில்லிபுத்தூரார் பாரதம் | - | ஆந்திர மகாபாரதம் |
| செவ்வைச்சூடுவார்பாகவதம் | - | போதனர் பாகவதம் (15 ஆம் நூற்றாண்டு) |
| கம்பராமாயணம் | - | பாஸ்கர இராமாயணம் (12 ஆம் நூற்றாண்டு) |
| | - | ரங்கநாத இராமாயணம் (13 ஆம் நூற்றாண்டு) |
| | - | மொல்ல இராமாயணம் (16 ஆம் நூற்றாண்டு) |
| மயில் இராவணன் கதை | - | மாதய்யகவியின் 'மைராவண சரித்திரம்' (15 ஆம் நூற்றாண்டு) |
| அதிவீரராம பாண்டியரின் காசிக்காண்டம் | - | ஸ்ரீ நாதரின் காசிக்காண்டம் (15 ஆம் நூற்றாண்டு) |

அதிவீரராமரின் நைஷதம் - ஸ்ரீ நாதரின் ‘சிருங்காரநைஷம்’



குறிப்பு

பக்தி இலக்கியத்தில் தெலுங்கு வீரசைவ இலக்கியங்கள் தமிழ்த்தேவாரம், திருவாசகப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆராயத்தக்கன. கிருஷ்ணதேவராயரின் ‘‘ஆமுத்த மால்யத’’ (சூடிக்கொடுத்த சுடர்கொடி) பிரபந்தத்தை தமிழில் ஆண்டாள் பாசுரங்களோடும் குரு பரம்பரைக் கதைகளோடும் ஒப்பிட்டு ஆராயலாம். அதே போல் நாலாயிர திவ்விய பிரபந்த பாடல்களை தெலுங்கில் அன்னமாச்சார்யா, கெஷத்ரய்யா, பக்தராமதாஸ் ஆகியோரின் வைணவ இசைப்பாடல்களோடு ஒப்பிடலாம்.

தமிழ்நாட்டில் நாயக்கர் காலத்தில் தோன்றிய தென்னகத் தெலுங்கு இலக்கியங்களில் தமிழக வரலாற்றை அறிவதற்கான ஆதாரங்கள் பலவுள்ளன. இவற்றில் காணப்படும் தமிழ் இலக்கியத்தின் தாக்கமும் ஆராயப்பட வேண்டியுள்ளது. குறிப்பாக சிந்து, குறவஞ்சி இலக்கிய வடிவங்கள், தஞ்சை நாயக்கரான விஜயராகவனின் அவைக்களப் புலவரான பசுபுலேடி ரங்காஜாம்மாவின் ‘மன்னார்தாஸ் விலாசம், சஹாஜியான் கிராத விலாசம், சஹாஜியின் அவைப்புலவர் கிரிராஜ கவியின் ‘ராமமோஹன குறவஞ்சி’ மைசூர் மன்னர் கண்டீரவராஜுவின் (18 ஆம் நூற்றாண்டு) குறவஞ்சி நாடகங்கள் ஆகியன தமிழ்க்குறவஞ்சி இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்கன.

இலக்கியவகை அடிப்படையில் தமிழ் தெலுங்கு சதகநூல்கள் ஒப்பிடப்பட வேண்டியன. குறிப்பாக, தெலுங்கிலுள்ள சுமதி சதகம் (13 ஆம் நூற்றாண்டு) பாஸ்கர சதகம் (16 ஆம் நூற்றாண்டு) இராமலிங்க சதகம், அறப்பளீசுர சதகம், தண்டலையார் சதகம் ஆகிய நீதிச் சதக நூல்களோடு ஒப்பிட்டு ஆராயலாம். மாறிவரும் புறச்சூழல்களுக்கு ஏற்ப புதிய பாடுபொருள்களைக்கொண்டு இந்நூற்றாண்டில் எழுதப்பட்ட புகச்சுட்ட சதகம் (சுருட்டுச்சதகம்) பக்கோடிச் சதகம் (பக்கோடா சதகம்) சீபுருபுல்ல சதகம் (விளக்கு மாற்றுச்சதகம்) விசனகர்ரசதகம் (விசிறிச்சதகம்) ஆகிய சதக நூல்களை தமிழில் செருப்பு விடுதூது, பணவிடுதூது, புகையிலைவிடுதூது, தந்திவிடுதூது ஆகியதூது நூல்களோடு பண்பாட்டு மாற்றத்தளத்தில் ஒப்பிட்டு ஆராயலாம். தஞ்சை மெலட்டூர் பாகவத மேளாவின் நாடகங்கள் பகல் வேடக்கலை, தேவராட்டம் ஆகியன தெலுங்கு சமூக வரலாற்று இலக்கியப் பின்னணியில் ஆராயப்படவேண்டும்.

தற்கால இலக்கியத்தில் மறுமலர்ச்சிக் கவிஞர் குரஜாட அப்பாராவின் கவிதைகள் பாரதியின் கவிதைகளோடு ஒப்பிட்டு ஆராயப்பட்டுள்ளன. வட்டார தேசிய உணர்வின் பின்னணியில் ராயப்புரோலு சுப்பாராவின் கவிதைகளை பாரதிதாசன் கவிதைகளோடு ஒப்பிடலாம். பாரதிதாசனின் சமூக விடுதலை கவிதைகளை ஜாசுவாவின் கவிதைகளோடும், பாரதிதாசனின் பிராமண புராண எதிர்ப்பு படைப்புகள் திரிபுரனேனி ராமசுவாமி சௌத்ரியின் படைப்புகளோடும் ஒப்பிடத்தக்கன.

மொழிப் பேராசிரியர்களாக இருந்து இடதுசாரி சிந்தனை மிக்க கவிதைகளைப் படைத்தவர்கள் என்ற நிலையில் சிற்பியும் சி.நாராயண செட்டியாரும் (ஞானபீடவிருது கவிஞர்) ஒப்பிடப் பட வேண்டியவர்கள், காந்தியக் கவிஞர்கள் என்ற நிலையில் நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை கரிமெள்ளசத்ய நாராயணாவின் பாடல்களை ஒப்பிட்டு ஆராயலாம்.

சிறுகதை இலக்கியத்தில் மாப்பசானின் தாக்கம் பெற்ற குடிபாடி வெங்கடாசலத்தின் கதைகளை புதுமைப்பித்தனின் கதைகளோடு சமூக மதிப்புகளின் (கற்பு முதலியன) மாற்றம், மூட நம்பிக்கை எதிர்ப்பு ஆகிய தன்மைகளில் ஒப்பிட்டு ஆராயலாம். அடவி பாப்பி ராஜுவின் காந்தியச் சிறுகதைகளை அகிலன் சிறுகதைகளோடு ஒப்பிடலாம். ம்ற்போக்குச் சிந்தனையாளர்கள் என்ற நிலையில் கொடவடிகண்டி குடும்பராவு, ஜெயகாந்தன் ஆகியோரது புனை கதைகள் ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கன. முப்பாளரங்க நாயகம்ம பரிமளா சோமேஸ்வர், பீனாதேவி, சுலோசனாராணி ஆகிய பெண் எழுத்தாளர்களின் புனை கதைகளை தமிழில் இராஜம் கிருஷ்ணன், இந்துமதி, சிவசங்கரி ஆகியோரின் புனை கதைகளுடன் ஒப்பிடலாம்.

தற்கால நாடக இலக்கியத்தில் தெ.பொ.கிருஷ்ணசாமி பாவலரின் இந்திய விடுதலைப்போராட்ட நாடகங்களை தெலுங்கில் ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்திரியின் நாடகங்களோடு ஒப்பிடலாம். சாஸ்திரியின் 'பாரதமாதா வஸ்த்ரா பஹரணமு' நாடகம் பாரதியின் பாஞ்சாலி சபதத்தோடு ஒப்பிடத்தக்கது. கோமல்சுவாமிநாதனின் நாடகங்கள் ஆத்ரேயாவின் நாடகங்களோடும், சோவின் அரசியல் நாடகங்கள் என்.ஆர்.நந்தியின் நாடகங்களோடும் ஒப்பிட்டு ஆராயும்படி தமிழ்-தெலுங்கு இலக்கிய ஒப்பிட்டுக்களம் விரிந்து பரந்துள்ளது.

## 2.5.3. பிற இந்திய மொழிகளில் தமிழ் ஒப்பிலக்கிய வளர்ச்சி

வடமொழிப் பேராசிரியர் என்.கே. சிந்தாந்தாவின் ர்நசழஉை யுபந முக ஐனெயை என்ற ஆய்வு தமிழ் புறப்பாடல்கள் பண்டைய கிரேக்க சமஸ்கிருதப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆராயும் தகுதியை உடையவை என்பதை எடுத்துக்காட்டியது. இவர் பண்டைத் தமிழரின் புறத்திணைப் பாகுபாட்டையும் பாணர்கள் பற்றிய செய்திகளையும் இலக்கிய ஒப்பீட்டுக்கு எடுத்துக்காட்டினார்.

இந்திய இலக்கியம் என்பதை ஒரே கருத்தமைப்பாகக் கண்டு முதலில் நூல்கள் எழுதியவர்கள் மேலை நாட்டினரே. இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் மூரிஸ் விண்டர்நிட்ஸ், ஆல்பர்ட்வெபர், கீரியர்சன் முதலானோர். இந்திய இலக்கிய வரலாறு என்ற பெயரில் நூல்களை எழுதியுள்ளனர்.

ஆனால் இவற்றில் பெரும்பாலும் சமஸ்கிருத இலக்கிய வரலாறே கூறப்பட்டுள்ளது. சுனீதிகுமார் சாட்டர்ஜி 1958 இல் வெளியிட்ட 'இந்திய இலக்கியம்' (Indian Literature) என்ற நூல் தொகுதி தான் முதன்முதலாக 12 இந்திய மொழிகளில் காணப்படும் இலக்கியங்களைப்

பற்றிச் சுருக்கமாக எடுத்துரைத்தது. இதற்குப் பின்னர் சாகித்ய அகாதமியின் முதல் செயலாளராக இருந்த ஸ்ரீ கிருஷ்ண கிருபளானி (Panoramic glimpses of Modern Indian Literature) சுஜித்முகர்ஜி (Towards Literary History of India 1975) வி.கே.கோகாக் (The Concept of Indian Literature 1979) ஆகியோர் இந்திய இலக்கியம் பற்றி வரலாற்று நோக்கில் நூல்கள் வெளியிட்டு உள்ளனர். இந்நூல்கள் இந்திய இலக்கியத்தின் ஒருமையை உணர்ந்து எழுதப்பட்டவை.



குறிப்பு

இலக்கிய வளமுடைய - இலக்கியச் செயல்பாடுமிக்க 15 இந்திய மொழிகளில் தோன்றிய இலக்கியங்களின் வரலாற்றை முறையாக முழுமையாகத் தொகுத்து வெளியிட்டவர் கே. எம். ஜார்ஜ் தான், இவர் தலைமைப் பதிப்பாசிரியராக இருந்து மலையாளத்தில் இரு தொகுதிகளாக வெளியிட்டுள்ள பாரதிய சாஹித்திய சரித்திரம் (1982) என்ற நூல் இந்திய இலக்கிய வரலாற்றைப் பழங்கவிதை, தற்காலக் கவிதை, நாவல் , சிறுகதை, நாடகம் என இலக்கிய வகைகளின் அடிப்படையில் விளக்குகிறது. ஒவ்வொரு இலக்கிய வகைகளிலும் காணப்படும் பொதுத்தன்மைகளை விளக்கும் முகமாக ஒரு முன்னுரையும், அதைத்தொடர்ந்து தனித்தனியாக 15 மொழிகளில் அந்த இலக்கிய வகை வளர்ந்து வந்துள்ள வரலாறும் இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது. இந்த நூல் 1984 - இல் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது.

இந்திய இலக்கிய வகைமை பற்றிய ஆய்வில் பழங்கால இந்திய இலக்கியங்களைப் புராணம், இதிகாசம், காப்பியம், சதகம், தூது முதலிய இலக்கிய வகைகளின் அடிப்படையில் ஒப்பிடலாம் தற்கால இந்திய இலக்கியங்களை கவிதை, நாவல், சிறுகதை, நாடகம் போன்ற இலக்கிய வகைகளாகவும் பகுத்து ஆராயலாம்.

(எ.கா) இந்திய மொழிகளில் தூது இலக்கியம்.

மேலும்,

(அ) சமஸ்கிருத மரபின் தாக்கம் பிற இந்திய மொழிகளில்

(ஆ) தமிழ் மரபின் தாக்கம் பிற திராவிட மொழிகளில் (மலையாள

'இராம சரித்திரத்தில்' தமிழ் இலக்கிய மரபுகள்)

(இ) வங்க இலக்கியத்தின் (தாகூர், பங்கிம் சந்திரர்) தாக்கம் பிற

இந்திய மொழிகளில்

என்ற நிலைகளிலும் ஒப்பீட்டாய்வுகள் நிகழ்த்தலாம். எடுத்துக்காட்டாக திருவள்ளுவரை ஒரு நீதிக்கவிஞர் என்ற அடிப்படையில் ஒப்பிட்டு பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. ஏனெனில் திருவள்ளுவர் இந்தியாவில் நிலவுடைமை அரசு தோன்றிய இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்.

எனவே குடும்பம், அரசு முதலிய நிறுவன அமைப்புகளுக்கு அழுத்தம் கொடுத்துப் பாடியவர்.

*ஒப்பிலக்கியம்*

சமகாலத்தில் வாழ்ந்த அல்லது வாழுகின்ற இரண்டு இந்திய எழுத்தாளர்களை அல்லது இரண்டு இலக்கியப் படைப்புகளை ஒப்பிடுவதற்குத் தேர்ந்தெடுக்கும் போதுகூட அந்த இரண்டு எழுத்தாளரையும் அல்லது இரண்டு இலக்கியப் படைப்புகளையும் ஏதாவது ஒரு கண்ணியில் இணைக்க வேண்டும். எடுத்துக்காட்டாக 'பாரதியும் வள்ளதோளும்' பற்றிய ஒப்பீட்டாய்வில் இவ்விருவரையும் 'தேசியம்' என்ற கண்ணியில் சரட்டில் இணைத்துப்பார்க்க வேண்டும்.

**குறிப்பு**

ஒற்றுமை வேற்றுமைப் பட்டியல் தருவதை விடுத்து இந்திய இலக்கியத்தின் ஒருமையையோ பன்முகத் தன்மைகளையோ ஆய்ந்து ஒப்பிலக்கியம் வழி தற்காலத்தில் தமிழில் பெருவாரியான நூல்கள் தோன்றி வருகின்றன.

## 2.5.4. தமிழ்நாட்டில் ஒப்பிலக்கிய வளர்ச்சி

### 2.5.4.1. தமிழறிஞர்களின் பணிகள்

தமிழ் ஒப்பிலக்கிய ஆய்வை உயர்தளத்திற்கு இட்டுச் சென்ற பெருமை வ.வே.சு. ஐயரைச் சாரும் அவர் Kambaramayana- A study என்ற தம்முடைய நூலில் கம்பராமாயணத்தோடு வால்மீகி ராமாயணத்தையும், ஹோமரது இலியட் காப்பியத்தையும், வர்ஜிலின் எணீடையும் (Aneid) மில்டனின் சுவர்க்க நீக்கத்தையும் (Paradise Loss) ஒப்பிட்டு ஆராய்ந்தார். தம் ஆய்வின் முடிவாகக் காப்பியத் தன்மையில் கம்பராமாயணம் பிற காப்பியங்களை விஞ்சி நிற்கிறது என்று சான்றுகளுடன் நிறுவினார்.

தமிழறிஞர் எஸ்.வையாபுரிப்பிள்ளை 1952-இல் வெளியிட்ட 'காவியகாலம்' என்ற நூலில் ஒப்பிலக்கியக் கல்வியின் பயன்பாடு குறித்துத் தெரிவித்த கருத்து ஒப்பிலக்கியம் கற்கப் புகுவோர் நெஞ்சில் நிறுத்திப் போற்றத் தக்கதாகும் அக்கருத்து வருமாறு.

திராவிட இலக்கியங்களையும் இந்திய இலக்கியங்களையும் ஒப்புநோக்கிக் கற்பவனுடைய கல்வியறிவு மிகவும் பரந்துள்ளதாகவும், செழிப்புள்ளதாகவும் இருத்தல் ஒருதலை. இந்த ஒப்புநோக்குக் கல்வி, நமது அறிஞர்களுடைய குறுகிய மனப்பான்மை என்னும் திண்ணிய சுவரை இடித்துத் தகர்த்து விடும். (காவிய காலம் ப.99)

மேலும் தமிழில் உள்ள புறப்பாடல்களின் தன்மை, உலகின் பிறமொழிகளில் காணப்படும் வீரயுகப் பாடல்களின் தன்மையை ஒத்துள்ளது என்ற குறிப்பையும் தந்து சென்றுள்ளார்.

பேராசிரியர் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதரின் றுயச ை யுஉைநெவெ வுயஅடை ஊழரவெசல என்ற நூலும் தொடக்கக்கால ஒப்பிலக்கிய ஆய்வு நூல்களுள் குறிப்பிடத்தக்கது ஆகும். இது தமிழரின்

*Self-Instructional Material*

பண்டைய போர்முறைகளை இராமாயணம், மகாபாரதத்தில் விவரிக்கப்பட்டுள்ள போர்முறைகளுடன் முழு அளவில் ஒப்பிட்டு ஆராயும் ஒரு சிறந்த ஒப்பிலக்கிய ஆய்வாக திகழ்கிறது.

இலங்கையைச் சார்ந்த தமிழறிஞர்கள் தனி நாயக அடிகளும், க.கைலாசபதியும் ஒப்பிலக்கிய ஆய்வுக்கு நல்கிய கொடை பொது. தனி நாயக அடிகளார் இலத்தீன், பிரெஞ்சு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் வல்லவர். உலகம் முழுவதும் சுற்றி வந்த தமிழ்த்தூதர். அவர் கிரேக்க இலக்கியம், இலத்தீன் இலக்கியம், ஜெர்மானிய இலக்கியம் ஆகியவற்றைக் கற்றறிந்த வித்தகர். இதன் பயனாய் அவர் சங்கப்பாடல்களில் காணப்படும் இயற்கைப் புனைவுகளை கிரேக்கம், இலத்தீன், ஜெர்மானிய இலக்கியங்களில் காணப்படும் இயற்கைப் புனைவுகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்தவர். தம் ஆய்வு முடிவுகளை Nature Poetry in Tamil என்ற நூலாக வெளியிட்டார். இந்நூலே பின்னர் Landscape and poetry என்ற பெயரில் இரண்டாம் பதிப்பாக வெளிவந்தது.

தமிழ் இலக்கியத் திறனாய்வில் புதிய வெளிச்சத்தைப் பாய்ச்சியவர் எனப் போற்றப்படும் கலாநிதி க.கைலாசபதி தமிழ்ப் புறப்பாடல்களின் பெருமையை உலகறியச் செய்தவர் ஆவார். அவர் பின்னைய நாளில் நவீன இலக்கியத் திறனாய்வில் தம் கருத்தைச் செலுத்தியிருந்தாலும் உலக அளவில் ஒப்பிலக்கிய ஆய்வில் அவர் பெயரை நிறுத்தியிருப்பது அவர் முனைவர்பட்ட ஆய்வுக்குத் தேர்ந்தெடுத்துக்கொண்ட ‘‘தமிழ் வீரயுகப்பாடல்கள்’’ எனும் பண்டைத் தமிழ் இலக்கிய ஆய்வேயாகும். Tamil Heroic Poetry என்ற பெயரில் ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகப் பதிப்பாக வெளிவந்துள்ள இந்நூலில் தமிழ்ப் புறப்பாடல்களில், கிரேக்க ரோமானிய வீரநிலைக் காலப்பாடல்களில் காணப்படுவது போன்று வீரயுகப் பண்புகள் நிறைந்து காணப்படுவதால், ‘பண்டையத் தமிழ்ப் புறப்பாடல்களும் வீரநிலைக் காலப்பாடல்களே’’ என்பதை நிறுவியுள்ளார். அதேபோன்று மில்மன்பரி (Milman Parry) வகுத்துரைத வாய்மொழிப் பண்புகள் புறப்பாடல்களில் காணப்படுவதால் அவை தொன்மை மிக்கவை என்ற உண்மையையும் க.சைலாசபதி அந்நூலில் நிறுவியுள்ளார். கா.சிவத்தம்பியின் முனைவர்பட்ட ஆய்வும் பண்டைய தமிழ் நாடக இலக்கியத்தை ஒப்பிலக்கிய நோக்கில் காண்பது ஆகும். Drama in Ancient Tamil Society என்ற தலைப்பிலான இவ்வாய்வு ஆற்றுப்படை, புறநானூறு மற்றும் சிலப்பதிகாரப் பாடல்களில் காணப்படும் இசை, நடனம், நாடகம் பற்றிய செய்திகளை கிரேக்க ரோமானிய இலக்கியத்தில் காணப்படும் இசை, நடன, நாடகச் செய்திகளோடு ஒப்ப வைத்து ஆராய்கிறது. இவ்வாய்வும் இதே தலைப்பில் நூலாக வெளிவந்துள்ளது.

### 2.5.4.2. ஒப்பிலக்கியக் களன்களை கண்டறிதல்

*ஒப்பிலக்கியம்*

தமிழ் இலக்கியக் கல்வியாளர்கள் என்ற அளவில் ஒப்பிலக்கியத்திற்கான களங்களைச் சுட்டிக்காட்டிய பெருமை பல்கலைச் செல்வர் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் அவர்களைச் சாரும். தமிழ் இலக்கியங்களைப் பற்றிய கருத்துக்களை தெரிவிக்கும் போதெல்லாம் அவற்றோடு இயைபுடைய சமஸ்கிருத சான்றுகளைத் தருவதை அவர் வழக்கமாக கொண்டிருந்தார். இவர் இயற்றிய 'தாய்லாந்தில் திருப்பாவை திருவெம்பாவை' எனும் நூல் இலக்கியங்களின் இடம் பெயரும் தன்மையை எடுத்துக் காட்டியது.

**குறிப்பு**

### 2.5.4.3. மதுரைக் காமராசர் பல்கலைக்கழக பங்களிப்பு

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் ஆங்கில்துறைத் தலைவராக இருந்த பேராசிரியர் வை.சச்சிதானந்தம் அவர்கள் புகழ்மிகு அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர் யஹச் யஹச் யஹச் ரீமாக்கிடம் மாணவராக அமர்ந்து ஒப்பிலக்கியப் பாடம் கேட்டவர் ரிமாக்கிடமிருந்து பெற்ற ஒப்பிலக்கியப் புலமையால், ஆங்கிலத்துறையில் ஒப்பிலக்கிய ஆய்வு வளம் பெறுவதற்கு வழிவகை செய்தார். தமிழிலும் ஒப்பிலக்கிய உரைகள் ஆற்றினார். ஒப்பிலக்கியம் என்ற பெருநூலைத் தமிழில் எழுதினார். இவரது முயற்சியில் அப்பல்கலைக்கழக ஆங்கிலத் துறையில் தமிழ் இலக்கியத்தையும் ஆங்கில இலக்கியத்தையும் ஒப்பிட்டு முனைவர்பட்ட ஆய்வுகளும் எம்.ஃபில் ஆய்வுகளும் நிகழ்த்தப்பட்டன. சில சான்றுகள் வருமாறு.

மு.வ. → சாமர்செட்மாம் கதைகள் ஒப்பாய்வு

பாரதிதாசன் → ராபர்ட் பர்னல் கவிதைகள் ஒப்பாய்வு

பாரதி → விட்மன் கவிதைகள் → ஒப்பியல் நோக்கு

சேக்ஸ்பியர் → இளங்கோ துன்பியல் நாடகாசிரியர்களாக

பேராசிரியர் கா.செல்லப்பன் ஒப்பிலக்கிய நோக்கில் தமிழ் இலக்கியத்திற்கு ஆற்றிய பணி மிகப்பெரியது. கொல்கத்தாவைத் தலைமையிடமாகக் கொண்ட இந்திய ஒப்பிலக்கியக் கழகத்தோடு (Indian Comparative Liteature Association) நெருங்கிய தொடர்பு கொண்டு தமிழ் இலக்கியமும் வங்காள இலக்கியம் போல பிற அயல்நாட்டு மொழிகளோடு ஒப்பிடத்தக்க உயர்மதிப்பை உடையது என்ற கருத்தை ஆழப்பதித்தவர். இதனால் தமிழ்நாட்டிலும் இந்திய ஒப்பிலக்கியக் கழகத்தின் மாநாடுகள் இவரது முயற்சியால் நடந்தன.

மதுரை காமராசர் பல்கலைக்கழக ஆங்கிலத் துறையில் பேராசிரியராக இருந்தபின் புதுவைப் பல்கலைக் கழக ஆங்கிலத்துறை தலைவராகப் பணியாற்றி ஓய்வு பெற்ற பேராசிரியர் ப.மருதநாயகம் அவர்கள் தமிழ் இலக்கியத்தை ஆங்கில இலக்கியத்துடன் ஒப்பிட்டுக்

காண்பதற்குப் பல களங்கள் உள்ளன எனத் தம் ஆய்வுக்கட்டுரைகள் மூலம் சுட்டிக்காட்டினார்.

**ஒப்பிலக்கியத்திற்கு புத்தொளியூட்டியவர்கள்**

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தமிழ் துறைத்தலைவர்களாகப் பணியாற்றிய பேராசிரியர்கள் தமிழண்ணல் (இராம. பெரிய கருப்பன்) கதிர் மகாதேவன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். பல்கலைக்கழக அளவில் தமிழ் முதுகலையில் ஒப்பிலக்கியம் ஒரு பாடமாகக் கற்பிக்கப்படுவதற்கு இருவர் தம் முயற்சிகளும் தான் காரணம். ஒப்பிலக்கியத்தைத் தமிழ் மாணவர்கள் அறிந்து கொள்ளும் வகையில் **தமிழண்ணல் 'ஒப்பிலக்கிய அறிமுகம்'**என்ற நூலை இயற்றினார்.

பண்டைத் தமிழ் இலக்கியத்தை கிரேக்கக் கவிதைகளோடு ஒப்பிட்டு 'பழந்தமிழர் வீரப்பண்பாடு' என்ற நூலை கதிர் மகாதேவன் இயற்றினார் இந்நூல் தமிழில் வெளிவந்த சிறந்ததொரு ஒப்பிலக்கிய ஆய்வுநூல் என்று போற்றப்படுகிறது. மேலும் 'ஒப்பியல் நோக்கில் சங்க காலம்' 'தொன்மம்' போன்ற இவருடைய நூல்கள் தமிழிலக்கியத்தில் ஒப்பிலக்கிய ஆய்வுக்கான களங்கள் உள்ளதை எடுத்துக்காட்டின. இவ்விருவரைத் தொடர்ந்து ம.திருமலை அவர்களும் ஒப்பிலக்கிய ஆய்வில் தொடர்ந்து கவனம் செலுத்தி வருகிறார். இவரது 'ஜெயகாந்தன் - தகழி சிவசங்கரன் பிள்ளை நாவல்கள் ஓர் ஒப்பாய்வு' என்ற முனைவர்பட்ட ஆய்வு தற்கால இலக்கியங்களை ஒப்பியல் நோக்கில் காண்பதற்கான களங்களை காண்பிக்கின்றன.

**தமிழ் ஆர்வலர்களின் பங்களிப்பு**

டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணனின் 'கம்பனும் -மில்டனும்' போன்ற நூல்களும், மார்க்கசிய ஆய்வாளர் சிதம்பர ரகுநாதனின் 'கங்கையும் காவிரியும்' 'பாரதியும் ஷெல்லியும்' ஆகிய படைப்புகள் இவர்களை ஒப்பிலக்கிய ஆய்வாளர்களாக காட்டின.

### 2.5.4.4 இந்திய பல்கலைக்கழக பங்களிப்பு

இந்தியாவில் முதன்முதலாகப் பல்கலைக்கழக அளவில் கொல்கத்தாவில் உள்ள ஜாதவ்பூர் பல்கலைக்கழகத்தில் தான் ஒப்பிலக்கியத்துறை தொடங்கப்பெற்றது. பல்வேறு பல்கலைக்கழகங்களிலும் ஒப்பிலக்கியக் கல்வி அளிக்கப்பட்டாலும் அது பெரும்பாலும் ஆங்கிலத்துறையைச் சார்ந்தோ அல்லது அந்தந்த மாநில மொழித் துறையைச் சார்ந்தோ இருந்து வந்தது.

ஆனால் கொல்கத்தாவில் புத்ததேவபோஸ் என்ற மொழியறிஞரின் பெருமுயற்சியால் ஜாதவ்பூர் பல்கலைகழகத்தில் ஒப்பிலக்கியக் கல்வி முதுகலைப்பட்ட நிலையில் அளிக்கப்படும் அளவிற்குக் கால் கொண்டது. அவரைத் தொடர்ந்து அத்துறையில் ஈடுபட்டு உழைத்த அமியதேவ், நபநீபதேவ் சென், ஸ்வபன் மஜூம்தார், சுபாதாஸ் குப்தா போன்றோர் ஒப்பிலக்கியம் பற்றிய விழிப்புணர்வை இந்தியாவின் பிற

பல்கலைக்கழகங்களுக்கும் தந்தனர். இத்துறையைத் தலைமையகமாகக் கொண்டு செயல்படும் இந்திய ஒப்பிலக்கியக் கழகம் (Indian Comparative literature Association) இந்தியா முழுவதும் உள்ள பல்வேறு பல்கலைக்கழகங்களில் ஆண்டுதோறும் இருமுறை பன்னாட்டு ஒப்பிலக்கியக் கருத்தரங்குகளை (Biennial International seminar on comparative literature) நடத்தி வருகிறது. பிற பல்கலைக்கழகங்களில் ஒப்பிலக்கியக் கல்வி அளிக்கப்படுவதற்கான ஆலோசனைகளைக் கூறி வருகிறது.

மேலும் ஒப்பிலக்கிய ஆய்வாளர்களுக்குப் பயிற்சிப் பட்டறைகளும், புத்தொளிப் பயிற்சியும் அளித்து வருகிறது. ஆண்டுக்கு இருமுறை Jadavpur Journal of comparative literature[JJCL] என்ற ஒப்பிலக்கிய ஆய்விதழை வெளியிட்டு வருகிறது. இவ்விதழில் பன்னாட்டு ஒப்பிலக்கிய அறிஞர்கள் எழுதும் கட்டுரைகள் இடம்பெறுவதோடு ஒப்பிலக்கிய ஆய்வுகள் குறித்த அண்மைக் கால வளர்ச்சியை அறிவதற்கும் துணை செய்கிறது.

இவ்வாறு ஜாதவ்பூர் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, தில்லிப் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, நவீன இந்திய மொழி இலக்கிய ஆய்வுத்துறை, திராவிட பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, ராஜ்கோட்டில் உள்ள சௌராஷ்டிரா பல்கலைக்கழகத்தின் ஒப்பிலக்கியத்துறை, ஹைதராபாத் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, கோட்டயத்திலுள்ள மகாத்மா காந்தி பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, குஜராத் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை, அலகாபாத் பல்கலைக்கழக ஒப்பிலக்கியத்துறை ஆகியவற்றின் செயல்பாடுகள் குறித்த அறிக்கையை ஆகஸ்டு 2006 இதழ் விரிவாகத் தந்துள்ளது.

### 2.5.4.5. தமிழகப் பல்கலைக் கழகங்களின் பங்களிப்பு

தமிழ்நாட்டில் தமிழ் இலக்கியத்தில் ஒப்பிலக்கியக் கல்வியை முதன்முதலாக அறிமுகம் செய்த பெருமை மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கே உள்ளது. அப்பல்கலைக்கழகம் தமிழ்துறையில் வழங்கப்படும் முதுகலைக் கல்வியில் ஒப்பிலக்கியம் என்பதை ஒரு தாளாக வைத்தும், அஞ்சல் வழிக் கல்வி தமிழ் முதுகலைப்படிப்பில் ஒப்பிலக்கியத்தை ஓர் விருப்பபாடமாக அறிமுகமும் செய்தது. இந்நிலையில்தான் ஒப்பிலக்கியம் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல மாணவர்களுக்கு அறிமுகமானது. ஒப்பிலக்கியத்தில் முனைவர்பட்ட ஆய்வையும், எம்.ஃ.பில் ஆய்வுகளையும் இப்பல்கலைக்கழகத் தமிழியல் துறை ஊக்குவித்தது.

இலக்கிய வகை, வளர்ச்சி, தொன்மம், அடிக்கருத்துக்கள், செவ்வியல், குறிப்பு பொருள் போன்ற இலக்கியக் கொள்கைகளையும் ஒப்பிலக்கிய நோக்கில் ஆய்வு செய்யக் கூடிய வலுவான களமாக இத்துறை அமைந்தது. இதன் பயனாக இங்குள்ள ஒப்பிலக்கியத் துறை

பல்கலைக்கழக மானியக் குழுவின் (UGC) சிறப்பு நிதியுதவி பெறும் துறையாக (DSA) உயர்ந்தது.



இப்பல்கலைக்கழகத்தைத் தொடர்ந்து சென்னைப் பல்கலைக் கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம், அழகப்பா பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம் உள்ளிட்ட மாநிலத்தின் அனைத்துப் பல்கலைக்கழகங்களிலும் இத்துறை வளர்ச்சியடைந்து வருகிறது.

குறிப்பு

## 2.6. ஒப்பிலக்கிய வளர்ச்சியில் இதழ்களின் பங்களிப்பு

ஒப்பிலக்கியம் எனும் இலக்கிய அறிவுத் துறையின் வளர்ச்சிக்கு 'இந்திய ஒப்பிலக்கியம் எனும் முத்திங்கள் இதழ் போற்றத்தக்க வகையில் அமைந்தது. காந்தி கிராமப் பல்கலைக் கழகப் பேராசிரியர் அ.பிச்சை அவர்களின் ஈடுபாட்டில் இவ்விதழ் வெளிவந்து கொண்டிருக்கிறது. இதன் ஒவ்வொரு இதழும் உலக அளவில் உள்ள பல்வேறு மொழிகளைச் சார்ந்த இலக்கியங்கள் அதன் கொள்கைகளை வெளிக்கொணர்வது. இவ்விதழின் சிறப்பாகும்.

(எ.கா) : வங்காளச் சிறப்பிதழ், ஜப்பானியச் சிறப்பிதழ்

மொழிப்பெயர்ப்பு சிறப்பிதழ், அழகியல் சிறப்பிதழ்

## 2.7. அயல்நாடுகளில் தமிழ் ஒப்பிலக்கிய வளர்ச்சி

ஒப்பீட்டு அணுகுமுறையை நெறிப்படுத்தி நமக்குத் தந்தவர்கள் மேலை நாட்டினரே. இந்த அணுகுமுறைகளை அடையாளம் கண்டு நெறிப்படுத்தித் தருவதற்கு அவர்கள் கடுமையாக உழைத்துள்ளனர். அவர்களின் உழைப்பை அறிந்து போற்றுதல் நமது கடமையாகும். இவ்வகையில் அமெரிக்கர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஜெர்மானியர்கள், ரஷ்யர்கள் ஆகியோர் முதலிடத்தில் உள்ளனர்.

தமிழ்நாட்டில் தொடங்கி மேலை நாடுகள் வரை தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி நிலையை இக்கூறு தெளிவு படுத்துகிறது.

## 2.8. தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி நிலை – விளக்கம்

ஒப்பிலக்கியம் என்ற சொல் தமிழில் தோற்றம் பெற்று, அச்சொல்லாட்சி வளர்ந்த விதம், அதற்காக பாடுபட்ட தமிழறிஞர்கள், பல்கலைக்கழகங்கள் மற்றும் இதழ்கள் குறித்தும், அயல்நாடுகளில் ஒப்பிலக்கிய வளர்ச்சி பற்றியும் இக்கூறு விளக்க முற்பட்டிருப்பதை அறிந்து கொண்டிருப்பீர்கள்.

## கூறு:2 வினா-விடை பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

1. **Comparative literature என்ற சொல்லை ஒப்பு இலக்கியம் என மொழி பெயர்த்தவர் யார்?**

ஒப்பிலக்கியம்

குறிப்பு

குளோரியா சுந்திரமதி

**2. 'ஒப்பிலக்கியம்' என்ற தொடரை முதலில் பயன்படுத்தியவர் யார்?**

தமிழண்ணல்

**3. 'ஒப்பியல் தமிழ்' என்ற தொடரைக் கையாண்டவர் யார்?**

வ.செ.குழந்தைசாமி

**4. கால்டுவெல் இயற்றிய நூலின் பெயர் என்ன?**

திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்

**5. வங்க மொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப் பெற்ற படைப்புகளில் பெரும்பான்மை யாருடையது?**

தாகூர்.

**II. ஐந்து மதிப்பெண் வினா விடை**

**6. ஐரோப்பியத் தமிழிறிஞர்களின் ஒப்பிலக்கியப் பணியை விவரி.**

(2.5.1 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

**7. திராவிட மொழிகளில் தமிழின் ஒப்பிலக்கிய செல்வாக்கை விவரி.**

(2.5.2 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

**8. இந்திய அளவில் ஒப்பிலக்கிய வளர்ச்சியில் தமிழ் பெறுமிடத்தைக் கூறுக.**

(2.5.3 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

**9. தமிழகத்தில் ஒப்பிலக்கிய வளரச்சியை விவரி.**

(2.5.4 மதுரை காமராசர் பல்கலைக்கழகம் மற்றும் உள்ள பல்கலைக் கழகங்கள், தமிழ் ஆர்வலர்கள், இதழ்கள், மேலைநாட்டார் பணிகள் ஆகியவற்றைத் தொகுத்து சுருக்கி எழுதுக)

**III. கட்டுரை வடிவில் விடை தருக.**

**10. தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சி நிலை பற்றி கட்டுரை எழுதுக.**

(இக்கூறு முழுவதிலும் உள்ள செய்திகளைச் சுருக்கி எழுதுக)

## கூறு 3

# ஒப்பீடும் ஒப்பிலக்கியமும்

## 3.1. முன்னுரை

தமிழில் ஒப்பீட்டு அணுகுமுறை 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இருந்தே தொடங்கிற்று. சங்கத் தொகை நூல்கள் மீண்டும் கண்டுபிடிக்கப்பட்டு சி.வை.தாமோதரம் பிள்ளை, உ.வே.சா. போன்ற சான்றோர்களால் புதுப்பிக்கப்பட்ட பிறகு அவை அனைவருக்கும் எளிதில் கிடைக்கக்கூடியதாயின. ஆங்கிலக் கல்வி கற்ற தமிழ் அறிஞர்கள் பலர் ஒப்பீட்டு நோக்கில் எழுத ஆரம்பித்தனர். அதற்கு முன்பே பு.ரு.போப் தமிழில் இருந்து திருக்குறள் திருவாசகம், புறப்பாடல்கள், புறப்பொருள் வெண்பாமாலை ஆகியவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்ததுடன்,

கிரேக்க தமிழ் செவ்வியல் பாக்களை ஒப்பிட்டு, அவற்றிடையே வடிவம், உள்ளடக்கம் சமுதாயநிலை பற்றிய சொற்சித்திரங்கள் ஆகியவற்றில் ஒற்றுமைகள் காணப்படுவதைச் சுட்டிக்காட்டி உள்ளார். சங்கப்பாடல்களை உலகின் பிற வீரயுகப் பாடல்களுடன் ஒப்பிட்டு எஸ்.கிருஷ்ணசாமி ஐயங்கார், என்.கே.சித்தாந்தா, எஸ்.வையாபுரிப் பிள்ளை, ஜே.ஆர்.மார், தனிநாயக அடிகள், வ.சு.ப.மாணிக்கம், க.கைலாசபதி போன்றோர் ஆய்வுரைகள் வழங்கினர். எச்.எம்.சாட்விக், நோராசாட்விக், மில்பன்பரி போன்றோர் ஹோமராது காப்பியங்கள் வாய்மொழிப் பாடல்களில் இருந்தே தோன்றின என்று கூறியதைப் போல க.கைலாசபதியும் தமிழ் வீரயுகப்பாடல்களுடன் வாய்மொழி மரபிலிருந்து வந்தவைதாம் என்று தமது ‘தமிழ் வீரயுகப்பாடல்கள்’ என்ற ஆய்வேட்டில் கூறுகிறார்.



குறிப்பு

## 3.2. நோக்கம்

இலக்கிய ஒப்பீடு, ஒப்பீட்டு இலக்கியம் என்பன பழைய ஒப்பீட்டு உணர்வை நினைவுபடுத்துகின்றன. இது ஒப்பீட்டிற்காக ஒப்பிடுவது – சொல்லப்போனால் ‘ஒப்புக்காக ஒப்பீடு’ என்பது போல அமையும். இப்போது எல்லோருக்கும் ‘ஒப்பிலக்கியம்’ என்ற தொடர் அறிமுகமாகிவிட்டது. எல்லாப் பல்கலைக் கழகங்களும் இத்தொடரை ஏற்றுக்கொண்டுவிட்டன. பாடத்திட்டங்கள் ‘ஒப்பிலக்கியம்’ என்ற தலைப்பிலேயே வகுக்கப்படுகின்றன. இத்தொடர் ‘ஒப்பியல் இலக்கியம்’ என்ற விரிந்த தொடரைச் சுருங்க உரைப்பதாக உள்ளது. ஒப்பீட்டு அணுகுமுறைக்கு முக்கியத்துவம் தருகின்ற ‘ஒப்பீட்டு இலக்கியம்’ என்ற விரிபொருளுடைய ‘ஒப்பிலக்கியம் என்ற சொல்லே பெரிதும் ஏற்புடையதாகிறது.

## 3.3. ஒப்பீட்டு ஆய்வு முறை

தமிழ் இலக்கியங்களில் காணப்படும் சிறப்புக் கூறுகளைப் பிறமொழிக் கூறுகளுடன் ஒப்பிட்டும், தனி நூல்களின் ஒப்பீடாகவும், தனி ஆசிரியர்களின் ஒப்பீடாகவும் இன்றுவரை ஆய்வுகள் பல வெளிவந்துள்ளன. அவற்றைத் தொகுத்து,

தமிழ் - ஆங்கில ஒப்பீடு

தமிழ் - பிற தென்னிந்திய மொழிகள் ஒப்பீடு

தமிழ் - வடமொழிகள் ஒப்பீடு

என்ற பெரும் பிரிவுகளாகத் தொகுத்துக்கொண்டு, ஒவ்வொரு தலைப்பிலும் உட்பகுப்புகளாக.

1. தனி நூல்கள் ஒப்பீடு
2. தனி ஆசிரியர் ஒப்பீடு
3. ஒரு குறிப்பிட்ட சமுதாய அரசியல் இயக்கங்களின் தாக்கம் பற்றிய ஒப்பீடு
4. ஒரு இலக்கிய இயக்கத்தின் தாக்கம் பற்றிய ஒப்பீடு.

5. இருமொழி இலக்கியங்களிலும் காணக்கூடிய இணைநிலைகள் பற்றிய ஆய்வுகள்.

*ஒப்பிலக்கியம்*

என்று விரிவாக எடுத்துக்கொண்டு ஆராயலாம்.

**குறிப்பு**

இலக்கியம் குறித்த ஒப்பீடு இலக்கிய ஒப்பீடாகின்றது. 'ஆதிமனிதனுக்கு எண்ணம் (Thought) சிந்தனை என்று தோன்றியதோ, அன்றே ஒப்பீடும் தோன்றியது என்றார் பாசுனெட் (ம.திருமலை ஒப்பிலக்கியம் கொள்கைளும் பயில்முறைகளும் ப.13) இன்றைய நவீனமயமாக்கப்பட்ட ஒப்பிலக்கியத்துறை இந்த ஒப்பீட்டினை அடிப்படையாகக் கொண்டுதான் தோன்றிச் செழித்து வளர்ந்திருக்கின்றது. தற்சார்பும் (Subjectivity) உள்ளுணர்வும் (Inner Feeling) சார்ந்ததாகவும் மனிதனிடம் காணப்பட்ட ஒப்பீட்டு நோக்கு காலப்போக்கில் அறிவியல் துறைகளின் சிந்தனைத் தாக்கத்தினால் ஒப்பிலக்கியமாக மாறியது. 'ஒப்பீடு' என்பதும், ஒப்பிலக்கியம் என்பதும் அடிப்படையில் வேறுபட்டன. இவற்றை வேறுபடுத்திக் காட்டுவதில் தான் ஒப்பிலக்கியக் கொள்கைகளை வரையறுக்க முடியும்.

| ஒப்பீடு | ஒப்பிலக்கியம் |
|---|---|
| i) ஒப்பீடு தற்சார்புடையது உள்ளுணர்வு சார்ந்தது. | ஒப்பிலக்கியம் அறிவியல் சிந்தனைகளின் வழிப்பட்டது. உள்ளுணர்வும் தற்சார்பும் இல்லாதது. |
| ii) ஒப்பீடு மேலோட்டமான குறிக்கோள், நோக்கம் ஆகியவற்றைக் கொண்டது. இதன் பயன்களுடன் மேலோட்டமானது | ஒப்பிலக்கியம் ஆழமான நோக்கங்களையும் குறிக்கோள்களையும், உடையது, பயன்பாட்டியல் தன்மை மிகுதி. |
| iii) ஒப்பீடு என்பது சிறுசிறு பகுதிகளை ஒப்பிடுவதாக அமையும் | ஒப்பிலக்கியம் என்பது இலக்கியப் படைப்புக்களையோ கலைகளையோ முழுமையாக ஒப்பு நோக்குவதாக அமையும். |

குறிப்பு

| | |
|---|---|
| iv) இது குறுகிய தளத்தில் இயங்குவதாகும். இங்கு ஒப்பீடே ஒப்பிலக்கியம் ஆகிவிடுகின்றது | ஒப்பிலக்கியம் என்பது ஒரு பெரிய குறிக்கோளுடைய நீண்ட பெரும் பயணமாகும். அதில் ஒப்பிடுதலும் உண்டு. ஆனால் அதுவே ஒப்பிலக்கியம் ஆகிவிடாது. ஒப்பிலக்கியத்தில் ஒப்பீடு உண்டு. ஒப்பீடே ஒப்பிலக்கியம் ஆவதில்லை. எனவே ஒப்பிலக்கியம் தளத்தில் இயங்குகின்றது. இது ஒப்பீட்டினின்று வேறுபட்டதாகும். |

ஒப்பிலக்கியத்தில் ‘ஒப்பிடுதல்’ என்பது ஒரு நெறிமுறையாகவும் கருவியாகவும் முறையியலாகவும் பயன்பட்டு வருகின்றது. க.கைலாசபதி ‘நவீன ஒப்பியல்’ ‘பண்டைய ஒப்பியல்’ என்று குறிப்பிட்டுச் சொல்வதை ஒப்பிலக்கியத்தையும் ஒப்பீட்டையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

ஒப்பிலக்கியமும் ஒப்பீடும் ஒன்றுபோலத் தோன்றினாலும் அவை ஒன்றல்ல, வெவ்வேறானவை என்பது அவரது கருத்தாகும். ஒப்பீடு செய்வதற்கு மிக விரிவான இலக்கியப்பரப்பும் ஏற்ற வழிமுறைகளும் தேவையில்லை. ஒப்பிடுவோரின் உள்ளுணர்வும் நினைவாற்றலும் போதுமானது. ஆனால் ஒப்பிலக்கிய ஆய்வாளனுக்கு மிக விரிவான இலக்கியப் பரப்பும் ஏற்ற நெறிமுறைகளும் தேவை.

## 3.4. ஒப்பீட்டின் தன்மைகள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் ‘ஒப்பீடு’ குறித்த சிந்தனைகள் பரவலாகக் காணப்படுகின்றன. அவற்றைத் தொகுத்துக் காணும்போது ஒப்பீட்டின் பொதுத்தன்மைகளாக மேற்போக்காகக் கருத்துரைத்தல், தற்சார்புத் தன்மைகொண்ட ஆய்வாக இருத்தல், ஒப்புமைப் பகுதிகளைத் தொகுத்துரைத்தல், ஒப்புமைகளைச் சுட்டிக் காட்டுதல் ஆகியன இருப்பதை அறியமுடிகின்றது.

பேரிலக்கியப் படைப்பின் சிறப்பினைக் கூறவரும் இடங்களில் மிகை ஈடுபாட்டின் காரணமாக மேற்போக்காகப் பாராட்டும் இயல்பு பண்டைத் தமிழர்களிடம் இருந்தது என்பதற்குத் திருவள்ளுவமாலையில் வரும்

**“ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும்**

**பாயிரத்தினோடு பகர்ந்ததற்பின் போயொருத்தர்**

**வாய்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப் புலவ**

**ராய்க் கேட்க வீற்றிருக்கலாம்” (திருவள்ளுவ மாலை பா.எண்:16)**

என்ற பாடலைச் சான்றாகக் காட்டலாம்.

ஒப்பிலக்கியம்

திருக்குறளைப் படித்தவர்கள் பிற நூல்களைப் படிக்க வேண்டியதில்லை என்பது இப்பாடலின் கருத்தாகும். திருக்குறளைப் பாராட்டும் ஒரு கவிதையில் இக்கருத்து இருக்கலாம். ஆனால் ஒப்பிலக்கிய ஆய்வாளன் இவ்வாறு கருத்துரைத்தல் கூடாது. தற்சார்பின்றி நடுநிலைமையோடு கருத்துரைக்க வேண்டும்.

**குறிப்பு**

தொல்காப்பியர் களவொழுக்கங்களைப் பற்றிக் கூறுமிடங்களையும், எழுத்துக்களின் மாத்திரைகளைப் பற்றிக் கூறும்போதும் வடமொழியுடன் ஒப்பிட்டுக்கூறும் முறையைப் பின்பற்றுவதைத் தமிழண்ணல் பல சான்றுகளுடன் விளக்குகின்றார். (தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், பக் 24-25) ஆயினும் அவர் இந்த ஒப்பீட்டிற்கான அறிவியல் காரணங்களை விளக்கிக் கூறவில்லை. பண்டைத் தமிழரிடம் 'ஒப்பீடு' பற்றிய சிந்தனைகள் இருந்தன. பண்டைத் தமிழ் இலக்கியங்கள் அதற்குச் சான்றளிக்கின்றன. ஆனால் அவற்றில் ஏன்? எதற்கு? எப்படி? என்ற காரணகாரிய வினாக்களுக்கு விடை இல்லை. வடமொழியில் இவ்வாறு உள்ளது. தமிழில் இவ்வாறு உள்ளது என்ற திட்டவட்டமான கருத்துரைகளாகத் தான் விளக்கமுறைத் திறனாய்வுப் பாங்கில் தொல்காப்பியர் உள்ளிட்ட இலக்கண இலக்கியப் புலவர்களின் கூற்றுக்கள் உள்ளன. இத்தகைய சான்றுகளால் நிறுவப்படாத மேற்போக்கான கருத்துரைகளை எவர் வேண்டுமானாலும் கூறிவிடலாம்.

பண்டைய ஒப்பீடுகளில் தற்சார்பு, விருப்பு, வெறுப்பு ஆகியன இடம் பெற்றுள்ளன இதற்கு **மணிமேகலையில் வரும்.**

**'ஒட்டிய சமயத்து உறுபொருள்வாதிகள்**

**பட்டி மண்டபத்துப் பாங்கறிந்து ஏறுமின்'**

**(மணிமேகலை விழாவறை காதை அடி60-61)**

என வரும் பகுதி அக்காலச் சமயவாதிகளின் ஒப்பீட்டு முறையை உணர்த்துகின்றது. தங்களது சமயங்களே உயர்ந்தது, சிறந்தது என்று உறுதியாக நம்புகின்றவர்களின், முற்றிலுமாகத் தற்சார்பு கொண்டவர்களின் கருத்து மோதல்களையே மணிமேகலைக் காப்பியச் செய்யுளடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

**"வள்ளுவர்செய் திருக்குறளை மறுவற நன்கு உணர்ந்தோர்கள்**

**உள்ளுவரோ மநுவாதி ஒரு குலத்துக்கு ஒரு நீதி"**

**(மனோன்மணியம்)**

என்பது பேராசிரியர் சுந்தரம்பிள்ளையின் ஒப்பீடாகும்.

சான்றாக ஷேக்ஸ்பியரின் 'மேக்பத்' என்ற நாடகத்தின் இறுதிக் காட்சியில் மேக்டஃப் என்னும் படைத்தலைவன் போர்க்களத்தில் நின்று குற்றம் புரிந்த அவல வீரனான மேக்பத்தைப் பார்த்து 'I have no words

*Self-Instructional Material*

குறிப்பு

but only sword' என்று சூளுரைப்பான். இதுபோன்ற கதைமாந்தர் கூற்று கம்பராமாயண யுத்தகாண்டத்தில் இலக்குவன் வாயிலாகவும் வெளிப்படுகின்றது. மேக்டஃப் இலக்குவன் ஆகிய இருவருடைய கூற்றுக்களும் ஒப்புமையுடையனவாகக் காணப்படினும், இக்கூற்றுக்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு ஓர் ஒப்பிலக்கிய ஆய்வினை நிகழ்த்திவிட முடியாது. ஆயினும் குறிப்பிட்ட சூழல்களில் இலக்கிய மாந்தர்களின் உணர்ச்சி வெளிப்பாடுகள் ஒரு வகையினதாக இருக்கின்றது என ஒப்பீடு செய்யலாம்.

ஜெயகாந்தனின் 'சில நேரங்களில் சில மனிதர்கள் என்ற நாவலின் பிரபுவும், தகழிசிவசங்கரபிள்ளையின் 'தர்ம நீதியோ? அல்ல: ஜீவிதம்' என்ற நாவலின் கணேசபிள்ளையும் ஏறத்தாழ ஒரே மாதிரியாகப் படைக்கப்பட்டிருக்கின்றார்கள். பிரபு தன் இளமைப் பருவத்தில் பெண்களைத் தேடி அலைகின்றான். பல பெண்களின் வாழ்க்கைச் சிதைவுக்குக் காரணமாக இருக்கின்றான். அவனால் கெடுக்கப்பட்ட பெண்களில் ஒருத்தியாகிய கங்கா, பின்னர் பிரபுவைச் சந்திக்கும்போது இருவருக்கும் இடையில் ஏற்படும் நட்பு பிரபுவை ஓர் ஒழுங்கு முறைப்பட்ட வாழ்க்கைக்கு மாற்றுகின்றது. தன் தவறுகளை நினைத்து வருந்தும் அவன், தன் தந்தையிடம் குவிந்திருந்த பொருள் வளமே இதற்குக் காரணம் என நினைக்கின்றான். கங்காவுடன் ஏற்பட்ட தொடர்பினால் பிரபு திருந்தி வாழ்கின்றான். வாழ்க்கையில் பிடிப்பில்லாமல் இருந்த அவன் ஒரு பிடிப்பினை ஏற்படுத்திக் கொள்கிறான்.

தகழியின் 'தர்ம நீதியோ? அல்ல ஜீவிதம்' என்ற நாவலின் கணேச பிள்ளையும் ஏறத்தாழ பிரபினைப் போன்றவனே. இளம் வயதில் பல பெண்களின் கற்பைச் சூறையாடிய அவன் சாரா என்ற பெண்ணின் வாழ்வைச் சிதைத்து விடுகிறான். கணேச பிள்ளையினால் இல்வாழ்க்கையைத் தொலைத்த சாரா ஒரு பரத்தையாகி வாழ்க்கையைத் தொடர்கின்றாள். தன் நடுத்தரவயதில் சாராவை ஒரு பரத்தையாகச் சந்தித்த கணேசபிள்ளை மனம் வருந்துகின்றான். சாராவுடன் தன் வாழ்க்கையைப் பிணைத்துக் கொண்டு இல்லறம் நடத்துகின்றான்.

மனிதனாக திருந்தி வாழும் அவன் தன் இளம் வயதில் கெட்டலைந்ததற்கு தன் தந்தையிடம் மிகுந்திருந்த செல்வமே காரணம் என சாராவிடம் கூறுகிறான். சாராவின் மனத்தில் எழும் குற்ற உணர்வுகளையும் போக்குகின்றான். இவ்வகையான ஆய்வு ஒப்பிலக்கிய ஆய்வு அன்று இது 'ஒப்பீடு' என்னும் வகைமையைச் சார்ந்ததே ஆகும்.

## 3.5. ஒரு மொழிக்குள் ஒப்பீடு என்பது ஒப்பிலக்கிய வரம்பிற்குள் வராது.

ஒரே மொழியைச் சேர்ந்த கவிதைகள் சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள், காப்பியங்கள் ஆகியவற்றை ஒப்பிட்டு ஆராயும் போக்கும்

இன்றைய தமிழ் ஆய்வாளர்களால் பின்பற்றப்பட்டு வருவதைக் காணமுடிகின்றது.



- கல்லுக்குள் ஈரம், ஆத்மாவின் ராகங்கள் - ஒப்பீடு
- மோகமுள், இரும்புக் குதிரைகள் - ஒப்பீடு
- சிவசங்கரி, லெட்சுமி நாவல்கள் - ஒப்பீடு
- பாரதிதாசனின் குடும்பவிளக்கும் இருண்ட வீடும் - ஒப்பீடு
- புறநானூறும் திருக்குறள் இறைமாட்சியும் - ஓர் ஒப்பீடு
- அன்னி மகள், அன்னி மிஞிலி – ஓர் ஒப்பாய்வு
- நீலபத்மநாபன், நாஞ்சில் நாடன் புதினங்கள் - ஒப்பீடு

**குறிப்பு**

என்பவை 'ஒப்பீடு' என்பதற்குச் சான்றுகள் ஆகும். ஒரே மொழியைச் சேர்ந்த பல்வேறு படைப்பாளிகளின் காப்பியங்கள் ஒரே சமூக அமைப்பு மற்றும் பண்பாட்டுச் சூழல்களின் விளைவாக அவை தோன்றுவதால் அடிப்படையான ஒப்புமைகள் காணப்பெறும். உருவ உள்ளடக்கங்களில் ஒரு மொழியின் இலக்கிய வகைகள் பரந்துபட்டனவாக இருப்பினும், ஒரே பண்பாட்டுத் தளத்தில் அவை பிறப்பதால் உருவ உள்ளடக்க வேறுபாடுகளைத்தாண்டி அவற்றுக்கிடையே பல ஒப்புமைக்கூறுகள் காணப்பெறும். சான்றாகத் தற்கால நாவல்களில் காப்பியங்களின் இயல்புகள் இருப்பதைக் குறிப்பிடலாம். 'ஒப்பிலக்கியம்' என்னும் அறிவியல் நெறிப்பட்ட இலக்கிய ஆய்வுப்பிரிவுக்குள் இவை அடங்கா. ஏனெனில் ஒப்பிலக்கியம் என்பது வெவ்வேறு பண்பாட்டுத் தளத்தில் இயங்குகின்ற இலக்கியங்களையும் கலைகளையும் ஒப்பிட்டு ஆராய்ந்து அவற்றிற்கிடையே ஒருமைப்பாட்டைக் காண்பதாகும்.

பல்வேறு தேசிய இலக்கியங்களையும் துணைத்தேசிய இலக்கியங்களையும் ஒப்பிடுவதே ஒப்பிலக்கியமாகும். எனினும் தமிழிலும் சரி பிற மொழிகளிலும சரி ஒரு படைப்போடு அதேமொழி, பண்பாட்டில் படைக்கப்பட்ட வேறு படைப்பாளரின் படைப்பை ஒப்பிட்டு இயற்றும் போக்கு வெகுவாக வளர்ந்தது. இது ஒப்பிலக்கியத் தாக்கத்தால் ஏற்பட்டதே ஒழிய ஒப்பிலக்கியம் ஆகாது. அவ்வகை வளர்ச்சி திறனாய்வு மற்றும் ஆய்வு பரப்பை விரிவடைய செய்தது எனலாம். அவ்வகையில் செய்யப் பெற்ற ஒப்பீடுகளில் பேராசிரியர் சண்முக. செல்வகணபதி அவர்களின் படைப்புகள் நோக்குதற்கு உடையன.

## 3.6. நால்வகை ஒப்பீட்டு இலக்கிய பார்வை

### 3.6.1. கபில பரணர் ஒப்பீடு

சங்க இலக்கயங்கள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என இரு வகை. இவ்விலக்கியங்களைச் சுமார் 473க்கும் மேற்பட்ட புலவர்கள் பாடியுள்ளனர். இவர்களை கடைச்சங்கப் புலவர்கள் என்பர். இவர்களில் கபிலர், பரணர் என்ற இருவரையும் ஏனைய கடைச்சங்கப் புலவர்களும், பிற்காலப் புலவர்களும் புகழ்ந்துள்ளனர்.

**முரணில் பொதியன் முதற்பத்தேன் வாழி**

**பரண கபிலரும் வாழி.**

என நக்கீரரும்,

**தமிழில் பொய்மையிலா தமிழ்ச் சங்கமதில் கபிலர்**

**பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது புலவர்.**

என நம்பியாண்டார் நம்பியும் இவ்விருவர்களையும் ஒருசேர வைத்துப் புகழ்கின்றனர்.

**கபிலர் பரணர் ஒப்பீடு**

கபில பரணர் இருவரும் கடைச்சங்கப் புலவர்கள். இருவரையும் இணைத்து நம்பியாண்டார் நம்பி, நக்கீரனார், உரையாசிரியர்கள் போன்றோர் பாராட்டியுள்ளனர். இருவரும் சமகாலப் புலவராயினும் கபிலரினும், பரணர் மூத்தவர் பதிற்றுபத்தில் ஐந்தாம் பத்தினைப் பரணரும், ஏழாம் பத்தினைக் கபிலரும் பாடியுள்ளனர். கபிலர் சங்க இலக்கியத்தில் 235 பாடல்களையும் பரணர் 52 பாடல்களையும் பாடியுள்ளனர். கபிலர் பெரும்பாலும் குறிஞ்சித்திணைப் பாடல்களையும் பரணர் பெரும்பாலும் மருதத்திணைப் பாடல்களையும் பாடியுள்ளனர். இருவரையும் ஔவையார் பாராட்டுகிறார். கபிலர் பாரியின் பறம்புமலை மூவேந்தர்களால் முற்றுகையிடப்பட்டிருந்த போது கிளிகளின் மூலம் தினைக்கதிர்களைக் கொண்டு வந்த செயலை ஔவையார் பாராட்டுகிறார்.

**உரைசால வாண்புகழ் பாரி பறப்பின்**

**நிறையறைக் குரீஇயினம் காலைப்போகி**

**படர்கொள் மாலைப் படர்தந்தாங்கு (அகம்:303)**

அதியமான் நெடுமான் அஞ்சி பரணரால் பாராட்டப் பட்டதனை ஔவையார் பாராட்டுகிறார்.

**பரணர் பாடினன் மற்கொல் மற்றுநீ**

**முரண்மிகு கோவலூர் நூறி நின்**

**அரண்அடு திகிரி ஏந்திய தோளே (புறம்:99)**

**பேகன்**

பேகனை இருவரும் பாடியுள்ளனர். இவன் மனைவி கண்ணகியைப் பிரிந்து வாழ்ந்த நிலையை இருவரும் கடிந்துரைத்துள்ளனர். கபிலர் மலைவான் கொள்க (புறம்:143) பாடலின் மூலமும் பரணர்.

**அறம் செயதீமோ அருள் வெய்போய் என**

**இஃதுயாம் இரந்த பரிசில், அஃது இருளின்**

**இன மணி நெடுந் தேர் ஏறி**

**இன்னாது உறைவி அரும் படர் களைமே**



இருவரும் தம்மை யொத்த புலவர்களையும் புகழ்ந்து பாடியுள்ளனர். நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, பதிற்றுப்பத்து நூல்களில் இக்குறிப்புகள் உள.

**வேறுபாடு**

குறிப்பு

கபிலர் பத்துப்பாட்டில் குறிஞ்சிப்பாட்டினைப் பாடியுள்ளார். பரணர் பத்துப்பாட்டில் எந்தப் பாடலையும் பாடவில்லை. எட்டுத்தொகையில் கபிலர் ஐங்குறு நூற்றில் குறிஞ்சிப் பகுதியையும், கலித்தொகையில் குறிஞ்சிக் கலியையும் பாடியுள்ளார். இவ்விரு நூல்களில் பரணர் பாடல்கள் இல்லை. பாடல் எண்ணிக்கையில் பரணரை விட கபிலர் அதிகம் பாடியுள்ளார்.

கபிலர் பெரும் சுற்றத்தாருடன் வாழ்ந்ததாக அறிகிறோம். தம் சுற்றத்தாரின் பசியை நீக்க செல்வக் கடுங்கோ வாழியாதன்பால் சென்று பெரும் பொருள் பெற்று வந்தார் என்று அறிகிறோம். இதுபோன்ற சூழல் பரணரின் வாழ்வில் நடைபெறவில்லை.

கபிலர் பாரியின் உற்ற நண்பர். பாரிக்காகவே வாழ்ந்தவர். பாரி உயிருடன் இருக்கும்போதும் இறந்த பின்பும் பாரிக்காகவே வாழ்ந்தார். பாரி இறந்தபோது பாரியின் மகளிரைத் தம் மக்கள் போல் பேணி அவர்களின் திருமணத்திற்காக அரும்பாடுபட்டார். இறுதியில் பாரிக்காக வடக்கிருந்து உயிர் துறக்கிறார். புலவர்கள் அரசர்களிடம் பாடிப்பொருள் பெற்று மட்டும் வாழவில்லை குடும்ப உறுப்பினர்களாக இருந்துள்ளமையை இவர்களின் வாழ்வியல் மூலம் காணமுடிகிறது. இப்படியொரு வாழ்க்கைப் பரணருக்குக் கிட்டவில்லை. பாரியைப் பரணர் பாடவும் இல்லை.

பரணர் உருவ பல்தேர் இளஞ்சேட் சென்னி, கரிகாலன் மணக்கிள்ளி, நற்சோனை, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவன். ஆகிய ஐந்து தலைமுறை காலம் வாழ்ந்தவர். கபிலரின் இளமை காலம் பரணரின் முதுமைக் காலமாக இருந்திருக்கலாம். பரணர் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளையும் கண்டு ஆங்குள்ள மலைகள், ஆறுகள், ஊர்கள், முதலியவற்றை நன்கு அறிந்து பாடியுள்ளார். வாகைப் பறந்தலைப் போன்ற போர் நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுகிறார். கழார்பெருந்துறை நீர் விழாவில் ஆட்டனத்தி மறைந்தது., கரிகாலன் வெண்ணியிற் பெற்ற கன்னிப்போர், நன்னன் செய்த பெண் கொலை, போன்றவற்றைக் குறிப்பிடுகிறார். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற நிலையில் பாடியுள்ளர். கபிலரிடம் இத்தகைய வரலாற்றுக் குறிப்புகளை அதிகம் காண இயலாது அழகான இயற்கை நயம் பயக்கும் ஓவியங்களைக் காணலாம்.

## 3.6.2. சிலம்பும் மேகலையும் ஒப்பீடு

**இரட்டைக் காப்பியங்கள்:**

கூறும் கதையாலும், கூறும் வடிவாலும் படைப்பாளியின் தொடர்பு நிலைகளாலும் இரண்டு காப்பியர்களும் இரட்டைக் காப்பியங்கள் என்றும் அழைக்கப்படுகின்றன. டாக்டர் வ.சுப.மாணிக்கம் இவற்றை இரட்டைக் காப்பியங்கள் என்பர்.

- மணிமேகலை சிறப்பினைச் சிலம்பு கூறுவதால் மணிமேகலை கூறவில்லை.
- புகார்க்காண்டத்தில் மாதவிக்கு பேரிடம் கொடுத்த இளங்கோ கோவலன் இறப்பிற்குப் பின் மாதவியின் வாழ்வியலைக் கூறவில்லை. மணிமேகலை கூறுகிறது.
- கண்ணகிக்குக் கோவில் கட்ட கல் எடுத்த செய்தியைச் சிலம்பும், அவள் மகளாகக் கருதப்படும் மணிமேகலையின் துறவு நிலையை மேகலையும் கூறுகின்றன.
- சிலம்பின் கதையைச் சாத்தனார் கேட்க இளங்கோவும், மேகலையின் கதையை இளங்கோ கேட்க சாத்தனாரும் நூல் எழுதினார்கள் என்று பதிகம் கூறுகின்றது.
- சிலம்பின் கதை மணிமேகலையில் தான் முற்றுப் பெறுகிறது என்று பதிகம் கூறுகின்றது.

**"மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய**
**சிலப்பதிகாரம் முற்றும்" (சிலம்பு, பதிகம்)**

**சிலம்பு எழுந்த சூழல்:**

மதுரையை எரியூட்டிய பின் தன் காதல் கணவனான கோவலனோடு கண்ணகி விண்ணகம் சென்ற காட்சியைக் கண்ட குன்றக் குறவர்கள், மலை வளம் காண வந்த சேரன் செங்குட்டுவனிடம் இதனைக் கூறினர். அம்மன்னன் அருகிருந்த தண்டமிழ் ஆசான் சாத்தனார் கோவலன் வாழ்வில் சிலம்பு காரணமாக நடந்த துயரச் செய்திகளையெல்லாம் கூற, இளங்கோ அடிகளும் இதனைச் செவிமடுத்தார் மனித வாழ்க்கையை இயக்கும் முப்பொருள் உண்மைகளைக் கொண்ட ஒப்பற்ற கதை இது என உளம் மகிழ்ந்து சிலப்பதிகாரக் காப்பியத்தினை இயற்றினார்.

**அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றாவதுஉம்**

**உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்**

**ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்**

**சூழ் வினைச் சிலம்பு காரணமாக**

**சிலப்பதி காரமென்னும் பெயரால்**

**நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்**

**(சிலம்பு பதிகம்)**

குறிப்பு

**மணிமேகலை தோன்றிய சூழல்**

சங்க காலத்தை அடுத்து களப்பிரர் ஆட்சி நடைபெற்றது. இதனால் வாழ்வியல் போக்குகள் பலசிதைவுற்றன. அறம் கூறும் நீதி இலக்கியங்கள் பல தோன்றலாயின. இந்நிலையில் புத்த சமயமும் தமிழகத்தில் பரவலாயின. புத்தமதக் கொள்கையில் பெறும் ஈடுபாடுடையவரான சீத்தலைச் சாத்தனார் புத்தமதக் கொள்கைகளைக் கூற மணிமேகலை காவியத்தைப் படைக்கிறார். பசித்துன்பம், பரத்தமை, சிறைக்கொடுமை போன்ற சமுதாயக் கொடுமைகளை நீக்க மணிமேகலையைப் படைத்துள்ளார்.

**ஒப்பீடு**

கதைப்பொருளில் ஒற்றுமை கொண்டு சிலம்பும் மேகலையும் விளங்குகின்றன. நூல் தோன்றிய காலத்தாலும், நூல் அமைப்பாலும், படைப்பாளிகளின் தொடர்பு நிலையாலும் பல நிலைகளில் இவ்விருக்காப்பியங்களும் உறவுடையன. படைப்பாளிகளின் படைப்பின் நோக்கம் வேறுபட்ட நிலையில் உள்ளமையால் ஒரு சில வேறுபாடுகளையும் கொண்டுள்ளன.

இரண்டு காப்பியங்களும் முப்பது முப்பது காதைகளைக் கொண்டுள்ளன. இரண்டு காப்பியங்களும் கருத்தொற்றுமை வர்ணனை ஒற்றுமை, தொடர் ஒற்றுமை, உரிமை ஒற்றுமை, அடைமொழி ஒற்றுமை, போன்ற பல நிலைகளில் ஒன்றுபட்டுள்ளன.

இருகாப்பியங்களிலும் சில கிளைக் கதைகள் இடம் பெறுகின்றன. மாதவி, தேவந்தி, சாதுவன், குரங்குக்கை வானவன் கதை போன்றோரின் வரலாறு குறித்த பல கிளைக் கதைகள் சிலம்பில் இடம் பெற்றுள்ளன. அதுபோல மேகலையில் சுதமதி, சாதுவன், காயசண்டிகை, ஆபுத்திரன் போன்றோரின் கதைகள் கிளைக் கதைகளாக உள்ளன.

மேலும் இருகாப்பியங்களிலும் இயற்கை இகந்த நிகழ்ச்சிகளும் கோவலன் உதயகுமாரன் சாவிற்கு ஊழ்வினையைக் காரணமாக்கிக் கூறும் நிகழ்ச்சிகளும், மாசாத்துவன் மாதவி போன்றோரின் துறவுச் செய்தியினைச் சிலம்பும், மணிமேகலை, சுதமதிதுறவுச் செய்தியினை மேகலையும் கூறுகின்றன.

## 3.6.3. திருப்பாவை – திருவெம்பாவை – ஒப்பீடு

ஆண்டாள் எழுதிய பாவைப் பாட்டே முதல் பாவைப் பாடல் நூலாகும்.



பாவைப் பாடல்களுள் ஆண்டாள் எழுதிய திருப்பாவையும், மாணிக்கவாசகர் எழுதிய திருவெம்பாவையும் மிகச் சிறப்பானவைகள்

ஏலோர் எம்பாவாய் என்று முடிவதால் மாணிக்கவாசகரின் நூல் திருவெம்பாவை என்று அழைக்கப்படுகிறது.

**நூலாசிரியர்களின் வரலாறு**

திருப்பாவை பாடிய ஆண்டாள் வைணவப் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள், கண்ணன் அவதாரத்தின் மீது அளவு கடந்த பேரன்பு கொண்டு அத்திருமாலையே கணவனாக அடைய வேண்டும் என்று நோன்பு நோற்று அவ்விறைவனையே கணவனாக அடைந்தவர். இவரை சூடிக் கொடுத்தச் சுடர்கொடி என்றும் நாச்சியார் என்றும் அழைப்பர். இவர் 143 பாடல்கள் கொண்ட நாச்சியார் திருமொழி 30 பாடல்கள் கொண்ட திருப்பாவை என்ற நூல்களைப் பாடியுள்ளார்.

திருவெம்பாவை பாடிய மாணிக்கவாசகர் மதுரையை ஆண்ட அரிமர்த்தன பண்டியனுக்கு முதலமைச்சராக இருந்தவர். அரசனது ஆணையின்படி குதிரை வாங்கச் சென்ற போது திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டார். இவரது பாடல்கள் மாணிக்கம் போன்று இருந்தமையால் மாணிக்கவாசகர் என்று அழைக்கப்பட்டார். சைவ நாயன்மார் நல்வருள் ஒருவர். இவர் திருவாசகம் திருக்கோவை என்ற இரு நூல்களைப் பாடியுள்ளார். இறைவனே பாவை பாடிய வாயால் கோவை பாடுக என்று வேண்டினார் என்றும், இவர் இறைவன் வேண்டுகோளுக்கிணங்க திருக்கோவையார் பாடினார் என்றும் கூறப்படுகின்றது. திருவாசகத்தில் ஒரு பகுதியாக திருவெம்பாவை இருபது பாடல்களைக் கொண்டு அமைந்துள்ளது.

இவை போல பொருள், தொடர், சொல் போன்றவைகளில் பல ஒன்றுபட்டக் கருத்துக்கள் உள்ளன.

| திருவெம்பாவை | திருப்பாவை |
|---|---|
| 1. **தொண்டு செய்தல்**<br>எம்மை உமக்கல்லால் | உமக்கே நாம் ஆட்செய்வோம் |
| 2. **கன்னியர் பரிகாசம்**<br>வன் செவியோ நின்செவிதான் | ஊமையோ அன்றிச் செவிடோ |
| 3. **இறை வர்ணனை**<br>கண்ணுக்கினியான்<br>கன்னார் அமுதம் | மனதுக்கினியான் |
| 4. **நங்கையருள் உரையாடல்**<br>எல்லாரும் வந்தாரோ<br>எண்ணிக்கொடு உளவா<br>சொல்லுகோம் | எல்லாரும் போந்தாரோ?<br>போந்தார் போந்து எண்ணிக் கொள் |

குறிப்பு

| | |
|---|---|
| **5. துயிலெழுப்பல்**<br>மானே நீ றென்னிலை<br>நாளை வந்து உங்களை<br>நானே எழுப்புவன்<br>என்றாலும் நாணோமே | எங்களை முன்னம்<br>எழுப்புவான் வாய் பேசும்<br>நங்காய் எழுந்திரர் |
| **6. காலைக்காட்சி வருணனை**<br>கோழிச் சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்<br>எழிலியம்ப இயம்பும் வெண் சங்கெங்கும் | வந்தெங்கும் கோழி<br>அழைத்தன காண் |
| **7. பெண்கள் வருணனை**<br>வண்ணக்கிளி மொழியாள் | இளங்கிளியே |
| **8. இறைவனை விளிக்கும் முறை**<br>பரஞ்சோதி, பெருஞ்சோதி,<br>சோதித் திறம்பாடி | தோற்றமாய் நின்ற சுடரே<br>அணி விளக்கே |

இதுபோல பொருள், தொடர், சொல் போன்றவைகளில் பல ஒன்றுபட்டக் கருத்துக்கள் உள்ளன.

**மாறுபாடுகள்:**

பலவகைகளில் இவ்விரு இலக்கியங்களிடையே ஒப்புமைகள் காணப்பட்டாலும் மாறுபட்டக் கருத்துக்கள் இவற்றிடையே காணப்படுகின்றன.

1. திருவெம்பாவையில் நோன்பு பற்றிய குறிப்புக்கள் இல்லை. திருப்பாவையில் பாவை நோன்பு நோற்கும் நிலைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது.
2. திருவெம்பாவையில் பெண்கள் சிவனடியாரோடு தாங்கள் மண உறவுகொள்ள விரும்புவதாகவும், அவர்களுக்குத் தொண்டு செய்ய விரும்புவதாகவும் செய்திகள் பேசப்படுகின்றன. ஆனால் திருப்பாவையில் பெண்கள் கண்ணனின் அன்பைப் பெறவும். அவனுக்குத் தொண்டு செய்ய விரும்புவதாகவும் பேசப்படுகின்றது.
3. மழைமேகம் திருவெம்பாவையில் உமையம்மைக்கும், திருப்பாவையில் திருமாலுக்கும் உவமையாகப் பேசப்படுகின்றது.
4. மின்னல் திருவெம்பாவையில் தேவியின் இடைக்கும், திருப்பாவையில் திருமாலின் சக்கரத்திற்கும் உவமையாகக் கூறப்படுகிறது.

5. மேக முழக்கம் திருவெம்பாவையில் தேவியின் கிண்கிணி ஒலிக்கும், திருப்பாவையில் திருமாலின் சங்கொலிக்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது.
6. மழை உமையம்மையின் இன்னருளாகத் திருவெம்பாவையிலும் திருமாலின் வில்லிருந்து புறப்படும் அம்பாகத் திருப்பாவையிலும் பேசப்படுகின்றது.
7. திருவெம்பாவையில் திருக்கடைக் காப்பு இல்லை திருப்பாவையில் உண்டு.
8. திருவெம்பாவை 20 பாடல்களைக் கொண்டுள்ளது. திருப்பாவை 30 பாடல்களைக் கொண்டுள்ளது.
9. திருப்பாவையில் உடலின்பம் அதிகமாகப் பேசப்படுகிறது. திருவெம்பாவையில் தத்துவக் கருத்துக்கள் அதிகம் பேசப்படுகின்றன.

ஆண்,பெண்ணாகப் பாவனை செய்து கொண்டு பாடுவதற்கும் உணர்ச்சி அடிப்படையில் வேறுபாடு உண்டு. இவ்வேறுபாடுகளை இவ்விரு நூல்களிலும் காணலாம்.

திருவெம்பாவை மார்கழித் திருவாதிரைக்கு முன்பின் பத்துநாட்களும், பாடப்படுவதால் 20 என்ற எண்ணிக்கையைக் கொண்டும், திருப்பாவை மார்கழி மாதம் முழுவதும் பாடப்படுவதால் 30 என்ற எண்ணிக்கையைக் கொண்டும் அமைந்துள்ளன.

சைவத்தில் இறைத் தொண்டு அடியார்த் தொண்டாகக் கருதப்படுகின்ற காரணத்தால் திருவெம்பாவையில் இறைத்தொண்டரே கணவராக வரவேண்டும் என்ற வேண்டுதல் அமைகிறது. வைணவத்தில் இறைவனே எல்லாமுமாய் இருக்கிறான் என்ற நம்பிக்கை உள்ளபடியால் கண்ணனே கணவனாக வர வேண்டும் என்ற வேண்டுதல் உள்ளது.

மாணிக்கவாசகரும் ஆண்டாளும் சன்மார்க்க நெறியில் நின்று பாடினாலும் இருவருக்கும் இறைவன் செய்தப் பெருங்கருணையின் நிலை வேறு. அமைச்சராக இருந்த மாணிக்கவாசகருக்கு திடிரென்று இறைவன் காட்சியளித்து. ஆட்கொண்டமையில் தனக்கு அளித்த அருளை எண்ணி எண்ணி தாச மார்க்கத்திலிருந்தும் பாடுகிறார். ஆயின் இறைத்தொண்டே வாழ்வியல் நோக்கமாகக் கொண்ட குடியில் வளர்ந்தும், இறைவனையே கணவனாகக் கொள்ள வேண்டும் என்றும் நினைந்து வழிபட்டமையால் சன்மார்க்க நெறியே ஆண்டாள் பாடல்கள் முழுவதும் நிறைந்துள்ளது.

## 3.6.4. தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளி எழுச்சி மாணிக்கவாசகர் திருப்பள்ளி எழுச்சி ஒப்பீடு

### திருப்பள்ளி எழுச்சி ஒரு விளக்கம்

இறைவனைப் பள்ளியிலிருந்து எழுந்தருள வேண்டுவது திருப்பள்ளி எழுச்சியாகும். நாட்டுப்புறப்பாடல் வகையில் அமைந்தது

பள்ளி எழுச்சி, தலைவி,தலைவனை அதிகாலையில் எழுப்பி வேலைக்கு செல்லுமாறு பாடுவதாகப் பாடல்கள் இருந்து வந்தன.

குறிப்பு

**சேவக் கோழி கூவுதே மச்சான் எழுந்து**

**தாரு கொலை எடுவே மச்சான்**

**நாளு நல்ல நாளு இது**

**நாற்று நடும் வேலை இது.**

என்பன போல பாடப்பட்டது. பின்பு பழந்தமிழ் நூல்களில் இப்பள்ளி எழுச்சி துயிலெடை நிலை என்று கூறப்பட்டுள்ளது. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பாடாண் திணையில் தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (தொல் புறம் ̇88) என வரும் பாசறைக்கண் துயில் கொண்ட மன்னன். நற்புகழைப் பொருந்த வேண்டிச் சூதர் ஏத்தித் துயில் எழுப்பும் நிலைப் பற்றிக் குறிப்பிடுவதாகும். மேலும் காமம் கண்ணிய கண்படை நிலை என்பது அரசன் இனிது துயின்ற நிலை பற்றிக் கூறுவது ஆகும். சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முந்திய காலமாகிய வைகறையில் அமைதியான சூழலில் அரசன் மகிழ்வுடன் எழுமாறு அவனது வீரத்தையும் குலப்பெருமையையும் கூறிச் சூதர்கள் துயில் எழுப்பினால் அவன் அன்று முழுவதும் மகிழ்வுடன் விளங்குவான் என்பது மரபாக இருந்தது. புறப்பொருள் வெண்பா மாலையிலும் சூதர் துயிலுணர்த்துதல் சொல்லப்பட்டுள்ளது. மேலும், பாசறையில் துயிலெழுப்புதலும் அரண்மனையில் துயிலெழுப்புதலும் பழக்கத்தில் இருந்து வந்தன.

**திருப்பள்ளி எழுச்சி இலக்கணம்**

தொல்காப்பிய இலக்கண நூல் கூறும் பாடாண் துறையின் விரிவாகப் பின் வளர்ந்த இலக்கிய வகையே திருப்பள்ளி எழுச்சியாகும். மேலும், இத்துயிலெடை நிலைக்கு இலக்கணம் கூறும் பன்னிரு பாட்டியல்

**கண்படை மன்னவர் முன்னர்த் தன்பத**

**விடியல் எல்லை இயல்புறச் சொல்லித்**

**தந்த நிறையரும், தாராத் திறையாரும்,**

**ஏந்தி நின்மொழி கேட்டினைந் தியங்க**

**வேண்டினர் இத்துயில் எழுகென் விளம்பின்**

**அதுவே மன்னவர் துயிலெடை நிலையே**

**தமிழில் திருப்பள்ளி எழுச்சி நூல்கள்**

தமிழில் பல திருப்பள்ளி எழுச்சி நூல்கள் உள்ளன. மாணிக்கவாசகர் திருப்பள்ளி எழுச்சி , தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளி எழுச்சி, சிவப்பிரகாச சுவாமிகள் திருப்பள்ளி எழுச்சி, தத்துவப் பிரகாச நாயனார் திருப்பள்ளி எழுச்சி, சிதம்பர சுவாமிகள் திருப்பள்ளி எழுச்சி,போன்ற திருப்பள்ளி எழுச்சி, நூல்களும்

படைத்தோன் பெயராலேயே அமைந்து உள்ளன. ஆனால் பாரதி ‘பாரத மாதா திருப்பள்ளி எழுச்சி’, என்ற ஒரு நூலைப் படைத்தார். இதில் யார் பள்ளி எழ வேண்டுமோ அவர்கள் மேல் இந்நூல் அமைந்துள்ளது.





**மாணிக்கவாசகர் வரலாறு**

இறைவனால் வலிய ஆட்கொள்ளப்பட்டவர் மாணிக்கவாசகர், திரோதன சத்தியின் ஆற்றலால் தூங்கிய மணிவாசகப் பெருமானைச் சிவப்பெருமான் எழுப்ப, அவர் திருவருளோடு கூடி விளங்கும் போது இவரை இவ்வண்ணம் உய்யக்கொண்டோமே என்ற கருணை பெருக்கால் இறைவன் கண்ணயர சிவபெருமானை மாணிக்கவாசகப் பெருமான் திருப்பள்ளியினின்று எழுந்தருள்க என்னும் கருத்தேற்றுகிறார். திருவாசகம் 51 பதிகங்களையும் 656 பாடல்களையும் கொண்டது.

**தொண்டரடிப் பொடியாழ்வார் வரலாறு**

இவரது இயற்பெயர் விப்ரநாராயனர் இதற்கு பொருள். நால்வகை வேதங்களை நன்கு கற்றுத் தேறியவர். திருவரங்கப் பெருமானுக்கு மாலைகட்டி மகிழ்விப்பதே இவரது தொழில். ஆனால் இவர் தேவதேவி என்னும் பொதுமகளின் அழகில் மயங்கித் தன் தெய்வப்பணியை மறந்திருந்தார். இறுதியில் பொருள் எல்லாவற்றையும் கவர்ந்த தேவதேவி இவரை வெறுத்து ஒதுக்க இவர் அவளது வீட்டு வாயிலில் பரிதாபகரமாக இருந்த நிலையில் இறைவனால் மீண்டும் ஆட்கொள்ளப்பட்டார். அதன்பின் தன் குற்றத்தையுணர்ந்து அதனால் ஏற்பட்டப் பாவத்தைப் போக்கித் தொண்டரடிப் பொடியாழ்வார் ஆயினார். இவர் பாடிய நூல்கள் ‘திருமாலை’ ‘திருப்பள்ளி எழுச்சி’ என்பன திருமாலை 45 பாடல்களையும் திருப்பள்ளி எழுச்சி 10 பாடல்களையும் கொண்டன.

**மண்டக்குடி தனில்வாழ வந்தோன் வாழியே!**

**மார்கழியில் கேட்டைநாள் வந்தித்தோன் வாழியே**

**தெண்டிரைசூழ் கரையையே தெய்வமென்றான் வாழியே**

**திருமாலை ஒன்பதஞ்சும் செப்பினான் வாழியே**

**பண்டுதிருப் பள்ளியெழுச்சி பத்துரையான் வாழியே**

**பாவையார் கலவிதனைப் பழித்த செல்வன் வாழியே**

**பாவையார் கலவிதனைப் பழித்த செல்வன் வாழியே**

**தொண்டு செய்து துவளத்தால் துவங்கினான் வாழியே**

**தொண்டரடிப் பொடியாழ்வார் துணைப்பதங்கள் வாழியே**

**இரு நூல்களிலும் காணும் ஒன்றுபட்ட கருத்துகள்**

இவ்விரு கவிஞர்களும் ஒரே நோக்கத்திற்குரிய பாடல்களைப் பாடியதால் இவ்விரு இலக்கியங்களிலும் ஒன்றுபட்ட சில அமைப்புகள் காணப்படுகின்றன. இவை இரண்டும் இலக்கிய நயமுடையன. பக்தி

நெறியுணர்த்துவன. பள்ளி எழுச்சிக்குரியன. பத்துப் பத்துப் பாடல்களை உடையன. எண் சீர் ஆசிரிய விருத்தப் பாக்களால் ஆயின.

*ஒப்பிலக்கியம்*

**காலைப்பொழுது**

தொண்டரடிப் பொடியாழ்வார் தமது திருப்பள்ளி எழுச்சியில் காலைப்பொழுதின் இயல்பாகிய சூரியனது தோற்றத்தினை,

**கதிரவன் குணதிசைச் சிகரம்வந்து அணைத்தான்**

**குறிப்பு**

**கன இருள் அகன்றது என்று குறிப்பிடுவதைப் போல**

மாணிக்கவாசகப் பெருமான் தமது திருப்பள்ளி எழுச்சியில்

**அருணளிந் திரன்றிசை யணுகினன் இருள்போய்**

**அகன்றது என்று குறிப்பிடுகின்றார்**

இங்கு சொற்களின் அமைப்புகளில் வேறுபாடுகள் காணப்பட்டாலும் பொருள் இரண்டு கவிஞர்களிடத்தும் மிக ஒத்த நிலையில் காணப்படுவதை அறிய முடிகின்றது.

**துன்னிய தாரகை மின்னொளி சுருங்கி**

என்று ஆழ்வார் குறிப்பிடுவதுபோல, மாணிக்கவாசகர்

**'ஒவினதாரகையொளி'** என்று குறிப்பிடுகின்றார்.

**புலம்பின புட்களும்** எண்ற ஆழ்வார் கூற்றைப் போல் **கூவின பூங்குயில், கூவின கோழி, குருகுகள் இயம்பின** என வரும் மாணிக்கவாசகர் கூற்று அமைந்துள்ளது. ஆழ்வார் பறவைகளின் ஒலியை ஒருமித்துக் கூறியதை வாசகர் விரித்துக் கூறுவதைத் தவிர கருத்து ஒன்றாகவே அமைந்துள்ளது.

**இரவியும் துலங்கொளி பரப்பு** என்று சூரியன் ஒளிபரப்பும் தன்மையைத் தொண்டரடிப் பொடியாழ்வார் கூறுவது போல், **கருணையில் சூரியன் எழ எழ** மாணிக்கவாசகர் பாடுகிறார்.

**பக்தர்கள் கூட்டம்**

**ஆழ்வார் அடியார் கூட்டத்தைக் கூறுமிடத்து**

**அந்தரத்து அமரர்கள் கூட்டங்கள் இவையோ?**

**அருந்தவ முனிவரும் மருதரும் இவரோ? எனவும்**

**……… நன்முனிவர்**

**தும்புரு நாரதர் எனவும்,**

**மாதவர், வானவர்,சாரணர், இயக்கர்,**

**சிந்தரும் எனவும் குறிப்பிடுவது போல்,**

*Self-Instructional Material*

மாணிக்கவாசகரது,

**இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்,**

**இருகொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்,**

**துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்,**

**தொழுகையர், அழுகையர்,துவள்கையர், ஒருபால்,**

**சென்னிய லஞ்சலி கூப்பினர் ஒருபால்,**

என்னும் பாடல் அமைந்துள்ளது.

தொண்டரடிப் பொடியாழ்வார் தம்மை ஆட்கொண்டமையை நினைவுறுத்தி பாடியது போல், மாணிக்கவாசகரும் தன்னை இறைவன் ஆட்கொண்டு ஆழ்வார் கூறுமிடத்து,

**'தொடையொத்த துவளம் கூடையும் பொலிந்து**

**தோன்றியதோள் தொண்டரடிப் பொடி என்னும்**

**அடியனை, அளியன் என்று அருளி உன் அடியார்க்கு**

**ஆட்படுத்தாய்'** என்று கூறுகிறார்.

இதைப்போலவே மாணிக்கவாசகரும்

**யாவரும் அறிவரியா எமக்கெளியாய்**

**என்னையும் ஆண்டு கொண்டு இன்னருள் புரியும்**

**இப்பிறப் பறுத்தெமை யாண்டு அருள்புரியும்**

**செந்தழல் புரைதிரு மேனியும் காட்டி**

**திருப்பெருந் துறையுறை கோவிலம் காட்டி**

**அந்தணனா வதும் காட்டி வந்தாண்டாய் ஆரமுதே**

எனவரும் சொற்றொடர்களால் காட்டுகின்றார். இருவரும் தங்களை ஆட்கொண்டமைக் குறித்துப் பேசுவதில் சிறப்புற்றுத் திகழ்கின்றனர்.

**இரு நூல்களிலும் காணும் வேறுபட்டக் கருத்துகள்**

இருபள்ளி எழுச்சிகளும் மாறுபட்ட சமயங்களுக்குரியன . ஆகையால் சில கருத்துக்களில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. இவ்விரு தொண்டர்களும் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர்கள் என்றாலும் தத்ததமது அனுபவங்களைக் கூறுவதிலும், வேறுபாடுகள் உள.

திருவரங்கம் இயற்கைக் காட்சிகள் நிறைந்துள்ள இடமாகையால் அதன் காலைக்காட்சி வருணனைகளைத் தொண்டரடிப் பொடியாழ்வாரின் பள்ளியெழுச்சியில் மிகுந்து விளங்க காணலாம்.

திருப்பெருந்துறை நகர் வளமுடையதாதலால் இந்நகரையும் அதனைச்சுற்றியுள்ள தடாகங்கள், வயல்கள் ஆகியவற்றின்

வருணனைகளையும் மாணிக்கவாசகர் பள்ளி எழுச்சியில் மிகுந்து விளங்குகின்றன.

*ஒப்பிலக்கியம்*

இவைபோன்று உரையாசிரியர்கள் குறிப்பாக சங்க இலக்கியங்கள், தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகிய நூல்களுக்கு இயற்றப்பெற்ற உரைகள் சிறந்த ஒப்பீடு முறைகளை உடையன.

குறிப்பு

## 3.7. ஒப்பீடும் ஒப்பிலக்கியமும் - விளக்கம்

ஒப்பீடு ஆய்வு முறையின் வளர்ச்சி, அதன் தன்மைகள், ஒரு மொழிக்குள் ஒப்பீடு, ஒப்பிலக்கிய வரம்பிற்குள் வராதநிலை, ஒப்பீடுகளுக்கு (எ.கா) கபிலபரணர் ஒப்பீடு, சிலம்பும் மேகலையும் ஒப்பீடு, திருப்பாவை – திருவெம்பாவை ஒப்பீடு, தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளி எழுச்சி மாணிக்கவாசகர் திருப்பள்ளி எழுச்சி ஒப்பீடு ஆகியவை இடம்பெற்று ஒப்பீடும் - ஒப்பிலக்கியமும் வேறுவேறானவை என்பதை புரிய வைப்பதுடன் ஒப்பிலக்கிய வளர்ச்சி பாதையில் இவை கருத்தில் கொள்ளப்பட வேண்டும் என்பது பெறப்பட்டது.

## கூறு 3: வினா-விடை- பயிற்சி

### I. இரண்டு மதிப்பெண் வினா-விடை

**1) ஒப்பீடும் - ஒப்பிலக்கியமும் ஒன்றா?**

இல்லை

**2) பாசுனெட் ஒப்பீடு பற்றி யாது கூறுகிறார்?**

“ஆதி மனிதனுக்கு எண்ணம் (Thought) சிந்தனை என்று தோன்றியதோ அன்றே ஒப்பீடும் தோன்றியது” என்றார் பாசுனெட்.

**3) ஒரே மொழியில் நிகழ்த்தப் பெறும் ஒப்பீட்டு ஆய்வுகளுக்கு எ.கா தருக.**

கல்லுக்குள் ஈரம், ஆத்மாவின் ராகங்கள் - ஒப்பீடு
சிவசங்கரி, லெட்சுமி நாவல்கள் - ஒப்பீடு

**4) கபிலருடன் ஒப்பிடத்தக்க புலவர் யார்?**

பரணர்

**5) ஒப்பிடத்தக்க பாவை நூல்கள் யாவை?**

திருவெம்பாவை, திருப்பாவை - ஒப்பீடு.

### II. ஐந்து மதிப்பெண் வினா-விடை

**6) தமிழில் ஒப்பீட்டு அணுகுமுறையின் தோற்றத்தை விவரி.**

(3.1 - 32 செய்திகளை எழுதுக.)

**7) ஒப்பீட்டு ஆய்வு முறையை விளக்குக.**

(3.3 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.)

**8) ஒப்பீட்டின் தன்மைகள் பற்றி எழுதுக.**

(3.4 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.)

*Self-Instructional Material*

**9) ஒரு மொழிக்குள் ஒப்பீடு என்பது ஒப்பிலக்கிய வரம்பிற்குள் வராது ஏன்?**

(3.5 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.)

10) **கபிலபரணர் - ஒப்பீடு பற்றி விவரி**

(3.6.1 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.)



**III. பத்து மதிப்பெண் வினா-விடை**

11) **ஒப்பீடும் - ஒப்பிலக்கியமும் பற்றி கட்டுரை எழுதுக.**

(இக்கூறு முழுவதும் உள்ள செய்திகளைத் தொகுத்துச் சுருக்கி எழுதுக)



# கூறு-4: ஒப்பிலக்கியப் பயன்பாடு

## 4.1. முன்னுரை

இலக்கியத்தை முழுவதுமாகப் (in totality) புரிந்து கொள்ளுதல் ஒப்பிலக்கியத்தின் முதற்பயனாக அமைகிறது. ஒரு மொழிக்குரிய தன்மைகள், பண்பாடுகள் ஆகியவற்றை மட்டும் கருத்தில் கொண்டு ஒருமுகப்பார்வையாக ஓர் இலக்கியத்தை ஆராய்வது குறிப்பிட்ட சில பயன்களை விளைவிக்கும். ஆனால் இருமொழி இலக்கியங்களை ஆராயும்போது இரண்டின் தன்மைகளை ஆராய வாய்ப்புக் கிடைக்கிறது. இதனால் இருமொழி இலக்கியங்களின் நிறைகளையும் குறைகளையும் விருப்பு வெறுப்பின்றி அளவிட முடிகிறது. இம்முறையில் ஒப்பிலக்கிய ஆய்வாளர் தம்மொழி இலக்கியத்தை மட்டுமல்லாது. பிறமொழி இலக்கியத்தையும் முழுமையாக அறிந்துகொள்ள முடிகிறது. திறனாய்வுக்கு வழி அமைத்துத் தருகிறது. மேலும் இலக்கிய மீட்டுருவாக்கத்திற்கு வழி கோலுகிறது.

## 4.2. நோக்கம்

இலக்கியத்தின் இலக்கிய ஒருமையையும் (Literary Wholesome) அதன் உலகளாவிய பொதுமையையும் (Universality) கண்டறிந்து வெளிப்படுத்தும் இலக்கிய ஆய்வு முறையே ஒப்பிலக்கியமாகும். இலக்கியத் திறனாய்வின் வளர்ச்சியுற்ற ஒரு முதிர்ந்த திறனாய்வு வகையே ஒப்பிலக்கியமாகும். இருவேறு மொழிகளின் இலக்கியங்களை ஒப்பிட்டு அவற்றின் சிறப்புக்களையும் மேன்மைகளையும் தனித்தன்மைகளையும் வகைப்படுத்தி எடுத்துரைக்கும் போது அது ஒப்பீட்டுத் திறனாய்வு முறை ஆகின்றது. இவ்வொப்பீட்டுத் திறனாய்வை உலக நோக்கில் அறிவியல் வழிநின்று துல்லியமாக மதிப்பீடு செய்து அவற்றின் வாயிலாகப் பெறப்படும் மெய்ம்மைகளின் அடிப்படையில் இலக்கியக் கொள்கைகளை உலகம் தழுவிய பார்வையில் உருவாக்கவும், உலக இலக்கிய வகைகள்,வடிவங்கள், பாடுபொருள்கள் ஆகியனவற்றை வெளிப்படுத்தவும் முற்படும்போது அது ஒப்பிலக்கிய

ஆய்வாகின்றது. இவ்வாறான மதிப்பீடுகளை வரலாற்று நோக்கிலும் அணுகலாம் அழகியல் அடிப்படையிலும் நோக்கலாம்.

*ஒப்பிலக்கியம்*

உலக இலக்கியங்களுக்கிடையிலான இடைத்தொடர்புகள் ஒன்றையொன்று எதிர்ப்படுவதால் உண்டாகும் விளைவுகளைச் சுட்டல், ஏற்பு, செல்வாக்கு, தாக்கம் ஆகியனவற்றை எடுத்:துக்காட்டுதல், இலக்கியங்களுக்கிடையேயான பிறப்பு மற்றும் உறவுகளைக் காணுதல் ஆகியன ஒப்பிலக்கியத்தின் பண்பும் பயனுமாக அமைகின்றன.

**குறிப்பு**

## 4.3. ஒப்பிலக்கியக் கல்வி

- புதிய புதிய இலக்கிய வகைமைகள் தோன்ற காரணம் என்ன?
- இலக்கிய வகைமைகள் ஏன் தோன்றுகின்றன?
- இலக்கிய வகைமைகள் தோன்றிய காலச் சூழல் என்ன?
- புதிய இலக்கிய வகைமைகளின் தோற்றங்களுக்குப் பழைய இலக்கிய வகைமைகளின் பங்களிப்பு என்ன?
- இலக்கிய வகைமைகளின் மூலக்கூறு எது? என்பன போன்ற வினாக்களுக்கு விடை காண்பதே ஒப்பிலக்கியக் கல்வியாகும்.

இது குறித்து பல்வேறு ஆராய்ச்சியாளர்கள் தத்தம் கருத்துகளை வெளியிட்டுள்ளனர்.

## 4.4. ஒப்பிலக்கிய பயன்கள் பற்றிய அறிஞர்களின் கூற்றுகள்

ஒப்பிலக்கியம் இலக்கியக் கல்வியில் ஈடுபடும் போது ஒப்பீட்டைத் தன் முதன்மையான இலக்காகக் கொள்ள வேண்டும் என்பார் எஸ்.எஸ்.பிராவர். அப்பொழுதுதான் ஒரு படைப்பாளியின் படைப்பின் தனித்தன்மைகளையும் சிறப்புக்கூறுகளையும் உணர முடியும் என்கிறார். மேலும் 'ஒப்பிலக்கியம் தேசிய எல்லைகளை ஊடுருவி இலக்கியத்தின் பன்முகத் தன்மைகளை வெளிப்படுத்துவதாக எஸ்.எஸ்.பிராவர் மற்றொரு புதிய சிந்தனையினை முன்வைக்கின்றார்.

### வோர்ட்ஸ் வொர்த் (Words Worth)

தனித்தன்மையை உணர்வதற்கும், அவர் பெற்ற இலக்கிய மரபின் தாக்கத்தையும் அதில் அவர் பெற்ற சிறப்பிடத்தையும், இலக்கிய மரபில் அவர் ஏற்படுத்திய குறிப்பிடத்தக்க மாற்றங்களை உணர்வதற்கும் அவருடைய படைப்புக்களை ஆழமான வாசிப்புக்கு உட்படுத்துவதுடன் பிற படைப்பாளிகளான ஜான்மில்ட்டன், ஜேம்ஸ்தாம்சன், ஷெல்லி, கீட்ஸ் ஆகியோருடைய படைப்புக்களுடன் ஒப்பிடுதல் அவசியமாகிறது.

### எஸ்.எஸ்.பிராவர்

நாட்டு எல்லைகளைக் கடந்து நிகழ்த்தப்படும் ஒப்பிலக்கிய ஆய்வுகள். ஒவ்வொரு நாட்டின் இலக்கியமும் அந்தந்த நாட்டு தேசிய மரபுகளைக் கொண்டிருப்பதுடன் அந்நாட்டின் இலக்கியங்களின் பாடுபொருள். அடிக்கருத்து, உணர்வுகள், நடைப்பாங்கு, போக்குகள்

*Self-Instructional Material*

ஆகியனவற்றில் முக்கியமான வேறுபாடுகளைப் பெறுகின்றன என்பதை உணர்த்த உதவுகின்றன. இவ்வாறு இலக்கியங்களை இனம்பிரித்துக் காண ஒப்பிலக்கிய ஆய்வுகள் பயன்படும்.





**யுவான்கால்**

மொழித் தடைகளைக் கடந்து இலக்கியங்களை ஆய்வு செய்வதற்கு ஒப்பிலக்கியம் வழிவகுத்துக் கொடுக்கின்றது. ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளில் படைப்பாக்கத்திறன் பெற்றுள்ள படைப்பாளிகளின் படைப்புக்களை ஒப்பிடுவதற்கு மொழித்தடைகளை மீற வேண்டியுள்ளது. யுவான்கால் என்னும் படைப்பாளி ஜெர்மன், பிரெஞ்சு ஆகிய இரு மொழிகளிலும் தம்முடைய படைப்புக்களை ஒரே தன்மையுடன் வெளியிட்டிருக்கின்றார்.

**சாமுவேல் பெக்கெட் ரூ விளாடிமிர்**

சாமுவேல் பெக்கெட் (Samuel Beckett) என்னும் படைப்பாளி ஆங்கிலத்தைப் போலவே பிரெஞ்ச் மொழியையும் இயல்பாகக் கையாண்டார். விளாடிமிர் நபோகாவ் (Vlademir Nobokov) என்பவர் தொடக்கத்தில் ரஷ்ய மொழியில் எழுதியிருப்பினும் பின்னர் ஆங்கிலத்திலும் திறம்பட எழுதியிருக்கின்றார். அவை ஒப்பிலக்கியவாதிகளுக்கு பயன்படுகின்றன.

**எஸ்.ஏ.சேய்ஸ் (S.A.Sayee)**

பொது இலக்கியம், ஒப்பிலக்கியம் ஆகிய இரண்டிற்கும் இடையேயுள்ள வேற்றுமைகளைக் குறிப்பிட வந்த எஸ்.ஏ.சேய்ஸ் (S.A.Sayee) தேசிய இலக்கியங்களை அவை ஒன்றுக்கொன்று கொண்டுள்ள இடைத்தொடர்புகளைக் கொண்டு கற்கும் கல்வியே ஒப்பிலக்கியம் என்கின்றார். இதிலிருந்து தேசிய இலக்கியமும் ஒப்பிலக்கியமும் பயன்பாட்டு நிலையில் கொண்டுள்ள உறவுகளை அறியமுடிகின்றது.

**பெட்ரார்ச்சி (Petrarch)**

தேசியப் பின்னணியில் இலக்கியக் கோட்பாடுகள், கவிதையியல், திறனாய்வுக் கொள்கைகள் ஆகியனவற்றைப் பொதுவாக விவாதிப்பதைப் போலவே 'பொது இலக்கியம்' என்ற அணுகுமுறையும் ஒப்பிலக்கியவாதி-களுக்குத் தேவை. ஐரோப்பாவில் பெட்ரார்ச்சின் (Petrarch) காலத்திலிருந்து ஈரேழ்வரிப் போற்றிப் பாடல்களின் வளர்ச்சி பற்றி ஆய்வு செய்வது பொது இலக்கிய ஆய்வாகும். அதே பொதுத்தன்மை கொண்ட ஷேக்ஸ்பியரின் ஈரேழ்வரிப் போற்றிப் பாடல்களை பெட்ரார்ச்சின் பாடலோடு ஒப்பிட்டால் அது ஒப்பிலக்கிய ஆய்வாகிவிடும். இதற்குத் தனித்தனிச் சான்று விளக்கங்கள் கொடுக்க வேண்டிய அவசியமில்லை.

ஒப்பிலக்கியம்

குறிப்பு

**கதே**

கதே 'உலக இலக்கியம்' (World Literature) என்ற தொடருக்குப் பொருள் விளக்கம் கூறும்போது பிறநாட்டு நல்லறிஞர் தம் புலமையை ஏற்கும் பரந்த மனப்பான்மை வேண்டும் என்றார். பல நாட்டு இலக்கியங்களிலும் காணப்பெறும் கொள்வினை, கொடுப்பிணைகளைப் பற்றிய ஆய்வும், தாக்கங்களைப் (Influences) பற்றிய ஆய்வுகளும், பொருளியல் வாழ்க்கையின் வணிகப்போக்கு வரவுகளும், பண்பாட்டுப் பரிமாற்றங்களும் இணைத்து ஒப்பாய்வு செய்யப்பட வேண்டும் என்பது கதேயின் கருத்தாகும்.

**ஆண்ட்ரே கைட் (Andre Gide)**

Andre Gide என்பவர் தம் நாட்குறிப்பில் (09.10.1916)உலகப் போர்களுக்குப் பின்னர் தனித்துவப்பட்டு நிற்கும் இலக்கியங்களைத் தேசிய மயமாக்கப்பட்ட இலக்கியப் பண்பொருமைகளைக் காண உதவும் எனக் குறிப்பிட்டுள்ளார். கதே, பெர்சியா, அரேபியா, இந்தியா ஆகிய கீழை நாடுகளின் இலக்கியங்களுடனும், பண்பாட்டுடனும் தொடர்புகளைக் கண்டு செருமானிய இலக்கியங்களின் முழுமையைக் காண விழைந்தார். அவரின் இவ்விருப்பத்தை அவர்தம் தொடர் கவிதைகளுக்கு Glest – Eastern Collection of Poems, Chinese German Collection of Poems, Seasons & Times of days எனப் பெயரிட்டிருப்பதிலிருந்து அறியலாம்.

**ரெனே எதியாம்பில்**

சர்போன் பல்கலைக்கழகப் பேராசிரியர் ரெனே எதியாம்பில் 1963 இல் எழுதிய Comparison Nest pas Raison' என்ற நூலில் ஒப்பிலக்கிய அறிஞர்கள் ஐரோப்பாவைத் தாண்டிய நாடுகளின் இலக்கியப் படைப்புக்களையும் ஒப்பிட வேண்டும் என்றும், அதற்குக் கதேயை முன் மாதிரியாகக் கொள்ள வேண்டும் என்றும் கூறியுள்ளார்.

எஸ்.எஸ்.பிராவர் மேலைநாட்டு இலக்கியங்களை கீழைநாட்டு இலக்கியங்களோடு ஒப்பிட்டு புதிய இலக்கிய நோக்கங்களையும் கொள்கைகளையும் முனைவுகளையும் ஆராய வேண்டும் என்றார். ஒப்பிலக்கியத் துறையில் பின்னர் தோன்றியவர்களாகிய மில்மன்பரி, ஆல்பர்ட் பி, லார்டு, சி.எம்.பௌரா போன்றோர் ஒப்பிலக்கியத் துறையின் எல்லை, பரப்பு, நோக்கம் ஆகியனவற்றை விரிவுப்படுத்தியுள்ளனர்.

'இலக்கியம்' என்ற சொல்லாட்சி மிகச் சிறந்த உயரிய பண்புடைய இலக்கியப் படைப்புக்களையே குறிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. எவையெல்லாம் அச்சிடப்பட்டு நூல் வடிவில் வெளிவந்துள்ளனவோ, வெளிவரப்போகின்றனவோ அவற்றையும் ஒரு நாட்டின் தேசிய இலக்கியக் கொள்கைகளையும் 'இலக்கியம்' என்ற சொல் குறிக்கும் என்கின்றார் பிராவர்.

ஒப்பியல் இலக்கியக் க்ல்வியின் வரலாறானது 'Literature Comparee' 'Comparative Literature' ஆகிய தொடர்களின் வரலாற்றோடு பின்னிப் பிணைந்ததாகும்.

பாரதியார் 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்' கலைச்செல்வங்களைக் கொணர்ந்திங்கு சேர்ப்பீர் என்றார். பிறமொழி இலக்கியங்களையும் தம் மொழியில் மொழிபெயர்த்து கொண்டு வரும்பொழுது உலகளாவிய அறிவானது மேம்படும். இதற்கு ஒப்பிலக்கியம் பேருதவி புரியும். இவ்வாறு உலகளாவிய இலக்கியங்களைத் தமிழ் இலக்கியங்களோடு ஒப்பிடும் போக்கு இக்காலத்தில் மிகுந்து வருவதால் நம்மொழியின் பெருமை அங்கு செல்லவும், பிற தேச படைப்பாளர்களை படைப்புகளை நாம் அறிந்து கொள்ளவும் ஏதுவாகின்றது.

## 4.5. ஒப்பிலக்கிய நோக்கில் நூல்கள்

### 4.5.1. தொல்காப்பியமும் பிங்க்.ஃ.பாவும்

சீனமொழியில் கி.மு.500-க்கு முன்பாக எழுதப்பட்டதாகக் கூறப்படும் ஸுன்ட்ஸு (Sun Tzu) என்பவர் எழுதியது. அதாவது Sun-Wu Ping Fa என்று சீனத்திலும் அல்லது Art of War by Sun Tzu என்று ஆங்கிலத்திலும் 'போர்க்கலை' என்று தமிழிலும் அழைக்கப்படும் இந்நூல் தொல்காப்பியத்துடன் ஒப்பிட்டு நோக்கத்தக்க தரவாக அமைகிறது. (தொல்காப்பியப் புறத்திணையியல் பற்றிய உள்ளடக்கச் செய்திகள் இத்தகைய கட்டுரைகளை வாசிப்போருக்கு ஏற்கனவே தெரியும் என்பதால் அச்செய்திகள் விடப்பட்டுள்ளன) இவ்விரண்டு நூல்களும் காலம் தோறும் தொடர்ந்து பல்வேறு மொழிபெயர்ப்புகளைக் கண்டு வருகின்றன. ஸுன் ட்ஸு-வின் நூலுக்கு The Art of War என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் பத்துக்கும் மேற்பட்ட மொழிபெயர்ப்புகள் வந்துள்ளன. தொல்காப்பியம் இன்றைய நிலையில் எச்.பாலசுப்பிரமணியம் என்ற பன்மொழி அறிஞரால் பேராசிரியர் கி.நாச்சிமுத்து அவர்களின் கலந்தாய்வோடு செம்மொழி நிறுவனத்திற்காகத் தமிழிலிருந்து நேரடியாக இந்திமொழியில் பெயர்க்கப்பட்டு உள்ளது. ஸுன் ட்ஸு எழுதியதாகக் கூறப்படும் நூலில் உள்ள 'பதின்மூன்று இயல்கள் (Thirteen Chapters) ஆங்கிலம் வழியாக பொன்.சின்னத்தம்பி முருகேசன் என்பவரால் 'போர்க்கலை' என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

தொல்காப்பியம் இயற்றப்பட்டதற்கான கால ஆய்வில் ஈடுபட்டு அவர்களுக்குக் கிடைத்த ஆதாரங்களுடன் கருத்துரைத்த அறிஞர்கள் பின்வருமாறு காலக்குறிப்புகளைத் தந்துள்ளனர்: மறைமலையடிகள், வெள்ளைவாரணர் - கி.மு.5000 சோமசுந்தர பாரதி – பாணினிக்கு முன் இராகவையங்கார் - கி.மு.300 புலவர் குழந்தை – கி.மு.200 சுப்பிரமணிய சாஸ்திரியார் - கி.மு.200-100 வரதராசனார் - கி.மு.1200 இலக்குவனார் - கி.மு.700 தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் - கி.மு.200 வையாபுரிப்பிள்ளை – கி.பி.400 என்றிவ்வாறு நமது ஆகமுதல் இலக்கண நூலான தொல்காப்பியம் எழுதப்பட்ட காலம் பற்றிப் பல்வேறு நிலைப்பாடுகள்

கொண்டுள்ளனர். சமகாலத் தொல்லியல் வரலாற்றாய்வாளர்கள். இராஜன் போன்றோரின் அகழ்வாய்வுக் கொடைகளால் நாளாக நாளாகக் காலப்பழமை பின்னோக்கிச் சென்று கொண்டிருக்கிறது.



அவ்வாறே ‘போர்க்கலை’ என்ற அந்நூல் எழுதப்பட்டதாக அறிந்தகாலம் அதை எழுதியவர் பெயர். வாழ்ந்தகாலம். அவரது மரபினர்கள் பெயர்கள், அவர்களது காலம் பற்றிய கருத்துகளில் இன்றளவிலும் ஆய்வாளர்கள் பல்வேறு நிலைப்பாடுகளை வெளிப்படுத்தியுள்ளனர். சாமுவேல்பி. கிரி.்.பித் (ளுயஅரநட டீ.புசகைகவை) என்பவரின் மொழிபெயர்ப்பு நூலின் ஆய்வு முன்னுரைப்படி, சீன தத்துவஞானி கன்.்.பியூஸியஸ் பிறந்த ஆண்டான கி.மு.551 இலிருந்து கி.மு.249 வரை அவர்கள் செவ்வியல் காலமாகக் கொண்டுள்ளனர். ஸுன் ட்ஸு எழுதியதாகக் கூறப்படும் நூலில் உள்ள ‘பதின்மூன்று இயல்கள்’ (Thirteen Chapters) அவருக்குப் பிந்தைய காலத்தைச் சார்ந்தவை என்று பத்துக்கும் மேற்பட்ட சீனமொழி அறிஞர்கள் கருத்துரைத்துள்ளனர். அப் ‘பதின்மூன்று இயல்கள்’ போரிடும் (வழியமையும்) நாடுகள் (Warring States, கி.மு.453-221) என்று அழைக்கப்படுவனவற்றின், அதாவது முறையான பயிற்சி பெற்ற தளபதிகளைக் கொண்ட இராணுவம் அமைந்த பின் போர் செய்த நாடுகளின் காலத்திற்குப் பிந்தைய தொகுப்பாகும் என்று கூறியுள்ளனர் ஹோலூ என்ற அரசனிடம் படைத்தலைவனாக இருந்ததைக் கூறி, ஸுன்ட்ஸுவின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய சீனவரலாற்றியல் அறிஞர் ஸ்ஸுமசீயென் என்பவரும் பதினோராம் நூற்றாண்டைச் சார்ந்த அறிஞர்யெஹ்செங்ட்ஸே என்பவரும் இன்னும் ் பல அறிஞர்களும் ஸுன்ட்ஸுவின் காலம் மிகப் பிந்தையது என்கின்றனர்.

குறிப்பு

நம் புறத்திணைத் துறைச் செய்திகளில் ஒன்று பகைவரின் நாட்டை வென்று வரும் போது அவர்களது விளைநிலத்தை உழுது எள்ளும் கொள்ளும் விதைத்து வேறு வளமான வேளாண்மை நடைபெறாது செய்தமையாகும். ஆனால் சீனப்போர்க் கலை நூலில் ஒரு நாட்டுப் படையின் வீரர்களோ குதிரைகளோ எதிரிநாட்டில் விளைநிலங்களில் கால்கூடவைக்கக் கூடாது என்று விதிக்கிறது. அவ்வாறு ஒரு படைத்தலைவனின் குதிரை எதிரிப் பகுதி விளைநிலத்தில் இறங்கிவிட்டதாகவும் அதற்குப் பொறுப்பேற்றுத் தலைவன் தன்தலையை வெட்டிக் கொள்ள முடிவெடுத்ததாகவும் வீரர்கள் மன்றாடி தலைக்குப் பதில் அவரது நீண்ட கூந்தலை அறுத்திடச் செய்ததாகவும் ஓரிடத்தில் கூறப்பட்டுள்ளது.

தொல்காப்பியம் வெட்சி, கரந்தை, வஞ்சி என்று பூக்களை முன்னிறுத்தி விதிப்படுத்தியுள்ளது. சீனமொழி நூலின் பதின்மூன்று இயல்கள் திட்டமிடல், போர்தொடுத்தல், தாக்குதல் உத்தி, உத்தி நிரல்கள், ஆற்றல், வலியின்மையும் வலிமையும், திட்டங்களுடன் முன்னேறுதல், ஒன்பது வகைச் சூழ்ச்சிகள், படைப்புறப்பாடு,

போர்க்களப்புவியறிவு, ஒன்பதுவகைப் போர்க்களங்கள், நெருப்பால் தாக்குதல், உளவாளிகள் செயல்பாடு என்பனவாக உள்ளன.

ஆக நாம் தொல்காப்பியமும் ஸுன்ட்ஸுவின் போர்க்கலையும் பல ஒற்றுமைகளைக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அதே சமயம் சீனப்போர் முறைகள் இன்றைய நவீனத் தொழில் நுட்பங்களுடன் செயலாற்றும் இராணுவங்களின் செயல்முறையை அப்படியே கொண்டிருப்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும். இவ்வாறு புறத்திணையியலும் போர்க்கலை அல்லது பதின்மூன்று இயல்கள் (Thirteen Chapters) என்ற இவ்விரு பிரதிகளின் ஆசிரியர், காலம், அமைப்பு என்பன குறித்து விரிவாக ஆராய வேண்டியுள்ளது. தொடர்ந்து இவ்விரு பிரதிகளின் உள்ளடக்கச் செய்திகள் இன்றைய போர்முறைகளோடு எத்தகைய பொருத்தப்பாடுகளைக் கொண்டுள்ளன என்பன பற்றியும் விரிவாக ஆராய வேண்டிய தேவையும் உள்ளது.

## 4.5.2. புறநானூறும் ஷிழ்சிங்கும்

தமிழில் சங்க இலக்கியத் தொகுப்புகளுள் ஒன்றான புறநானூற்றில் உள்ள கோவூர்கிழாரின் (பாடல்எண்-46) பாடலையும் சீனச் செவ்விலக்கியத் தொகுப்புகளுள் ஒன்றான ஷிழ்சிங்கின் சாணி வண்டுகள் (பாடல் எண்-219)என்ற பாடலையும் இக்கட்டுரை ஆராய்கிறது. தொன்மைக் காலச்சான்றோர்கள் தங்களின் சொந்தச் சிக்கல்களைக் குறித்துப் பெரிதும் கவலை கொள்பவர்களாக இல்லாமல் சமூகத்தின் சிக்கல்களைக் குறித்தே சிந்திப்பவர்களாக இருந்துள்ளனர். சமூகச் சிக்கல்களைக் குறித்து அவர்கள் பதிவு செய்யும் கருத்துக்களால் துன்பம் நேருவதற்கான தருணங்கள் இருப்பினும் அவற்றைப் பற்றிப் பயம்கொள்ளாமல் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளதைத் தொன்மைக்கால இலக்கியங்களில் காண முடிகிறது.

### புறநானூறு, ஷிழ்சிங் - ஒப்பீடு

புறநானூற்றின் கோவூர்கிழாரின் பாடலில் பெயர் குறிப்பிடப்படாத ஒரு சிந்தனையாளர், சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்ற மன்னனிடம், மலையமான் என்பவனின் மகன்களைக் கொல்லுதல் மன்னனின் குடிக்கு இழுக்காகும் என்கிறார். மலையமானின் மக்களும் நல்லகுடியில் பிறந்தவர்களே என்கிறார். கிள்ளிவளவனின் சிறப்பைப் பாடலின் முதல் பகுதியில் பின்வருமாறு விவரிக்கிறார்.

**நீயே புறவின் அல்லல் அன்றியும், பிறவும்**

**இடுக்கண்பலவும் விடுத்தோன் மருகனை (புறம்-46)**

கிள்ளிவளவன் புறாவின் துன்பம் மட்டுமின்றி, பிற உயிர்களின் துன்பத்தையும் போக்கிய சோழர்களின் வழித்தோன்றலைச் சார்ந்தவன். அவ்வாறு இருக்க உன்னுடைய குடிக்கு இழுக்கு ஏற்படும் என்று கருதினால் இந்தச் செயலைச் செய்தலைத் தவிர்த்தல் வேண்டும் என்கிறார். அச்சிறுவர்கள் தங்களைக் கொல்லவரும் யானையைக்

கண்ட நேரத்தில் அழுகையை மறந்து அந்த யானையை இரசித்தவர்கள். அவர்களைக் கொல்வது சிறந்த செயலாகாது என்கிறார்.

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

சீனப்பாடலின் கருத்தும் ஒருவகையில் பொருண்மை அடிப்படையில் இப்புறநானூற்றுப் பாடலுடன் பொருந்துகின்றது. பெயர் குறிப்பிடப்படாத சீனமன்னன் நாட்டின் நன்மையை எண்ணும் ஒருவரின் மீது பழிசுமத்தும் போலிகளை நம்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது. அம்மன்னன் அவ்வாறு போலிச் சிந்தனையாளர்களின் சொல்லைக் கேட்டு நாட்டை வழி நடத்துவானே யானால் நாட்டு மக்கள் துன்பங்களைச் சந்திக்க நேரிடும் என்கிறார் நாட்டின் நலனைக் கருதும் சிந்தனையாளர். அம்மன்னனுக்கு அறிவுரை வழங்கும் வரிகள் பின்வருமாறு,

**பரிபாலிக்கும் இளவரசே,**

**நிந்திப் போர் சொல் நம்பாதே (புறம்-219)**

சாணிவண்டுகள் என்பதானது போலிச் சிந்தனையாளர்களுக்கு உவமையாக இங்குக் கூறப்படுகிறது. சாணிவண்டுகள் ஒட்டுண்ணி வகை உயிரினத்தைச் சார்ந்தவை. மனிதர்களுக்கு ஏற்படும் புண்களில் கூட வசிக்கும் திறம் பெற்றவை. அவைகள் வாழவேண்டும் என்பதற்காக எச்செயலையும் செய்பவை. அவைகளைப் போன்றவர்கள் உன்னுடன் இருக்கும் போலிச் சிந்தனையாளர்கள். எனவே அத்தகையோரின் சொற்களைக் கேட்டு ஆட்சிசெய்தால் நாட்டுக்கும் உனக்கும் இழப்பு நேரிடும். எனவே அவர்களின் சொற்களைக் கேட்காமல் நாட்டை நற்சிந்தனையாளர்களின் துணைகொண்டு ஆட்சிசெய்வாயாக என்று மொழிகிறார் நற்சிந்தனையாளர். புறநானூறு, கலித்தொகையும் இயற்கையுடன் இயைந்த மனிதவாழ்வியலைச் செய்யுள்களாக வடித்துக்காட்டும் இலக்கியங்களாகும். செய்யுள்களின் வழியாகக் காணும் வாழ்வியல் என்பது அம்மக்களின் வாழ்க்கைச் சூழல்வழியே கருப்பெற்றதாகும். மனித சமூகத்தைச் சூழ்ந்திருக்கும் சூழ்நிலைகள் மனிதனின் எண்ணங்களுக்க உருக்கொடுக்கவும் அவர்களின் சிந்தனையைப் புனைவுத்தன்மையுடன் பிறருக்குக் கூறவும் பயன்படுகின்றன. தொன்மைக் காலத்தில் நிகழந்தவற்றைத் தற்காலத் தவரும் அறியும் வகையில் செய்திகளைத் தரும் இத்தகைய இலக்கியங்கள் வரலாற்று ஆவணங்களாக இருக்கின்றன.

இவ்விருபாடல்களும் புலவர்கள் நாட்டை நல்லமுறையில் வழிநடத்த வேண்டும் என்ற விருப்பத்தால் இயற்றப்பட்டவைகளாகும். சீனப்பாடலில் மன்னனின் பெயர், புலவனின் பெயர் குறிப்பிடப்படவில்லை. ஆனால் தமிழ்ப்பாடலில் சோழன் என்ற வழிவந்தோரின் மரபினனாகிய கிள்ளிவளவன் என்ற மன்னனின் பெயர் இடம் பெற்றுள்ளது. இவ்விடத்தில் கவனிக்கத்தக்கது. புறநானூற்றின் பெரும்பான்மையான பாடல்களில் மன்னர்களின் பெயர்களும் புலவர்களின் பெயர்களும் குறிப்பிடப்படுகின்றன. ஆனால் சீனப்பாடல்களில் சிலவற்றில் மட்டும் பெயர்கள் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது. பெயர்களைக் குறிப்பிட்டுள்ள வகையில் வேறுபாடுகள் இருக்கின்றன.

இரு தொன்மை வாய்ந்த சமூகங்களின் இத்தகைய நீண்ட வளர்ச்சிக்கு ஒருவகையில் சிந்தனையாளர்கள் பணி செய்துள்ளனர் என்பது இவ்வொப்பாய்வின் மூலம் தெளிவாகின்றது. அவ்வகையில் சிந்தனையாளர்களின் அறிவுரைகள் எக்காலத்துக்கும் இன்றியமையாதவை ஆகும். அவர்களின் அறிவுரைகள் புறக்கணிக்கப்பட்டால் நாடு பல இன்னல்களைச் சந்திக்க நேரிடலாம் இக்காலங்களில் ஆலோசனைக் குழுக்கள் (Advisory boards) ஆள்பவர்களுக்கு ஆலோசனைகளை வழங்கும் பணியைச் செய்கின்றன. சிந்தனையாளர்களின் பணியானது எக்காலத்துக்கும் நினைத்துப் போற்றும் வகையில் இருப்பதாகும் என்பதை இவ்விருபாடல்களின் ஒப்பாய்வு வெளிக் கொணர்கிறது. மேலும் நுட்பமாகவும் விரிவாகவும் இவ்விரு செவ்விலக்கியங்களை ஒப்பிடுவதின் மூலம் பல அரிய புதிய செய்திகளைப் பெறலாம்.

## 4.5.3. அகப்பாடல் மரபுகள் குறுந்தொகையும் மன்யோசுவும்

கிழக்காசிய மொழிகளுள் ஒன்றான ஜப்பானியத்துடனான மொழி, இலக்கியங்களுடனான ஒப்பாய்வுகளை 1970-களுக்குப் பின் ஜப்பானிய அறிஞர்கள் மேற்கொள்ளத் தொடங்கினர்.

1980-களுக்குப் பின் இவ்விரு மொழிகளிலுள்ள செவ்விலக்கியங்கள் பற்றிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இவ்வாய்வுகளை மேற்கொண்டவர்களில் இராமகுருநாதன், மனோன்மணி சண்முகதாஸ், அருணாச்சலம் சண்முகதாஸ், பொற்கோ ஆகிய தமிழறிஞர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். இவர்களில் மனோன்மணி சண்முகதாஸ், மொழிபெயர்த்து வெளியிட்ட ‘ஜப்பானிய காதல் பாடல்கள்’ (2000) என்னும் ஜப்பானிய மொழிபெயர்ப்பு நூலினை மையமாக வைத்தே இக்கட்டுரையின் கருத்துக்கள் விளக்கப்படுகின்றன. இந்நூல் ஜப்பானிய செவ்விலக்கியமான ‘மன்யோசு’ தொகுதி பத்தின் மொழிபெயர்ப்பாகும். இக்கட்டுரையானது ஜப்பானிய செவ்விலக்கியமான மன்யோசுவை அறிமுகம் செய்து, குறுந்தொகையில் இடம் பெற்றுள்ள பருவங் கண்டு அழிதல் துறையையொத்த கூறு (தமிழில் காணப்படும் பருவங்கண்டு அழிதல் என்னும் துறையை ஒத்த கூறுகள் மன்யோசு பாடல்களிலும் காணப்படுகின்றன) அவ்வாறு ஜப்பானிய ‘மன்யோசு’ தொகுதி பத்தில் இடம்பெற்றுள்ளது. அவற்றில் காணப்படும் ஒற்றுமை, வேற்றுமைக் கூறுகள் ஆகியவற்றை விளக்கி, இவ்விருமொழி இலக்கியங்களுக்கிடையில் ஒப்பாய்வுகள் (சங்க இலக்கியம், மன்யோசு முழுவதும்) மேற்கொள்வதற்கான ஆய்வுக் களங்களையும் எடுத்துக்காட்டுவதாக அமைகிறது.

குறுந்தொகை குறித்த அறிமுகம் தேவையில்லை என்பதால் நேரடியாக ஜப்பானிய மன்யோசு குறித்து அறிமுகம் செய்யப்படுகிறது.

குறிப்பு

**மன்யோசு (Manyoshu):**

ஜப்பானிய மொழியில் எழுந்த பழமையான பாடல்கள் 'மன்யோசு' என்னும் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. 'மன்யோசு' என்றால் 'பத்தாயிரம் இலைத் தொகுப்பு' என்பதாகும். பல்வேறு கால கட்டங்களில் பாடப்பட்ட பல ஆயிரம் பாடல்களின் தொகுப்பு என்பதே இதன் பொருளாகும். மன்யோசுவில் மொத்தம் 4516 பாடல்கள் இடம்பெற்றுள்ளன என்பது டைசபுரோ மட்சுஷிதவின் (Daisaburo Matsushita) கணக்கீடாகும். இது பலராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. முனைவர் நொபுட்சுன சசகி (Dr.Nobutsuna Sasaki) (4536) பாடல்கள் என்கிறார். இப்பாடல்களை 450 புலவர்கள் பாடியுள்ளனர். இதில் பெண்பால் புலவர்களும் அடங்குவர். இயற்றியவர் பெயர் அறியப்படாத பாடல்களும் இத்தொகுப்புகளில் இடம்பெற்றுள்ளன. மன்யோசுவின் காலம் கி.பி.ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொடங்கி கி.பி.எட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதி வரையெனக் கருதப்படுகிறது. ஆனால் இத்தொகுப்பில் உள்ள பெரும்பாலான பாடல்கள் ஏழாம் நூற்றாண்டிற்குப் பின்னரே இயற்றப்பட்டுள்ளன. மன்யோசுவில் உள்ள பாடல்களை மாமன்னர்கள், இளவரசர்கள், இளவரசியர், புலவர்கள் சாதாரண குடிமக்கள் எனப் பலரும் இயற்றியுள்ளனர். இப்பாடல்கள் 20 தொகுதிகளாகப் பகுக்கப்பட்டு இன்று நூல் வடிவம் பெற்றுள்ளன. இதில் தொகுதி 10,11-ல் முழுவதுமாக காதல் பாடல்கள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. மன்யோசுவைப் பல்வேறு காலங்களில் தொகுத்துள்ளனர். தொகுப்பிற்கென எந்த வரையறையும் இருந்ததாகத் தெரியவில்லை என்று மனோன்மணி சண்முகதாஸ் குறிப்பிடுகிறார் (2000:பக்2-3) மன்யோசு தொகுப்பில் இடம்பெற்றுள்ள பாடல்களைப் பொருள் அடிப்படையில் மூன்று வகைகளாகப் பாகுபாடு செய்யலாம்.

1. பயணம், உண்டாட்டு, பூர்வீகக் கதைகள் பற்றிய பாடல்கள்
2. காதலுறவு பற்றிய பாடல்கள் பெரும்பான்மையாகவும் மக்கள், உடன் பிறந்தோர் தொடர்பான புலவர்களின் மனவுணர்வுகளைப் புலப்படுத்தும் பாடல்கள் சிறுபான்மையாகவும் அமைந்த பாடல்கள்.
3. கையறு நிலைப்பாடல்கள் (மனோன்மணி சண்முகதாஸ், 1992: ப.1)

இக்கட்டுரையின் தரவாகத் தொகுதி பத்தின் 539 பாடல்கள் அமைகின்றன. இவை அனைத்தும் காதல் பாடல்களாகும். பெயர் அறியப்படாத புலவர்களால் பாடப் பெற்ற பாடல்களைக்கொண்ட தொகுப்பாகும். இப்பாடல்கள் பருவங்கள் அடிப்படையில் வகைப்படுத்தப் பட்டுள்ளன.

**பருவங்கண்டு அழிதல் துறை**

தலைவன், தலைவியை மையமாக வைத்து இயற்றப்பட்டுள்ள அகப்பாடல்களுள் தலைவியைப் பிரிந்த தலைவன் தான் வருவதாகக்

கூறிய காலம் வந்த பின்பும் தலைவியைச் சந்திக்க வராததால் தலைவி வருந்துகிறாள். இதனைக் கருவாகக் கொண்ட சில குறுந்தொகைப் பாடல்கள் உள்ளன. இதே உணர்வை வெளிப்படுத்தும் பாடல்கள் ஜப்பானிய மன்யோசு தொகுதி பத்தில் எவ்வாறு அமைந்துள்ளன என்பதனை ஒப்பிட்டு காணலாம்.

குறிப்பு

### குறுந்தொகையில் பருவங்கொண்டு அழிதல் துறை

பருவங்கண்டு அழிதல் துறையானது, குறுந்தொகையில் மொத்தம் பதினான்கு பாடல்களில் பயின்று வந்துள்ளது. (பாடல் எண்கள் - 24, 65, 66, 82, 94, 98, 103, 108, 110, 126, 148, 155, 188, 382) இவற்றுள் 66, 148, 382 ஆகிய மூன்று பாடல்கள் தலைவன் வருவதாகக் கூறிய பருவம் இது அன்று எனத் தலைவியைத் தோழி ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளன. ஏனைய பதினொரு பாடல்கள் தலைவி கூற்றாக அமைந்துள்ளன. மேற்குறிப்பிட்ட பாடல்களை இயற்றிய புலவர்கள் பின்வருமாறு, பரணர் (24), கோவூர்கிழார் (65), கோவர்த்தனார்(66), கடுவன்மள்ளன் (82), கதக்கண்ணன் (94), கோக்குளமுற்றன் (98), வாயிலான் தேவன் (103, 108), கிள்ளிமங்கலங்கிழார்(110), ஒக்கூர்மாசாத்தியார் (126), இளங்கீரந்தையார் (148), உரோடகத்துக் கந்தரத்தன்(155), மதுரை அளக்கர்ஞாழார் மகனார் மள்ளனார் (188), பூதத்தேவன் (285), குறுங்கீரன்(382).

### மன்யோசு தொகுதி பத்தில் இடம்பெற்றுள்ள பருவங்கண்டு அழிதல் துறை

மன்யோசு தொகுதி பத்தில், பருவங்கண்டு அழிதல் போன்ற கூறினைக் கொண்ட பாடல்கள் சில இடம்பெற்றுள்ளன. 1830, 1832, 1855, 1864, 1866, 1867, 1875, 1876, 1891, 1908, 2141, 2143, 2150, 2152, 2153, 2154,2155, 2190 ஆகிய பாடல்களை எடுத்துக் காட்டுகளாகக் குறிப்பிடலாம். இப்பாடல்கள் அனைத்தும் தலைவி கூற்றாக அமைந்துள்ளன.

### குறுந்தொகை, மன்யோசு தொகுதி பத்தில் இடம் பெற்றுள்ள பருவங்கொண்டு அழிதல் துறை

பருவங்கொண்டு அழிதல் துறையில், கார் காலப் பிரிவை விளக்கும் குறுந்தொகைப் பாடல் பின்வருமாறு,

**வன்பரற் றெள்ளறல் பருகிய விரலைதன்**

**இன்புறு துணையொடு மறுவந் துகளத்**

**தான்வந் தன்றே தளிதரு தண்கார்**

**வாரா துறையுநர் வரனசைஇ**

**வருந்திநொந் துறைய விருந்திரோ வெனவே. (கோவூர்கிழார்-65)**

''தோழி, வலிய பருக்கைக்கற்களினிடத்தேயுள்ள தெளிந்த நீரைக் குடித்த ஆண்மான், இன்பத்தை நுகர்தற்குரிய தன்னுடைய பெண்மானோடு களிப்பினாற் சுழன்று துள்ளி விளையாடா நிற்கவும், இங்கே வாராமல் சென்ற இடத்தே தங்கிய தலைவர், மீண்டு வருதலை விரும்பி, மிகவருந்தித் தங்கும் பொருட்டு உயிர் வைத்துக்கொண்டிருந்தீரோ வென்று கேட்பதற்கு, மழைத் துளியைத் தருகின்ற தண்ணிய கார்ப்பருவம் வந்தது'' (சாமிநாதையர். உ.வே.1937: ப179, 180) என்பதே இப்பாடலின் விளக்கமாகும்.

குறிப்பு

**மேற்குறிப்பிட்ட குறுந்தொகைப் பாடலை ஒத்த மன்யோசுப் பாடல் பின்வருமாறு**

| | |
|---|---|
| Kimi ni kofi | உன்னில் நலியும் |
| Urafure woreba | உள்ளத்தின் துயர் போல |
| Siki no no no | சிகி வயலில் |
| Aki fagi sinogi | காரது பகி சரிவு |
| Sawasika naku no | கலைமானும் அழுமே (மன்யோசு-2143) |

இப்பாடல் ''உன் காதல் நினைவிலே நலிகின்ற என் உள்ளத்தின் துயர்போல, சிகி வயலிலே கார்காலத்துப் பகியின் தாழ்ந்த நிலையிலே கலைமானும் துணையைத் தேடி அழுமே'' என்பதே இப்பாடலின் விளக்கமாகும். மேலும் உணர்வு நிலையாக, ''துணை தேடி அழும் கலைமானின் குரல் கேட்டு நலியும் பெண் உள்ளம்'' (மனோண்மணி சண்முகதாஸ், 2000: ப.219) என்று சுட்டப்படுகின்றது.

மேற்குறிப்பிட்ட இரு பாடல்களிலும் கார்காலத்தில் தலைவி, தலைவனின் வரவை எதிர்நோக்கியிருக்க அவன் வராததால் தலைவியின் துன்பத்தினை அதிகப்படுத்துவனவாக விளக்கப்பட்டுள்ளன.

## 4.5.4. அற இலக்கியப் பொது மரபுகள்: திருக்குறளும் அர்த்த சாத்திரமும்

இந்திய இலக்கிய மரபில் அற இலக்கியம் என்ற தனிவகைமை தமிழ் மரபில் மட்டுமே (பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள பெரும்பான்மையான நூல்கள், பிற்கால நீதி நூல்கள்) உள்ளது. பிற இந்திய மொழிகளில், குறிப்பாக வடமொழி இலக்கிய மரபில் அர்த்த சாத்திரம் போன்ற ஒரு சில (பர்த்ருஹரியாரின் கி.பி.7 ம் நூற்றாண்டு, நீதிசதகம், வைராக்கியசதகம், சிருங்காரசதகம்) நூல்களை மட்டுமே குறிப்பிட முடிகிறது. இந்திய அற இலக்கிய மரபில் திருக்குறளும், அர்த்த சாத்திரமும் காலத்தால் பழமையானதாகவும் கருத்தில் ஒற்றுமை உடையதாகவும் இருக்கின்றன.

அவ்வகையில் வடமொழி அறநூலான சாணக்கியரின் அர்த்தசாத்திரத்தைத் திருக்குறளின் அறஇலக்கியப் பகுதிகளோடு ஒப்பிட்டு காண்போம்.

**திருக்குறள் அர்த்த சாத்திரம்: ஒப்பீட்டு அடிப்படையில் ஒற்றுமை வேற்றுமைகள்**

திருக்குறளுக்கும், அர்த்தசாத்திரத்திற்கும் இடையே ஒற்றுமைகளும் வேற்றுமைகளும் உள்ளன. திருவள்ளுவர் அரசியலில் அறநெறி வேண்டுவதால் வேற்றுமைகள் அதிகமாகக் காணப்படுகின்றன. அர்த்தசாத்திரம் அரசியலில் அறநெறியைப் பின்பற்றவில்லை. யதார்த்த அரசியலைக் கூறுகிறது. இதை ஒப்புநோக்கிப் பார்த்தால் விளங்கும். இக்கட்டுரையின் வரையறை கருதி இங்கு ஒன்றிரண்டு ஒற்றுமை வேற்றுமைகள் மட்டும் சான்றாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

வள்ளுவர் நேரடியாக அரசியல் ஆட்சியதிகாரத்தோடு தொடர்பு கொண்டிருந்தார் என்பதற்கான சான்றுகள் இல்லை. ஆனாலும் அவர் கற்றவை. கேட்டவற்றிலிருந்து தான் அனுபவித்தவற்றைத் திருக்குறளில் வெளிப்படுத்தியிருப்பதற்கு வாய்ப்புகள் அதிகம். அர்த்தசாத்திரம் படிக்கும் வாய்ப்போ அல்லது கேட்டறிந்தவாய்ப்போ அவருக்குக் கிட்டியிருக்கலாம். சாணக்கியரின் நிலை அப்படியில்லை. அவர் ஆட்சி அதிகாரத்தோடு நேரடி தொடர்பு கொண்டவர். மௌரிய சாம்ராச்சியத்தின் அரசவையில் சாணக்கியர் அமைச்சராகவும், ஆலோசகராகவும், ஆசிரியராகவும் இருந்துள்ளார். இதைப் பின்வரும் கருத்துத் தெளிவாக்குகிறது. ‘‘அர்த்தசாத்திரம் பாரத நாட்டின் பழமை வாய்ந்த நூல் சுமார் 2400 ஆண்டுகளுக்கு முந்தைய அரசியல் அரசியல் சித்தாந்தம், பொருளாதாரம், அரசியல் செயலாற்றல், பிறநாட்டுத் தொடர்பு, இராஜதந்திரம் ஆகியவற்றை இந்நூல் கூறும். மௌரிய சாம்ராச்சியத்திற்குக் காரணகர்த்தாவாக இருந்தவரே சாணக்கியன்’’ (செ.கணேசலிங்கன், 2001: ப.4)

அர்த்தசாத்திரம் வர்ணாசிரமத்தை நிலை நிறுத்துகிறது. திருக்குறள் வர்ணாசிரமத்தைப் பற்றி எங்கும் பேசவில்லை. வருண தர்மத்திற்கு எதிராகச் சமணக் கருத்துக்களை, அறநெறிகளை வலியுறுத்துகிறது. அர்த்தசாத்திர சுலோகத்தின் மூலம் வர்ணா சிரமத்தை எப்படியெல்லாம் கட்டிக் காத்தார்கள் என்று நாம் தெரிந்துகொள்ளலாம்.

> **சுலோகம்: வர்ணாசிரம தர்மத்தையும் வேதங்களையம் ஆன்றோர் ஆசாரமாகக் கடைப்பிடி. தூய்மை செய்யப்பட்ட அந்நிலைகளைக் காப்பின் உலகம் அழிவின்றி இன்பமெய்தும்.**
>
> **(செ.கணேசலிங்கன், 2001:ப.26)**

உயிர்க்கொலை, புலாலுண்ணல், கள்அருந்தல், சூதாடல், வரைவின் மகளிர் முதலியவற்றைத் திருக்குறள் கண்டிக்கிறது. ஆனால் அர்த்தசாத்திரம் இவை அனைத்தையும் ஏற்றுக்கொள்கிறது. வள்ளுவர்

வருணதர்மத்தைக் கண்டிப்பதோடு முரண்படவும் செய்கிறார் (குறள் -380, 620)



**"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**

**உயிர் செகுத்துண்ணாமை நன்று. (குறள்-256)**



அவியைச் (நெய்) சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்தலைக் காட்டிலும், ஒன்றன் உயிரைக் கொன்று, அதன் உடலைத் தின்னாமலிருத்தல் மிகவும் நன்மையானதாகும். ஆயினும், அறவாழி அந்தணன் (8), அந்தணர் என்போர் அறவோர் (30), பார்ப்பான் பிறப்பொழுக்கம் (134), அந்தணர் நூற்கும் அறம்(543) என்றும் குறிப்பிட்டுள்ளார். திருக்குறள் பொருட்பால், அரசியல் சார்ந்தது. அவற்றில் அரசர் வாழ்க்கை, ஆட்சிமுறை, நீதி, சட்ட ஒழுக்கங்கள் நூலெங்கும் பரவிக் கிடக்கின்றன.

வள்ளுவர் அரசர் பணியை மிகச் சுருக்கமாகக் கூறுகிறார். அதைப் பின்வரும் குறள் விளக்குகிறது.

**"இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த**

**வகுத்தலும் வல்ல தரசு (குறள்-385)**

பொருள் வரும் வழிகளை இயற்றல், வந்த பொருளைச் சேர்த்தல், காத்தல், காத்ததை வகுத்துச் செலவு செய்தலில் வல்லவன் அரசன்.

சாணக்கியர் அர்த்த சாத்திரத்தில் அரசனின் கடமையை விரிவாகக் கூறுகிறார். 'அரசினைக் கட்டி ஆள்வது, நாட்டுப் பொருளாதாரத்தை ஒழுங்குசெய்வது. போரினைத் திறம்பட நடத்துவது, அரசனுக்குரிய கடமைகளை, இலட்சியங்களை நாள்தோறும் ஆற்றவேண்டிய பணிகளை அட்டவணையிட்டுச் சொல்லுகிறது.' அதன்படி நாள்தோறும் 16-17 மணிநேரம் வரை அரசனுக்குரிய பணிகளை அர்த்தசாத்திரம் மிக விரிவாக விவரிக்கிறது. (செ.கணேசலிங்கன்.2001: ப.8)

**சுலோகங்கள்**

1. காரியங்கள் அனைத்தையும் கேட்டெய்தும் நிலையில் காலங்கடத்தலாகாது. பின்னர் வருந்தநேரும், இயலாமலும் போகலாம்.
2. அரசன் என்றும் முயற்சியுடையவனாய் அரசியற் காரியங்களைச் செய்ய வேண்டும்.

அர்த்தசாத்திரத்தில் சூது, மதுபானம் வடித்தல், விற்றல், இறைச்சிக் கடையாவற்றுக்கும் கட்டுப்பாடு, வரிகள் விதிக்கப்பட்டிருப்பது தெரிகிறது. இவை அனைத்தையும் அர்த்தசாத்திரம் ஏற்றுக்கொள்கிறது. திருக்குறள் மேலே கூறிய அனைத்தையும் முற்றாக நிராகரிக்கிறது. திருக்குறளில் உள்ள குறள்கள் அனைத்தும் திருவள்ளுவரால் மட்டுமே இயற்றப்பட்டவையாகும். ஆனால் அர்த்தசாத்திரத்திலுள்ள கருத்துக்கள்

அனைத்தும் சாணக்கியரால் உருவாக்கப்பட்டது அல்ல. 'அன்றைய காலகட்டத்தின் பல்வேறு அரசியலாய்வாளர்களின் கருத்துக்கள், விவாதங்களையும் சாணக்கியரின் கருத்தோடு நூல் கூறுகிறது.' (செ.கணேசலிங்கன், 2001:ப.11)

மேற்கூறிய கருத்துக்களின் அடிப்படையில் நோக்கும்போது இந்திய அறஇலக்கிய பொதுமரபில் தமிழில் மட்டுமே அறஇலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன. வடமொழியில் அர்த்தசாத்திரம், நீதிசதகம், போன்ற ஒரு சில நூல்களே உள்ளன. காரணம் வடமொழியில் சட்டக்கையேடுகளும், தத்துவ நூல்களும், ஆரம்பத்தில் தோன்றியதால் அறநூல்கள் தோற்றத்திற்கு அவை பெரிதாக வழிகோலவில்லை எனலாம்.

## 4.5.5. வள்ளுவரும் - ஷேக்ஸ்பியரும் ஓர் ஒப்பாய்வு

**மனைவி – கணவனுக்காக வாழ வேண்டும் - பணிவிடை செய்ய வேண்டும் என்பது ஷேக்ஸ்பியரின் 'The Taming of the shrew' நாடகக்கருத்து**

கணவனுக்கு மனைவி அடிபணிந்து நடக்க வேண்டும் அவன் அவளுக்காக பொருளீட்டி வர வேண்டும். அவள் அவன் வருகைக்காக வழிமேல் விழிவைத்துக்காத்திருக்க வேண்டும். வீட்டிற்கு வந்த கணவனை மனைவி இன்முகம் காட்டி வரவேற்க வேண்டும். இன்சொல் கூறி அவனை உணவு உண்ண அழைக்க வேண்டும். களைத்து வரும் கணவனுக்கென அறுசுவை உண்டி தயாரித்து வைத்து அவள் அவனுக்கு உணவு பரிமாறி அவன் வயிராற உண்பதைக் கண்டு மகிழவேண்டும். இவையெல்லாம் வள்ளுவர் நமக்குச் சித்தரித்துக் காட்டும் இனிய கணவன். இனிய மனைவி என்ற மனமொத்த தம்பதியரின் இல்லற வாழ்க்கையின் அன்றாடக் காட்சிகளாகும்.

**தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற**
**சொற்காத்துச் சோர்விலாள் பெண் (56)**

**இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்**
**இல்லவன் மாணாக் கடை (53)**

**மனைத்தக்க மாண்புடைய ளாகித் தற்கொண்டான்**
**வளத்தக்காள் வாழ்க்கைத் துணை (51)**

இவை "வாழ்க்கைத்துணை நலம்" என்ற அதிகாரத்தில் வள்ளுவர் ஒரு நல்ல மனைவி எவ்வாறு கணவனைப் பேண வேண்டும் என்று விளக்கிக் கூறிய குறட்பாக்களாகும்.

இனி ஷேக்ஸ்பியரின் **The Taming of the shrew** நாடகத்தில் இடம் பெறும் ஒரு கணவன் - மனைவி உறவு பற்றிய ஒரு காட்சியைப் பார்ப்போம்.

குறிப்பு

**The Taming of the shrew** நாடகத்தில் அடங்காத பெண்ணான கேதரைனை (Katherine) அடக்கி மணம் புரிந்து கொள்கிறான். (Petruchio) பெட்ருச்சியோ என்ற இளைஞன். தன் நண்பர்களுடன் அவன் ஒரு பந்தயம் வைக்கிறான். யாருடைய மனைவி அவனது கணவனுக்கு அதிகம் அடங்கி நடக்கிறாள் என்பது தான் அந்தப் பந்தயம் பெட்ருச்சியோ தன் மனைவிதான் மற்ற நண்பர்களின் மனைவிமார்களைக் காட்டிலும் தன்னிடம் மிகவும் பணிவாகவும் தனக்கு அடங்கி நடப்பவள் என்றும் தன்னால் நிரூபித்துக்காட்ட முடியும் என்பதுதான் அந்தப் பந்தயம்.

இந்நாடகத்தில் இடம்பெறும் கேதரைன் கதாபாத்திரம் (கதாநாயகி), Act V Scene II வில் வரிகள் 151லிருந்து 170 வரை, பெண்கள் எவ்வாறு கணவனிடம் அன்புடன் பணிவாக நடந்து கொள்ள வேண்டும். கணவன்மார்களுக்கு அடிபணிந்து எவ்வாறு நடக்க வேண்டும் என அறிவுரை கூறுகிறாள். இக்கருத்து ஷேக்ஸ்பியரின் சொந்தக் கருத்தாகக் கூட இருக்கக்கூடும் என சில திறனாய்வாளர்கள் கருதுகின்றனர். இயல்பிலேயே பணிவும், அடக்கமும், அன்புங்கொண்ட ஒரு நல்ல மனைவி ஒரு கணவனுக்குத் தேவை என்பதை ஷேக்ஸ்பியர் நமக்கு இவ்வரிகள் மூலம் விளக்குகிறார். இவ்வரிகள் வள்ளுவர் “வாழ்க்கைத் துணை நலம்” அதிகாரத்தில் குறிப்பிட்டுள்ள குறட்பாக்களுடன் ஒப்புநோக்கி மகிழத ˙தக்கவையாகும். இதோ ஷேக்ஸ்பியரின் வரிகள்.

Thy husband is thy lord, thy life, thy Keeper,
And for thy maintenance commits his body
To painful labour both by Sea and land,
To watch the night in stroms, the day in cold,
Whilst thou liest Warm at home, secure and safe,
And craves no other tribute at thy hands
But love, fair looks, and true obedience
Too little payment for so grate a debt,
Such duty as the subject owes the prince.
Even such a woman oweth to her husband,
And when she is forward, peevish, sullen, sour
And not obedient to his honest will,
What is she but a foul contending rebel
And graceless traitor to her loving lord?

குறிப்பு

I am ashamed that women are so simple
To offer war where they should kneel for peace.
Or seek for rule, supremacy and sway
When they are bound to love, serve and obey.

இப்படி மனைவி எவ்வாறு கணவனுக்கு அடிபணிந்து வாழ வேண்டும் என்பதை விளக்கமாக Shakespeare The Taming of the Shrew நாடகத்தில் தெரிவிக்கிறார். ஒதெல்லோ நாடகத்திலும், டெஸ்டிமோனா, ஒதெல்லோவிற்குச் செய்த பணிவிடைகள் பற்றிய பல குறிப்புகள் காணக்கிடக்கின்றன. நாடகத்தில் ஆர்சினோ. கோமானைத் தன் கணவனாகவே தனது மனத்தில் வரித்துக் கொண்டு வயோலா அவனுக்காக ஒலிவியாவிடம் தூது போவதும், தன் காதலைப் பற்றி மறைமுகமாகக் கூட எடுத்தியம்பத் தயங்குவதும், சிறந்த தியாக மனப்பான்மை கொண்ட கதாபாத்திரமாக வயோலாவை நமக்குச் சித்திரித்துக் காட்டுகிறது.

மிராண்டாவோ, பெர்டினாண்டைக் கண்டவுடனேயே அவனுக்காக ஏங்குகிறாள் அவனுக்கு பிராஸ்பரோ கடினமான பணிகளைத் தருவதைக் கண்டு மனம் உருகுகிறாள். பெர்டினாண்டி கைவலிக்கும் எனக் கூறத் தன் செங்காந்தள் விரல்களினால் கொடிய காட்டு மரக்கட்டைகளைத் தானே சுமக்க முன் வருகிறாள். இவையெல்லாம் இளங்காதலர்கள் - கணவன் -மனைவிகளிடையே நிலவும் அந்நியோன்னியக் காதலை மிகவும் நயமாக ஷேக்ஸ்பியர் வடித்துத் தருவதாகும். வள்ளுவரின் காமத்துப்பால் முழுவதும் இது போன்ற காதலன் - காதலியிடையே நிகழ்ந்த அன்பு வெளிப்பாடுகளை நாம் காணலாம்.

## 4.6. ஒப்பிலக்கியப் பயன்பாடு – விளக்கம்

ஒப்பிலக்கியத்தின் பயன் அளவிடற்கரியது பிற நாடுகளுக்கு செல்ல வேண்டும் என்ற வேட்கை. பிற மொழிகளை கற்க விழைதல், ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற உணர்வை பெற ஒப்பிலக்கிய அறிவு மட்டுமே துணை நிற்கும் என்பது பெறப்படுகிறது.

## வினா-விடை- பயிற்சி

### I. இரண்டு மதிப்பெண் வினா – விடை

1. **எஸ்.எஸ்.பிராவர் ஒப்பிலக்கியத்தின் பயனாகக் கூறுவது யாது?**
   ஒப்பிலக்கியம் தேசிய எல்லைகளை ஊடுருவி இலக்கியத்தின் பன்முகத் தன்மைகளை வெளிப்படுத்துவதாக கூறுகிறார்.
2. **ஒப்பிலக்கியவாதிகளுக்குத் தேவை பற்றிய பெட்ரார்ச்சி கூற்றினை எழுதுக?**

தேசியப் பின்னணியில் இலக்கியக் கோட்பாடுகள், கவிதையியல், திறனாய்வுக் கொள்கைகள் ஆகியனவற்றைப் பொதுவாக விவாதிப்பதைப் போலவே 'பொது இலக்கியம்' என்ற அணுகுமுறையும் ஒப்பிலக்கியவாதிகளுக்குத் தேவை என்கிறார்.

குறிப்பு

**3. ஒப்பியல் இலக்கியக் கல்வியின் வரலாறு எதனோடு இணைந்தது?**

ஒப்பியல் இலக்கிய கல்வியின் வரலாறானது 'Literature Compare' 'Comparative literature' ஆகிய தொடர்களின் வரவாற்றோடு பின்னிப் பிணைந்தது.

**4. திருக்குறளை எவ்வாறு ஒப்பிடுகின்றனர் இரண்டு எ.கா. தருக?**

i) திருக்குறளும் அர்த்தசாத்திரமும்

ii) திருக்குறளும் ஷேக்ஸ்பியரும்

**5. ஒப்பிலக்கியம் எவ்வகையான இலக்கியம்?**

இலக்கியத் திறனாய்வின் வளர்ச்சியுற்ற ஒரு முதிர்ந்த திறனாய்வு வகையே ஒப்பிலக்கியம் ஆகும்.

**II. ஐந்து மதிப்பெண் வினா-விடை**

**6. ஒப்பிலக்கியத்தின் பயன் குறித்து விவரிக்க.**

(4:1-4.3 வரை உள்ள செய்திகளைத் தொகுத்து எழுதுக)

**7. ஒப்பிலக்கிய பயன்கள் பற்றிய அறிஞர்களின் கூற்றுகளை விவரி.**

(4.4 இத்தலைப்பின் கீழ் உள்ள செய்திகளைத் தொகுத்து சுருக்கி எழுதுக)

**8. தமிழின் சிறந்த இலக்கியங்கள் உலகின் பிறமொழி இலக்கியங்களோடு ஒப்பிடப் பெற்ற பெருமையை விவரி.**

(4.5 - தொல்காப்பியமும் - பிங்.ஃ.பாவும், புறநானூறும் ஷிழ்சிங்கும், குறுந்தொகையும் - மன்யோசுவும், திருக்குறளும் - அர்த்த சாத்திரமும்) ஆகிய கட்டுரைகளில் உள்ள செய்திகளைச் சுருக்கி தருக.

**III. பத்து மதிப்பெண் வினா விடை:**

**9. ஒப்பிலக்கியப் பயன்பாடு குறித்து கட்டுரை வரைக.**

(கூறு 4-இல் உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.)

# பிரிவு 2

## ஆய்வுகள் கோட்பாடுகள்

## கூறு 5: ஒப்பிலக்கிய ஆய்வுகள் - பொதுநிலை

குறிப்பு

### 5.1. முன்னுரை

தொல்காப்பியர் வடமொழி இலக்கிய மரபான காந்தர்வ நெறியோடு தமிழிலக்கிய மரபு கலப்பு ஒப்பிடுவதைக் காண்கிறோம். இலக்கிய ஒப்பீட்டு ஆய்வு தமிழ்நாட்டை விட மேலைநாடுகளில் மிகச் சிறந்த முறையில் பழங்காலத்தில் வளர்ச்சி பெற்றிருந்தது. தங்களைத் தவிர ஏனைய நாட்டு மக்களைக் காட்டு மிராண்டிகளாகக் கருதிய கிரேக்கர்களிடம் பல்வேறு நாட்டு இலக்கியங்களையும் ஒப்பிட்டு ஆயும் மனப்போக்கு வளர வாய்ப்பில்லாமல் போய்விட்டது. எனினும் தங்கள் நாட்டில் தோன்றிய பல்வேறு கவிஞர்களின் படைப்புக்களை ஒப்பிட்டு ஆய்ந்து ஒற்றுமை, வேற்றுமைகளைக் கண்டு, காட்டி, உணர்ந்து பாராட்ட அவர்கள் தவறவில்லை. கிரேக்கர்களை விடவும் ஒப்பிலக்கிய நோக்கு உரோம நாட்டு மக்களிடம் மிகப் பழங்காலத்திலிருந்தே அதிக அளவில் தழைத்துக் கிழைத்துப் படர்ந்து காட்சி தந்தது.

### 5.2 நோக்கம்

ஒப்பிலக்கிய ஆய்வுகளைப் பொதுநிலையில் வைத்துக் காணும் பொழுது மேலைநாடுகளில் மறுமலர்ச்சி காலகட்டத்தில் ஒப்பிலக்கிய ஆய்வுகள் காலூன்றிய விதம், தமிழகத்தில் ஏற்பட்ட ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சிகள், மேலும் ஒப்பாய்வுக்குரிய களங்களின் பொதுமைப் பண்புகள் பற்றிய கருத்துகளை இக்கூறு சுமந்துள்ளது.

### 5.3. மறுமலர்ச்சி காலத்தில் கண்ட ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சி

மறுமலர்ச்சிக் காலங்களில் மேலைநாடுகளில் ஒப்பிலக்கியப் பார்வை மீண்டும் புத்துயிர் பெறத் தொடங்கியது. இக்காலக்கட்டத்தின் தெளிவான ஆய்வு நெறிமுறைகளை அடிதளமாகக் கொண்டு இலக்கிய ஒப்பாய்வு அறிவியல் பூர்வமாக வளர்ச்சிபெறத் தொடங்கியது. ஸ்காலிகர் (Scaliger) தான் எழுதிய Poetics (‘கவிதையியல்’) என்ற நூலில் ஒப்பீட்டுமுறை ஆய்வினை மிகச் சிறப்பாகக் கையாண்டுள்ளர். ஆங்கிலக் கவிஞர்களைக் கிரேக்க, இலத்தீன் மொழிகளிலுள்ள கவிஞர்களோடு ஒப்பிடும் போக்கினை மேரிஸ் (Meres) என்பவர் இக்காலக்கட்டத்தில் தொடங்கி வைத்தார். மறுமலர்ச்சிக் கால மனிதனின் அறிவு வேட்கை உலகளாவிய நிலையில் பரந்து வளரத் தொடங்கிய ஆரோக்கியமான போக்கு ஒப்பிலக்கியம் எனும் ஆய்வுத்துறை மேலும் தழைத்து வளர மிகவும் துணைநின்றது.

ஒப்பியல் இலக்கியத்தைத் தனித்துறையாகப் பேணி வளர்த்த பெருமை பிரான்ஸ் நாட்டு ஒப்பிலக்கிய அறிஞர்களை சாரும். கி.பி. 1897, 1910 ஆகிய ஆண்டுகளில் பிரான்ஸ் நாட்டில் லையன் (Lyon), சார்போன் (Sorbonne) ஆகிய இடங்களில் ஒப்பியல் இலக்கிய ஆய்வுக்கெனத் தனித்துறைகள் (Departments) நிறுவப்பட்டன. இந்நாட்டின் அறிஞர்களான லூயிஸ் பெட்ஸ் (Louis Betz), பால் வான் தீகம் (Paul Van Tiegham) ஆகியோர் இத்துறையில் அதிக ஆர்வம் காட்டி மிகச் சிறந்த முறையில் இதன் வளர்ச்சிக்குத் துணை நின்றனர்.

பிரான்ஸ் நாட்டு அறிஞர்களைப் போன்று ஜெர்மனி நாட்டு அறிஞர்களும் இத்துறையில் அதிக ஆர்வம் காட்டினர். லெசிங் (Lessing), ஸ்கில்லர் (Schiller) ஆகியோர் ஜெர்மனி நாட்டு ஒப்பிலக்கிய அறிஞர்களில் குறிப்பிடத் தகுந்தோராவர். 1887 ஆம் ஆண்டு ஒப்பிலக்கிய ஆய்வுக்காகத் தனி இதழ் ஒன்றினை ஜெர்மனி நாட்டு ஒப்பியல் அறிஞர்கள் தொடங்கினர். இதனைத் தொடர்ந்து பல பல்கலைக்கழயங்களும் ஒப்பிலக்கிய ஆய்விற்குரிய வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுத்தன.

கல்கத்தாவில் நிறுவப்பட்ட ஆசியக் கல்விச் சங்கத்தோடு தொடர்புடைய அறிஞர்கள் சமஸ்கிருத இலக்கியங்கள் பலவற்றை ஐரோப்பிய மொழிகளில் மொழிப்பெயர்த்து அறிமுகப்படுத்தியபோது ஒப்பிலக்கியத்தின் வளர்ச்சியில் மேலும் பல புதிய பரிமாணங்கள் சேர்ந்தன. கிரேக்க, இலத்தீன் இலக்கியங்களோடு சமஸ்கிருத இலக்கியங்களும் செவ்வியல் இலக்கியங்கள் பற்றிய ஒப்பாய்வு முயற்சிகளில் தக்க இடத்தைப் பிடித்துக் கொண்டன. உலகின் பல்வேறு மொழிகளில் தோன்றிய பழைய செவ்வியல் இலக்கியங்கள் பற்றிய ஒப்பாய்வு முயற்சிகளில் தக்க இடத்தைப் பிடித்துக் கொண்டன. உலகின் பல்வேறு மொழிகளில் தோன்றிய பழைய செவ்வியல் இலக்கியங்கள். இடைக்கால இலக்கியங்கள், தற்காலப் படைப்புகள் ஆகியவற்றின் பல்வேறு கூறுகள் பற்றி ஆயும் முயற்சிகள் பல அறிஞர்களாலும் மேற்கொள்ளப்பட்டன.

## 5.4 தமிழகத்தில் ஒப்பிலக்கிய ஆய்வின் வளர்ச்சி நிலை

தமிழ்நாட்டில் ஒப்பிலக்கிய ஆய்வுத்துறையில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்திய பெருமை பேரறிஞர் வ.வே.சு. ஐயர் அவர்களைச் சாரும். காப்பியப் புலவன் கம்பனின் இலக்கிய மாளிகையை மேல்நாட்டுக் காப்பியங்களோடு ஒப்பிட்டுச் சிறந்த ஆங்கில நூலொன்றைப் படைத்த வ.வே.சு. ஐயரின் ஒப்பற்ற படைப்பைத் தொடர்ந்து டாக்டர் எஸ். இராம கிருஷ்ணன் அவர்கள் சமுதாய இலக்கியப் பின்னணிகளோடு கம்பனையும் ஆங்கிலக் கவிஞனான மில்டனையும் ஒப்பிட்டுச்சிறந்த ஆங்கில நூலொன்றையும் படைத்துள்ளார். தமிழர்களின் சிந்தனையாற்றலினையும், மேதைமையினையும், ஆழ்ந்த இலக்கியப் பயிற்சியினையும், ஒப்பிலக்கிய நோக்கினையும், திறனாய்வுப் பார்வையினையும் உலக அறிஞர்களுக்கு ஆணித்தரமாகப் பறைசாற்றும்

அரிய, விழும்பிய சிந்தனைக் கருவூலமாக இந்நூல் திகழ்கின்றது என்று உறுதியாகக் கூற முடியும். இவரைத் தொடர்ந்து டாக்டர் அ.அ. மணவாளன் அவர்கள் கம்பனையும் மில்டனையும் மற்றொரு கோணத்தில் மிகச் சிறப்பாக ஆராய்ந்து நூலாக வெளியிட்டுள்ளார். தற்கால இலக்கியங்களைப் பொறுத்தவரையில் டாக்டர் ஏ. சச்சிதானந்தன் அவர்களும், டாக்டர்.மு.செல்லப்பன் அவர்களும், டாக்டர். மருதநாயகம் அவர்களும் ஆங்கிலத்தில் சில அரிய ஒப்பிலக்கியக் கட்டுரைகளும், நூற்களையும் படைத்துள்ளனர்.

சமுதாயப் பார்வையோடு மார்க்சிய சிந்தனைகளின் துணைகொண்டு சங்கப் பாடல்களை மேல்நாட்டு வீரயுகப் பாடல்களோடு ஒப்பிட்டு டாக்டர்.க.கைலாசபதி அவர்கள் படைத்துள்ள Tamil Heroic Poetry (‘தமிழ்வீரயுகப் பாடல்கள்’) என்னும் ஆங்கில நூல் தமிழ் இலக்கியத் தொடர்பான ஒப்பிலக்கிய ஆய்வில் ஒரு புதுத்திருப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. இதை அடுத்து பேராசிரியர் டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்கள் திருக்குறளை மையமாகக் கொண்டு தமிழ்நாட்டு அறநெறிப் பாடல்களை உலக மொழிகளிலுள்ள அறநெறிப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆராய்ந்து திருக்குறள் நீதி இலக்கியம் என்ற அரிய நூலைப் படைத்து வளர்ந்துவரும் இப்புதிய துறைக்குப் புத்துயிர் நல்கியுள்ளார். டாக்டர் தமிழண்ணல், டாக்டர் கதிர் மகாதேவன் ஆகியோரும் ஒப்பிலக்கியம் தொடர்பான சில நல்ல நூல்களை தமிழில் எழுதியுள்ளார்.

இன்றைய நிலையில், தற்காலிக தமிழ் இலக்கியங்களை ஒப்பியல் நோக்கில் ஆயும் போக்கு அதிக அளவில் வலுப்பெற்று வளர்ந்து வருகிறது. இத்துறையில் பாரதி, ஷெல்லி ஆகிய இரு கவிஞர்களையும் ஒப்பிட்டு எழுதிய சிதம்பரம் ரகுநாதன் அவர்களின் பாரதியும் ஷெல்லியும் பாரதியும் - ஒரு புதிய பார்வை என்ற நூல் பல்வேறு கோணங்களில் மேல்நாட்டு வீறுணர்ச்சிப் படைப்புக்களோடு (Romantic Poems) பாரதியின் படைப்புக்களை ஒப்பிட்டு ஆராய்கின்றன. ஜான் சாமுவேல் மற்றும் இரா. சண்முகம் அவர்களும் இணைந்து பதிப்பித்த Comparative Literature Vol. I என்ற நூல் இத்துறையில் குறிப்பிடத்தகுந்த ஓர் ஆய்வு நூலாகும். இன்று உயர் பட்டங்கள் பெறவிரும்பும் ஆராய்ச்சி மாணவர்களும், கல்லூரி ஆசிரியர்களும் ஒப்பிலக்கிய ஆய்வுத்துறையில் ஆர்வங்காட்டத் தொடங்கியுள்ளனர்.

‘இலக்கிய ஒப்பாய்வுக்கழகம்’ (Academy of Comparative Literature) என்ற அமைப்பு இத்துறைக்கு நல்கியுள்ள பங்களிப்பு ஈடு இணையற்றது. இந்த அமைப்பின் மூலமாக ஏராளமான ஒப்பிலக்கியக் கட்டுரைகள் அரங்கேற்றம் பெற்றன. ஒப்பிலக்கியம் தொடர்பான சிறப்புச் சொற்பொழிவுகள் பல நடத்தப்பட்டன. உலகப் புகழ்பெற்ற ஒப்பிலக்கியம் தொடர்பான சிறப்புச் சொற்பொழிவுகள் பல நடத்தப்பட்டன. உலகப் புகழ்பெற்ற ஒப்பிலக்கியப் பேராசான் ஹென்றி ரீமா (ர்நசெல சுநஅய) உள்ளிட்ட எண்ணற்ற ஒப்பிலக்கிய அறிஞர்களை இந்த அமைப்பு

அழைத்து ஒப்பிலக்கியச் சொற்பொழிவுகளை நிகழ்த்துவித்துள்ளது. போதிய நிதியாதாரங்கள் இன்மையால' இந்த அமைப்பின் செயல்பாடுகள் தொடரவிடாமல் போனது வருந்தத்தக்கதே.

குறிப்பு

## 5.5 ஒப்பாய்வுக்குரிய களங்களின் பொதுமைப் பண்புகள்

மனித சமுதாயத்தின் மொத்த வளர்ச்சியிலும் மாற்றத்திலும் பொதுமைப் பண்பை நாம் காணமுடிகின்றது. இப்பொதுமைப்பண்பு இலக்கிய ஒப்பாய்விற்கு வித்திட்டு அதை வளர்க்கத் துணை நிற்பதோடு அத்துறையின் ஒளிமையமான எதிர்காலத்தைப் பற்றிய அசைக்க முடியாத நம்பிக்கையினையும் ஒப்பியலறிஞர்களின் உள்ளங்களில் தோற்றுவித்துள்ளது. இத்தகைய ஒற்றுமைகளை நோக்கிய ரெனிவெல்லாக் (Rene Wellek) என்னும் ஒப்பியலறிஞர் மனித சமுதாயம் ஒன்றாக இருப்பது போன்று, எல்லாக் கலைகளும் இலக்கியங்களும் ஒன்றே என்று ஆணித்தரமாகக் கூறிச்செல்கின்றார். முதன்முதல் இலக்கிய ஒப்பாய்வுத் தொடர்பாக 1886இல் சிறந்த நூலொன்றை ஆங்கிலத்தில் எழுதிய பாசுனெட் (Posnett) என்பவரும் சமுதாய மாற்றத்தில் ஒப்புமைப்பண்பு இருப்பதால் இலக்கியங்களிலும் ஒப்புமைப்பண்பு நிலவுகின்றது என்பதைச் சிறப்பாக விளக்கிச் சென்றார். ரஷ்ய நாட்டு எழுத்தாளரான மார்க்சிம் கார்க்கி என்பவரும் "Literary creativity is the same in all lands and withJd; all peoples" என்று குறிப்பிட்டுச் சென்றார்.

இலக்கிய ஒப்பாய்வு என்றால் இலக்கியங்களுக்கிடையே நிலவும் ஒப்புமைப் பண்புகளை மட்டும் இணைத்து நோக்குவது அல்ல. மாறாக பல்வேறு இலக்கியங்களின் இடையில் நிலவும் ஒப்புமைப்பண்புகளுக்குச் சமுதாய அடிப்படையில் விளக்கம் தருவதும், முரண்படுகின்ற இயல்புகளைச் சிறப்பாக ஆராய்ந்து அத்தகைய முரண்பாடுகளுக்குச் சமுதாய, கலாச்சார, வரலாற்று அடிப்படைகளில் அமைதி காண்பதும் ஒப்பியல் ஆய்வின் அடிப்படை நோக்கமாக அமைய வேண்டும். இச்சிறு நூலில் தமிழ் இலக்கியத்தில் உலக இலக்கியங்களோடு ஒப்பிட்டு ஆய்வதற்குரிய கருத்துக்களின் அடிப்படையில் எழுகின்ற காலகட்டங்கள் அல்லது இலக்கியக் களங்களையும் அவற்றின் பொது இயல்புகளையும் மேலோட்டமாக ஒப்பியல் நோக்கில் காணலாம்.

## 5.6 ஒப்பிலக்கிய ஆய்வுகள் - பொதுநிலை – விளக்கம்

பொதுவாக இலக்கியங்களை மொழி சார்ந்தும் மொழிகளுக்குள்ளும், தேசிய அளவிலும், உலக அளவிலுமாக ஒப்பிட்டு ஆயும் ஆராய்ச்சி இலக்கியங்கள் மண்ணுலக மனிதர்கள் அனைவருக்கும் பொதுவானவை என்ற எண்ணத்தை ஒப்பிலக்கியம் விதைத்திருப்பதை இக்கூறு வெளிப்படுத்தியள்ளது.

தொடக்க கால மனித சமுதாயம் வீரத்தையும் காதலையும் உயிரென மதித்துப் போற்றி வாழ்ந்ததால் உலகெங்கிலும் வீரயுகப்

பாடல்கள் (Heroic Poetry) மலர்ந்தன. வீரயுகப் போக்கு வரம்பிகந்து சென்ற காலத்தில் அறநெறிப் பாடல்கள் (Geomic Poetry) வளர்ச்சி பெறுகின்றன. அறநெறிப் போக்கின் முதிர்ச்சி நிலையாக இறைவனைக் காட்டி அறநெறி புகட்டும் பக்திப் பாடல்கள் (Devotional Poetry) ஆதிக்கம் பெறுகின்றன. நிலவுடைமைச் சமுதாய அமைப்புக் கட்டவிழ்ந்து, தனிமனிதக் கோட்பாடு வலுப்பெறவே, சமுதாய நோக்கோடு புத்துயிர் பெற்று வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம் உலகெங்கிலும் ஓங்கி வளர்ந்து வெற்றிநடை பயில்வதைக் காண்கிறோம். எனவே, இலக்கிய உள்ளீட்டு அடிப்படையில் முறையே,

- வீரயுகப் பாடல்கள்
- அறநெறிப் பாடல்கள்
- பக்திப் பாடல்கள்
- புதுச் செந்நெறிப் படைப்புக்கள்
- வீறுணர்ச்சிப் பாடல்கள்

என்று ஒன்றன்பின் ஒன்றாக உலக இலக்கியங்களில் சில பொதுவான இலக்கியப் போக்குகள் தோன்றி வளர்ந்தமையைக் காணலாம்.

## 5.6.1. வீரயுகப் பாடல்கள்

இவ்வுலகில் புகழோடு தோன்றிப் புகழோடு வாழ்ந்து புகழ் மேம்பட்ட வீர மரணத்தை எய்தி மண்ணின் இன்பங்களை எல்லாம் குறைவுறத் துய்த்து மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து தம் வாழ்வை முடித்துக் கொள்வதையே இலட்சியமாக வீரயுகச் சமுதாயத்தில் வாழ்ந்த மக்கள் கருதினர். இத்தகைய எண்ணப்பதிவுகள் மேலோங்கியிருந்த காலக்கட்டத்தையே ‘வீரயுகம்’ என்று நாம் குறிப்பிடுகின்றோம். வீரயுக இலக்கியங்களில் இடம் பெறுகின்ற கடவுளர்களும், வீரயுக மனிதனைப் போன்று பேராண்மை மிக்கவர்களாகக் காட்சி தருகின்றனர். இக்கடவுளர்கள் அனைவரும் இக்காலத்து மக்கள் வற்புறுத்திய வீரயுக இலட்சியப் போக்குகளின் பிரதிபலிப்பாகக் காட்சியளிக்கின்றனர். போர் புரிவது, காதல் இன்பத்தில் திளைப்பது, மது உண்டுகளிப்பது, வேட்டையாடிப் பொழுதுபோக்குவது ஆகிய இயல்புகளை வீரயுகக் கடவுளர்களிடம் காணலாம். வீர வழிப்பாட்டைச் சிறப்பிப்பது, நாண், பழி ஆகிய வீரர் பண்புகளை வற்புறுத்துவது, வீரசுவர்க்கம் பற்றியக் கோட்பாட்டைப் போற்றுவது, புலவர்களை அதிக மதிப்போடு பேணுவது, ஈந்து இசைப்பட வாழும் வாழ்வைச் சிறப்பித்து ஆகியன வீரயுகத்தின் இயல்புகள். வீரயுகக் கடவுளர்கள் பக்திக் காலத்தில் ஏற்றம் பெற்றக் கடவுளரைப்போன்று எல்லாவற்றையும் கடந்து அருவாகவும், அருஉருவாகவும் தத்துவச் சிந்தனைகளால் சிறையிடப்பட்டுப் புலன் உணர்வுகளால் எட்டமுடியா வண்ணம் நிற்கும் பரம்பொருட்கள் (Transcendental) அல்லர். இவர்கள் மனிதனைவிடச் சற்று உயர்ந்தவர்களாக, அதே சமயம் மனிதனோடு ஒன்றாக இணைந்து போர் நிகழ்ச்சிகளில் பங்கெடுப்பவர்களாகக் காட்சி தருகின்றனர். பிற்காலப்

பக்திப் புலவர்களைப் போன்று ஊனும், உயிரும், உள்ளமும் காதலாகிக் கசிந்து உருகும் நெகிழ்ந்த பக்தி மனப்போக்கோடு வீரயுகப் பாடல்களில் கடவுளர்கள் ஒவ்வொரு குழுவின் தலைவர்களாக மட்டுமே காட்சி தருகின்றனர். சில மொழிகளில் அமைந்த வீரயுகப் பாடல்களில் தனிமனித ஆற்றலுக்குக் கொடுக்கப்படும் சிறப்பிடம் கூட கடவுளுக்குக் கொடுக்கப்படவில்லை என்பதைத் தெளிவாக அறிகின்றோம்.

குறிப்பு

கிரேக்க, வட இந்திய வீரயுக இலக்கியங்களில் இக்கடவுளர்கள் மதுபானத்தை விரம்பிச் சுவைப்பவர்களாகவும், சிற்றின்பத்தில் ஊறித் திளைப்பவர்களாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளனர். மண்ணுலக வீரர்களோடு நட்புடன் பழகுபவர்களாகவும், பல இடங்களில் முரண்படுபவர்களாகவும், மானுடப் பெண்கள்மீது கோபங்கொள்பவர்களாகவும் இவர்கள் காட்டப்பட்டுள்ளனர்.

ஆனால் தமிழ்நாட்டின் வீரயுகப் பாடல்களில் இதுபோன்ற கடவுளர்களை அதிகமாகக் காணமுடியவில்லை.சமயமும் கடவுளும் தமிழ்நாட்டின் வீரயுகப் பாடல்களான சங்க இலக்கியங்களில் பெறும் இடம் மிகக்குறைவு என்பதை அறிஞர் சேவியர் தனிநாயகம் அவர்கள் தம் நூலில் கீழ்கண்டவாறு வற்புறுத்திப் பேசுவதும் இங்கு இணைத்து நோக்குதற்குரியது.

“Religion does not entire into Sangam Poetry to the extent it does in contemporary Greek or Latin & Sanskirit and that is party because the Tamils did not possess the highly developed mythology that the Greeks, the Latins , the North Indian poets possessed” புரோகிதர்கள் (Priest) தலைமையிடம் பெறும் வேத காலத்துப் படைப்புகளில் தத்துவ, புராண சிந்தனைகள் மிகுந்திருப்பதும் வீரர்களை மையமாகக் கொண்ட தமிழர்களின் வீரயுக இலக்கியங்களில் அவை குறைந்திருப்பதும் இயல்பே.

காப்பியங்கள் தன்னுணர்ச்சிப் பாடல்கள், குறுகிய இசைப் பாடல்கள். கதை பொதி பாடல்கள் ஆகியன வீரயுகத்தின் இலக்கிய வடிவங்களாகும். ஹோமரின் காப்பியங்கள், இராமயண, மகாபாரத இதிகாசங்கள் வீரயுக நிகழ்ச்சிகளை பிரதிபலிக்கும் இலக்கியங்கள். சங்க இலக்கியப் புறப்பாடல்களில் வீரயுகப் பாடல்களின் கூறுகள் மிகுந்துள்ளதால் இவற்றை வீரயுக இலக்கியங்களாகவே கொள்ளுகின்றனர். எனினும், சங்க இலக்கியங்கள் முழுவதையும் வீரயுகமும் அறநெறியுகமும் பின்னிப்பிணைந்து கிடக்கும் இவ் இலக்கியங்கள் முழுவதையும் வீரயுகப் பாடல்கள் என்று கொள்ளலாமா என்பது ஆய்வுக்குரியது. வீரயுகமும் அறநெறியுகமும் பின்னிப்பிணைந்து கிடக்கும் இவ் இலக்கியங்களை வீரயுகத்திற்குப் பிற்பட்ட, வீரயுகத்தைத் தொடரும் காலமாகக் (Post-HeroicAge) கொள்ளலாம் என்பது பலர் கருத்து.



உலகெங்கிலும் முதல்நிலையில் கிடைக்கும் வீரயுகப் பாடல்களின் போக்குகளைப் பேராசிரியர் சாட்விக் என்பவர் மிகச் சிறப்பாக

ஆராய்ந்துள்ளார். இவரைத் தொடர்ந்து மில்மன்பரி, சி. ஏம். பௌரா, என். கே சித்தாந்தா ஆகியோர்களும் வீரயுக இலக்கிய ஆய்வில் சிறந்த சாதனைகளை நிகழ்த்தி உள்ளனர். சாட்விக் தம்பதியினரின் The Growth of Literature ('இலக்கிய வளர்ச்சி') என்னும் நூல் வீரயுக இலக்கியங்களின் இயல்புகள் பற்றிய பல அரிய செய்திகளைத் தந்து நிற்கின்றது. மில்மன்பரி கிரேக்க வீரயுக இலக்கியங்கள் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார். இவரது ஆய்வு பழைய கிரேக்க வீரயுகக் காப்பியங்கள் வாய்மொழி வடிவிலிருந்து செவ்வியல் இலக்கியங்களாக வளர்ச்சிப்பெற்ற நிலையைத் தெளிவுப்படுத்தி நின்றது.

சங்கப் பாடல்களில் கிரேக்க வீரயுகப் பாடல்களின் தன்மை இருப்பதாக கிருஷ்ணசாமி ஐயங்கார், பேராசிரியர் எஸ்.வையாபுரிப் பிள்ளை, டாக்டர் ஜான்மார், டாக்டர் ஜீன் பிலியோஸா, என்.கே. சித்தாந்தா, அறிஞர் சேவியர் தனிநாயகம் ஆகியோர் ஓரளவு சுட்டிக்காட்டிச் சென்றுள்ளனர். இந்நிலையில் டாக்டர் க. கைலாசபதி அவர்கள் சங்க நெறிமுறைகளை அடிப்படையாக கொண்டு ஆய்ந்து, வகுத்துக் கொடுத்தஆய்வு நெறிமுறைகளை ஆய்ந்து, Tamil Heroic Poetry ('தமிழ் வீரயுகப் பாடல்') என்ற சிறந்த நூலைப் படைக்கவே நம் நாட்டைப் பொறுத்தவரையில் வீரயுகப் பாடல்களின் ஒப்பீட்டுமுறை ஆய்வு ஒரு சிறந்த திருப்பத்தைப் பெற்றது. அவரைத் தொடர்ந்து பல தமிழறிஞர்கள் மேல்நாட்டு வீரயுகப் பாடல்களுக்கும், தமிழ் நாட்டு வீரயுகப் பாடல்களுக்கும் இடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கிக் காட்டி நூல்கள் பல படைத்துள்ளனர்.

### 5.6.1.1 சங்கப் பாடல்களும், கிரேக்க வீரயுகப் பாடல்களும்

தமிழ்மொழியில் எழுத்து வடிவில் கிடைக்கின்ற தொன்மையான இலக்கியங்களைக் கிரேக்க வீரயுகப் பாடல்களோடு ஒப்பிட்டு நோக்குவர். இவை வீரயுக போக்குகளை ஓரளவு பிரதிபலித்து நின்ற போதிலும் கிரேக்க வீரயுகப் பாடல்களோடு புறவடிவைப் பொறுத்தவரையில் முற்றிலும் மாறுபடுகின்றன. சங்ககாலப் புறப்பாடல்கள் பல்வேறு சூழ்நிலைகளில் எழுந்த பல்வேறு நிகழ்ச்சிகளைப் பின்னணியாகக் கொண்ட பல்வேறு தன்மையுகளையுடைய தனித்தனி உதிரிப் பாடல்கள் பலவற்றின் தொகுப்பாக அமைய, ஹோமருடைய இலியட், ஒடிசி ஆகியன காப்பிய வடிவில், கதை சொல்லும் போக்கில் மிக நீட்சி பெற்று அமைகின்றன. கிரேக்க வீரயுகப் பாடல்களாகிய இவ்வீர காவியங்கள் ஒரு குறிப்பிட்ட கதையினையும் அதனோடு தொடர்புடைய கிளை நிகழ்ச்சிகள் பலவற்றையும் விளக்க, சங்கப் பாடல்கள் பல்வேறு தனித்தனி நிகழ்ச்சிகளையே விளக்குகின்றன. கற்பனைப் போக்கிலும், உணர்த்தும் முறையிலுங்கூட இவை பல நிலைகளில் வேறுபட்டு நிற்பதைக் காண்கின்றோம். மேலும் இலியட், ஒடிசி ஆகியன தற்சாராப் படைப்புகளின் (Objective Poetry) கூறுகளைப் பெற்ற காப்பியங்களாகத் திகழ, சங்கப் புறப்பாடல்களில் பெரும்பாலானவை தன்னுணர்ச்சிப் பாடல்களாகக் காட்சி தருகின்றன. வரையறுக்கப்பட்ட மரபுப்படி அமைந்த

செந்நெறிப் பாடல்கள் (Classical Poetry) என்று கூறத் தகும். தனி அகப்பாடல்கள் சங்க இலக்கிய வரிசையில் நிரம்பக் காட்சியளிக்கின்றன. இவற்றையும் வீரயுகப் பாடல்களோடு இணைத்துக் கொள்ள முடியுமா என்பது ஆய்விற்குரியது.



கிரேக்க வீரயுகப் படைப்புகளோடு ஒப்பிடும் தகுதியை வடமொழியில் தோன்றிய இராமாயணம், மகாபாரதம் போன்ற காப்பியங்கள் பெற்றுத் திகழ்கின்றன. இந்நோக்கில் இவற்றை ஆராய்ந்து சிறந்த ஒப்பியல் நூல் ஒன்றினை என்.கே. சித்தாந்தா என்பவர் படைத்துள்ளார். கிரேக்க வீரயுகக் காப்பியங்களைப் போன்றும், வடமொழியில் தோன்றிய வீரயுக இதிகாசங்களைப் போன்றும் நீண்ட கதைகளும் தமிழ்நாட்டு வீரயுகத்தில் தோன்றவில்லை என்பது தெளிவு. இதற்குக் காரணம் ஹெர்குலிஸ், ஆகிலெஸ், ஹெக்டர், அர்ஜுனன், வீமன் போன்ற தனித்தனி இலட்சிய வீரர்களைப் பற்றிய எண்ணங்களும், வீரவழிபாடும் (Here worship) முற்கூறிய இலக்கியங்களில் வளர்ச்சியடைந்ததைப் போன்று தமிழ் வீரயுகப் பாடல்களில் வளர்ச்சியடையவில்லை என்பதே. இதோடு, உள்ளது கிளக்கும் பண்பிற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்த காரணத்தால் இயற்கை இகந்த செயல்களை (Supernatural Events) மனக்கண்முன் கொண்டு நிறுத்தி, கண்டுகளித்து கவின் பெறப் படைத்துக் காட்டும் ஆற்றல் (Panhuman Vision), புராணப் பின்னணிகளைப் படைக்கும் இயல்பு ஆகியன பண்டைத் தமிழர்களிடம் சிறப்பாகக் கருக் கொள்ளவில்லை என்று அறிகின்றோம். ஒரு வேளை நாட்டுப்புறப் காலத்தில் இருந்திருக்கலாமோ என்று ஐயுறத் தோன்றுகின்றது. எனவே, நீண்ட கதைகளையும், கதைப் பாடல்களையும், வீரயுக நிகழ்ச்சிகளையும் புராணப் பின்னணியோடு சுவைபடத் தொகுத்துக் கூறும் உலக வீரயுக இலக்கியங்களின் பொதுப்போக்கிற்குத் தமிழ் வீரயுக இலக்கியங்கள் சற்று மாறுபடுகின்றன என்பது தெளிவு. சாட்விக் போன்ற அறிஞர்கள் வீரயுகத்தை அடுத்து எழுந்த (Post-Heroic Age) பாடல்களின் தன்மைகளாகக் கூறும் சில பண்புகள் இவைகளில் நிறைந்து கிடக்கின்றன.

உலக இலக்கியங்களில் இடம்பெறும் வீரயுகப் பாடல்களிலிருந்து சங்க இலக்கிய வீரயுகப் பாடல்கள் புறவடிவிலும் உள்ளீட்டாலும் வேறுபட்டு நின்ற போதிலும் வீரயுகப் பாடல்களின் பொதுத்தன்மைகள் பலவற்றை அவை தாங்கி நிற்கின்றன என்பதை மறுக்க முடியாது. வீரயுகப் பாடல்களில் இடம்பெறும் வீரர்களைச் சாதாரண மனிதனிலிருந்து உயர்ந்தவர்களாக இலட்சியப்படுத்திப் படைத்துக் காட்டும் பொதுப்போக்கினைச் சங்க பாடல்களிலும் காணமுடிகின்றது. கிரேக்க வீரயுகப் பாடல்களும் இவ்வியல்பைப் பெற்றுத் திகழ்கின்றன. தொடக்க நிலையில் தோன்றிய திறனாய்வாளனான அரிஸ்டாட்டில் கூட காப்பியம், துன்பியல் நாடகம் ஆகியவற்றின் கதைக் தலைவர்கள் சாதாரண மனிதர்களைவிட உயர்ந்தவர்களாக இருக்க வேண்டும் என்று பேசிச் செல்வதைக் காண்கின்றோம். காதல் பாடல்களில் பங்கு கொள்ளும்

கதைமாந்தர்களைப் பற்றிப் பேசும்போது செல்வத்தாலும் அழகாலும் உயர்ந்தவர்களே இப்பாடல்களின் பாட்டுடைத் தலைவர்களாக இருக்கப் பெறுவர் என்றும், குற்றேவல் செய்வோர், அடியோர் ஆகியவர்களைக் காதற் பாடல்களில் சிறப்பிக்கக் கூடாது என்றும் தொல்காப்பியர் பேசிச் செல்லக் காண்கின்றோம். எனவே, உயர்ந்தோரைப் பாடும் வீரயுகப் பொதுப் போக்கிற்குத் தமிழ் இலக்கியங்களும் இயைந்து செல்கின்றன என்பது தெளிவு.

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

வீரயுகப் பாடல்கள் அனைத்திலும் ஆடம்பரம் விருந்துகள் பற்றிய வருணனைகளைக் (Court Feasting) காணமுடிகின்றது. இவ்விருந்தில் பாணர்களும், வீரர்களும் பங்குகொண்ட மன்னனோடு அளவளாவி மகிழ்ந்திருக்கும் போக்கினைக் காணலாம். சங்கப் பாடல்களில், குறிப்பாக ஆற்றுப்படை இலக்கியங்களில் கிரேக்க, கெல்டிக் வீரயுகப் பாடல்களில் இடம்பெறுவது போன்று பல அரண்மனை விருந்துகள் அமைந்துள்ளன. இத்தகைய விருந்துகளில் புலவர்கள் மன்னர்களோடு நிகராக அமர்ந்து உண்டனர், அதோடு உண்ணும்போது மன்னர்கள் இவர்களை நன்கு உபசரித்து உணவு வழங்கக் காணலாம்.

**“சிறிய கட் பெறினே, எமக்கு ஈயும்: மன்னே!**

**பெரிய கட் பெறினே,**

**யாம் பாட, தான் மகிழ்ந்து உண்ணும்: மன்னே!**

**சிறு சோற்றானும் நனி பல கலந்த்தன்: மன்னே!**

**பெருஞ் சோற்றானும் நனி பல கலத்தன்: மன்னே!**

என்ற அவ்வையார் பாடல் இதற்குத் தக்க சான்றாக அமையும்.

## 5.6.2. அறநெறிப் பாடல்கள்

உலக இலக்கியங்கள் அனைத்தையும் ஒப்பிட்டு நோக்கும்போது வீரயுகப் பாடல்களைத் தொடர்ந்து அறநெறிப் பாடல்கள் அதிக அளவில் ஏற்றம் பெறுவதை எங்கும் காணமுடிகின்றது அறநெறி இலக்கியங்கள் ஆதிக்கம் பெற்ற இக்காலகட்டத்தில் போர்ச் சிறப்பைப் பாடும் களவழி நாற்பது போன்ற நூற்களும், காதலின் மாட்சிமையைப் பாடும் திணைமாலை நூற்றைம்பது போன்ற நூற்களும், தோன்றாமலில்லை. எனினும், இவை வடிவ அமைப்பிலும், அணுகுமுறையிலும் பல்வேறு நிலைகளில் வீரயுகப் பாடல்களிலிருந்து வேறுபடுகின்றன. எவ்வாறாயினும் இக்கால கட்டத்தில் அறநெறிப் பாடல்களே தலைமையிடம் வகிக்கின்றன என்பது தெளிவு.

### 5.6.2.1 சமுதாயப் பின்னணி

இனக்குழுக்களாக இருந்த மக்கள் கூட்டம் நிலையான அரசுகளை ஏற்படுத்த நடத்திய போராட்டத்தையும், அப்போராட்டத்தின் போது நிகழ்த்திய வீரச்செயல்களையும் வீரயுகப் பாடல்கள் பிரதிபலித்து நிற்கின்றன. இக்கால கட்டமும் இதன் வெளிப்படையான

*Self-Instructional Material*

கலைப்படைப்புகள் மேற்கூறிய வீரச் செயல்களுக்கு ஊக்கமளித்து அவற்றிற்குத் துணைநின்று சிறப்பிக்கும் சில நெறிமுறைகளையும் கோட்பாடுகளையும் வற்புறுத்தின.

குறிப்பு

அறநெறிக் காலம் வீரயுகப் போக்கிற்கு மாறுபட்ட பல ஒழுக்கக் கோட்பாடுகளை வகுத்துக் கொடுத்து மனிதனைப் பின்பற்றுமாறு வற்புறுத்தியது. எனினும், வீரயுகத்தைப் போன்று கடவுளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படாத இயல்பினை அறநெறிப் பாடல்களில் தொடர்ந்து காண்கின்றோம். அக்கால கட்டங்களில் தோன்றிய சமயங்களான சமணம், பௌத்தம் ஆகியன கடவுளர்க்கு அதிகச் சிறப்பளிக்காமையும் இதற்குக் காரணம் எனலாம். சங்க இலக்கியத்தில் படிப்படியாக ஆதிக்கம் பெற்ற திறவோர் (Wisemen), அறவோர் ஆகியோரின் பரம்பரை அறப்பாடல்களின் பெருக்கத்திற்கு அடிதளமாக அமைந்தது.

மொத்த நிலையில் உலக இலக்கியங்களில் இடம்பெறும் நீதிப் பாடல்களை ஆய்வோமெனில் இவை அனைத்தும் உலகப் பொது அறம் பற்றிப் பேசக் காணலாம். வீரத்திற்கு முக்கியத்துவம் கொடுத்த சமுதாயம் தனிமனிதனிடம் ஒழுக்க நெறிகள் வேண்டும் என்று வற்புறுத்த முனைந்தபோது உலக இலக்கியங்கள் எல்லாவற்றிலும் அறநெறிப் பாடல்களின் கூறுகள் மிகுந்து இடம்பெறத் தொடங்கின.

சங்கப் புறப்பாடல்கள்,

**“ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**

**ஈயே னென்றல் அதனினும் இழிந்தன்று”** **(புறம். 20)** என்றும்,

**“நல்லது செய்தல் ஆற்றி ராயினும்**

**அல்லது செய்தல் ஓம்புமின்…”** **(புறம். 195)**

என்னும் அறநெறிப்பாடல்களைப் போன்று அறம்பாடுவதைக் காண்கின்றோம். ‘‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’’ என்றெல்லாம் இவை பொதுநிலையில் உலகப் பொதுமை பேசி நிற்கின்றன.

இப்போக்கினை உரோம (Stoic) பிரிவின் தத்துவச் சிந்தனையிலும் காணலாம். தமிழிலக்கியங்கள் சுட்டும் Wisemen ஆகியோர் பற்றிய ஒப்பாய்வு இது தொடர்பான பல புதிய செய்திகளைத் தரலாம். பௌத்த, சமண சமயங்களின் தாக்குதலும் இத்தகைய அறம்பாடும் போக்கிற்கு ஓர் அடிப்படை எனலாம். ஹோமரின் வீரயுகக் கவிதைகளில் அறநெறிக் கூறுகள் மிகக் குறைவாகவே இடம் பெறுவதாகவும், இவற்றை அடுத்துத் தோன்றிய பாடல்களிலே இவை உயர்ந்த இடத்தைப் பெறுவதாகவும் பேராசிரியர் சாட்விக் சுட்டிச் செல்கின்றார்.



கிரேக்க இலக்கியங்களைப் பொறுத்தவரையில் சாலோன் (Solon) ஸிமோனைட்ஸ் (Simondides) ஆகியோர் சிறந்த அறநெறிப் பாடல்கள்

பலவற்றை எழுதிச் சென்றனர் என்று அறிகின்றோம். பிரிட்டிஷ் இலக்கியங்களைப் பொறுத்த வரையில் தொடக்கநிலையில் எழுந்த பியோஉல்ப் என்ற நூலிலும் அறநெறிக் கூறுகள் மலிந்துள்ளன. அவற்றுள் பல கிருஸ்துவ சமயச் சார்பில் ஊழ், சாவு ஆகியன பற்றிய கருத்துக்களும் இவற்றில் மிகுந்து கிடப்பதைக் காண்கின்றோம். தொன்மையான கிரேக்கப் பாடல்களைப் பொறுத்தவரையில் அறநெறிக் கூறுகள் மலிந்த முதல் இலக்கியமாக ஹீஸியட் பாடிய றுழசமள யனெ னுயலள (வேலையும் நாட்களும்) என்ற நூல் திகழ்கின்றது. அதிலுள்ள அறநெறிகள் பெரும்பாலும் கட்டளையிடுவது போன்றே அமைகின்றன. ஐரிஷ் மொழியில் காணக்கிடக்கும் நீதி இலக்கியங்கள் புதிதாக முடிசூடிய அரசனுக்குக் கட்டளையிடுவது போன்றும், தந்தை மகனுக்கு அறிவுரை கூறுவது போன்றும் அமைகின்றன. எபிரேய இலக்கியமான கிருஸ்துவத் திருமறையில் இடம்பெறும் நீதி மொழிகள் (Proverbs) என்னும் பகுதி தந்தை மகனுக்கு அறிவுரை கூறுவது போன்ற அமைப்பினை உடையது. இவை போன்று இந்திய அறநெறி இலக்கிய வரிசையிலும் அதிகமாக உள்ள வீரயுகப் பாடல்களைப் போன்று கிரேக்க அறநெறிக் கவிதை இலக்கிய வரிசையிலும் அதிகமாக உள்ளன.

தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தவரையில் அறநெறிக் காலத்தில் ஏற்றம் பெற்ற அறக்கட்டளைப் பற்றிய குறிப்புகள் வீரயுக கோட்பாடுகள் பலவற்றைத் தாங்கி நிற்கும் புறநானூற்றிலும், திருக்குறளிலும் இடம் பெறுவதைப் பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள் சிறப்பாகச் சுட்டிச் செல்கின்றார்கள். நான்மணிக் கடிகை, இன்னாநாற்பது, இனியவை நாற்பது, திரிகடுகம், ஆசாரக் கோவை, சிறுபஞ்ச மூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி போன்ற அறநெறி இலக்கியங்கள் உலக அறநெறிப் பாடல்களொடு ஒப்பிட்டு ஆராயும் தன்மையினைப் பெற்றுத் திகழ்கின்றன.

Frog (தவளைகள்) என்ற கிரேக்க நாடகத்தில் பயன் முதற் கொள்கை (Pragmatic Theory) வற்புறுத்தப்பட, அதற்குப் பின்னர் தோன்றிய கிரேக்க இலக்கியங்களில் அறநெறிப் போக்குகள் சிறப்பிடம்பெறத் தொடங்கி விட்டன எனலாம். அறநெறிப் புலவர்களான பார்மினைடு (Parmenide), எம்படோக்ளிஸ் (Empedocles) போன்றோர்கள் செய்யுள் வடிவில் அறிவுரை கூறினர். இக்காலக்கட்டத்தில் நீதி நூல்களோடு மூதுரைகளும் தோற்றம் பெறுவதைக் காண்கிறோம். கிரேக்க நாட்டின் டெல்பியிலுள்ள கோயிலில் பல மூதுரைகள் பொறிக்கப்பட்டதாகவும் தெரிகின்றது. ஹீஸியட் போன்ற கிரேக்க அறநெறிப் புலவர்களின் அறநெறிப் படைப்புகள் திருக்குறள் கருத்துக்களோடு பல நிலையிலும் இணைந்து செல்வதைக் காண்கிறோம்.

உரோம நாட்டின் சிறந்த இறைநெறிப்புலவராக லுக்ரீஸியஸ் காட்சி தருகின்றார். வள்ளுவரைப் போன்று இவரும் மனத்தூய்மையினை

வற்புறுத்தக் காண்கின்றோம். எனினும், வரைவின் மகளிரை லுக்ரீஸியஸ் பாராட்ட, வள்ளுவர் அதைக் கண்டிக்கின்றார். அகஸ்டஸ் சீஸரின் காலத்தில் தோன்றிய வெர்ஜிலும் Georgics (ஜார்ஜிக்ஸ்) போன்ற நீதி நூல்களைப் படைத்துள்ளார்.



கன்பூசியஸ், மென்சியஸ், லவோட்ஸ் - போன்றோர்கள் சீன நாட்டின் சிறந்த அறநெறிப் படைப்புகளோடு ஒப்பிட்டு ஆயும் தகுதியினைப் பெற்றுத் திகழ்கின்றனர். மேற்கூறியவற்றால் வீரயுகப் பாடல்களை அடுத்து அறநெறிப்பாடல்கள் இலக்கிய ஒப்பாய்விற்குச் சிறந்த ஆய்வுக்களமாக அமையும் என்பதில் சற்றும் ஐயமில்லையென்பது தெளிவாகின்றது.

### 5.6.3. பக்திப் பாடல்கள்

அறநெறிக் காலத்தையடுத்த சிறந்த ஒப்பாய்வுக் களமாக இறைநெறிப் பாடல்கள் தோன்றிய காலக்கட்டம் அமைகின்றது. அறநெறி இலக்கியங்களைப் போன்று எல்லாக் காலங்களிலும் பக்தி இலக்கியங்கள் தோன்றிய போதிலும் அறநெறிக் காலத்தை அடுத்துத் தோன்றிய காலகட்டத்தில்தான் இவை பெருவாரியாக முகிழ்த்து எழுந்தன. அறநெறிக் காலம் ஒழுக்கக் கோட்பாடுகளை வரையறுத்துப் பேசிய போதிலும் கடவுளுக்கு அதிகச் சிறப்பளிக்கவில்லை எனக் கண்டோம். இதற்குப் பல விதிவிலக்குகளும் உண்டு. பல நாடுகளில் சமயம் தழுவி அறக்கோட்பாடுகள் வளர்ந்துள்ளன. இங்கெல்லாம் அறக்கோட்பாடுகள் கடவுளரின் திருவாக்குகளாகப் பேணப்பட்டன. தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் அறநெறிப் பாடல்களில் கடவுட் கொள்கை அதிக அளவில் ஏற்றம் பெறாமைக்குப் பௌத்த, சமண சமயங்களில் ஆதிக்கம் ஒரு காரணமாக அமைந்தது. இவ்விரு சமயங்களும் கடவுளர்களை விடவும் அறநெறிப்பட்ட வாழ்க்கைக்கு (Ethical way of life) அதிகச் சிறப்பிடம் அளித்ததே இதற்குக் காரணமாகும். மேலும், தனி உடைமைகள் வளரத் தொடங்கிய அக்காலக்கட்டம், முதல்நிலையாக ஒழுக்கக் கோட்பாடுகளை வற்புறுத்தி, அவையும் தனி உடைமைகளைப் பாதுகாத்துச் சிறந்த கருவியாக அமையாத போது கடவுளை மையமாக வைத்து காலப்போக்கில் ஒழுக்கக் கோட்பாடுகளை வற்புறுத்த அதன் பிரதிபலிப்பாக இறைநெறி இலக்கியங்கள் தோற்றம் பெற்றன எனலாம்.

இக்காலக்கட்டத்தில் தனியுடைமைகளின் பாதுகாப்பிற்குச் சாதகமான அறநெறிகளை ஆற்றலோடு பரப்ப மனிதன் கடவுளை மையமாகக் கொண்ட ஒருவித தெய்வீக உணர்வையையும், தெய்வீக அங்கீகாரத்தையும் (Authority) தோற்றுவிக்க முயல்வதை இறைநெறிப் பாடல்கள் புலப்படுத்தி நிற்கின்றன.

சமயங்களை ஒப்பீட்டு நிலையில் ஆயும்போக்கு (Comparative Religion) தற்போது உலகெங்கிலும் பெருவளர்ச்சி பெற்றுள்ளது. சமயங்கள், சமய இலக்கியங்கள் ஆகியன பற்றிய

குறிப்பு

ஒப்பாய்வு சமயச் செய்திகளைக் கவிதையாக மாற்றும்போது கையாளப்படும் பல்வேறு உலகப் பொது உத்தியாகக் காட்சி தருகின்றது. இந்த உருவகத்தின்மூலம் மனிதனுக்கும் இறைவனுக்குமிடையேயுள்ள உறவு பெரும்பாலான அறநெறிப் படைப்புக்களில் எடுத்தியம்பப்படுகின்றது. இந்தக் கண்ணோட்டத்தில் மீனாட்சிக் கல்யாணம் பற்றிய கதைகளை The Sacred Marriage of a Hindu Goddess என்ற தலைப்பில் டாக்டர் வில்லியம் ஹார்மன் என்ற மேல்நாட்டு அறிஞர் ஆய்ந்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. தமிழ் இறைநெறிப் பாடல்களில் நாயகன் - நாயகி பாவம் குறிப்பிடத்தக்கது. தமிழ் இறைநெறிப் பாடல்களில் நாயகன் - நாயகி பாவம் மட்டுமல்லாமல், ஆண்டான் - அடியான், தந்தை – மைந்தன் என்பன போன்ற பல பாவங்களைக் காணமுடிகின்றது. சைவ சமயம் சற்புத்திரமார்க்கம், தாசமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் போன்ற நான்கு நெறிகளைச் சுட்டும். இந்த நெறிகள் பிற்காலத்தில் பாரதியார் போன்றோரின் பாடல்களில் மேலும் விரிவுபடுத்தப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

பக்திப் புலவர்கள் அறநெறிப் பாவலர்களை விடவும் இசைக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர். இசையோடு தமிழ் பாடுவோருக்கு இறைவன் அருள் பெருகும் இறைவன் ஏழிசையாய் இசைப் பயனாய் நிற்கின்றான் என்பன போன்ற பல போட்பாடுகளை வற்புறுத்துவதோடு, பழைய இசைக்கெல்லாம் புத்துயிர் கொடுக்கும் இயல்பினை இக்காலப் படைப்புகளில் காண்கின்றோம். இக்காலக்கட்டத்தைப’ பொதுவாக ‘இசைக் கலையின் மறுமலர்ச்சிக்காலம்’ என்று அழைக்கலாம். இப்பொதுப் போக்கிற்கு உலக இறைநெறி இலக்கியங்கள் எதுவும் விதிவிலக்கல்ல.

எபிரேய மொழியில் வீரயுகப் பாடல்கள், அறநெறிப் பாடல்கள், இறைநெறிப் பாடல்கள் ஆகிய மூன்றும் ஒன்றன்பின் ஒன்றாக மிகப் பழங்காலத்திலேயே தோற்றம் பெற்றமைக்குக் கிறிஸ்துவத் திருமறையின் பழைய ஏற்பாட்டுப் பகுதி சான்று பகரும். எனினும், ஐரோப்பிய நாட்டுப் பக்திப் பாடல்களும் கீழ்நாட்டு இசைப்பாடல் மரபுகளைத் (Eastern Hymnology) தழுவியே எழுந்திருக்கின்றன. இலத்தீன் மொழியில் தொடக்கநிலையில் தோன்றிய இறைநெறிப் பாடல்கள் திருமறையின் உரைநடை மொழிப்பெயர்ப்புப் பகுதிகளோடு சில அணி நயங்களை இணைத்து இசைப்பாடல்களாக மாற்றியதன் விளைவாக எழுந்தன. திருமறையிலிருந்து இசைப் பாடல்களை அமைக்க முயலும் போது வெர்ஜில் போன்ற செந்நிறப் படைப்பாளர்களின் படைப்புகளை அவை முன்மாதிரியாகக் கொண்டன.

தூய அம்புரோஸ் என்பவரே உரோமத் திருச்சபையின் முதல் பக்திப் பாடகராகக் காட்சி தருகின்றார். தொடக்கநிலையில் எழுந்த மேலைநாட்டுப் பக்திப் பாடல்கள் திருமறைச் செய்திகளை மிக எளிய முறையில் பரப்பின. அம்புரோஸ் போன்றோர்கள் பாடிய பாடல்களில்

இறைவனுக்குக் குறியீடாக ஒளியும், தீமைக்குக் குறியீடாக இருளும் பயன்படுத்தப்பட்டுள்ளன. ஒளி, இருள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு அறிவு – அறியாமை, இறைமை-இறைமையின்மை ஆகியவற்றை விளக்கும் போக்கினை மானிகாயிசம் (Manichaism) என்ற கிறிஸ்துவ சமயத்தின் ஒரு பிரிவினர் பெரிதும் வற்புறுத்துகின்றனர். இறைவனை ஒளியாகவும், மாயையை இருளாகவும் கொண்டு பாடும் இயல்பினைத் தமிழ்நாட்டு இறைநெறிப் பாடல்களிலும் காணமுடிகின்றது. மனிதன் தன் உள்ள உணர்வுகளையெல்லாம் தங்கு தடையின்றி இசையோடு வெளியிட வேண்டும் என்ற வேட்கை மேலை நாட்டு மறுமலர்ச்சிக் காலப் பக்திப் பாடல்களின் அடிப்படைப் பண்பாகக் காட்சி தருகின்றது. இதுவே இசையோடு பொருந்திய ஆன்மிக உணர்வுகளைச் சுமந்து நிற்கும் அனைத்துப் பக்திப் பாடல்களிலும் காணக்கிடக்கும் அடிப்படைக் கொள்கையாகத் திகழ்கின்றது. பிரெஞ்சு இலக்கியங்களைப் பொறுத்தவரையில் மறுமலர்ச்சிக் காலத்தின் தொடக்க கூட்டத்திலேயே இசைப்பாடல்கள் பெருவாரியாக மலர்ந்தன என அறிகிறோம்.

அகஸ்டினும், ஜெரோமும் கிருஸ்துவ சமயத்திற்கு முரணான கிரேக்கப் புராணங்களை அடிப்படையாகக் கொண்டு கிறிஸ்துவத் தத்துவங்களை விளக்கி நின்றனர். தொடக்கநிலையில் தோன்றிய இத்தகைய கிறிஸ்துவப் பக்திப் பாடகர்கள் உலகின் படைப்பு, கிறிஸ்துவின் பிறப்பு, மனித வீழ்ச்சி போன்றவற்றைப் பாடுவதில் அதிக ஆர்வங்காட்டினர்.

லயோலா என்பவர் இத்தகைய பாடல்களில் புதிய படிமங்கள் பலவற்றைப் புகுத்தினார். இப்பாடல்கள் கீழ்காணும் பல பொதுவியல்புகளைப் பெற்றுத் திகழ்கின்றன.

1. தன்னுணர்ச்சியின் வெளியீடாக இருந்தாலும் இப்பாடல்கள வெளியிடும் அனுபவங்கள் அனைவராலும் பங்கிடும் வண்ணம் பொதுநிலையில் அமைகின்றன.
2. புராணக் கதைமூலம் இறைவன் புகழ்பாடுதல், தன்னுணர்ச்சிப் பாடல் மூலம் இறையுணர்வை வெளிப்படுத்துதல் என்னும் இருவேறு இயல்புகளை இவை பெற்றுத் திகழ்கின்றன.

தூய மேரி அன்னையின் வழிபாட்டு முறை கத்தோலிக்கச் சமயத்தில் பெரிதும் வற்புறுத்தப்படவே இறைநெறிக் கவிஞர்கள் அன்னையின் தூய்மையை விளக்க, விண்மீன், ரோஜா மலர் போன்ற படிமங்களையெல்லாம் அமைத்துப் பாடத் தொடங்கினர். இடைக்கால பிரான்ஸ் நாட்டில் தோன்றிய காதல் கவிஞர்கள் பயன்படுத்திய உவமை, உருவகம் போன்ற அணிகளெல்லாம் பக்திப் பாடல்களில் புகுவதைக் காண்கிண்றோம். சங்க இலக்கியக் கவிதை மரபுகள் தமிழ்நாட்டு இறைநெறிக் கவிதை மரபில் புகுந்தமை போன்று இடைக்காலக் காதற்பாடல் மரபுகள் பக்தி இலக்கியங்களிலும் ஊடுருவல் செய்தன. தமிழ்நாட்டு பக்தி இலக்கியங்களில் காணப்படுவது போன்ற தன்னுணர்ச்சிப் பாடல்கள் பலவும் இங்கும் இடம் பெறுகின்றன.

இலத்தீன் மொழியில் கி.பி.600 முதல் 1000-க்கு இடைப்பட்ட பகுதியில் தோன்றிய பக்திப் பாடல்களில் தமிழ்நாட்டு இறைநெறிப் பாடல்களைப் போன்று இயற்கை வருணனைகள் விஞ்சி நிற்பதைக் காண்கின்றோம். தமிழ்நாட்டில் இதே காலகட்டத்தில் தோன்றிய ஆழ்வார்கள், நாயன்மார்கள் ஆகிய இறைநெறிக் கவிஞர்களின் பாடல்களில் விஞ்சிநிற்கும் பருவ வருணனை, இயற்கைப் பொருள் வருணனை ஆகியவற்றை இப்பாடல்களிலும் மிகுதியாக ஒரு சில மாற்றங்களுடன் காணமுடிகின்றது. வசந்த காலத்தின் வரவு, கூட்டமாகப் பறந்து இசைப்பாடி வரும் குயில்களின் வரவு, மாரிக் காலத்தில் இயற்கை காட்டும் வனப்பு ஆகியன எல்லாம் இப்பாடல்களை அணி செய்கின்றன. இயற்கைப் பின்னணியில் காதல் அனுபவங்களைப் பாடுவது போன்று இறைவன்-ஆன்மா உறவினைப் பாடும் போக்கினையும், மனிதனின் குறைபாடுகளுக்காக இரங்கும் இயல்பினையும் இவற்றில் தெளிவாகக் காணமுடிகின்றது. தத்தவச் சிந்தனைகளும் அளவோடு ஆங்காங்கு அணிபெற இவற்றில் இடம் பெறுகின்றன. பெட்ரார்க் (Petrarch) போன்ற புலவர்கள் காதற்பாடல்களுக்கும் பயன்படுத்திய சானட் வடிவத்தை மேலை நாட்டு பக்திப் பாடல்களும் பின்பற்றத் தொடங்கின. துன்பத்தின் மத்தியில் துவளாது, சாவின் வருகையைக் கண்டு அஞ்சாது, உணர்ச்சி ததும்ப இறைவனிடம் மன்றாடுவது போன்ற பல பாடல்களை இலத்தீன் மொழியில் வில்லோன் (Villon) என்ற கவிஞர் பாடியுள்ளார்.

ஜெர்மன் நாட்டு பக்தி இலக்கியங்களில் இயற்கைப் பொருட்களை ஒட்டு மொத்தமாக வர்ணித்துச் செல்லும் போக்கிற்குப் பதிலாகப் பறவை, பூ, மரம், விண்மீன் இவற்றில் ஏதாவது ஒன்றைத் தனியாக விளக்கி, அதனை அடிப்படையாகக் கொண்டு இறைநெறி அனுபவத்தை விளக்கிச் செல்லும் மரபினைக் காண்கின்றோம். இதனால் ஏனைய இறைநெறிக் கவிதைகளை விட இக்கவிதைகளில் சிந்தனையும், கருத்துத் தெளிவும் விஞ்சி நிற்கின்றன.

பிரிட்டனைப் பொறுத்தவரையில் பழைய ஜெர்மானிய பாடல்களுள், தொடக்கநிலையில் எழுந்த பக்திப் பாடல்கள் குறிப்பிடத் தகுந்தன. இவை, எதுகை, மோனை ஆகியவற்றுக்கும் இசைக்கும் அதிகச் சிறப்பளிப்பதைக் காண்கின்றோம். அதோடு விடுகதைகள், முரண் அணிகள் போன்றவற்றை விரும்பிப் பயன்படுத்தும் போக்கினையும் இவற்றில் காணமுடிகின்றது. கேட்மன் (Caedmon) போன்றோர்களின் பாடல்களில் கிறிஸ்துவ நம்பிக்கைகளும், எதிர்காலம் பற்றிய சிந்தனைகளும், நம்பிக்கைகளும் சிறப்பாக வற்புறுத்தப்படுவதைக் காணலாம். பக்திப் பாடல்களில் மேற்கூறிய உலகப் பொதுவியல்புகளை அடிப்படையாக வைத்து நோக்கும்போது அறநெறிப் பாடல்களையடுத்த நிலையில் சிறந்த ஒப்பாய்வுக் களமாக இது அமைவதை உணரலாம்.

## 5.6.4 புதுச் செந்நெறி படைப்புகள்

குறிப்பு

பக்தி இலக்கியங்கள் தோன்றிய காலகட்டத்தை அடுத்து புதுச் செந்நெறி இலக்கியங்கள் பெரும்பாலான உலக மொழிகள் அனைத்திலும் தோற்றம் பெறக் காண்கின்றோம். நிலவுடைமைச் சமுதாய அமைப்பு முறையின் வளர்ச்சி இத்தகைய இலக்கிய எழுச்சிக்கு அடிப்படையாக அமைந்தது. எனவே, நில உடைமைச் சமுதாயப் பின்னணியில் மலர்ந்த இலக்கிய மலர்களே புதுச் செந்நெறி இலக்கியங்கள் என்று துணிந்து கூற முடிகின்றது. பக்தி இலக்கியங்களை அடுத்து உலக இலக்கியங்கள் அனைத்திலும் புதுச் செந்நெறிப் போக்கின் ஆதிக்கத்தைக் காணமுடிகின்றது. எனவே, இலக்கிய ஒப்பாய்விற்குப் புதுச் செந்நெறிப் படைப்புகளும், அவை தோன்றிய காலகட்டங்களும், சமுதாயப் பின்புலன்களும் ஏற்ற ஆய்வுக் களங்களாகக் காட்சி தருகின்றன. இத்தகைய இலக்கியப் போக்குகள் மேல்நாட்டு இலக்கியங்களைப் பொறுத்தவரையில் கி.பி 18 ஆம் நூற்றாண்டு வரையிலும் தொடர்வதைக் காணலாம். புதுச் செந்நெறிக் கவிஞர்கள், குறிப்பாக ஆங்கில, பிரெஞ்சு, ஜெர்மானியக் கவிஞர்கள் கிரேக்க இலக்கிய வடிவங்களையும், இலக்கியக் கொள்கைகளையும் உரோம நாட்டுத் திறனாய்வாளனான ஹாரஸின் இலக்கிய அறிவுரைகளையும் பின்பற்றினர். அகஸ்டஸ் சீஸரின் காலத்தைப் போன்று இலக்கிய வளம் மலிந்த காலகட்டமாக இக்காலக்கட்டத்தைக் கருதி இதனை ‘‘ஆங்கில இலக்கியத்தின் அகஸ்டியன் காலம்’’ (Augustian Age in English Literature) என்று அழைத்தனர்.

தமிழ்நாட்டு புதுச் செந்நெறி இலககியங்களான பிரபந்தங்களுக்கும், ஆங்கில புதுச் செந்நெறிப் படைப்புகளுக்கும் பழைய இலக்கிய வடிவங்களை அடியொற்றிக் கடுமையான விதிமுறைகள் வகுக்கப்பட்டன. காப்பியங்கள் ஹாரஸ் கூறுவது போல் இடையிலிருந்து (Inmedieas res) தொடங்க வேண்டும் நாடகத்திற்குக் கால, இட, செயல் (Unity of time, place and action) ஒருமைப்பாடுகளும் பொருத்தங்களும் வேண்டும் துன்பியல் நாடகத்தில் நகைச்சுவை சேரக்கூடாது: கொடிய காட்சிகளை மேடையில் காட்டக்கூடாது: கவிதை உள்ளதுகிளக்கும் நெடிதாக வர்ணனை செய்யும் போக்காக மாறியது. மேல்நாட்டுப் புதுச் செந்நெறிப் படைப்புகளைப் போல் இயல்பான கற்பனைகளால் இலக்கியத்தை அணி செய்யாது, அளவு மீறிய கற்பனைகளால் தம் படைப்புக்களை அணி செய்யத் தமிழ்ப் புதுச் செந்நெறிக் கவிஞர்கள் முற்பட்டனர்.

ஜமீன்தார்களைப் பாடுவதற்குப் பயன்படுத்தப்பட்ட கவிதை வடிவங்கள் இறைவனைப் பாடுவதற்கும் பயன்படுத்தப்பட்டன. இறைவன்மீது எழுந்த உலா, கலம்பகம், தூது, பிள்ளைத் தமிழ் போன்ற இலக்கிய வடிவங்களிலும் அருவருக்கத் தகுந்த கற்பனைகளும் கூற்று முறைகளும் மிகுந்தன. எனவே, இவற்றை ‘நசிவு இலக்கியங்கள்’ என்றும், ‘போலிச் செந்நெறிப் படைப்புகள்’ (Pseudo Classical Literature)

என்றும் அழைப்பது பொருத்தமானதே. பணம் படைத்த வள்ளல்களையும், இறைவனையும் உரிய பொருளாகக் கொண்ட இலக்கியங்கள்பாமர மனிதனைப் புறக்கணித்து அரண்மனைகளிலும், மாளிகைகளிலும், கோயில்களிலும் வளர்ந்தன. மேல்நாட்டுப் புதுச் செந்நெறி இலக்கியங்களிலும் இது போன்று பல இயல்புகளைக் காண்கின்றோம். பென் ஜான்ஸன், போப் ரைடைன் ஆகியோர்கள் ஆங்கிலப் புதுச் செந்நெறிக் கவிதை இயக்கத்தில் குறிப்பிடத் தகுந்தவர்கள்.

இப்படைப்புக்கள் அனைத்தும் குறிப்பிட்ட மன்னர்களின் அல்லது நிலப்பிரபுக்களின் அல்லது கோயில்களின் பராமரிப்பில் (Patronage System) வளர்ந்ததால் இவற்றையும் 'மாளிகைக் கவிதைகள்' (Count Poetry) என்று அழைப்பது மிகவும் பொருந்தும்.

மேல்நாட்டு நில உடைமைச் சமுதாய அமைப்பும், தமிழ்நாட்டு நில உடைமைச் சமுதாய அமைப்பும் அடிப்படையில் பல நிலைகளில் வேறுபட்டு அமைவதால் அவை தோற்றுவித்த இலக்கியங்களிலும் வேற்றுமைக் கூறுகள் பலவற்றை நாம் இனங்கண்டு கொள்ள முடிகின்றது. வடிவம், உணர்த்துமுறை ஆகியவற்றில் வேற்றுமைக் கூறுகள் பல அமைந்த போதிலும் ஒற்றுமைக் கூறுகள் இவற்றுள் மிகுந்துள்ளமையால் புதுச் செந்நெறிப் படைப்புக்களும் சிறந்த ஒப்பாய்வுக் களமாக அமைகின்றது. நில உடைமைச் சமுதாய அமைப்பு உடைத்தெறியப்பட்டு முதலாளித்துவப் போக்குகள் மலரவே இலக்கிய உலகிலும் புதுச் செந்நெறிப் போக்குகள் தகர்த்தெறியப்பட்டு வீறுணர்ச்சிக் கவிதைகள் ஏற்றம் பெறக் காண்கின்றோம்.

### 5.6.5 வீறுணர்ச்சிப் பாடல்கள்

புதுச் செந்நெறி இலக்கியங்களைத் தோற்றுவித்த சமுதாயச் சூழலில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டதும், அது தோற்றுவித்த இலக்கிய வடிவங்களும், உத்திகளும், கோட்பாடுகளும் மாற்றம் பெறுவதைக் காண்கின்றோம். நிலவுடைமைச் சமுதாய அமைப்பு பேணி வளர்த்த புதுச் செந்நெறி இலக்கியப் போக்கு, நிலவுடைமைச் சமுதாய அமைப்புக் கட்டவிழ்ந்து முதலாளித்துவ அமைப்பு வலுப்பெற்றதும் மாற்றம் பெற்ற வீறுணர்ச்சிப் படைப்புக்கள் (Romantic Poetry) தோன்ற வழியமைத்துக் கொடுப்பதை உலக இலக்கியங்கள் முழுவதிலும் காணமுடிகின்றது. இத்தகைய மாபெரும் மாற்றம் 18 ஆம் நூற்றாண்டிற்குப்பின் உலக இலக்கியங்கள் அனைத்திலும் ஏற்பட்டுள்ளது. எனவே , புதுச் செந்நெறிக் காலத்தையடுத்த சிறந்த ஒப்பாய்வுக்களமாக வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம் காட்சி தருகின்றது. அதன் தோற்றம், இலக்கியப் போக்குகள், பொதுவியல்புகள் ஆகியவற்றைப் பின்வரும் பகுதிகளில் சுருக்கமாகக் காணலாம்.

ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்ட மறுமலர்ச்சி இயக்கமும், சமயச் சீர்த்திருத்த இயக்கமும், தொழிற் புரட்சியும், பிரெஞ்சுப் போராட்டமும், மரபு வழிப்பட்ட சிந்தனைப் போக்குகளையும், சமுதாய

அமைப்புகளையும், உறவுமுறைகளையும் உடைத்தெறிந்து விட்டு வாழிவியல் முறையிலும், காலப்படைப்பிலும் புதிய புதிய போக்குகளையும், அணுகுமுறைகளையும் புகுத்தின. நிலவுடைமைச் சமுதாய அமைப்பும், அது ஏற்படுத்திய பிரபுத்துவப் போக்குகளும் இக்காலக்கட்டத்தில் விரைவாகக் கட்டவிழத் தொடங்கின. அறிவியல் கண்டுபீடிப்புக்கள் புதிய புதிய தொழிற்சாலை அமைக்கத் துணைநின்றதோடு பொருட்களின் உற்பத்தி வேகத்தையும் உயர்த்தின.

குறிப்பு

### 5.6.5.1. வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம்

ஐரோப்பிய நாடுகளின் சமுதாய அமைப்புக்களும் சிந்தனைப் போக்குகளும் மேற்கூறியவாறு ஒரு புதுப்கோணத்தை நோக்கி ஏறுநடை பயிலத் தொடங்கியதும், புதுவிதமான கவிஞனும் கவிதை இயக்கமும் மேற்கூறிய சமுதாயச் சூழலிலிருந்து பிறப்பெடுக்கத் தொடங்கியதைக் காண்கின்றோம். இத்தகைய கவிதை இயக்கத்தையே ‘வீறுணர்ச்சி கவிதை இயக்கம்’ (Romantic Movement) என்று அழைக்கின்றோம். உலக இலக்கியங்கள் அனைத்தையும் 19ஆம் நூற்றாண்டிலும், 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இக்கவிதை இயக்கம் பெருமளவில் தாக்கியும் இயக்கியும் நின்றது. ஐரோப்பிய இலக்கியங்களில் 19 ஆம் நூற்றாண்டிலும், கீழ்த்திசை இலக்கியங்களில் 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இக்கவிதை இயக்கம் பெரும் பாதிப்புகளை ஏற்படுத்தியது. ஜெர்மனியில் பிறந்து, பிரான்ஸ் நாட்டில் தவழ்ந்து, இங்கிலாந்து நாட்டில் வளர்ந்து, அமெரிக்காவில் தன் சுவடுகளைப் பதித்துப் பின் இந்திய இலக்கியக் கோட்பாடுகளைப் பெருமளவில் மாற்றியும் புதுக்கியும் அமைத்துச் சென்றது இவ்விலக்கிய இயக்கம். இந்திய இலக்கியங்களில் இவ்வியக்கம் தோன்ற ஐரோப்பியர் வருகையும், மேலைநாட்டுக் கல்வி முறையும், விடுதலைப் போராட்டமும், பல்வேறு சமுதாயச் சீர்த்திருத்த இயக்கங்களும் பின்புலனாக அமைந்தன. வீறுணர்ச்சிப் படைப்புக்களைத் தொழில்நுட்ப நாகரிகத்தின் குழந்தைகள் (Technological Civilization) என்று குறிப்பிடுவது பொருந்தும். நோவாலிஸ், ஸ்லீகல், வோர்ட்ஸ்வொர்த், காலரிட்ஜ், ஷெல்லி, பைரன், கீட்ஸ், வால்ட்விட்மன், எமர்சன் போன்றோர்கள் மேலைநாட்டு வீறுணர்ச்சிக் கவிதை இயக்கத்தில் குறிப்பிடத் தகுந்த சில முன்னோடிகளாவார். தாகூர், பங்கிம் சந்திரர், குமாரன் ஆசான், வள்ளத்தோள் நாராயண மேனன், பாரதியார், பாரதிதாசன், கவிமணி ஆகியோர் இந்திய நாட்டு வீறுணர்ச்சிக் கவிதை இயக்கத்தின் எழுச்சிமிகு முன்னோடிகளாவர். ஐரோப்பிய வீறுணர்ச்சிக் கவிதை இயக்கத்தில் தனிமனிதக் கோட்பாடு கிளைத்துப்படர ரூஸோவின் சிந்தனைகள் ஓரளவு தூண்டுகோலாக அமைந்தன. மனிதன் சுதந்திரமாகப் பிறக்கின்றான். சமுதாய அமைப்புகளும் அடக்குமுறைகளும் அவனது பிறப்புரிமையாகிய சுதந்திரத்தை நசுக்கி, வளர்ச்சியைத் தடுத்து ஒடுக்கி விடுகின்றன என்பது ரூஸோவின் கொள்கை. எனவே, தனிமனித சுதந்திரத்திற்கும் ஊறுவிளைவிக்கும் மரபுப் போக்குகளையும், மூடநம்பிக்கைகளையும், அரசியல் சமுதாய

குறிப்பு

அமைப்புக்களையும் எதிர்த்துப் போராட வேண்டிய பொறுப்பை வீறுணர்ச்சிக் கவிஞர்கள் மேற்கொள்ளத் தொடங்கினர்.

### 5.6.5.2 வீறுணர்ச்சிக் கவிஞனின் சமுதாயப் பார்வை

அரண்மனையிலும் மாளிகையிலும் வாழ்ந்து தன்னைப் பாதுகாத்து வந்த புவைலர்களின் விருப்பத்தை நிறைவு செய்யக் கவிபாடிக் கொண்டிருந்த கவிஞன் 19, 20ஆம் நூற்றாண்டுகளில் சமுதாய மறுமலர்ச்சி இயக்கங்களோடு தன்னைப் பிணைத்துக் கொண்டு புரட்சிவீரனாக, போராட்ட அணியின் தலைவனாக, சமுதாயச் சிந்தனையாளனாக, பொற்காலத்தைக் கட்டியெழுப்பும் கற்பனைச் சிற்பியாக, ‘எல்லோரும் இந்நாட்டு மன்னர்’ என்றும், ‘மானிடர் அனைவரும் சகோதரர்’ என்றும் கூறிக் கொண்டு ‘நமக்குத் தொழில் கவிதை நாட்டுக்குழைத்தல்’ என்ற தெளிந்த குறிக்கோளோடு சமுதாயக் களத்தில் குதிப்பதைக் காண்கின்றோம்.

### 5.6.5.3 இருவகை வீறுணர்ச்சிப் போக்கு

இப்புரட்சிகரமான வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம் ஐரோப்பிய இலக்கியங்களைப் பொறுத்தவரையில் முதன்முதலில் சிறப்பாக உருப்பெற்றது ஜெர்மன் நாட்டில்தான் என்று அறிகின்றோம். இவ்வியக்கத்தின் பொதுப் போக்குகளை ஆராய்ந்த ஆங்கிலத் திறனாய்வாளர்கள் இதனை ‘ஆக்கம் தரும் வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம்’ (Positive Romanticism) என்றும், ‘வெறும் கற்பனையில் அழுத்திக் கிடக்கும் வீறுணர்ச்சிப் போக்கு’ (Negative Romanticism) என்றும் இரு கூறுப்படுத்துவர். மாக்ஸிம் கார்கி என்றும் ரஷ்ய நாட்டுத் திறனாய்வாளர் வீறுணர்ச்சிக் கவிதை இயக்கப் போக்கினைச் ‘செயலாக்க மிக்க வீறுணர்ச்சிப் போக்கு’ (Active Romanticism) என்றும், ‘செயல்திறம் குறைந்த வீறுணர்ச்சி போக்கு’ (Passive Romanticism) என்றும் இரு கூறுபடுத்துவார். வீறுணர்ச்சிப் போக்கினைத் தம் கவிதைகளில் மிகச் சிறப்பாகப் பிரதிபலித்து நின்ற ஒப்புயர்வற்ற ஆங்கில வீறுணர்ச்சிக் கவிஞனாக ஷெல்லியையும், தமிழ்நாட்டு வீறுணர்ச்சிக் கவிஞனாகப் பாரதியையும் குறிப்பிடலாம்.

## 5.7 ஒப்பிலக்கிய ஆய்வுகள் - விளக்கம்

ஒப்பிலக்கிய மறுமலா்ச்சிக் காலம், தமிழகத்தில் ஒப்பிலக்ககிய ஆய்வின் வளா்ச்சி நிலை,ஒப்பாய்வுக்குரிய களங்களில் பொதுமைப் பண்புகள், ஒப்பிலக்கிய ஆய்வுகள் பொதுநிலையில் ஐந்து வித வளா்ச்சி நிலைகள் ஆகியவை இக்கூறில் உள்ளன.

குறிப்பு

## வினா – விடை – பயிற்சி

**I.இரண்டு மதிப்பெண் வினா – விடை**

1. **ஒப்பியல் இலக்கியத்தைத் தனித்துறையாகப் பேணி வளர்த்த பெருமைக்குரிய நாடு எது?**
   பிரான்ஸ்
2. **தமிழ்நாட்டில் ஒப்பிலக்கிய ஆய்வுத்துறையில் புதிய திருப்பத்தை ஏற்படுத்திய பெருமைக்குரிய அறிஞர் யார்?**
   வ.வே.சு. ஐயர்
3. **வுயஅடை ர்நசழநை ீழநவசல – என்ற நூலின் ஆசிரியர் யார்?**
   டாக்டர் க.. கைலாசபதி
4. **இலக்கியக் குடும்பம் பற்றிய ஆய்வில் சிறப்பிடம் பெறும் பாடல்கள் எவ்வாறு அழைக்கப்படுகின்றன?**
   வீரயுகப் பாடல்கள்
5. **19 மற்றும் 20 – ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய கவிதை இயக்கம் எவ்வாறு அழைக்கப்படுகிறது.**
   வீறுணர்ச்சிக் கவிதை இயக்கம்

**II. ஐந்து மதிப்பெண் வினா – விடை**

6. **மறுமலர்ச்சி காலத்தில் ஒப்பிலக்கிய ஆய்வு கண்ட வளர்ச்சியை விவரி.**

(5.3 –ல் உள்ள செய்திகளை எழுதுக)

7. **தமிழகத்தில் ஒப்பிலக்கிய ஆய்வின் வளர்ச்சி நிலையை எழுதுக.**

(5.4 –ல் உள்ள செய்திகளை எழுதுக)

8. **வீரயுகப் பாடல்கள் பற்றி விவரிக்க.**

(5.5.1 –ல் உள்ள செய்திகளை எழுதுக)

9. **அறநெறிப் பாடல்கள் உலகளவில் வைத்து ஒப்பிடப்பெற்றமையை விவரி.**

(5.5.2 –ல் உள்ள செய்திகளை எழுதுக)

10. **வீறுணர்ச்சிப் பாடல்கள் ஏற்படுத்திய தாக்கங்கள் யாவை? விவரி**

(5.5.5 –ல் உள்ள செய்திகளை எழுதுக)

**III. கட்டுரை வடிவில் விடை தருக**

11. **ஒப்பிலக்கிய ஆய்வுகள் - பொதுநிலை – எனுந் தலைப்பில் கட்டுரை எழுதுக.**

(5.1 முதல் 5.6 வரையிலான செய்திகளை சுருக்கி எழுதுக.

குறிப்பு

# கூறு - 6: அடிக்கருத்தியல் - இலக்கிய வகை - இணைநிலை – தாக்கம்

## 6.1. முன்னுரை

ஒப்பிலக்கியக் கோட்பாடுகளுள் ஒன்று அடிக்கருத்தியல் ஆய்வு ஆகும். ஹாரி லெவினாஸ் என்பவரால் உருவாக்கப்பெற்ற ஒன்றாகும். இலக்கிங்களிடையே அமையும் மூலநிலைப் பற்றிய ஆய்வாக இது அமையும். நாடடுப்புறவில் ஆய்வு மேற்கொண்ட பொழுது கண்டம் விட்டுக் கண்டம் சில செய்திகள் பரவியுள்ளதனைக் கண்டனர். இந்திய இலக்கியங்களில் பொதுவாக இராமயணம் பாரதக் கதைகளின் மூலங்கள் உள்ளதைக் காணலாம். அறம், பொருள், இனபம் மற்றும் வீடு ஆகிய நாற்பொருள் அடிப்படையில் இலக்கியங்கள் அமைந்து விளங்குவதனையும் காணலாம். இலக்கியங்களிடையே அமையும் அடிக்கருத்தியல் ஆய்வு இவ்வாறு அமையும்.

## 6.2. நோக்கம்

ஒப்பிலக்கியத் துறையோடு பிரிக்க இயலாத துறைகளாக விளங்கக் கூடியவை வருமாறு.

- அடிக்கருத்தியல்
- இலக்கிய வகை
- இணை நிலை
- தாக்கம்

இவற்றை விரித்துக் காணலாம்.

## 6.3. அடிக்கருத்தியல் (சொற்பொருள் விளக்கம்)

அடிக்கருத்தியல் என்ற சொல் Themotology என்ற சொல்லின் மொழிப்பெயர்ப்பாகும் அடிக்கருத்து வுாநஅந என்ற சொல் thema என்ற சொல்லிலிருந்து உருவாக்கப்பட்டதாகும். கத்தோலிக்க சபையினர் அடிப்பொருள் அல்லது மூலப்பொருள் என்ற அடிப்படையில் பயன்படுத்தினர். பிரெஞ்சு மொழியாளர்கள் பிறமொழியில் மொழிப்பெயர்த்தலைக் குறிக்கும் சொல்லாகக் கருதினர், ஜெர்மனி மொழியாளர் ஸ்டாப் கெஷிஹட்டே என்ற சொல்லுக்கு இணையாகக் கருதினர். ஒரு இலக்கியத்தின் அடிப்படையாக அமையும் பொருளின் வரலாறாகக் கருதினர். நூலின் அடிநாதமாகக் கருதும் உயர் உணர்வை அடிக்கருத்து என்று பலரும் கருதினர். பொதுவாக கருத்து, அடிக்கருத்து ஆகிய இரண்டு சொற்களுக்கிடையே வேறுபாடுகளை அறியமாட்டாது குழம்பும் நிலை உள்ளது. இதற்கான தெளிவான வரையறைகளை முதலில் வகுத்துக் கொள்வோம்.

கருத்து (theme) என்பது பொதுவானது, அடிக்கருத்து என்பது தனித்தன்மை வாய்ந்தது. இது முனைப்புக் கருத்து (motif) என்றும்

குறிப்பு

சொல்லப்படுகிறது. ‘கருத்து’ என்பது வெளிப்படத் (dominalant feature) தெரிவது. அது படைப்பு நெடுகிலும் புலனாகிறது, படைப்பு நோக்கத்தை நிறைவேற்ற வருவது. ‘அடிக்கருத்து’ என்பது தன்னை உள்ளவாறு வெளிக்காட்டாமல் படைப்புக்குள் புதைந்திருப்பது. மாற்று வடிவங்களில் வெளிப்படுவது ‘கருத்து’ என்பதை இலக்கியத்தின் பரந்து விரிந்த நுவல் பொருள் எனலாம். கருத்துக்களின் குவிமையங்களை “அடிக்கருத்துக்கள்!” எனலாம்.

இலக்கியத்தில் அடிக்கருத்தின் பங்கினைப் புரிந்து கொள்வதற்கு அதன் வேர்ச்சொல்லின் பொருள் துணை செய்யும். இலத்தினில் ‘அடிக்கருத்து’ ‘movere’ என்று அழைக்கப்படுகிறது. தூண்டுவது, இயக்குவது, நகர்த்துவது (cause something to happen/to move forward) என்று இதற்குப்பொருள் சொல்லப்படுகிறது.

இலக்கியத்தை, நிகழ்வுகளை நகர்த்திச் செல்வதற்கு அடிக்கருத்துக்கள் இன்றியமையாத துணையாக இருப்பதை இது குறிக்கிறது. அடிக்கருத்தின் இன்னொரு முக்கியப்பண்பு அது மாற்றத்திற்குரியது என்பதாகும். இயங்கும் தன்மையுள்ள (potential) அது. காலச் சூழுலுக்கேற்ப பல்வேறு வடிவங்களைத் தாங்கும். ஆனால் இலக்கியம் நுவலும் பொதுக்கருத்து நிலையானது, மாற்றமில்லாதது.

காப்பியங்களில் அடிக்கருத்துக்கள் பல காணப்படும், அவை கிளைக்கதைகள் வழி உணர்த்தப்படும், கம்பராமயணத்தில் அகலிகை, தாடகை, சடாயு போன்றோர் கதைகளும் மகாபாரதத்தில் நளன் - தமயந்தி, துஷ்யந்தன் - சகுந்தலை, சத்தியவான் - சாவித்திரி, நளாயினி போன்றோர் கதைகளும் அடிக்கருத்துக்களை விளக்கவந்த கிளைக் கதைகளே, சிலப்பதிகாரத்தில் வனசாரினி, குரங்குக்கதை போன்றவை அடிக்கருத்து விளக்கங்களாக அமைக்கப்பட்டுள்ளன.

கருத்துக்கும் அடிக்கருத்துக்கும் உள்ள இன்னொரு முக்கியமான வேறுபாடு கருத்து என்பது அந்த படைப்பு முழுவதும் தொடக்கம் முதல் இறுதிவரை இடம்பெறுவதாகும். அடிக்கருத்து, சில வாழ்க்கை உண்மைகளைச் சொல்வதற்காக ஆங்காங்கே இடம்பெறுவதாகும்.

சிலப்பதிகாரத்தின் தொடக்கத்தில் காப்பிய நோக்கங்களாக அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவது, ஊழ்வினை உருத்து வந்து ஊட்டுவது உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவது ஆகியவற்றை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். இவை சிலப்பதிகாரத்தின் நுவல் பொருளாக, கருத்துக்களாக அமைந்தவை. இம்மூன்று கருத்துக்களும் காப்பியத்தின் தொடக்கம் முதல் இறுதிவரை ஆங்காங்கே வலியுறுத்தப்படக் காணலாம்.

அடிக்கருத்துக்கள் காலந்தோறும் புதிய வடிவங்கள் எடுப்பதற்கு அகலிகை, நந்தன் கதைகளைச் சான்று காட்டலாம். இராவணன் கயிலை மலையைத் தூக்க முற்பட்டபோது இறைவன் தன் காலடி கட்டை

விரலால் அழுத்தி அவன் செருக்கை அடக்கியது, ஆணவத்தை அடக்குவதற்கான தொன்மம் எனலாம் இந்தத் தொன்மத்தை அப்பரடிகள் தம்முடைய பதிகந்தோறும் கடைசிப்பாடலில் பதிக அடிக்கருத்தாக அமைத்துள்ளார்.

நாட்டுப்புற இலக்கியத்தில் அடிக்கருத்துக்களின் செல்வாக்கு அதிகம் உள்ளது. ஸ்டித் தாம்சன் (stiyh Thompson) என்பாரின் உலகின் பல பாகங்களிலும் கிடைத்த நாட்டுப்புறக்கதைகளில் உள்ள அடிக்கருத்துக்களின் தொகுப்பாகும். பல நாடுகளிலும் பல கதைகள் ஒரே அடிக்கருத்தைக்கொண்டு வடிவ வேறுபாட்டுடன் விளங்கியதைக் கண்டுணர்ந்த இவர் ‘‘கதைகள் பலவானாலும் அடிக்கருத்து சிலவே’’ என்ற முடிவுக்கு வந்தார்.

முயல் - ஆமை, காகம் - நரி, நரி – திராட்சைப் பழம் போன்ற கதைகளில் காணப்படும். அடிக்கருத்துக்கள் பல்வேறு நாடுகளில் அமைந்த நாட்டின் பண்பாட்டு சிந்தனைச் சூழல்களுக்கேற்ப மாற்று வடிவங்கள் பெற்றுத் திகழ்கின்றன என்று கண்டார். இவ்வாறு அடிக்கருத்துக்கள் இலக்கிய வளர்ச்சிக்கு அடிப்படையாகத் திகழ்கின்றன என்ற உண்மை வெளிப்பட்டது.

- அடிக்கருத்தும் - குறிக்கோளும்
- அடிக்கருத்தும் அடி மூலப்பொருளும்,
- அடிக்கருத்தில் வடிவமும் உள்ளடக்கமும்,
- அடிக்கருத்தும் பாத்திரப்படைப்பும்
- அடிக்கருத்தும் இயற்கைச் சூழலும்
- அடிக்கருத்துடன் தொடர்புடைய உள்ளுறையும் இறைச்சியும்
- அடிக்கருத்தும் தொன்மையும்
- அடிக்கருத்தும் குறியீடும்

ஆகிய நிலைகளில் அடிக்கருத்து பற்றி விரிவாக அறிந்து கொள்ள வேண்டும்.

## 6.3.1. அடிக்கருத்து ஆய்வு வகைகள்

அடிக்கருத்தின் ஆய்வு வகைகளைப் பிராவர் ஐந்து வகையாகப் பிரித்துக் கூறுகிறார்.

1. இயற்கை நிகழ்வுகள் அவற்றை எதிரொலிக்கும் மனித செய்திகள்.
2. இலக்கியத்திலும் நாட்டுப்புறப் பாடல்களிலும் திரும்பத் திரும்ப வரும் கருத்துக்களும்
3. திரும்பத் திரும்பத் வரும் நிகழ்ச்சிகளும் அவற்றைப் பலர் கையாண்டுள்ள விதங்களும்.
4. சமுதாயம் அல்லது வாழ்வியல் நிலைகளை எடுத்துரைப்பன.
5. புராணக் கதைகள், கர்ண பரம்பரைக் கதைகள் போல்வன.

இவ்வாறு ஒப்பிலக்கிய ஆய்வில் அடிக்கருத்தியல் ஆய்வு மிகவும் சிறப்புடன் அமைந்து விளங்குகிறது. தமிழ் இலக்கிய ஆய்வில் இத்தகைய ஆய்வு இன்னும் சரிவர மேற்கொள்ளவில்லை .

குறிப்பு

''சங்கச் செவ்வியல்'' என்றப் பெயரில் செ.சாரதாம்பாள் முனைவர் பட்டத்துக்கு அளித்த ஆய்வேட்டில் அடிக்கருத்து பற்றி, கூறுவது வருமாறு

1. அடிக்கருத்தியல் சொற்பொருள் விளக்கம்
2. தலைமைப் புனைவுக் கூறு
3. மேலை நாட்டு திறனாய்வாளர் கருத்துக்கள்
4. தமிழ் இலக்கியங்களில் அடிக்கருத்து பற்றிய கருத்துக்கள்
5. அடிக்கருத்தின் பொது வரையரைகள்
6. ஆற்றுப்படைப் பாடல்களில் அடிக்கருத்து எனும் ஆறு இயல்களில் விளக்கி உள்ளார்.

## 6.4. இலக்கிய வகை

இலக்கிய வகை (literary genre) பற்றிய ஆய்வு ஒப்பீட்டுத் துறையில் மிக இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. மேலை நாட்டார் இலக்கிய வகைக் கொள்கைகளை (theory of Genre) நன்கு உருவாக்கியுள்ளனர். சிகாகோவிலுள்ள இல்லினாய்சு பல்கலைக் கழகத்தின் ஆங்கிலத் துறையினர் இலக்கியவகை (Genre) என்ற முத்திங்கள் இதழ் ஒன்றை நடத்துகின்றனர் நூற்றுக் கணக்கான இலக்கிய வகைகளைப் பட்டியலிட்டு விளக்கும் கலைக் களஞ்சியம் ஒன்றும் அவர்களால் வெளியிடப் பெற்றுள்ளது. ஒப்பீட்டறிஞர்கள் பலர் இக்கோட்பாடு பற்றி உலக நோக்கில் ஆய்வுக்கட்டுரைகள் வழங்கி வருகின்றனர். நூற்றுக்கணக்கான இலக்கிய வகைகளையும் கிளை வகைகளையும் ஒவ்வொரு காலப்பகுதிகளிலும் கொண்டு விளங்கும் தமிழ் இலக்கியத்தில் இவ் ஆய்வினை மிகவும் செம்மையாகவும் முழுமைபெறவும் மேற்கொள்ள வேண்டும்.

### 6.4.1. இலக்கியவகை, காலப்பகுதி. இயக்கம்

இலக்கியவகை (Genre) இலக்கியக் காலப் பகுதிகள் (literary periods) இலக்கிய இயக்கங்கள் (literary movements) என்பன மூன்றும் தொடர்புடையன. தமிழில் இயக்கங்கள் பற்றிய ஆய்வுக்கு மிகக் குறைவான இடமே உண்டு ஏனெனில் செவ்வியல் (classism) புனைவியல் (Romanticism) நடப்பியல் (Realism) படிமவியல் (symbolism) மறுமலர்ச்சி (renaissance) போல்வனவாகிய பல இலக்கிய இயக்கங்கள் பற்றிய செய்திகளை மேலைநாட்டியங்களில் காணலாம். தமிழில் இவற்றுள் ஒரு சிலவே பொருந்தி வரும். அடுத்ததாக இலக்கியக் காலப்பகுதிகளைச் சுட்டலாம்.

இவை வரலாற்றுக் காலப் பகுதிகளோடு இயைபுடையன, 'இருண்ட காலம்' என்பது வரலாற்றியிலும் உள்ளது, இலக்கிய

வளர்ச்சிலும் அக்காலப் பகுதிக்கு அதுவே பெயர் ஆயினும் இங்கு இலக்கியவகை பற்றிய ஆய்வே தலைமை பெறுகிறது. ஏனைய இரண்டும் இதனுள் அடங்கி வருவனவே. சங்க காலம் நீதிநூற்காலம், பக்தி இலக்கிய காலம், காப்பியக் காலம், சிற்றிலக்கிய காலம், உரைநடை இலக்கிய காலம், மறுமலர்ச்சிக்காலம் என 'வகைமை' பற்றிய பெரும் பிரிவுகள் சுட்டப்படுகின்றன. இவை ஒவ்வொன்றும் உள்வகைகள் பலவற்றை உடையன.

உடற்கூறு அல்லது குணத்தில் சாயல் ஒற்றுமையுடைவர்களை ஒரு குடும்பத்தவராகக் கருதுகிறோம். வேறொரு வகையாகக் கூறினால் ஒரு குடும்பத்தவர் என்று கருதக் கூடியவர்களிடம் இச்செயல் ஒற்றுமைகள் அமைந்திருக்கும். இலக்கியத்தில் இங்ஙனம் வடிவம், பொருள் ஆகியவற்றில் ஒற்றுமையுடையவற்றை ஒரு குடும்பமாக எண்ணி வகைப்படுத்துகிறோம். ஆல்பர்ட்டு ஜெரால்டு "பொதுவாக அனைவராலும் ஒப்புக் கொள்ளப் பெற்ற வடிவத்தாலும் கருத்தாலும் ஒப்புமைகளை உடைய நூல்களின் தொகுதிக்கு ஓர் இலக்கிய வகை எனப் பெயரிடலாம்" என்பர். இலக்கியங்களை அவற்றின் புறவடிவத்தைக் கொண்டும் உட்பொதிந்த பொருளைக் கொண்டும் வகைப்படுத்துவர். கிரேக்க ஈரடிப்பாடல்கள் (Homeric Couplets) பழங்காலப் போற்றிப் பாடல்கள் (Odes) அந்தாதி, இரட்டை மணிமாலை, ஒருபா ஒரு ப.்.து போல்வன புற அமைப்பைக் கொண்டு பெயரிடப்பெற்ற வகைகள், முல்லை நிலப்பாடல் (pastoral) அங்கதம் (satire), உலா, தூது போல்வன அக அமைப்பாகிய பொருளைக் கொண்டு குறிப்பிடப் பெற்றவை. அந்தாதி, பாதாதிகேசம், வருக்கமாலை போல்வனவற்றில் உத்திச் சிறப்பே முக்கியமானவை. கலம்பகம், தசாங்கம் போல்வன அக அமைதியும் புறவடிவும் கொண்டு பெயரிடப்பட்டவை.

இலக்கியத்தில் வடிவமும் பொருளும் பண்ணும் பாட்டும் போல ஒன்றுடன் ஒன்று பொருந்துமாறு படைக்கப்படும்போதுதான் சிறந்த வகைகள் முகிழ்க்கின்றன. பிறிதொரு வழியாக நோக்கினால் இலக்கிய வகைகள் ஒன்றினோடு ஒன்று முற்றிலும் தொடர்பற்றன அல்ல. ஒரு வகையில் பிறவற்றின் சாயலிருந்தாலும் மீக்கூர்ந்து நிற்கும் பண்பு அடிப்படையிலேயே வகைப்படுத்தப்படுகிறது.

முனைவர் கி.இராசா அவர்கள் இலக்கிய வகைப்பாட்டு முறைகளை ஆறு வகைகளாகப் பிரித்துக் காண்கிறார்.

அவையாவன

1. அடிப்படை வகைகள்
2. உத்தி வகைகள்
3. வடிவ வகைகள்
4. மைய வகைகள்
5. உணர்ச்சி அனுபவ வகைகள்
6. மையப்பொருள் வகைகள்

இவற்றை விரித்துக் காணலாம்.

### 6.4.1.1. அடிப்படை வகைகள்

குறிப்பு

தமிழில் இலக்கிய வகைகள் பற்றிய சிந்தனை தொல்காப்பியர் காலந்தொட்டுத் தொடர்கிறது. செய்யுளியியலில் தொல்காப்பியர் குறித்த எழுவகை யாப்புக்களே பின்னர் இலக்கிய வகைகளானயின என்று கருதுவர். பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் (செய் : 75) என்பனவற்றுள்.

1. பாட்டு என்பது பாவடிவமும், பொருண்மையும் இணைந்து தனிப்பாடல்கள், காப்பியங்கள் இலக்கியங்கள் என உருவெடுப்பது என்பர்.
2. உரை என்பது பாட்டின் இடையிடையே காணப்படும் உரையாடற் குறிப்புகள் என்பர் (கதைகளையும் குறிக்கும்)
3. நூல் என்பது இலக்கண நூலைக் குறித்தது.
4. வாய்மொழி என்பது மந்திரம் அற இலக்கியம் முதலிய ‘சொன்னது பலிக்கும்’ வல்லமை உடையவற்றைக் குறித்தது.
5. பிசி என்பது விடுகதை.
6. அங்கதம் என்பது குறிப்பு மொழி.

இவற்றை அடிப்படை இலக்கிய வகைகள் எனலாம்.

### 6.4.1.2. உத்தி வகைகள்

தொல்காப்பியர் பிறிதோரிடத்தில் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, புலன், இழைபு, இயைபு எனும் எண்வகை இலக்கியங்களைக் குறிப்பிடுகிறார். ‘வனப்பு’ எனச் சுட்டப்பெறும் இவற்றை உத்தி அடிப்படையில் அமைந்த இலக்கிய வகைகள் எனலாம்.

இவை வருமாறு.

| | | |
|---|---|---|
| அம்மை | : | அறநூல் வகை |
| அழகு | : | தொகைப் பாடல்கள், அக இலக்கியவகை |
| தொன்மை | : | இதிகாச வகை |
| தோல் | : | மகா காவியம் |
| விருந்து | : | பிரபந்த வகைகள் |
| இயைபு | : | காப்பு |
| புலன் | : | கூத்திலக்கியம் |
| இழைபு | : | இசை இலக்கியம் |

### 6.4.1.3. வடிவ வகைகள்

பொருள் அடிப்படையிலும் உத்தி அடிப்படையிலும் அமைந்த இலக்கிய வகைகள் போன்று வடிவ அடிப்படையிலான பாகுபாட்டையும்

தொல்காப்பியர் குறித்துள்ளார். ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலிப்பா, பரிப்பாடல் என்ற பாவினங்கள் குறிப்பிட்ட சில பாடுபொருட்களுக்குரிய வடிவங்கள் என்று சொல்வர்.

(எ.கா) கலிப்பா : அறம், பொருள், இன்பம் பாட ஏற்றது.

இத்தொல்காப்பியர் கூறிய எழுவகை யாப்புக்களையும் அடிவரையரை அடிப்படையில்

**(i) அடிவரையறை உள்ளன.**

(பாட்டு : ஆசிரியம் (3-1000) வெண்பா (2-12) பரிப்பாடல் 25-400)

**(ii) அடிவரையறை இல்லாதன**

(உரை, நூல், அங்கதம், முதுசொல், பிசி, வாய்மொழி எனும் ஆறும்) என இருவகையாகவும் கொள்ளலாம்.

### 6.4.1.4 மைய வகைகள்

இலக்கணங்களில் குறிப்பிட்டுள்ளது போல அறிஞர்களும் இலக்கியத் திறனாய்வாளர்களும் இலக்கிய வகைப் பகுப்பில் கவனம் செலுத்தி வருகின்றனர். பொதுவாக, இலக்கியத்தை காப்பியம், தன்னுணர்ச்சிப்பா, நாடகம், (Epic, lyric and Drama) என்ற மூன்று மைய வகைகளாகப் பகுத்துக் காண்பர். இவற்றிலிருந்து பல இலக்கிய வகைகள் கிளைக்கின்றன என்பர். இம்மூன்று மைய வகைகளும் ஒன்றுடன் ஒன்று இணைந்து ஒன்பது வகைகளாகப் பரிணாமம் பெறுகின்றன என்று ஜெரார்டு (Albert Gverard) எனும் ஒப்பிலக்கிய அறிஞர் கருதுகிறார். அவரது வகைப்பாடு வருமாறு.

| | | |
|---|---|---|
| (1) | காப்பியம் | (i)தன்னுணர்ச்சிக் காப்பியம் |
| | | (ii) நாடகக் காப்பியம் |
| | | (iii) தூய காப்பியம் |
| (2) | தன்னுணர்ச்சிப்பா | (i)காப்பியத் தன்னுணர்ச்சிப்பா |
| | | (ii)நாடகத் தன்னுணர்ச்சிப்பா |
| | | (iii) தூய தன்னுணர்ச்சிப்பா |
| (3) | நாடகம் | (i) காப்பிய நாடகம் |
| | | (ii) தன்னுணர்ச்சி நாடகம் |
| | | (iii) (தூய) நாடகம் |

கிரேக்க இலத்தீன் இலக்கிய வகைகளை ஒப்பிட்டுத் திறனாய்வு செய்துள்ள ஹிக்கின்பாதம் (John Higginbotham) என்பார்

இலக்கியங்களைப் பாடுபொருள் அடிப்படையில் பின்வருமாறு வகைப்படுத்தி உள்ளார்.



குறிப்பு

(i) தத்துவ வகை (philosophy)
(ii) தன்னுணர்ச்சிப் பாடல் வகை (Lyric poetry)
(iii) கையறுநிலைப் பாடல் வகை (Elegiac poetry)
(iv) முல்லைப்பாடல் வகை (pastoral poetry)
(v) அறநிலைப்பாடல் வகை (Diadactic poetry)
(vi) காப்பியப்பாடல் வகை (Epic poetry)
(vii) இன்பியல் இலக்கியவகை (Comedy)
(viii) அங்கத இலக்கியவகை (Satire)
(ix) துன்பியல் இலக்கியவகை (Tragedy)
(x) வரலாற்று இலக்கிய வகை (History)
(xi) மன்றப் பேச்சுரை வகை (Oratory)

ஆகியனவாகும்.

### 6.4.1.5. உணர்ச்சியனுபவ வகைகள்

படைப்போர், படிப்போர் என்போர்தம் உணர்ச்சியனுபவத்தின் அடிப்படையிலும், இலக்கியத்தை வகைப்படுத்த இயலும் என்று டாக்டர் மு.வ. குறிப்பிட்டுள்ளார். அவர்தம் வகைபாடு வருமாறு.

1) எழுவகை யாப்பு -
   → தன்னுணர்ச்சிப் பாடல்கள் (இயற்கை, வாழ்க்கையை பாடியவை)
   → இறையுணர்ச்சிப் பாடல்கள் (பக்திப்பாடல்கள்)

2) பிறர் அனுபவத்தைப் → ஒன்றிய பாட்டுக்கள் பற்றின்றி உணர்த்தியவை (காப்பிங்கள், நாடகம்) (Impersonal / Objective)

3) இரண்டும் கலந்தவை (Dramatic poetry) -
   → நாடகத்தன்னுணர்ச்சி (Dramatic Lyric)
   → நாடகக் கதைப்பாட்டு (Dramatic Story)
   → நாடகத் தனிமொழிப் பாட்டு (Dramatic Monologue) (சங்க அகப்பாடல்கள் (எகா)

## 6.5. மையப்பொருள் வகைகள்



குறிப்பு

சபாபதி நாவலர் தாம் எழுதிய 'திராவிடப் பிரகாசிகை எனும் நூலில் அவ்வக்காலத்தில் விளங்கிய மையப்பாடு பொருட்களின் அடிப்படையில் இலக்கியத்தை வகைப்படுத்துகிறார். அவர்தம் வகைபாடு வருமாறு:

1) திருமறை இலக்கியம்
2) சங்க இலக்கியம்
3) காப்பிய இலக்கியம்
4) புராண இலக்கியம்
5) இதிகாச இலக்கியம்
6) பல்வகைப் பிரபந்த இலக்கியம்
7) பல்திற வகைபாடு

பாட்டியல் நூல்களிலும், ஆய்வு நூல்களிலும், ஓலைச் சுவடிகளிலும் கையெழுத்துப் பிரதிகளிலும் இலக்கணம் கூறப்பட்டுள்ள சுமார் 377 வகைகளைப் பட்டியலிட்டுத் தந்துள்ள புலவர் இரா. இளங்குமரன் இவற்றைப் பின்வரும் அடிப்படைகளில் பிரித்துக் காண்கிறார்.

1) அரசு இயல் ⟶ சின்னப்பூ, தசாங்கம், பவனிக்காதல் போன்றவை
2) இறைஇயல் ⟶ விண்ணப்பம்,திருப்பல்லாண்டு, உற்சவமாலை
3) யாப்பியல் ⟶ குறுந்தொகை, எழுகூற்றிருக்கை, பழமொழி
4) பொருளியல் ⟶ உலா, மடல், அகப்பொருட்கோவை
5) வாழ்வியல் ⟶ பிள்ளைத்தமிழ், குடிமகன், துனிவிசித்திரம்.
6) தொழிலியல் ⟶ வள்ளைப்பாட்டு, பள்ளு, குறம்
7) இசையியல் ⟶ தாலாட்டு, புயவகுப்பு, பல்சந்த மாலை
8) ஆட்டவியல் ⟶ பந்தடி, ஊசல், அம்மானை
9) மெய்ப்பாட்டியல் ⟶ புலம்பல், கோபப்பிரசாதம், திருமறம்
10)மெய்யியல் ⟶ ஆற்றுப்படை, செவியறிவுறூஉ

இலக்கிய வகைகளை அறியவும் ஆராயவும் அணுகுவோரின் ஆர்வம் பெருகுவதால் இலக்கிய வகைப் பகுப்பு விரிந்து செல்கிறது. எடுத்துக்காட்டாக அறிவியல் நோக்கில் இலக்கிய வளர்ச்சி வகையானது (i) தோற்றம் (ii) மலர்ச்சி (iii) தொடர்ச்சி (iv) தளர்ச்சி என வகைப்படுத்தப்படுகிறது. இலக்கிய வகை வளர்ச்சி ஆராய்ச்சியாளர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு எண்ணத்தை உருவாக்கும் வகையில் அமைந்துள்ளது.

## 6.5. இணை நிலை

ஓப்பிலக்கிய ஆய்வுத்துறைகளில் இரண்டு பெரும் பிரிவுகள் உள்ளன அவை 1. தாக்க ஆய்வு (Influence Study) 2. இணைநிலை ஆய்வு (Parllel Study) என்பவாகும். இவ்விரண்டில் 'இணை நிலை' என்றால் என்ன என்பதை முதலில் காணலாம்.

குறிப்பு

### 6.5.1. இணை நிலைக் கோட்பாடு

ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத, வெவ்வேறு கால கட்டங்களில் தோன்றிய இலக்கியப் படைப்புகளுக்கிடையே காணலாகும் பொது ஒப்புமைகளைக் கண்டறிதல் பொதுவான இணை நிலைகளைக் காணும் ஒப்பியல் ஆய்வாகும். தமிழிலும் ஆங்கிலத்திலும் இம்முறையில் ஆயிரக்கணக்கான ஆய்வுக் கட்டுரைகளும், நூற்றுக்கணக்கான ஆய்வு நூல்களும் வெளிவந்திருக்கின்றன. தனியான ஒரு படைப்பு அல்லது படைப்பாளியைத் திறனாய்வுப் பார்வையில் அணுகுவதைப் போன்றே, ஒப்பீட்டு – அணுகுமுறையில் இவ்வகை இணைநிலை ஆய்வுகள் அமைந்துள்ளன. கா. செல்லப்பனின் 'இளங்கோவடிகள், ஷேக்ஸ்பியர் - துன்பியல் ஆசிரியர்களாக' என்னும் ஆய்வு இவ்வகைக்கு முன்மாதிரியாகும், ஜீவாநாகரத்தினத்தின் 'சோமர்செட்மாம் டாக்டர் மு.வ. நாவல்கள் - ஒப்பாய்வு' என்ற ஆய்வும் இவ்வகையில் குறிப்பிடத்தக்க ஆய்வாகும். நா.நாகலிங்கத்தின் 'இப்சன். சோ நாடகங்கள் - ஒப்பாய்வு' என்ற ஆய்வும் இவ்வகையில் அடங்கும்.

### 6.5.2. இணைநிலையும் பிறதுறைகளும்

இணைநிலைக் கோட்பாட்டு ஆய்வில் இலக்கிய படைப்புகளைக் கவின்கலைகளுடன் ஒப்பிடுவது முக்கியமான பகுதியாகும். இலக்கியமும் சிற்பமும், இலக்கியமும் ஓவியமும் என்று இது அமையும். இலக்கியப் படைப்பினை அதன் கட்டமைப்பை ஒரு சிற்பத்தின் கட்டமைப்புடன் ஒப்பிட்டு உணர்தல், ஓவியத்தின் இயல்புகளைக் கொண்டு இலக்கியத்தை உணர்தல். முதலியன இவ்வகை அணுகுமுறைகளின் நோக்கங்களாகும். ம.திருமலையும், ச.சீனிவாசனும் இணைந்து எழுதியுள்ள 'ஒப்பிலக்கியக் கொள்கைகள்' என்ற நூலிலும், இரா. காஞ்சனாவின் 'இலக்கியமும் நுண்கலைகளும்' என்ற கட்டுரையிலும் இது தொடர்பான சிந்தனைகள் காணப்படுகின்றன.

இணைநிலை (parellel) என்பது இருமொழி இலக்கியங்களுக்கிடையே தாக்கம் இல்லாத நிலையிலும் காணப்படும் ஒப்புமைகள் ஆகும். இதனை சமன்நிலை, ஒருபடித்தான நிலை என்று எஸ்.எஸ். பிராவர் குறிப்பிடுவார். இணைகோடுகள் சந்திக்காத நிலையையே இணைநிலை என்னும் தொடர் குறிப்பிடுகின்றது. இருமொழி இலக்கியங்களுக்கு இடையே சந்திப்போ தொடர்போ இல்லையாயினும்

அதில் காணப்படும் ஒப்புமைக் கூறுகளுக்கான காரணங்களை ஆராய்வதே இணை நிலை ஆய்வு எனப்படும்.

இணைநிலை ஆய்வுக்களம் பரந்து விரிந்த ஒன்று அதற்கான களத்தைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.



குறிப்பு

1. ஓர் இலக்கியத்தை அதனுடன் தொடர்பில்லாத உறவில்லாத மற்றோர்
   இலக்கியத்துடன் ஒப்பிட்டு இணைநிலை காணுதல்.
2. இலக்கியத்தையும் கலைகளையும் ஒப்பிடுதல்.
3. இலக்கியத்தையும் அறிவியலையும் ஒப்பிடுதல்.
4. இலக்கியத்தையும் பிற அறிவுத்துறைகளையும் ஒப்பிடுதல்

### 6.5.2.1. இலக்கியத்தைத் தொடர்பற்ற மற்றோர் இலக்கியத்துடன் ஒப்பிடுதல்

ஒரு மொழியில் ஒரு வகையில் ஓராசிரியன் செய்த நூலில்கண்டுள்ள கருத்துக்கள் போன்றே வேறொரு மொழியில் அதே வகையில் அம்மொழியாசிரியன் இயற்றிய நூலிலும் காணப்படுவதுண்டு இப்படி எவ்வகையிலும் தெரடர்பற்ற இரண்டு வெவ்வேறு மொழிகளில் இயற்றப்பட்ட நூல்களில் இணை நிலையான கருத்துக்களைக் கண்டறிவதற்குச் சில வழிமுறைகள் உள்ளன அவை வருமாறு:

i. பொது மூலங்களைத் தேடுதல்
ii. பொது நியதிகளை ஆராய்தல்
iii. சமுதாய வாலாற்றுப் பின்னணியை ஆராய்தல்
iv. கருத்தின் உலகலாவிய தன்மையை ஆராய்தல்

இவற்றை விரிவாகக் காணலாம்.

### 6.5.2.2. பொது மூலங்களைத் தேடுதல்

இலக்கியங்களுக்கிடையே உள்ள இணைநிலைக்குச் சில பொது மூலங்கள் காரணங்களாகின்றன. இலக்கிய ஆசிரியர்கள் ஒருவரையொருவர் அறியார் என்றாலும், இரண்டிலக்கியங்களில் எந்தவொரு இலக்கியமும் மற்றொரு இலக்கியத்தில் பாதிப்பை, தாக்கத்தை ஏற்படுத்தவில்லை என்றாலும் இரு படைப்பாளர்களின் சிந்தனையும் ஒரே தளத்தில் இயங்குமானால் அங்கு இருவருக்குமான பொது மூலங்கள் காணப்படுகின்றன.

பாரதி – வால்ட் விட்மனின் கவிதைகளில் அருளியல் நிலை (Mysticism) ஆன்மிக நிலை (Spiritual) அரசியல் நிலை (Political) ஆகியவற்றில் இணை நிலைகள் காணப்படுகின்றன. பாரதிக்கு ஷெல்லியைப் பற்றி தெரியும். கீட்சைப் பற்றித் தெரியும். விட்மனைப் பற்றியும் ஓரிரு கட்டுரைகள் எழுதியுள்ளார். ஆனால் விட்மனின் கவிதைகள் தமிழகத்தில் அதிகமாகப் பிரபலமாகாத நிலை, அதேபோன்று விட்மன், பாரதியைப் பற்றி ஏதும் அறியார், ஆனால் இருவர் கவிதைகளிலும் கருத்து இணைநிலை காணப்படுவதற்கான

காரணத்தை ஆராய்ந்த பேராசிரியர் வை. சச்சிதானந்தன் இருவரும் வேதாந்திகள் என்கிறார். பாரதியைப் போன்று வால்ட் விட்மன் கவிதைகளில் வேதாந்த உணர்வுகள் பளிச்சிடுகின்றன என்கிறார். அவர் பாரதி கவிதைகளில் காணப்படுவது போன்று விடுதலை வேட்கை விட்மன் கவிதைகளிலும் காணப்படுகிறது. இதற்குக் காரணமாக இருவர் நாட்டுச் சூழல்களும் அமைகின்றன என்கிறார். சச்சிதானந்தன். பாரதியார் வேண்டியது சமூக விடுதலையும் நாட்டு விடுதலையும், விட்மன் வேண்டியது அறியாமையிலிருந்து விடுதலையும் மக்கள் இனநல விடுதலையும், இதனால் மொழி வேறுபட்டாலும் தாக்கம் இல்லையென்றாலும் உணர்வுகளும் சூழல்களும் ஒன்றுபடுவதால் இதுபோன்ற பொது மூலங்கள் இருவர் படைப்பிலும் காணப்படுகின்றன.



### 6.5.2.3. பொது நியதிகளை ஆராய்தல்

இருவேறு மொழி இலக்கியங்களுக்குள் எந்தவிதமான தொடர்பும் இல்லாத நிலையிலும் நடை அமைப்பு (Stylisation) உத்திகள் (Technique) கருத்துக்கள் (Themes). வாக்கிய அமைப்பு (Sentence Formation) போன்ற பொது நிலைகளில் ஒப்புமைகள் காணப்படும். இதற்குச் சான்றாகப் பண்டைத் தமிழ் கிரேக்கக் கவிதைகளில் காணப்படும் அடைபுணர் தொடர்களைக் (Epithets) குறிப்பிடலாம். தமிழில் உள்ள புறநானூற்றுப் பாடல்களுக்கும், கிரேக்க மொழியில் உள்ள இலியட், ஒடிசி காப்பியங்களுக்கும், இடையே உள்ள தலையாய ஒப்புமைப் பண்புகளுள் இதுவும் ஒன்று.

சான்றாக,

பயிலாது அல்கிய பல்காழ் மாலை (புற . 269)

கயந்தலை மடப்பிடி (புற . 303)

நிறங்கிளர் உருவின் பேஎய்ப்பெண்டிர் (புற . 62)

என்னும் புறநானூற்றுப் பாடல்களில் இடம் பெற்றுள்ள இடைபுணர் தொடர்களைப் போன்று கிரேக்கக் காப்பியங்களான இலியட்டிலும் ஒடிசியிலும் பல தொடர்கள் காணப்படுகின்றன.

(எ.கா)தூவெள் காப்பிதழ் நாசிகா (மலர்)

(White armed Naceala)

கலமெனக் கடுநடை அகிலஸ்

(Fleet footed Achilles)

இவ்வாறு இருவேறு இலக்கியங்களிலும் தொடரமைப்பில் இணைநிலை காணப்படுவதற்குக் காரணம் அவை வீரயுகக் காலத்தில் இயற்றப்பட்ட இலக்கியங்கள் என்பதே என்று கருதினர். ஏனெனில் அடைபுணர்தொடர்கள் வீரநிலைக்கால இலக்கியங்களின் பொதுப் பண்பாக அறியப்படுகிறது.

ஷேக்ஸ்பியர் நாடகங்கள் பெரும்பாலும் துன்பியலில் முடிவனவே, சிலப்பதிகார நாடகமும் துன்பியலில் முடிகிறது. இரண்டிற்கும் சில ஒற்றுமைகளைக் கண்ட பேராசிரியர் கா. செல்லப்பன் இருவரையும் துன்பியலாசிரியர்களாக நோக்கி ஒப்பாய்வு செய்தார். இருவர்தம் இலக்கியங்களிலும் திருப்பு முனை உத்தியாக ஏதோ ஒரு பொருள் அமைவதைக் கண்டார். ஒதெல்லோ நாடகத்தில் கைக்குட்டையும், ரோமியோ ஜுலியட் நாடகத்தில் கடிதமும் துன்பியல் முடிவுக்குக் காரணமாக இருந்தது. அதே போல சிலப்பதிகாரத்தின் துன்பியல் முடிவுக்குச் சிலம்பு காரணமாக அமைந்தது. இவை அனைத்திற்கும் விதியே அடிப்படைக் காரணமாக இருந்தது என்பதை இளங்கோவும், ஷேக்ஸ்பியரும் தம் படைப்புகளில் உணர்த்தியுள்ளனர் என்று கா. செல்லப்பன் முடிவு செய்கிறார். இவ்வாறு திருப்புமுனை உத்தி இலக்கியத்தில் இணைநிலை காண்பதற்குப் பொது நியதியாக இங்கு அமைகிறது.

### 6.5.2.4. சமுதாய வரலாற்றுப் பின்னணியை ஆராய்தல்

தொடர்பற்ற இரு இலக்கியங்களுக்கிடையே காணப்படும் இணைநிலையான ஒப்புமைகளுக்கு அவ்வந்நாடுகளில் நிலவிய சமுதாயச் சூழல்களும் ஒன்றாக அமையுமானால் அங்கு ஒரே மாதிரியான கருத்துருவம் கொண்ட இலக்கியங்கள் தோன்றுகின்றன. தமிழ்ப் புறப்பாடல்களிலும் கிரேக்கத்தின் இலியட், ஒடிசி காப்பியங்களிலும் பல ஒற்றுமைக்கூறுகள் காணப்படுகின்றன. இவ்விரு நாடுகளுக்குமிடையே இலக்கிய ரீதியான பரிமாற்றங்கள் ஏதும் இல்லை எனினும் பா வடிவத்திலும் பாடு பொருளிலும் ஒன்றை ஒன்று பிரதிபலிக்கின்றன. இதற்கான காரணங்களை Tamil Heroic Poetry என்ற நூலில் விரிவாகத் தந்துள்ள க. கைலாசபதி, இருவேறு நாடுகளிலும் நிலவிய ஒரே மாதிரியான சமூக அமைப்பும், பழக்கவழக்கங்களும், போர் முறைகளும் இணைநிலை தோன்றுவதற்குக் காரணமாயின என்கிறார் இதனை அவர் ‘‘வீரநிலைக் காலப் பண்பாடு’’ என்கிறார்’’.

### 6.5.2.5. கருத்தின் உலகளாவிய தன்மையை ஆராய்தல்

தொழிலாளர் வாழ்க்கைச் சிக்கல், நட்பு, தாய்மை, ஏழ்மைக்கு இரங்கல் போன்ற கருத்துருவங்கள் உலகளாவிய நிலையில் பொதுத்தன்மை உடையன. ஒன்றற்கொன்று தொடர்பற்ற மொழிகளில் இவை பேசப்பட்டாலும், இவற்றுள் பொதுத்தன்மைகள் சில பரவியுள்ளதை உணரலாம். பேராசிரியர் க. செல்லப்பன் ஜாதவ்பூர் ஒப்பிலக்கிய இதழில் எழுதிய The mother Image: A Comparative Study of clymestra, media and kannaki (1998) என்ற கட்டுரை இதற்கு நல்ல சான்றாகும். கிளிம்னெஸ்ட்ராவும், மீடியாவும் கிரேக்கத் துன்பியல் நாடகங்களில் இடம்பெறும் அவலத்தலைமை மாந்தர்கள் ஆவர். முன்னவள் இ.ஃபிஜீனியா என்ற தன் கணவனால் கைவிடப்படுகிறாள், பின்னவள் ஜேசன் என்ற கணவனால் கைவிடப்படுகிறாள், மூவருமே

ஆண் வர்க்கத்தால் வஞ்சிக்கப்படுகிறார்கள். இறுதியில் மூவரும் தாய்த்தெய்வ நிலைக்கு உயர்த்தப்படுகிறார்கள்.

குறிப்பு

சீன மொழியில் கன்பூசியஸ் சொன்ன அறக்கருத்துக்களுக்கும், வள்ளுவர் அறிவுறுத்தும் அறங்களுக்கும் பல இணை நிலைகள் காணப்படுகின்றன. இலக்கியங்களில் இணைநிலைகளைத் தேடும் ஆய்வு எந்த மொழியில் எந்த நாட்டில் எழுதப்பட்டாலும் உலகப் பொதுச் சிந்தனைகள் இயல்பாகவே அந்தந்த இலக்கியங்களில் படிந்துவிடும் என்ற உண்மை அறியப்படுகிறது.

## 6.6. தாக்கம்

தாக்க ஆய்வும் (Impact) இணைநிலை ஆய்வும் (parallel) ஒப்பியலக்கியத் துறையின் மூத்த ஆய்வாகவும் செல்வாக்குப் பெற்ற ஆய்வாகவும் அமைகின்றன. தொடக்கத்தில் ஒப்பிலக்கிய ஆய்வில் ஈடுபட்டோரெல்லாம் தாக்க ஆய்விலும் இணைநிலை ஆய்விலும் கவனம் செலுத்தினர். எங்கள் இலக்கியத்தின் தன்மை இது. உங்கள் இலக்கியத்தின் தன்மை எது? என்று ஆராய முற்பட்டோர், இரு இலக்கியங்களிலும் சில ஒப்புமைகளைக் கண்டபோது, இந்த ஒற்றுமை எதனால் வந்தது? என்று அறிய முனைந்தனர். ஒருமொழி இலக்கியம் மற்றொரு மொழி இலக்கியத்தின் மீது செலுத்திய தாக்கத்தினால் இந்த ஒற்றுமை ஏற்ப்பட்டிருக்கலாம் அல்லது மொழியால், காலத்தால் வேறுபட்ட இரு படைப்பாளிகளின் சிந்தனைகள் ஒரே தளத்தில் பயணித்ததால் இந்த ஒற்றுமை அவர்களை அறியாமல் அந்த இலக்கியத்தில் படிந்திருக்கலாம் என்று தம் ஆய்வின் முடிவில் அவர்கள் கண்டறிந்தனர். இருமொழி இலக்கியங்களை ஒப்பிடுவதற்குரிய அடிப்படைகள் தாக்கம் அல்லது இணைவரையால் தோன்றுவதால், இவை ஒப்பிலக்கிய ஆய்வின் மூத்த பிறவிகள் என்றழைக்கப்படுகின்றன. இலக்கியப்படைப்புகளுக்கு இடையேயான உறவுகள் பற்றிய ஆய்வில் முக்கிய இடத்தைப் பெறுவன. செல்வாக்கும், தாக்கமும், மொழித் தடைகள், நாட்டு எல்லைகள், கலாச்சார பண்பாட்டு வேற்றுமைகள் இவை போன்ற எல்லைகளையெல்லாம் தாண்டி படைப்பாளிகளிடையே காணப்படும் பரஸ்பர உறவுகள் ஏற்படக் காரணம் என்ன? யார்? எதிலிருந்து? எந்த அளவு? எதைப் பெற்றுள்ளார்? யாருடைய மாதிரியை எடுத்துக்கொண்டு, தன் தனித்தன்மையுடன் அதை மாற்றிப் படைத்துள்ளார்? என்று மூலமும் தாக்கமும் பற்றி ஆய்வு செய்வது ஒப்பிலக்கியத்தின் உயர்ப்பகுதியாகும்.

அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர்கள் இகாப் ஹெச் ஹாசன், அன்னா பாலகியான், ஹாஸ்கல் பிளாக், கிளாடியோ கில்லன் ஜோச.ஃப், டி.ஷா (Inabh,Hassan,Anna Balakian, Has kall Block, Claudio Guillen and Joseph T. Shaw) போன்றவர்களின் செல்வாக்கு, மற்றும் தாக்கம், இவை இரண்டிற்கும் உள்ள உறவு வேறுபாடுகள் என்ற பல நோக்கு நிலைகளில் இருந்து காரசாரமாக விவரித்துள்ளனர்.

## 6.6.1. செல்வாக்கும் தாக்கமும்

ஒருமொழி இலக்கியத்தில் பிறிதொரு மொழி இலக்கியத்தின் தாக்கம் திடீரென ஏற்படுவதில்லை. செல்வாக்கைச் செலுத்தும் இலக்கியம் அதை ஏற்கும் இலக்கியத்தில் தாக்கத்தை ஏற்படுத்துவதற்குச் சில படிநிலைகளைக் கடக்க வேண்டியுள்ளது. செல்வாக்கில் (Influence) தொடங்குகின்ற தாக்கம், போலச் செய்தல் (Imitation) வாயிலாகப் படிப்படியாக வளர்கிறது. இது மற்றொரு மொழிப் படைப்பாளனிடத்தில் அகவயமான எண்ணத்தின் நீள, அகல, ஆழங்களில் ஆட்சி செலுத்துமானால் அது 'தாக்கம்' எனப்படுகிறது இல்லையெனில் அது செல்வாக்கு அல்லது போலச் செய்தல் என்ற அளவோடு நின்றுவிடுகிறது.

## 6.6.2. இலக்கியத் தாக்கத்தை அறிவதற்கான வழிகள்

ஒரு மொழி இலக்கியத்தில் பிறிதொரு மொழி இலக்கியத்தின் தாக்கத்தை அறிவதற்குச் சில வழிகள் உள்ளன. அவை வருமாறு,

1) புதிய இலக்கியப் பண்புகள், கூறுகள் எங்கிருந்து வந்தன? என்று காணுதல்.
2) எந்த அளவுக்குத் தாக்கம் நிகழ்ந்துள்ளது? என்று அறிதல்
3) ஒரு இலக்கியம் மற்றொரு இலக்கியப் பண்பை உண்மையிலேயே பிரதிபலிக்கிறதா அல்லது பிரதிபலிப்பது போல் மாயத் தோற்றமளிக்கிறதா? (Image or mirage) என்று அறிவது.

ஓர் இலக்கியத்தின் மீது மற்றொரு இலக்கியத்தின் செல்வாக்கு அல்லது ஒரு படைப்பாளன் மீது மற்றொரு படைப்பாளனின் செல்வாக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ நிகழ்வதுண்டு. நேரடித் தாக்கத்திற்குப் பன்மொழியறிவு அவசியமாகிறது. பன்மொழியறிந்த இலக்கியத் திறனாய்வாளர்கள் நிரம்பிய ஐரோப்பிய நாடுகளின் நேரடித்தாக்கத்திற்கான வாய்ப்புகள் அதிகம். சான்றாக இத்தாலிய இலக்கியத்தின் செல்வாக்கு மில்டனுடைய சுவர்க்க நீக்கம் (Paradise lost) காப்பியத்தில் காணப்படுவதைக் கூறலாம். இதேபோல ஆங்கில வரலாற்று நாவலாசிரியர் வால்டேர் ஸ்காட்டின் செல்வாக்கு ஜெர்மனிய நாவலாசிரியர் விக்டர் ஹியூகோவிடம் காணப்பட்டது என்பர்.

தமிழில் நேரடிச் செல்வாக்கைக் காட்டிலும் மறைமுகச் செல்வாக்கை ஏற்படுத்திய இலக்கியங்களே அதிகம். மறைமுகச் செல்வாக்குப் பலவழிகளில் நிகழ வாய்ப்புண்டு. அவையாவன,

1. மொழிபெயர்ப்பின் வாயிலாக
2. வணிகக் கூட்டங்கள் வாயிலாக
3. கருத்துப்பரப்புநர்கள், சமயப் பிரசாரகர்கள், உலகப் பயணிகள் நாடுவிட்டு நாடு செல்வதன் வாயிலாக.

4. இலக்கிய வகையின் இடப்பெயர்வு வாயிலாக (அபைசயவழைெ)

குறிப்பு

தாக்கம் என்பது ''தன்னியல்பற்று போல்வன செய்தல்'' (unconscious imitation) என்றும், போலச் செய்தல் ''முறைப்படுத்தப்பட்ட தாக்கம்'' (directed influence) என்றும் உல்ரிச் வைன்ஸ்டின் என்ற ஜெர்மானிய ஒப்பிலக்கிய அறிஞர் குறிப்பிடுகிறார். தாக்கக் கோட்பாட்டைப் போற்றி வளர்த்தவர்கள் பிரான்சு நாட்டு ஒப்பிலக்கிய அறிஞர்களே ஆவர்.

தாக்க ஆய்வை பின்வரும் முறைகளில் நிகழ்த்தலாம்:

1) நேரடியான தாக்கத்தைக் கண்டுப்பிடிக்கலாம்.
2) இலக்கியம் ஏற்படுத்திய உந்துதல்களைக் கண்டுப்பிடிக்கலாம்.
3) தொடர்புகளினால் ஏற்பட்ட தாக்கத்தைக் காணலாம்.
4) தன்வயமாக்கல் நிலைகளைக் கண்டுபிடிக்கலாம்.

இனி இவற்றை விரிவாகக் காண்போம்:

### 6.6.2.1. நேரடியான தாக்கத்தைக் காண்பது

இது மூல மொழியில் உள்ள ஒரு நூல், ஏற்பு மொழி வாசகர்களிடையே இடையீட்டாளர்கள் இன்றி நேரடியான தாக்கத்தை எவ்வாறு ஏற்படுத்தியது என்பதைக் காண்பதாகும்.

இங்கு இடையீட்டாளர்கள் என்று குறிப்பிடப்படுவோர், மொழிபெயர்ப்பாளர்கள், திறனாய்வாளர்கள், கட்டுரையாசிரியர்கள் ஆவர். இவர்களை ஒப்பிலக்கியத் திறனாய்வாளர்கள் Intermidiaries என்றும் Middlemen என்றும் அழைக்கின்றனர். பாரதி ஷெல்லியை யாரும் அறிமுகம் செய்யவில்லை, ஷெல்லி கவிதைகளின் தமிழ் மொழிபெயர்ப்பை அவர் அறிந்ததில்லை ஷெல்லியின் மீது கொண்ட பிடிப்புக் காரணமாகத் தனக்கு ''ஷெல்லிதாசன்'' என்ற புனைப்பெயரைச் சூட்டிக் கொண்டார் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும். ''ஷெல்லியும் பாரதியும்'' என்ற நூலில் ரகுநாதன் இதை விரிவாக எழுதியுள்ளார். புனைவியல் இயக்கத்தின் தோற்றம், ஷெல்லி – பாரதி வாழ்க்கைச் சூழல். இருவருடைய சிந்தனைப் போக்கு, காலநிலை ஆகியவற்றை ஒப்பிட்டுக் காட்டி பாரதிமீது ஷெல்லியின் நேரடித்தாக்கம் ஏற்பட்ட நிலைகளை ஆராய்ந்துள்ளார்.

### 6.6.2.2. மூல இலக்கியம் ஏற்படுத்திய உந்துதல்களைக் காணுதல்

மூல இலக்கியம் முழுவதுமாக ஏற்பு இலக்கியத்தில் தாக்கம் ஏற்படுத்தாமல் ஏற்பு. இலக்கியத்தின் மரபுக்கும் பண்பாட்டுக்கும் ஏற்ற வகையில் தேவையான அளவுக்கு மட்டும் ஏற்படும் தாக்கத்தைக் காண்பது இவ்வகையில் அடங்கும். இதற்குச் சான்றாக தமிழ்க்கவிதையில் ஜப்பானிய ஜென் கவிதைகள் ஏற்படுத்திய தாக்கத்தை கூறலாம்.

ஜப்பானிய ஜென் கவிதைகள் தம்மளவில் சமயம் சார்ந்த, தத்துவம் சார்ந்த குறியீட்டுக் கவிதைகளாக உள்ளன. ஆனால் அதே ஜென் கவிதைகளாக உள்ளன. ஆனால் அதே ஜென் கவிதைகள் தமிழகப் புதுக்கவிதையாளர்களிடம் தாக்கத்தை ஏற்படுத்தியபோது அதன் வீரியம் குறைந்தது. தமிழகச் சூழலுக்கு ஏற்ப அரசியல், சமூகம், காதல் என்றிவ்வாறு பல்திறப் பாடுபொருள்களை ஏற்றதோடு வடிவ அமைப்பிலும் நலிவுற்றது. ஜென் கவிதைகள் தமிழ்ப் புதுக்கவிதையாளர்களிடம் ஏற்படுத்திய உணர்ச்சித் தூண்டுதல்கள் அல்லது உந்துதல்களால் உணர்த்தும் உத்தியை மட்டும் அடிப்படையாகக் கொண்டு தமிழ் ஜென் கவிதைகள் எழுதப்பட்டன. ஐரோப்பிய நாவல்கள் ஏற்படுத்திய தாக்கத்தால் தமிழில் எழுதப்படும் அண்மைக்கால நவீன சோதனைமுறை நாவல்களையும் இதற்குச் சான்று காட்டலாம்.

### 6.6.2.3. தொடர்புகளில் ஏற்பட்ட தாக்கத்தைக் காணுதல்

ஓர் இனமக்கள் மற்றொரு நாட்டில் குடியேறி வாழ்வதன் காரணமாகவும், வணிகம், பணி, கல்வி காரணமாக மற்றொரு நாட்டில் குடியேறி வாழ்வதன் காரணமாகவும் ஏற்பட்ட தாக்கங்களை அடையாளம் காணுதல் இதில் அடங்கும். ஓர் இனமக்கள் மற்றோர் இனமக்களுடன் கொள்ளும் தொடர்பு, பழமொழி பேசும் மக்கள் அருகருகே வாழ்கின்ற ஐரோப்பிய நாடுகளில் அதிகம் காணப்படுகிறது. எனவே ஐரோப்பிய இலக்கியங்களில் இத்தகுத் தாக்கமே தலைமை வகிக்கிறது. 1920 களில் அமெரிக்கர்கள் பிரான்சில் பெருமளவில் குடியேறினர். இது பிரெஞ்சு இலக்கியத்தில் அமெரிக்க அணுகு முறையின் தாக்கத்தை ஏற்படுத்த பெருமளவில் உதவியது என்று எஸ்.எஸ். பிராவர் கூறுகிறார். அமெரிக்க விருந்தாளிகள் அணுகுமுறையில் பிரெஞ்சுக்காரர்கள் தங்களது இலக்கியமரபின் (Literacy Heritage) பெரும்பகுதியைப் புரிந்துக் கொண்டார்கள் என்கிறார் அவர் அமெரிக்காவில் வாழுகின்ற கறுப்பர் இனமக்களின் சொந்த இலக்கியம் ‘‘கறுப்பர் இலக்கியம்’’ (Black Literature) என்று அழைக்கப்படுகிறது. ஆனால் அவர்கள் தங்களது சொந்த கலாச்சாரத்தோடு அமெரிக்கக் கலாச்சாரத்தின் சில கூறுகளையும் ஏற்க வேண்டிய சூழ்நிலையில் உள்ளனர். இப்படி அமெரிக்கக் கலாச்சாரம் அவர்கள் வாழ்வில் ஏற்படுத்திய தாக்கத்தின் விளைவாக ‘‘ஹார்லம் இலக்கியம்’’ (Harlem Literature) என்ற புதுவகை இலக்கிய மரபு அவர்களிடம் தோன்றியது. அவர்கள் தொகுதியாக வாழுமிடங்கள் அவர்கள் தோற்றுவித்த இலக்கியத்தின் பெயராலேயே ‘‘ஹார்லம்’’ என்று அழைக்கப்படுகின்றன. பிற நாடுகளுக்குச் சென்று குடியேறி வாழ்பவர்களுள் தாங்களாக விரும்பிக் குடியேறுபவர்களும் உண்டு. இவை தவிர கொடுங்கோலாட்சி அல்லது அரசின் கொள்கைகளுக்கு எதிராகச் செயல்பட்டதால் மரணத்தின் பிடியிலிருந்து தப்பிக்கவும் தஞ்சம் புகுவதுண்டு. விரும்பிக் குடியேறுபவர்கள் செய்யும் இலக்கிய ‘‘புலம்பெயர் இலக்கியம்’’ எனப்படுகிறது. நாடு கடத்தப்படுபவர்களும் தஞ்சம் புகுபவர்களும் செய்யும் இலக்கியம்

"தஞ்சமடைந்தோர் இலக்கியம் (Literature of Excile) என்று அழைக்கப்படுகிறது. சோவியத் ரஷ்யாவின் கொள்கைகளுக்கு முரணாகக் கருத்துகளை வெளியிட்டதற்காக நாடு கடத்தப்பட்ட நோபல் பரிசு பெற்ற நாவலாசிரியர் அலெக்ஸாண்டர் சோலினிட்சின் அமெரிக்காவில் தஞ்சம் புகுந்ததை இதற்கு எடுத்துக்காட்டலாம்.



புலம்பெயர் இலக்கியத்தில் அந்தந்த நாட்டு, இனப்பண்பாடுகளின் தாக்கம் காணப்படுவதற்கு ஈழத்துத் தமிழ் இலக்கியப் படைப்பாளர்களையும் கனடா வாழ் இந்தியர்களின் படைப்புக்களையும் சான்று காட்டலாம்.

### 6.6.2.4. தன்வயமாக்கல் நிலைகளைக் காணுதல்

மூல இலக்கியத்தின் பண்புகளை, ஏற்பு நூலாசிரியர் தன்வயமாக்கிக்கொண்டு அந்தந்த தாக்கத்தின் விளைவாக ஏற்பு நூலில் 'தாக்கம்' என்று தெரியாத அளவிற்கு மூல இலக்கியத்தின் பண்புகளைப் பதியவைத்தல் இதன்பாற்படும் ஏற்பு நூலில் தன்வயமாக்கல் நிலைகளைக் காணமுறப்படும் ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் அதைக் கவனமாகக் கருத்தூன்றிப் பார்க்க வேண்டும் என்று ஒப்பிலக்கியத் திறனாளிகள் எச்சரிக்கை செய்கிறார்கள்.

மொழிபெயர்ப்புகள் மூலநூலையே விழுங்கிப் புதுநூலாகப் பிறப்பெடுப்பது போல, தன்வயமாக்கலின் விளைவாக நிகழும் தாக்கத்தில் கருத்துத் திருட்டுகள் (Creative Treason) நடைபெற வாய்ப்புண்டு என்கின்றனர். இதையே மறு தலையான செல்வாக்கு (Negative Influence) என்கிறார் எஸ்கார்பிட் (Escarpit) என்ற பிரெஞ்சு இலக்கியச் சமூகவியல் அறிஞர்.

'ஒப்பிலக்கியக் கொள்கைகள் அறிமுகம்' என்னும் பகுதியில் செல்வாக்கு கொள்கை அல்லது தாக்கக் கோட்பாடு என்பதே முக்கியமானதும் விரிவானதும் மையமானதுமான கொள்கையாகும்.

## 6.7. அடிக்கருத்தியல் - இலக்கிய வகை - இணை நிலை – தாக்கம் - விளக்கம்

அடிக்கருத்து என்பதன் விளக்கம், இலக்கியங்களில் காணலாகும் உலகளாவிய வகைகள், இணை நிலை என்பதன் விளக்கம் இலக்கியத் தாக்கம் கோட்பாடுகள் பற்றிய செய்திகள் ஆகியவற்றைக் கண்டோம்.

### வினா-விடை பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

1) **Themotology - என்ற சொல்லின் மொழிப்பெயர்ப்பு தமிழில் எங்ஙனம் வழங்கப்படுகிறது?**

அடிக்கருத்தியல்

2) **பல்வேறு நாடுகளில் காணப்படும் கதைகளில் அடிக்கருத்துக்கள் சூழ்நிலைக்கேற்ப மாற்று வடிவம் பெற்றததற்கு எ.கா.தருக.**

முயல் - ஆமை, காகம் - நரி, நரி – திராட்சைப்பழம் போன்ற கதைகள்.

3) **இலக்கிய வகைப்பாடு முறைகளை ஆறு வகைகளாகப் பிரித்து கி.இராசா கூறுவதை எழுதுக.**

1) அடிப்படை வகைகள் 2) உத்தி வகைகள் 4 மைய வகைகள் 3) வடிவ வகைகள் 5) உணர்ச்சி அனுபவ வகைகள் 6) மையப் பொருள் வகைகள்.

4) **ஒப்பிலக்கிய ஆய்வுத்துறையில் உள்ள இருபெரும் பிரிவுகள் யாவை?**

(ை) தாக்க ஆய்வு (Influence Study)

(ை) இணைநிலை ஆய்வு (Parllel Study)

5) **புலம்பெயர் இலக்கியம் என்பதற்கு விளக்கம் தருக.**

ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்கு விரும்பிக் குடியேறுபவர்கள் செய்யும் இலக்கியம் புலம்பெயர் இலக்கியம் எனப்படுகிறது.

## II. ஐந்து மதிப்பெண் வினா-விடை

6) **அடிக்கருத்தியல் ஆய்வு பற்றி விளக்குக.**
(6.3, 6.3.1 ஆகிய எண்களில் குறிப்பிடப்பெற்ற எழுதுக)

7) **இலக்கிய வகை குறித்து விவரி.**
(6.4, 6.4.1, 6.4.1.1 – 6.4.1.6 வரை உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக)

8) **இணை நிலை பற்றி விளக்கம் தருக.**
(6.5, 6.5.1, 6.5.2, 6.5.2.1 – 6.5.2.5 வரை உள்ள செய்திகளை எழுதுக)

9) **'தாக்கம்' – பற்றி ஒப்பிலக்கியத்துறை தரும் செய்திகளை விவரி.**
(6.6, 6.6.1, 6.6.2, 6.6.2.1 – 6.6.2.4 வரை உள்ள செய்திகளை சுருக்கி எழுதுக)

## III. பத்து மதிப்பெண் வினா – விடை

10) **ஒப்பிலக்கியத்தில் அடிக்கருத்தியல், இலக்கிய வகை, இணைநிலை மற்றும் தாக்கம் குறித்த செய்திகள் பெறுமிடத்தை ஆராய்ந்தெழுதுக.**
(கூறு:6-இன் கீழ் உள்ள செய்திகளைத் தொகுத்து சுருக்கி எழுதுக.)

# கூறு 7: ஒப்பிலக்கிய ஆய்வுப்பரப்பு

## 7.1. முன்னுரை

குறிப்பு

ஒப்பிலக்கிய ஆய்வு எல்லையற்ற பரப்புடையது. (the nearly infinite field of comparative literature) என்று பெர்டினாண்டு புரூனெடீர் என்ற ஒப்பீட்டறிஞர் ஒரு முறை குறிப்பிட்டார். இதன்கண் எத்தனையோ துறைகள் உட்பிரிவுகள் உள்ளன. பொதுமைக் கூறுகள் ஒவ்வொன்றையும் உலகப்பொதுநோக்கில் ஆய்வதனால் அவை கணக்கின்றி விரிந்து செல்கின்றன. ஒப்பீட்டுத் துறையில் ஈடுபட ஈடுபடப் பிறமொழிகள் ஒன்றிரண்டில் எழுதப் படிக்கத் தெரியவேண்டும் என்ற விழைவு ஏற்படும். அவற்றிற்கேற்ப திறமைகளை வளர்த்துக்கொள்ளும் மனப்பான்மை வாய்க்கும் என்கிறார் தமிழண்ணல்.

## 7.2. நோக்கம்

ஒப்பிலக்கிய ஆய்வுப் பரப்பினை உலகமொழிகளோடு யாப்பு வடிவம், இலக்கிய வரலாறு, தாக்கம், ஏற்றல் கொள்கை, உருக்காட்சி, படிவம், புராணக்கதை, அடிக்கருத்து, சமுதாய நோக்கு, நால்வகை இலக்கிய பார்வை, இந்திய அளவிலும் தமிழக அளவிலும் ஒப்பிலக்கியம் பெறுமிடம், தமிழறிஞர்களின் பணிகள், தமிழில் ஒப்பீடுகள், வழிகாட்டும் நூல்கள், பல்கலைக்கழகங்களின் பங்களிப்பு, மற்றும் உலகத் தமிழ் மாநாடுகள் செய்தளித்தவை ஆகியவற்றோடு நில்லாது பரந்து விரிந்து கிடக்கும் ஆய்வுப்பரப்பை புலப்படுத்துவது இக்கூறின் நோக்கம்.

## 7.3. யாப்பு வடிவம்

தமிழில் யாப்பு வடிவம் பற்றிய ஆய்வு, அறிவியல் முறைப்படி எழுதப்பட வேண்டும். ‘வாய்மொழி இலக்கிய யாப்பு வடிவம்’ பற்றியும், ஏனைய திராவிட மொழிகளில் காணும் யாப்பு வடிவங்கள் பற்றியும் ஆராய்ந்து அவற்றைத் தமிழ் இலக்கிய வடிவங்களுடன் ஒப்பிட வேண்டும்.

தொல்காப்பியர் சுட்டுவன, பிற்கால யாப்பிலக்கண நூலார் கூறுவன. உரையாசிரியர்கள் விளக்குவன ஒரு பகுதியாகும். இலக்கிய நூல்களில் காணப்படும் பல வடிவங்களுக்கு இலக்கண நூல்கள் விதிவகுக்கவில்லை, அவற்றையும் நாம் கண்டறிதல் வேண்டும். வடமொழி யாப்புகளைப் பற்றி அறிந்து ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய வேண்டும். கிரேக்கம், இலத்தீன், பிற ஐரோப்பிய மொழிகள், ஆங்கிலத்திற் காணப்படும் யாப்புகளைப் பற்றிய அறிவும் இவ்ஆய்வுக்கு இன்றியமையாதது. ‘தமிழ் யாப்பு வடிவ வளர்ச்சி வரலாறு’ - இலக்கிய வரலாறு போல விரிவாக எழுதப்பட்டால், அது யாப்பாராய்ச்சிக்குப் பெரிதும் உதவும், தமிழ் யாப்பு வடிவங்கள், உள்ளுறுப்புக்கள்

அனைத்தையும் தொகுத்து விளக்கி, கலைக் களஞ்சியமாகத் தர வேண்டும். ஒப்பிலக்கியப் பணிக்கு அது மிகவும் உதவும்.

## 7.4. இலக்கிய வரலாறு

ஒப்பிலக்கிய நோக்கில் இலக்கிய வரலாறு எழுதப்பட்ட வேண்டும். புதுமையான முறையில் இலக்கியத்தின் உள்ளார்ந்த வளர்ச்சியைச் சுட்டி, அதன் பரிணாமம் முழுவதும் விளங்கும்படி எழுத வேண்டும். திறனாய்வு வேறு, வரலாறு வேறு என்றில்லாமல் இவற்றிடையேயுள்ள இயைபை உணர்ந்து எழுதினால், அதுவே உண்மையான வரலாறாக அமையும்.

இலக்கியத்தைக் கலையாகக் கருதி அதன் வரலாற்றை எழுதும்போது எவ்வெவ்வாறு எழுதவேண்டும் என்பதைப் பலவாறு சிந்தித்துள்ளனர். இலக்கியத்திற்கு வரலாறு இல்லை என்னும் கொள்கையாளரும் உள்ளனர். ஏனெனில் இலக்கியத்திற்குக் கடந்த காலம் என்று எதுவுமில்லை, நிகழ்காலமே உண்டு. மேலும் நுண்பொருள்களாகிய இலக்கியப் படைப்புத்தொகுதியின் வளர்ச்சியைக் கணிப்பது கடினமானது. இப்படைப்புக்கள் பல அமைப்புக்களால் உருவாவன. கலைகள் தம்முள் இணைந்தே வளர்வதால், இவ் அமைப்புக்களையெல்லாம் கூட்டியுணர்வதே முக்கியமானது, படைப்புகளை பல அமைப்புக்கள் (Systems) கூடிய ஒரு முழுத்தொகுதியாகக் கொண்டு, புதியவை இணையும்போது அவற்றின் இடைத்தொடர்புகள் மாறி மாறி அமைவதை நினைவிற் கொண்டு, வளர்ச்சியை முறையாகக் கணிக்க வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் இலக்கியம் அடைந்த வளர்ச்சியையும், அதன் பிறகு ஐம்பதாண்டு கழித்து நேர்ந்த வளர்ச்சியையும் ஒப்பிட்டால் மாறுதல் ஏற்பட்டிருப்பது நன்கு புலனாகும். ஆனால் இத்தகைய மாறுதல்களை வைத்து, பரிணாம முறைப்படியான வளர்ச்சியை அறிய முடியாது. வளர்ச்சி வேறு, மாற்றம் வேறு, மாற்றம் முறையாக நிகழ்வதன்று. வளர்ச்சியோ ஒழுங்கானது. முன்னரே அறியக்கூடியது, உயர்ந்தது. உயிரியலில் ஒரு விலங்கு, அல்லது ஒரு செடியானது வளர்ச்சி பெறுவது போல இதை நோக்க வேண்டும். நுட்பமாய் ஆராய்வார்க்கு இருவகைப் பரிணாமங்கள் புலனாகும். ஒன்று முட்டையிலிருந்து குஞ்சு வெளிப்படுவது, மற்றது மீனின் மூளைப்படிப்படியே மாறி மனித மூளையாவது, பல்வேறு காலப்பகுதிகளில் இம்மாற்றம் நிகழும். இவ்இருத்திறத்திலும் நிகழும் இலக்கிய வளர்ச்சிகளைக் கணித்தறிய வேண்டும். இவ்வாறு நாம் பல்வேறு அறிவியல் முறைகளுடன் இலக்கிய வரலாற்றை எழுத ஒப்பீட்டுத்துறை வற்புறுத்துகிறது.

## 7.5. தாக்கக் கோட்பாடு

செல்வாக்குக்கொள்கை அல்லது தாக்கக் கோட்பாடு (Influence Theory) என்பதே விரிவானதாகும். இதனை எதிர்த்துத் தடைகள் பல

குறிப்பு

எழுப்பப்பட்டன. எனினும் பல புதிய கோணங்களில் இது வளர்ச்சி பெற்றுள்ளது. இலக்கியம் மரபுத் தொடர்பில் வருவது. அதற்கு முன்னைய தொடர்பும் உண்டு. பின்னைய உறவுமுண்டு. எனவே அதனைத் தனியே வைத்துப் பார்க்க வியலாது. முன்னைய நூல்களின் தாக்கத்தை அதில் வெளிப்படையாகக் காணமுடியாது. உண்மையிலேயே அதனைத் தாக்கம் என்று சொல்லலாமா என்பதே கேள்விக்குறியாக நிற்கிறது. மரபும் தனித்திறனும் என்ற கட்டுரையில் டி.எஸ்.எலியட் கூறும் கருத்துக்கள் இங்குச் சிந்திக்கத்தக்கன. நாம் எதனையும் பார்த்தெழுதுவதில்லை. நாம் மாறி இருக்கிறோம். நம் படைப்பு மாறிய மனிதனின் எழுத்தாகும். நாம் கடன் வாங்கவில்லை. நாம் விரைவுக்காளாகி, ஒரு மரபுத் தொடர்ச்சியைத் தாங்குபவர்களாக இருக்கிறோம். எக் கவிஞனும் அல்லது கலைஞனும் தானே தனித்து நிற்பதென்பதில்லை. அவனைத் தனியே நீங்கள் மதிப்பிட முடியாது. ஒப்பாய்வுக்காக அவனை நீங்கள் முன்னையவர்களுடன் வைத்தே பார்க்க வேண்டும்.

உலக இலக்கிய நோக்கு வாய்க்க வேண்டுமேல், இலக்கியஙகள் ஒன்றின் மீது ஒன்று தத்தமது செல்வாக்கைப் பரப்பி, உலகமெங்கும் கருத்துக்கள் எங்ஙனம் பரவின என்பது ஆராயப்பட வேண்டும். அவ்வகையில் இவ்ஆய்வு இன்றியாமையாததே என ஒப்பிட்டறிஞர்கள் ஒப்புகின்றனர். வெல்லக்கு அவர்கள் இவ்வாய்வு பற்றித் தம் மறுப்பைத் தெரிவிக்கும் பொழுது, பிற்காலக் கலை நூலொன்று முன்னையதொன்று இல்லாமல் தோன்றமுடியாது என்பதுண்மையே. ஆயினும் அதற்காகப் பின்னையது தோன்றுவதற்கு முன்னையதே காரணமாயிற்று என்று கூற முடியாது என்பார். இதனை மறுத்து விளக்குமிடத்தப் பிராவர் (S.S.Prawer) அவர்கள் ‘முன்னையதை அடிப்படையாக வைத்தே, பின்னையது கட்டப்படுவது என்பதால், தாக்கம் பற்றிய ஆய்வும் பயனுடையதுதானே என விவாதிக்கின்றனர். ஒப்புமைப் பகுதிகளையும் தாக்கமுடையவற்றையும் வேறு வேறாகப் பிரித்து அறியவேண்டும். விருப்பு வெறுப்பின்றி ஆராய வேண்டும். விழிப்புணர்வோடு மேற்கொண்டாலன்றித் தவறுகள் நேர்ந்துவிடும். இவ்ஆய்வின் பல நிலைகளை பிராவர் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அவை கீழே தரப்பட்டுள்ளன.

(1) ஓர் இலக்கியத்திலிருந்து பிறிதொன்று நேரே கடன் வாங்கிய பகுதிகளை – சொல், தொடர், கருத்து அனையன – ஒருவர் காணுதல் கூடும்.

(2) தூண்டுதல்களால் ஒருவர் புதியன படைத்திருந்தால், அதற்குக் காரணமான முன்னையவற்றை ஒருவர் அறிய முற்படலாம். இதில் ஒன்றைப் படித்ததால் எழுந்த மனவுணர்வுத் தூண்டுதலால், முன்னையதன் சாயலுடன் ஒரு நூல் படைக்கப்படுதல் கூடுமே தவிர வேறு தாக்கமின்று.

(3) முன்னைய நூல்களைப் படித்து அகத்தெழுச்சியால் அதன் சாயல் மட்டுமன்றி, அமைப்பும் சிறப்பும் அதனிலும் சிறக்கப் படைத்து

விடுவதுமுண்டு.. இதுவெறும் தூண்டுதல் மட்டுமன்று வழிகாட்டியாகவும் அமையும்.

(4) ஒரு நாட்டில் தங்கி வாழும் பிற மொழியினர் சென்றேறிய மொழியில் எழுதும்பொழுது, தங்களையும் அறியாமல் தமது முன்னைய தாய்மொழிப் பண்புகளையும் பின்னையதில் கலப்பர். இதுவும் அம்மொழியில் ஏற்படும் ஒருவகைத் தாக்கமே.

(5) மறைமுகத் தாக்கமானவை உய்த்தறிய வேண்டியன. மேலை நாட்டாசிரியர் ஒருவரை, தாம் பேசும்மொழியில் ஒருவர் பின்பற்றி எழுதலாம். அவர் செல்வாக்கைப் பெற்றுவிட்டால், மேலை நாட்டு நூல்களையே படிக்காத ஒருவரும் தம் மொழியில் செல்வாக்குப் பெற்றவரது தாக்கத்தால் தம் நூல்களை அம்முறையில் அமைக்கலாம்.

(6) எதிர்முகத்தாக்கமாக, ஒரு நூலுக்கு எதிரானவற்றையே சிந்தித்து ஒருவர் எழுதலாம். ஒருவரது தனித்திறனைக் கண்டுகொள்ள வேண்டு மேல் அவர் பெற்றுள்ள தாக்கங்களை உய்த்தறிவது இன்றியமையாததன்றோ! மேலும் இலக்கியத்தில் இசையின் தாக்கம், நாட்டியத்தின் தாக்கம், ஓவியத்தின் தாக்கம் என இவ்வாறு ஆராய்தலும் இன்று வளர்ந்திருக்கிறது.

## 7.6. ஏற்றல் கொள்கை

ஏற்றல் கொள்கை (Theory of Reception) என்பது புகழ் பெறல் அல்லது செல்வாக்குக் கோட்பாடு (Fortune Study) என்றும் கருதப்படும். ஒரு குறிப்பிட்ட இலக்கிய வகை மற்றொரு மொழியினர் எல்லோரையும் கவர்ந்து நிற்கும். ஒரு குறிப்பிட்ட ஆசிரியர் பிறிதொரு மொழியினர் பால் பெரும் செல்வாக்குப் பெறலாம். இதனால் அம்மொழியில் எழுதும் பலரும் முற்கூறிய செல்வாக்குப் பெற்றவரைப் பின்பற்றி எழுதத் தொடங்கினால், அது செல்வாக்கை ஏற்பதாதலின் ஏற்றலின்பாற்படும். மராட்டிய எழுத்தாளர் வி.ஸ.காண்டேகரின் புதினங்கள் முப்பதாண்டுகளுக்கு முன்பிருந்து பெரும் செல்வாக்குடன் பலராலும் படிக்கப்பட்டு வந்துள்ளன. அதனால் அவை இங்கு பல எழுத்தாளர்களின் நூல்களில் மாற்றங்களை, வளர்ச்சிகளை விதைத்துள்ளன. இவ்வாறு தனிப்பட்ட ஒருவர் மீது தனித்தாக்கத்தைச் செலுத்துவதற்குப் பதிலாக, தனிப்பட்ட ஒரு நூலின் செல்வாக்கால் மட்டும் உருவாக்கப்படுவதற்குப் பதிலாகப் பலரும் பல நூல்களும் விரும்பி ஏற்குமாறு ஓர் ஆசிரியர் அல்லது ஏதேனும் ஒரு நூல் தன் செல்வாக்கைப் பரப்புவதனையே ‘ஏற்றல்’ என்கின்றனர். இதுவும் தாக்கக் கல்வியின் ஒரு பிரிவே என்றாலும் இதன் சிறப்புக் கருதிப் பிரித்துப் பேசுவாராயினர்.

## 7.7. உருக்காட்சி

இலக்கிய உத்திகள் பலவற்றையும் உலக நோக்கில் ஆராய நிறைய வாய்ப்பிருக்கிறது. நடை, உவமை, உருவகம், சொல்லாட்சி, அணிகள் போன்றவற்றின் ஆய்வுக்கு ஒப்பிலக்கியமுறை பெரிதும்

குறிப்பு

பயன்படும். சிறப்பாக உருக்காட்சி அல்லது காட்சி உருவகம் (Imagery) படிமக்காட்சி அல்லது படிமம் (Symbol) பழம் மரபுக்கதை (myth) போல்வன உலக இலக்கியங்களுக்கெல்லாம் பொதுவான தலைசிறந்த பண்புகள் தமிழ் இலக்கியத்தில் இவை பற்றிய ஆய்வுகளுக்கு மிகுதியான வாய்ப்புள்ளது.

கண்ணாற் காண்பதன் மூலம் உள்ளத்தில் ஓர் உருத்தோற்றத்தை ஏற்படுத்துவதே உருக்காட்சியாகும். இங்குக் காட்சி என்பது மனக்காட்சியைக் குறிக்கும். ஐம்புல உணர்வுகளாலும் ‘புலனாகும்’ மனக்காட்சியையே நாம் காட்சி உருவகம் அல்லது உருக்காட்சி என்கிறோம். இது உளவியலுக்கும் இலக்கியத்திற்கும் பொதுவான சொல், ‘படிமம் என்பது பருப்பொருளின் பிரதி என்று கருதப்படக்கூடாது. அதனைப் புலனுணர்வுக்குட்பட்ட, சிந்தனையொன்றின் மையக்கருத்து எனலாம் என்று செல்வி டவுனி (Miss Downey) குறிப்பிடுகிறார். ஒவ்வோர் உவமையையும், அதுபோலச் செறிவுடைய உவமை எனப்படும் உருவகம் ஒவ்வொன்றையும் குறிப்பதற்குக் கிடைத்த ஒரே சொல் என்றே நான் உருக்காட்சி’ என்ற தொடரை ஆள்கின்றேன் என்பது செல்வி ஸ்பர்ஜியன்(Miss Spurgeon) அம்மையாரின் கூற்றாகும்.

திரு.சி.டே.லூயிஸ் (C.Day Lewis) என்பார். இது சொற்களால் உருவாக்கப்படும் சித்திரம் என்பார். ஐம்புலத்திற்கும் காட்சியாவன எல்லாம் ‘உரு’ எனப்படும். மனத்திற்குக் காட்சியாளிப்பதையும் ‘உரு’ வென்று சேர்த்துப் பலவகைப்படுத்துவர். காட்சிப்படுத்துவதே பெரும்பான்மையாதலால் ‘காட்சியுரு’ (Visual Image) என்பதே முக்கியமானது. கேள்வியுரு (Auditory Images) அடுத்தது. சிலர் காட்சியுரு பிறவுரு (Visual x Nonvisual) என்றும் மற்றும் சிலர் காட்சியுரு ஓ புலன் அல்லாத பிறவுரு என்றும் வகைப்படுத்துவர்.

ஒருசொல், தொடர், அடைமொழி, உவமை, உருவகம், சொற்சித்திரம் எதுவும் ‘உரு’வை நல்க முடியும். மோனை, உவமை, பொருளோசை, சொல்லாட்சி, உருவகம் என்ற கூறு எதுவும் ‘உரு’வைப் படைக்கவியலும். திராட்சை மது (Wine) என்றாலும் சிவப்பு மது (Rewine) என்றாலும் உருவை படைக்க இயல்வதில்லை. ‘குருதிச் சிவப்பான மது’ (Blood-Red-Wine) என்று அடைமொழி புணர்த்துவிட்டால் அதனைக் காட்சிப் படுத்துவதை உணர்கிறோம் என்று கூறுகின்றனர்.

**‘மாவீழ்த்துப் பறித்த பகழி அன்ன**

**சேயரி மழைக்கண்’**

என்பது கபிலர் வாக்கு. அம்பு போன்ற கண் என்பது சாதாரணமாக யாவரும் கூறும் உவமை. அதனையே அழுத்தம் பெறக்கூறும் முகத்தான் ‘விலங்கினை எய்து பறித்ததால் முனைப்பாகம் குருதிக்கறை படிந்த அம்பு போன்ற செவ்வரி ஓடிய கண்கள்’ என்று கற்பனைச் செறிவுடன்

*Self-Instructional Material*

பாடப்பட்டுள்ளது. உவமையைக் கேட்ட அளவில், இளம்பெண்ணின் கண்கள் நினைவுக்கு வருமளவு இவை காட்சி உருப்படுத்தப்பட்டுள்ளன.



பொருள்கள், செயல்கள், நுண்பொருள்களை விளக்கமாகக் கூறும் ஆற்றலுடையது 'உரு' மொழியமைப்பும் அதற்கு உறுதுணையாகும். கட்புலன்சார் ஓவியங்களையும் இது சுட்டுப் புலன்களின் அனுபவங்களையும் குறிக்கும். உவமைகள், உருவகங்களின் வடிவில் அவை விளங்கும். அவற்றை வெறும் அணிகளென்று கூற முடியாது. உள்ளுணர்வு மொழிகளே அவை. 'ஒவ்வொரு கவிதையும் ஓர் உருக்காட்சியே' என்பது கவிஞர் ஈட்சின் கருத்தாகும்.

குறிப்பு

.இவ் 'உரு'க்கள் ஒரு புலவனின் தனித் தன்மையைக் காட்டும் கவிதையைக் கலைக்குடும்பத்தில் சேர்ந்து, அறிவியலைவிட்டு வேறுபடுத்துவது இதுபோன்ற உத்திகளே எனலாம். கவிதையின் உயிர் உருக்காட்சியே என்பர் அறிஞர். காணும்பொருளையும் அதனுடன் தன்னை இணைத்த உணர்ச்சியையும் அதனால் விளைந்த அனுபவத்தையும் கவிஞர் தன் கவிதையில் தருகிறான். அதே உணர்ச்சி, அதே அனுபவம் ஆகியவற்றால் நமக்கும் தந்து விடுகிறான். இதுவே உருக்காட்சியின் பயன். இதனைக் கவிதையை விட்டுப்பிரிக்க முடியாது.

காதல் ஒரு நுட்பொருள், அதனை ஒரு முப்பரிமாணம் உள்ள காட்சிப்பொருளாகக் காட்ட முயல்கிறது. ஒரு குறுந்தொகைப்பாட்டு தலைவி, தலைவன் மீது கொண்ட காதலைத் தோழியிடம் சிறப்பித்துக் கூறுமிடம்.

**நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று,**

**நீரினும் ஆரளவின்றே சாரல்**

**கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"**

**(குறள்:3)**

அகலம், உயரம், ஆழம் மூன்றும் கூறிக் காதலின்' உரு புனையப்பட்டுள்ளது. குறிஞ்சிப்பூ மிகவும் சிறியது. அதைக் கொண்டு ஈக்கள் மிகப்பெரிய தேன்கூட்டைக் கட்டுவதுபோலத் தலைமகன் மிகச்சிறிய உறவினை மிகப்பெரிய காதலாகக் கொண்டனன் என்பது கருத்து. 'நிலத்தினும் பெரியது, வானிலும் உயர்ந்தது, நீரிலும் ஆழமானது' என்பனவற்றால் காட்சிக்குரிய பருப்பொருள்களைக் காட்டி, நுண்பொருளான 'நட்பை' (காதலை) 'உரு' வாக்கிக் காட்டுகிறார் கவிஞர். இத்தகைய ஆய்வினால் தமிழிலக்கியச் செழுமையும் செம்மையும் நன்குணரப்படும்.

## 7.8. படிமம்

படிமம் என்பது குறியீடு. கருத்துக் கூட்டை, இணைவை இது குறிக்கும். காலப்போக்கில் அதன் ஒரு பகுதியைக் கண்டஅளவில்

குறிப்பு

முழுவதையும் குறிக்குமளவு, ஒன்று மற்றொன்றிற்குக் குறியீடாவதே படிமமாம். இலக்கியத்தில் பருப்பொருளாய்க் காட்டப்பட்ட ஒன்று, கருத்துத்தொடர்பு காரணமாக, கூடுதலாக அல்லது பிறிதொன்றாக நுண்பொருள் ஒன்றைக் குறிப்பதே படிமம் ஆகும். அஃதாவது பருப்பொருளால் நுண்பொருளைக் காட்ட இது முயல்கிறது. உவமை போல வருவது கொண்டு, பொருளை அது விளங்கும். எடுத்துக்காட்டாக 'மாடிப்படி ஏறுதல்' என்பது தன்னைத்தானே ஒருவன் உயர்த்திக் கொள்வதைக் குறிக்கக்கூடும்.

படிமம் ஒன்றைக்கூற, அதனோடு தொடர்புடைய பிறிதொன்றை உணர்த்தும் அணி (Trope) போன்றது. இதில் உவமை, உருவகம், உயர்திணையாக்கம், தொடர் உருவகம் போல்வனற்றின் மூலமாக, ஏதேனும் சொல்லியதிலிருந்து சொல்லப்படாத வேறு சிலவற்றை உணர்த்துவதே படிமம் ஆகும். உவமையையே பொருளாக்கிவிடும் உருவகம் போன்றது இது. வெறுமனே கூறினால் - உரைநடையிற் சொன்னால் கடினமாக, அலங்காரமின்றி, நீளமாக, உள்ளங்கவராதனவாய்த் தோன்றுவனவற்றை, நன்கறியக்கூடிய எளிமை, உயிருள்ள தன்மை, இரத்தினச்சுருக்கமான இயல்பு, உள்ளங்கவரும் உணர்வழுத்தம் ஆகியவற்றை உடையவனாய்ச் சொல்லப்பயன்படுவனவே படிமங்கள்.

படிமம் அதனால் உணர்த்தப்படுவதற்குப் பொருத்தமான உவமையாகவே இருக்க வேண்டுமென்பதில்லை. ஏதேனும் கருத்துத்தொடர்புடையவற்றை எல்லாம் படிமம் ஆக்கலாமாதலால், உவமைதான் படிமமாக வேண்டுமென்பதில்லை. மனித உரோம இழப்பு, சாம்சனின் வலிமை இழப்பைச் சுட்டுகின்றது. ஞாயிற்று உதயமும் மறைவும் பிறப்பையும் இறப்பையும் சுட்டுகின்றன. மேலைநாட்டிலும் லில்லி(Lily) என்ற பூ கற்பினுக்கு அடையாளமாக வருகிறது.

கணக்கில், சமயத்தில் எல்லாம் படிமங்கள் உண்டு. கல்லூரிச் சின்னம்கூட ஒரு படிமம்தான். தனிப்பட்டவர் மட்டுமே பயன்படுத்துவன தனிப்படிமம் ஆகும். மரபு வழியாக வருவன மரபுப்படிமம் எனப்படும். இயல்பாக விளங்குவன இயல்புப் படிமங்கள் ஆகும். உலகப்பொதுவான குறியீடுகள் உலகப்பொதுப்படிமங்கள் ஆகும்.

உருக்காட்சியில் உவமை இருக்கும். படிமத்திற்கு உவமை மட்டுமன்றிக் கருத்துத்தொடர்புடையது பயன்படும். உருக்காட்சி, கண்ணாற் கண்டதுபோல், காதாற்கேட்டது போல், ஐம்புலன்களால் அறிவது போல், மனத்தாலும் காண்பதுபோல் அமையும். ஒன்றன் இயக்கத்தை அறிவது போல் இவ்வாறு 'உரு' வாக்குவதே 'உருக்காட்சி' யாகும்.

உவமை, உருவகம், அடைமொழி, அணிஓசைநலன் போன்ற இலக்கிய உத்தி எதுவாயினும் 'உரு'த்தரப் பயன்படும். தற்குறிப்பேற்றமும் தொடர் உருவகமும் முரண் அணியும் போல்வன

‘உரு’ வாவனவேயாம். மெய்ப்பாடும் உருக்காட்சியும் ஒப்பிட்டு ஆராய வேண்டியவனவாகும். ‘மெய்ப்பாடு’ என்ற சொற்குத் தொல்காப்பியச் செய்யுளியல் முதல் நூற்பாவில் ‘‘சொல்கேட்டார்க்குப் பொருள் கண் கூடாதல்’’ எனப் பேராசிரியர் தரும் விளக்கம் ஏற்புடையதாகும். மெய்ப்பாடமைந்தவையே உருக்களெனில் தவறின்று.

குறிப்பு

பருப்பொருளைக்காட்டி நுண்பொருளை விளக்குவதே படிமமாகும். உவமையால் மட்டுமன்றிக் கருத்துத் தொடர்பாலும் ஒன்று மற்றொன்றைக் குறிக்கும். சொல்லப்பட்டதிலிருந்து, சொல்லப்படாததை அஃது உணர்த்தும். இது தனிப்படிமம் (Private Symbol) மரபுப்படிமம் (Traditional Symbol) இயல்புப்படிமம் (Natural Symbol), பொதுமைப் படிமம் (Universal Symbol) எனப்பல்வகைப்படும்.

படிமப் படைப்பு (Symbolism) என்பது இலக்கியம் தோன்றிய நாள்தொட்டு வளர்ந்துவரும் பண்பேயாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் அது பிரஞ்சு நாட்டில் கால்கொண்டது. ஆங்கிலக் கவிஞர் ஈட்சு (W.B.Yeats) இப்படைப்பில் பேரூக்கம் செலுத்தித் தம் கவிதைகள் அனைத்திலுமே படிமங்களை நிரப்பினார். நாற்பெரும் பூதங்களையும் அவர் படிமங்களாக ஆண்டார். நெருப்பு அன்பின் சின்னமாகவும் வசந்தத்தின் குறியீடாகவும் தூய்மையின் உருவமாகவும் மனித ஆன்மாவாகவும் அவர் கவிதைகளில் படிமப்பொருளில் ஆளப்பட்டுள்ளது. நீர் அவரது பாடல்களில் குருதி, பால் உணர்வு, புலன்உணர்வு, அமைதி, கண்ணீர், துன்பம், இழப்பு, இறப்புப் போன்ற பொருள் தரும் படிமமாக ஆளப்பட்டது. பூமியை இருள், உறக்கம், மனிதவுடல் ஆகியவற்றின் குறியீடுகளாக்கியும் காற்றை உயிர்ப்பு, வாழ்வு, அறிவு, ஒளி, நம்பிக்கை போன்றவற்றின் சின்னங்களாக்கியும் அவர் ஆண்டுள்ள இடங்கள் பலவாகும். இதுபோல அவர் வெவ்வேறு வண்ணங்களை வேறுபட்ட பல கருத்துக்களைப் படிமங்களாக்கியிருப்பதை அறிஞர்கள் எடுத்துக்காட்டி மகிழ்கின்றனர்.

தமிழில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பன ஐந்து நிலம் சார்ந்த வெவ்வேறு கற்பனை மரபுகளுக்கு அடிப்படையாகியுள்ளன. முல்லைக்கு கற்புப் பொருள் வந்ததின் சிறப்பை அறிவார்க்கு, இதிலுள்ள சீர்மை புலனாகிறது.

## 7.9. புராணக்கதை

இது வரன்முறையான அறிவிற்கு எதிரானது. உள்ளுணர்வால் உருவாவது, சமயம், நாட்டுப்புற இலக்கியம். மானிடவியல், சமுதாயவியல், உளவியல் ஆகியவற்றிற்குரியது. கடவுளரை உறுப்பினராய்க் கொண்ட கட்டுக் கதை இது. இக்கதையில் நம்ப முடியாத இயற்கை இகந்த நிகழ்வுகள் பல இடம்பெறும். சமயமும் சடங்கும் சார்ந்தது இது. எல்லோருக்கும் இக்கதை நன்கு தெரிந்திருக்கும். எழுத்து மொழி தோன்றுவதற்கு முன்பு தொட்டு வழங்கி, கேள்வி வாயிலாக இது பரவி வருகிறது. இதனைப் பழங்குடியினரின்

குறிப்பு

கனவுத்தொகை என்பர். இதனைக் கனவு, போலிப்புனைவு, மனிதநிலைக்கு அப்பாற்பட்ட போராட்டம் என்றெல்லாம் கூறித்தரம் தாழ்த்த முயல்வர். ''மனித அல்லது கடவுள் நிலை சார்ந்த ஒரு சில ஆழ்ந்த கருத்துக்களைக் கூட எதார்த்தமாக வெளிப்படுத்திக் குறியீட்டியலாக்கும். ஒரு கதையோ கதைக் கூறுகளின் தொகையோ புராணம் எனப்படும். தமிழில் தொன்மை என்பது பழமையுடையவற்றைப் பொதுவாகக் குறிப்பிட்ட உதவும், 'தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே' என்பார் தொல்காப்பியர். இவ்விளக்கங்கள் இயைபுடையவாதலை உற்று நோக்குக. சில தொன்மைக் கதைகள் சமயத் தத்துவ விளக்கத்திற்கு பயன்படும். இலக்கியத்தில் விளக்க முடியாதவற்றை விளக்க இது பயன்படும். அடிமனக்கருத்துகளை கூறமுடியாதவற்றை இது விளக்குகிறதென்பர்.

ஒரு விதமான கவிதை மொழியே தொன்மை என்பாரும் உளர். தொகுத்துக்கூறினால், ''தொன்மை அல்லது மித்து என்பது காலத்தால் பழமையானது கருத்தால் சமயச் சார்புடையது தலைமை மாந்தரும் தலைமைச் செயலும் தெய்வநிலையில் காணப்பெறுவர். இது தலைமுறை தலைமுறையாகச் சொல்லிவரும் மரபினை உடையது. இதிற்சடங்காசாரங்கள் இடம்பெறும் ˙ இயற்கை இகந்த கூறு இருக்கும். கதைமாந்தர்கள் கடவுளர், தேவதைகள், கடவுள் தன்மை மிக்கோர் ஆவர். பண்பாட்டு வீரராய்ப் படைத்திருப்பினும் தெய்வத்துடன் தொடர்புப்படுத்தியே கூறப்படும். மனிதஉணர்வின் ஆர்வத்தாலும் ஆற்றலாலும் போலிப் புனைவாக படைக்கப் பெற்ற இப்புராணக் கதைகளில் பழங்கால மக்களின் முழுமையான உணர்ச்சிகளும் அனுபவங்களும் காணப்பெறுகின்றன. இவை பல வகைப்படும். (1) உலக விளக்கக் கதை (Cosmographic Myth). உலகத் தோற்ற ஒடுக்கங்களை விளக்குவன போன்ற கதைகள் இவை (2) விலங்குக் கதை (Animal Myth) (3) வீரநிலை கூறும் புராணக்கதை (Heroic Myth). மேலும் இதனைப் புனித அடிக்கருத்தின் (Divine Themes) மீதானது என்றும் வழக்குக்கு மாறான அடிக்கருத்து (Unusual Themes) என்றும் பிரிக்கலாம்.

அரக்கர்களைப் பல்வேறு உருவில் படைத்து, அவர்களை அழிக்கும் பொருட்டு ஆண் பெண் தெய்வங்கள் வந்து அல்லதைக் களைந்து, நல்லதைச் செய்யும் செயல்களை விரித்துரைப்பதே காப்பியப் பாடுபொருளாகும். (Epic Theme) ஆசை அரக்கனாகவும் ஆணவம் அரக்கனாகவும் கதைப்படுத்தப்படுவதாகக் கூறலாம். ஓர் அரக்கன் எத்தனை முறை வெட்டப்பட்டாலும் மீண்டும் மீண்டும் உயிர் பெறுவதாகவும் பல்வேறு நிலைகளில் நின்று சண்டை போடுவதாகவும் கூறப்படும் கருத்துக்கள், எவ்வளவு தடுத்தாலும் ஆசை மீண்டும் மீண்டும் வளர்வதையே குறிக்கும். வடமொழி, கிரேக்கத்தில் புராணக்கதைகள் மிகுதி. தமிழில் மிகவும் குறைவு. ஒரு புராணக்கதையில் நாட்டுப்

புறக்கதைப்பாங்கு, சடங்கு, பண்பாடு, மானிடவியல், உளவியல், சமயத்தத்துவம், நாகரிகம் போல்வன பல அடங்கியிருக்கும்.

இதிகாசம் (Legend) வேறு தொன்மை (Myth) வேறு. வால்மீகி இராமாயணத்தை இதிகாசம் என ஒப்புவர். ஆனால் மகாபாரதம் புராணம் எனவே படும். இதிகாசத்தில் வரலாற்றுக்கூறு மிகுதி. காப்பியங்களுக்கு இவையே அடிப்படையாகும்.

பழம் மரபுக் கதை ஆய்வு என எடுத்துக்கொண்டால் சங்க நூல்களில் வரும் தமிழர்களுக்கே உரிய புராண மரபுக் கதைகளை முதற்கண் தொகுக்க வேண்டும். முருகனைப் பற்றியனவும் கொல்லிப்பாவை பற்றியனவும் ஆன குறிப்புக்கள் பலவற்றைத் தமிழர்க்கேயுரிய புராணக் கதைகள் எனலாம்.

கலியிலும் பரிபாடலிலும் வடமொழிப் புராண மரபுக் கதைகள் மிகுதியாக விரவியுள்ளன. புராண மரபுக்கதைகள் வரலாற்று அடிப்படையின் சமயம் சார்ந்தன் அறக்கருத்துக்களை விளக்குவன் ஒரு நாட்டின் நாகரிகம். பண்பாடு, சமயப்பான்மைகளை விளக்கவல்லன. விளக்க முடியாதவற்றைக் குறிப்பாக விளக்க வரும் இலக்கிய உத்தியே புராண மரபுக் கதை என்பது அறியத்தக்கதாகும். எனவே, இதனை நம்பமுடியாதது என ஒதுக்கித் தள்ளுவதற்கு இல்லை. கண்ணகி கதை சிலப்பதிகாரத்தை தள்ளுவதற்கு இல்லை. கண்ணகி கதை சிலப்பதிகாரத்தில் அப்படியே வரலாறாக விளக்கப்படவில்லை. நம்ப முடியாத புராண மரபுக் கதையாக காப்பிய வடிவம் பெற்றுள்ளது. அத்தகைய நம்பவியலாத் தன்மை என நாம் கருதும் வளர்ச்சியாலேயே அது காப்பியத்தன்மை பெறுகிறது. இத்தன்மை அமைந்திலதேல் அது செய்தித் தொகுப்பாகும் வரலாறாகும் காப்பியமாகாது. ஒருத்தியைச் சாதாரணமாகக் கற்புடையவள் என்பது அழுத்தமின்றிக் கூறுவது. கண்ணகியைத் ‘‘தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்’’ என்பது அழுத்தமுடைய காப்பியக் கூற்று. காப்பியப் பான்மைக்கு இது தேவைப்படும் உத்தியாகும். சிலப்பதிகாரக்காப்பியத்தின் தொடக்கத்தில் கோவலன் ‘செவ்வேள்’ என்று பாராட்டப்படுகின்றான். இறுதியாகக் குன்றக் குரவையில் ‘‘மலைவேங்கை நறுநிழலின் வள்ளி போல்வீர’’ என்று (3) கண்ணகி சிறப்பிக்கப் பெறுகின்றாள். இவ்வாறு முருகன் வள்ளி புராண மரபுக் கதைப் பின்னணியில் கோவலன் கண்ணகி காதல் வாழ்வும் சிறப்பும் உணர்த்தப்படுகின்றன. இப்புராணப் பின்னணி அடிப்படையில் கோவலன் கண்ணகி வாழ்வில் ஏற்பட்ட பல நிகழ்ச்சிகளையும் உண்மையன்பையும் தெய்விக நிலையையும் நீள நினைத்து பார்க்க இடமிருக்கிறது.

இன்றையத் திரைப்படப் பாடல் ஒன்றிலும் ‘‘இராதையின் நெஞ்சமே கண்ணனுக்குச் சொந்தமே’’ என்ற தலைவி பாடுமிடத்தில் புராணக்கதை மிக அழகியதோர் உத்தியாகப் பயன்படுகிறது. ஒரு தலைவி தன் காதலைத்தானே வெளியிடுவது பண்பாகாது. மரபுமன்று. ஆனாலும் அவள் வெளியிட்டுத் தீரவேண்டிய நிலைவருகிறது. அப்போது

'என் நெஞ்சம் உனக்குச் சொந்தம்' என்னும் போது 'இராதையின் நெஞ்சம் கண்ணனுக்குச் சொந்தம்' என்று தன்னை .இராதையாகவும் தலைவனைக் கண்ணனாகவும் கொண்டு பாடுகின்றாள். அ.்.தாவது நேரே சொல்ல முடியாததை நாகரிகமாக வெளியிட இவ்வுத்தி பயன்படுகிறது. மேலும் இதனால் பிருந்தாவனமும் காதல் களிப்பும் இன்பக் கற்பனையாக எதிரே எழுந்து தோற்ற, இவ்வுத்தி மிகவும் உதவுகிறது.



## 7.10. அடிக்கருத்துக்கள் - சமுதாயப்பின்னணி

உலக இலக்கியங்கள் பலவற்றிலும் அடிக்கருத்துக்கள் (Themes) ஒரு தன்மையாகவே அமைந்துள்ளன. வரலாறு, சமுதாயநிலை இவற்றை உணர்ந்தால் இலக்கியத் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் வேறுபாட்டிற்கும் காரணம் புலனாகும். உலக இலக்கியம் பலவற்றிலுமுள்ள 'இலக்கிய காலப்பகுதிகளை' (Literary Periods) ஆராய வேண்டும். தொன்மை மிக்க இலக்கியங்கள் பலவற்றிலும் வீரநிலைக்கால (Heroic Age) இலக்கியம் உண்டு. அதுபோலவே நீதிநூற்காலம், இருண்ட காலம் போல்வனவும் பல இலக்கிய வரலாறுகளில் உண்டு. ஒப்பிலக்கியம் அறிவியல் அடிப்படையில் பேணும் காரண காரிய ஆராய்ச்சி (Cause and Effect Theory) சமுதாய நிலைக்கேற்ப இலக்கியங்கள் தோன்றியமையைக் கணக்கிடப் பெரிதும் உதவியது. சங்க காலச் சமுதாய நிலைக்கும் அதனோடு சமகாலத்ததாகிய உரோமச் சமுதாய நிலைக்கும் பற்பல ஒற்றுமைகள் உண்டு. எப்படியெல்லாம் ஒப்பீடுகள் காணலாம் என்பதற்கு ஒன்றிரண்டைக் குறிப்பாகச் சுட்டிக் காட்டலாம். அன்று தமிழகத்தில் பன்னீராண்டு வயதினளை மணம் முடித்துக் கொடுத்தனர். கண்ணகி "ஈராறு ஆண்டு அகவையிலே" மணம் செய்விக்கப் பெற்றாள். காதல் வாழ்வின் சுவையறியாத நிலையில் மணம் பெற்றதால், கோவலனின் திசை திருப்பத்திற்கு அதுவுமோர் காரணமாயிற்றென்பர். உரோம நாட்டுப்பெண் பன்னிரண்டாவது அகவையில் தன் தந்தையால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைமகனை மணந்து கொள்வாள்.

இதுபோலவே உரோம நாட்டில் செல்வச் செழிப்பு வளர வளர நகர்ப்புறங்களில், உயர்குடும்பங்களில் பரத்தைமை ஒழுக்கம் பரவுவதாயிற்று என்ற குறிப்பிடுகின்றனர். கி.மு.முதல் நூற்றாண்டில் அங்குப் பரத்தையர்களின் எண்ணிக்கை மிகுதியாக இருந்தது. அவர்கள் நன்கு கற்றவர்களாய்ப் பண்பாடுமிக்கவர்களாய் விளங்கினர் ' இசையும் ஆடலும் அழகும் என்று இக்கூறிய மூன்றில் ஒன்று குறைபடாமல்' விளங்கினர். இளைஞர்கள் அவர்கள் பின்னே அலைவாராயினர். இச்சமுதாயநிலை சிலப்பதிகாரம் - காட்டும் இந்திரவிழாவூர் எடுத்த காதை உணர்த்தும் - பரத்தைமை நிலையோடு முற்றிலும் ஒப்பிடத்தக்கதாக இருக்கிறது.



டாக்டர் வ.சுப.மாணிக்கம் "ஆன்லிச்சு என்னும் அறிஞன் 'பண்டைக் கிரேக்க நாட்டின் பால்வாழ்க்கை' எனப் பெயரிய நூலின் முன்னுரையில் எழுதிய கருத்து, பழந்தமிழகம் கண்ட அகத்திணையை

ஆராயும் என் கருத்துக்குப் படி எடுத்தது போல இருப்பக்கண்டு வியந்தேன்'' என்று கூறுதலும் காணலாம்.

இவ்வாறு கிரேக்க, உரோம, வடநாட்டுச் சமுதாய வரலாறுகளையும் அவற்றிற்கேற்பத் தோன்றிய இலக்கிய வளர்ச்சிகளையும் ஒப்பிட்டு எழுதினாலன்றிச் சங்க இலக்கியத் தனித்தன்மையை முற்றிலும் புரிந்து கொள்ள முடியாது. பழம் பெரும் இலக்கியச் செல்வத்தைக் கொண்டிருப்பதனால், நமக்கு எல்லையற்ற இவ் ஒப்பிலக்கிய ஆய்வு முறைகள் தேவை என்று படுகின்றது. இரண்டாயிரம் ஆண்டுப் பரப்புடைய தமிழிலக்கியச் செல்வத்தின் உண்மையான சிறப்புக்கள் எல்லாம் வகைப்படுத்தப்பட வேண்டும். தொகைப்படுத்தப்பட்டு விரித்து விளக்கப்பட வேண்டும்.



**குறிப்பு**

## 7.11. சமுதாய நோக்கு

இலக்கியத்தைச் சமுதாய நோக்குடன் ஆயவேண்டும் என்று, இன்று பலரும் விரும்புகின்றனர். ஒரு குறிப்பிட்ட சமுதாயச் சூழ்நிலையோடும் பொருளாதார சமூக அரசியல் முறைகளுடனும் இலக்கியம் தொடர்புடையது. இலக்கியத்தின் மேல் சமுதாயம் செலுத்தும் செல்வாக்கை விளக்கவும் சமுதாயத்தில் இலக்கியம் பெற்றுள்ள இடத்தை வகுத்து மதிப்பிடவும் வேண்டும். படைப்பாளியின் சமுதாயநிலைக்கும் இலக்கியப் படைப்பிற்கும் தொடர்புண்டு. அதனைத் தனிவகையாக ஆராய வேண்டும். அடுத்து சமுதாயம் பற்றிய உள்ளடக்கம் இலக்கியத்தில் எந்த அளவு உண்டென்று கண்டறிய வேண்டும். இறுதியில் சமுதாயத்தின் மீது இலக்கியத்தின் தாக்கம் எத்துணை அளவினது என்பதைக் கண்டறியுமாறு பேராசிரியர் வெல்லக்குக் கூறியுள்ளார்.

'சமுதாயத்தின் விளைவே இலக்கியம்' என்றும், 'சமுதாயத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்' என்றும் கூறுவர்.

சிலர் புதிய முறைகளைப் புகுத்தும்போது புரிந்துகொள்ள இடர்ப்படுவர். ஒப்பிடுவதுதான் ஒப்பீடு என்பதில்லை. ஒப்புமையுடையவற்றில் காணப்படும் வேற்றுமைகளை எடுத்து உணர்த்துவதும் ஒப்பீடேயாகும். வெறும் ஒப்பீட்டிற்காகவே ஒப்பீடு என்பது தேவையற்றதாகும். இலக்கியத்தைப் புரிந்து கொள்ளவும், அதில் இன்பம் துய்க்கவும் இவ் ஒப்பீடு பயன்பட வேண்டும்.

இலக்கியம் அனைத்தும் ஒரே முழுமையான கட்டமைப்பு உடையது என்றும் அதன் பாகங்கள் தொடர்ந்து ஒன்றற்கொன்று இயைந்து இயங்கிக் கொண்டே இருக்கின்றன என்றும் இன்று ஆராய்கின்றனர்.

இங்ஙனம் ஒப்பிலக்கியம் நமக்கு அளிக்கும் இலக்கியப் பார்வை, இலக்கிய நோக்கு, இலக்கிய ஆய்வு முறைகள் பலவாகும். இவற்றுள் பல முன்னைய ஆய்வுகளின் திருந்திய முறைகள் . சில புதுமையுடையவை. அறிவியல் வழி ஆய்வு என்பதும் உலக நோக்கில்

ஆய்வதென்பதும் ஒப்பிட்டுக் காண்பதென்பதும் இலக்கியத்தின் உருவாக்கத்தை உய்த்தறிவதென்பதும் ஒப்பிலக்கியத்தின் அடிப்படைத் தன்மைகள். இவை அனைத்தையும் அறிமுகம் செய்துகொண்டு. நாமும் ஒப்பிலக்கிய ஆய்வில் ஈடுபட வேண்டும். ஆனால் அது எளிய செயலன்று. பிறமொழி அறிவும், உலக இலக்கிய அறிமுகமும் பெறுதல்வேண்டும். அதற்கெல்லாம் முன்னோடியாகத் தமிழிலக்கியத்தை நாம் வரன்முறையாக, ஆழ்ந்து கற்றாக வேண்டும். எங்ஙனமாயினும் இன்றைய நிலையில் ஒப்பிலக்கிய அறிமுகம்தான், நமது 'ஒப்பற்ற' இலக்கியத்தை உலகத்திற்கு அறிமுகம் செய்யும் என்பது உறுதி.

## 7.12. நான்கு வகை இலக்கியப் பார்வை

ஒரு மொழியில் இலக்கியங்கள் பல தோன்றுகின்றன. அவை நம்மளவில் இலக்கியம் என்ற தகுதியைப் பெறுவதோடு அவற்றுள் சில, தேசியப் பண்புகளைக்கொண்ட தேசிய இலக்கியமாகவோ, உலகந்தழுவிய பார்வையைக் கொண்ட உலக இலக்கியமாகவோ, பொதுவான சில இயக்கவியல் ரீதியான பண்புகளைக்கொண்ட பொது இலக்கியமாகவோ அறியப்படுகின்றன. இவ்வாறு அறிவதற்கு ஒப்பிலக்கியப் பார்வை பயன்படுகிறது. இதைத்தான் நான்கு வகை இலக்கியப் பார்வை என்று நாம் சொல்கிறோம். அவையாவன.

1. தேசிய இலக்கியம்
2. உலக இலக்கியம்
3. பொது இலக்கியம்
4. ஒப்பிலக்கியம்

இனி ஒவ்வொன்றின் விளக்கங்களையும் கீழே காண்போம்.

### 7.12.1. தேசிய இலக்கியம்

தேசிய இலக்கியம் என்றவுடனேயே அது எந்த மொழியில் எழுதப்பட்டிருக்கிறதோ அந்த நாட்டுத் தேசிய இலக்கியம் என்ற கருத்து நம் நினைவைத் தட்டுகிறது. அது தவறு. இந்தியாவின் தேசிய மொழிகளுள் தமிழும் ஒன்று. ஓர் இலக்கியம் தமிழில் எழுதப்பட்டதாலேயே அது இந்திய தேசிய இலக்கியம் ஆகிவிடாது. எந்த நாட்டின் ஆட்சிமொழியில் எழுதப்பட்டிருக்கிறதோ, அது அந்த நாட்டின் ''தேசிய இலக்கியம்'' என்ற கூற்றும் பொருந்தாது. எனவே மொழியுணர்வு இங்கு பின்னால் தள்ளப்பட்டுவிடுகிறது.

ஒரு தேசத்தின் பண்புகளை, மரபுகளை அடியொற்றி அவை வெளிப்படும் வண்ணம் எந்த இலக்கியம் எழுதப்பட்டுள்ளதோ அதை அந்த நாட்டின் தேசிய இலக்கியமாகக் கருதலாம் என்ற விளக்கம் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. சான்றாக, இராமாயணம், மகாபாரதம் ஆகிய காப்பியங்கள் இந்தியாவின் (அது எந்த மொழியில் எழுதப்பட்டிருந்தாலும்) தேசிய இலக்கியங்களாகக் கருதப்படுகின்றன. காரணம், இந்தியர்கள் பன்னெடுங்காலமாகத் தங்கள் பண்பாடுகளைப் போற்றிவரும் ஒருவனுக்கு ஒருத்தி, சகோதர பாசம், ஆணவம் அழியும்,

பிறன்மனை நயவாமை போன்றவை இவற்றில் வலியுறுத்தப்படுகின்றன. இராமாயணம் சீனமொழியில் எழுதப்பட்டிருந்தாலும் அது இந்திய தேசிய இலக்கியமே. இதே அடிப்படையில் தமிழறிஞர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்கள் சிலப்பதிகாரத்தையும் பெரிய புராணத்தையும் தேசியக் காப்பியங்கள் என்று கருதியிருப்பது கவனத்திற்குரியது.

ஒப்பிலக்கியத்தின் ஒரு நோக்கான தேசிய இலக்கியப் பார்வை வட்டார உணர்வை தேசிய உணர்வாக விரிவடையச் செய்துள்ளது. இது ஒப்பிலக்கியத்தின் பயன்களுள் முதன்மையானது. இப்பார்வையே இலக்கியங்களை உலகநோக்கில் காணும் உலக இலக்கியப் பார்வைக்கு வழிகோலியது எனலாம்.

## 7.12.2. உலக இலக்கியம்

தேசிய இலக்கியம் எனும் பார்வையே உலக இலக்கியம் எனும் இலக்கிய வான்வெளிக்கு நம்மை இட்டுச் செல்கிறது. இலக்கியத்தைத் தொடங்கும்போதே நம் முன்னோர்க்கு உலகப் பார்வை இருந்தது என்பதை இங்குக் குறிப்பிடுவது பொருந்தும். ‘‘உலகம் உவப்ப’’ என்று திருமுருகாற்றுப்படை தொடங்குகின்றது. ‘‘வையகம் பனிப்ப’’ என்று நெடுநல்வாடை அடியெடுக்கிறது. ‘‘நனந்தலை உலகம்’’ என்று முல்லைப் பாட்டு மலர்கின்றது. ‘‘உலகம் யாவையும்’’ என்று கம்பராமாயணம் தொடங்குகின்றது. ‘‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’’ என்ற தொடரைக் காட்டிலும் தமிழர்களின் உலகப்பார்வைக்கு வேறு சான்று வேண்டுமா? அக இலக்கியங்களில் மக்கள் பெயரைச் சுட்டக்கூடாது. ஏனெனில் காதல் இன்பம் என்பது எல்லா உயிர்க்கும் பொதுவானது. எனவே, அதனை ஒரு மொழிக்குரியதாகவோ, ஒரு நாட்டிற்கு உரியதாகவோ ஆக்கிவிடக்கூடாது என்ற உலகப்பொது நோக்கில்தான் தொல்காப்பியர்.

**மக்கள் நுதலிய அகனைந் திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர்சுட்டப் பெறாஅர் (தொல்:1000)**

என்று இலக்கணம் வகுத்தார். இவ்வகையில் தமிழ் அகப்பாடல்கள் அனைத்தும் உலக இலக்கியத் தகுதி உடையனவே. திருக்குறளை உலகப்பொதுமறை எனக் கூறிவருவதன் காரணம் நாமறிவோம்.

உலக இலக்கியம் (World Literature) என்ற தொடரை முதன் முதலில் அறிமுகம் செய்தவர் ‘கதே’ இவர் மேலைநாட்டு இலக்கியங்களுக்கு இணையான தகுதி கீழைநாட்டு இலக்கியங்களுக்கும் உண்டு என்பதைத் தம்முடைய நூல்கள் பலவற்றில் நிறுவினர். கிழக்கையும் மேற்கையும் இனித் தனித்தனியாகப் பார்க்கும் பார்வை கூடாது (The East and the West can no longer be separated) என்பதை இவர் வலியுறுத்தினார். இதனால் அதுவரையில் புழக்கத்திலிருந்த ‘‘ஐரோப்பிய இலக்கியம்’’ (Europa Literature) என்ற தொடரைக் காட்டிலும் வலிமைமிக்க தொடராக ‘‘உலக இலக்கியம்’’ என்ற தொடர் உருப்பெற்றது. ‘‘தேசிய இலக்கியம் என்பது குறுகிய அர்த்தத்தைக்

கொண்டது. ஒவ்வொரு நாடும் தன்னுடைய நாட்டு எல்லையைத் தாண்டி மற்றொரு நாட்டு இலக்கியத்தைக் கண்டறிந்து ஆராயும் உலக இலக்கியப் பார்வைக்கான காலம் வந்துவிட்டது'' என்று அவர் எச்சரிக்கை செய்தார். ஒரு நாட்டு இலக்கியத்தையோ,இலக்கியவாதியையோ, மற்ற நாட்டு இலக்கியவாதிதான் சரியானபடி மதிப்பிட முடியும் என்று திண்ணமாக நம்பும் அளவிற்கு அவர் உலக இலக்கியப் பார்வையில் அக்கறை செலுத்தினார். இதனடிப்படையில் ஆங்கிலத் திறனாய்வாளரான கார்லைல்தான் (Carlyle) ஜெர்மன் இலக்கியவாதியான ஷில்லரை (Schiller) ஜெர்மானியரைக் காட்டிலும் சரியாக மதிப்பிட முடியும் என்றார். இதேபோல ஷேக்ஸ்பியர் படைப்புகளை ஆங்கிலத் திறனாய்வாளர்களைக் காட்டிலும் ஜெர்மானியர்கள் நன்கு மதிப்பிட முடியும் என்றார். பின்னாளில் சொல்லப்பட்ட ''நாட்டு எல்லை கடந்த இலக்கிய ஆய்வுகளே ஒப்பிலக்கிய ஆய்வாகும்'' என்ற விளக்கத்திற்கு கதேயின் மேற்சுட்டிய கூற்று அடிப்படையாக அமைந்துள்ளதைக் காணலாம்.

ஆல்பர்ட் கயார்டு என்ற ஒப்பிலக்கியத் திறனாய்வாளர் ''உலக இலக்கியம்'' என்ற தகுதியை எய்துவதற்குரிய பண்பினைக் கோடிட்டுக் காட்டுகிறார். ''எது உலக இலக்கியம்?'' என்ற வினாவிற்கான விடையாக இவர் விளக்கம் அமைந்துள்ளது. அவர் சொல்கிறார்: ''அனைவராலும் பொதுவாக அனுபவிக்கப்படும் இலக்கியத் தொகுதிகளே உலக இலக்கியமாகும்.'' இவர் கூற்றுப்படி சங்க அகப்பாடலகள், திருக்குறள், தாகூரின் ''கீதாஞ்சலி'', காளிதாசனின் நாடகங்கள், மார்க்சிம் கார்க்கியின் ''தாய்'', லியோ டால்ஸ்டாயின் ''போரும் அமைதியும்'', ஹோமரின் காப்பியங்கள், மில்டனின் கவிதைகள் ஆகியவை உலக இலக்கிய வரிசையில் முன்னணியில் நிற்கும் தகுதியை உடையவை எனலாம்.

## 7.12.3. பொதுமை இலக்கியம்

''பொதுமை இலக்கியம்'' என்பது தேசிய இலக்கியம், உலக இலக்கியம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்டதாகும். தேசிய இலக்கியமும், உலக இலக்கியமும், இலக்கியப் பார்வையால் அளவிடப்படுகின்றன. பொதுமை இலக்கியம் என்பது இலக்கியக் கொள்கைகள், இலக்கிய இயக்கங்கள், இலக்கிய வரலாறு ஆகியவற்றின் அடிப்படையில் அளவிடப்படுகிறது. அழகியல் எனும் இலக்கிய உணர்வு இலக்கியக் கொள்கையாக உருவெடுத்துக் காலந்தோறும் அது அடைந்த கருத்துநிலை மாற்றங்களை இலக்கியச் சான்றுகள் கொண்டு பிறநாட்டு அழகியற் கொள்கைகளோடு ஒப்பிடுவது இதன்பாற்படும். இதுபோன்றே புனைவியல் இயக்கம், அமைப்பியல்வாதம் போன்றவற்றை ஒப்பியல் நோக்கில் ஆராய்ந்தறிவதும் பொதுமை இலக்கியப் பார்வையுள் அடங்கும்.

குறிப்பு

## 7.12.4. ஒப்பிலக்கியம்

ஒப்பிலக்கியம் தனித்துறையாக வளர்வதற்கு முன்னர் பொதுமை இலக்கியப் பார்வையே (General Literature) ஒப்பியல் அறிஞர்களிடம் காணப்பட்டது. இதற்குச் சான்றாக அமெரிக்காவின் கார்னெல் பல்கலைக்கழத்தில் தொடங்கப்பட்ட ஒப்பிலக்கிய கல்விக்குத் தரப்பட்ட பெயரைக் குறிப்பிடலாம். இக்கல்விக்கு Course in General and Comparative Literature என்ற பெயரைத் தந்தனர். அமெரிக்க ஒப்பிலக்கியக்கழகம் (American Comparative Literature Association) ஆண்டுதோறும் வெளியிடும் ஒப்பிலக்கிய ஆய்வுபற்றிய ஆண்டறிக்கை Year Book of General and Comparative Literature என்று பெயர் தாங்கி வெளிவருவது குறிப்பிடத்தக்கது. இங்கு என்று சொல்லப்படுவது இலக்கிய இயக்கங்கள், கொள்கைகள், வரலாறு பற்றிய ஆய்வாகும். பொதுமை இலக்கியம் என்ற பார்வையைப் பெரிதும் வலியுறுத்தியவர் பால் வான்தீகம் ஆவார்.

## 7.13. இந்திய அளவில் ஒப்பிலக்கியம்

இந்தியாவின் 1957 இல் ஜாதவ்பூர் பல்கலைக்கழகத்தில் புத்ததேவ்போஸ் என்பார் ஒப்பிலக்கியத் துறையை ஏற்படுத்தினார். டில்லி பல்கலைக்கழகம் இந்தி வங்காளம் தமிழ் ஆகியவற்றின் இலக்கியங்களிடையே உள்ள உறவு நிலைப் பற்றி ஆராயும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது. ஆந்திரப் பல்கலைக்கழகத்தில் ஆங்கில முதுகலைப் பாடத்தில் ஒப்பிலக்கியம் ஒரு பாடமாக ஏற்படுத்தப்பட்டது. ஹைதராபாத்தில் உள்ள மைய அரசின் பல்கலைக்கழகத்தில் ஒப்பிலக்கியத் துறை பற்றிய தொடக்க நிலைப்பாடம் பயிற்றுவிக்கப்பட்டது. மதுரைப் பல்கலைக்கழகத்தில் ஒப்பிலக்கியத் துறை பற்றிய தொடக்க நிலைப்பாடம் பயிற்றுவிக்கப்பட்டது. மதுரைப் பல்கலைக்கழகமும் பாரதிதாசன் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் முதுகலைப் பாடத்தில் ஒப்பிலக்கியத்தை அறிமுகப்படுத்தி நடத்தி வருகின்றன.

## 7.14. தமிழில் ஒப்பிலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

தமிழில் ஒப்பீட்டுப் பார்வையைத் தொல்காப்பியரும், பண்டைத் தமிழ்ப் புலவர்களும் உரையாசிரியர்களும் தொடங்கி வைத்தனர். ஆனால் அவைகளையெல்லாம் ஒப்பிலக்கியம் என்று கூற முடியாது. அண்மைக் காலமாகத்தான் ஒப்பிலக்கியம் தமிழில் தோன்றி வளரலாயிற்று. தமிழ் இலக்கியத் திறனாய்வு கால ஆராய்ச்சியிலேயே சென்றது. அண்மைக் காலத்தில் ஒப்பிலக்கியத் திறனாய்வுத் துறை வளர்ந்து வருகிறது.

தமிழ் ஒப்பிலக்கிய முன்னோடிகளாக வ.வே.சு ஐயரும், பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையும், கலாநிதி க.கைலாச பதியும் விளங்குகிறார்கள். இவர்களுக்கு முன்பே தமிழிலக்கியம் மேலை நாட்டு

மொழிகளுடன் ஒப்பிடும் நிலையில் உள்ளது என ஜி.யூ.போப், எஸ்.கிருஷ்ணசாமி ஐயங்கார், என்.கே.சித்தாந்தா போன்றோர் கூறியுள்ளார்.

குறிப்பு

**வ.வே.சு. ஐயர்**

வ.வே.சு.ஐயர் தமிழ் ஒப்பிலக்கிய முன்னோடி ஆவார். இவர் எழுதிய 'Kamba Ramayana A study' என்ற கம்பராமாயண ஆய்வுகளின் மூலம் கம்பனை ஹோமர், வர்ஜில், மில்டன், வான்மீகி முதலிய பெருங் கவிஞர்களுடன் தன்னுடைய அறிவுத் திறத்தாலும் பிற மொழிப் பயிற்சியாலும் ஒப்பிட்டு உலக மகா கவிகளில் ஒருவர் என்று கூறுகிறார். கம்பராமாயணமானது ஹோமர் எழுதிய இலியாதையும், விர்க்கிலியன் எழுதிய ஏனயிதையும், மில்டனுடைய சுவர்க்க நீக்கம் என்ற காவியத்தையும், வியாஸ பாரதத்தையும் தனக்கே முதனூலாக, இருந்த வால்மீகி ராமாயணத்தையும் கூட, பெருங்காப்பிய லட்சணத்தின் அம்சங்களுள் அநேகமாய் எல்லாவற்றிலும் வென்று விட்டது என்று சொல்லலாம் என்கிறார். இவரது காலத்திற்குப் பிறகு மேலை நாட்டுக் காவியங்ககளைப் பற்றிய ஆய்வு நன்கு தொடர ஆரம்பித்தது.

**கலாநிதி க.கைலாசபதி**

இலங்கைப் பல்கலைக்கழத்தின் யாழ்ப்பாணப் பிரிவின் துணை வேந்தராகப் பணிபுரிந்த கலாநிதி, க.கைலாசபதி தமிழ் ஒப்பிலக்கிய ஆய்வின் முன்னோடிகளில் ஒருவராவார். சங்க காலக் கவிதைகளை மேலை நாட்டு வீரயுகப் பாடலுடன் ஒப்பிட்டு 1966இல் தமிழ் வீரயுகக் கவிதை என்ற ஆய்வேட்டை மான்செஸ்டர் பல்கலைக்கழகத்தில் அளித்து டாக்டர் பட்டம் பெற்றார். 1969இல் ஒப்பியல் இலக்கியம் என்ற நூலையும் வெளியிட்டு முறையான ஒப்பிலக்கிய ஆய்வினைத் தொடங்கி வைத்தார்.

**தனிநாயகம் அடிகள்**

சேவியர் எ.்.ச் தனிநாயகம் அடிகள் இலங்கையில் பிறந்து சமயப்பள்ளியில் கல்வி பயின்று கத்தோலிக்கத் திருச்சபையில் பாதிரியராகப் பணிபுரிந்தவர். அண்ணாமலைப் பல்கலைக்கழத்தில் தமிழ் முதுகலை பயின்றார். 1952-ஆம் ஆண்டு இலண்டன் பல்கலைக்கழகத்தில் ஈராண்டு பயின்று ஒப்பியல் கல்வி முறை என்பது பற்றி ஆய்வாளராக இருந்து டாக்டர் பட்டம் பெற்றார். இவருக்கு இலத்தீன், கிரேக்கம் மற்றும் இன்றைய ஐரோப்பிய மொழிகள் பற்றிய புலமையும் உண்டு. 1966-ஆம் ஆண்டில் மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் முதல் உலகத் தமிழ் மாநாட்டை முன்னின்று நடத்தினார். உலகத் தமிழராய்ச்சிக் கழகத்தையும், கிரேக்க இலத்தீன் இலக்கியங்களுடன் ஒப்பிட்டார். தமிழில் இயற்கைப் பாட்டு என்ற ஆங்கில நூலில் கிரேக்க இலத்தீன் கவிதைகளோடு தமிழ் இயற்கைக் கவிதைகளை ஒப்பிட்டார். இவரின் இந்திய சிந்தனையும் உரோம ஸ்டோய்க்கு வாதம் என்ற பேருரை சிறந்த ஒன்றாகும்.

குறிப்பு

**பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை**

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை தமிழ் ஒப்பிலக்கிய முன்னோடிகளுள் ஒருவரான இவர் தமது காவிய காலம் என்ற நூலில் வீரயுகத்தைச் சார்ந்தனவாக நமது புறப் பாடல்கள் உள்ளன என்பதனைத் தெளிவுப்படுத்தினார். தமிழில் ஒப்பிலக்கிய ஆய்வு அவசியம் என்பதனைத் திராவிட இலக்கியங்களையும் இந்திய இலக்கியங்களையும் ஒப்பு நோக்கிக் கற்றவனுடைய இலக்கிய அறிவு மிகவும் பரந்துள்ளதாயும் செழிப்புள்ளதாயும் இருத்தல் ஒருதலை. இந்த ஒப்பு நோக்குக் கல்வி நமது அறிஞர்களுடைய குறுகிய மனப்பான்மை என்ற திண்ணிய சுவரை இடித்துத் தகர்த்துவிடும்…. இவ்வகைக் கல்வியின் மேல் எழுந்த ஆராய்ச்சிக்கு ஒரு புதிய பொருண்மையும் ஏற்படும் என்கிறார் டாக்டர் மு.வரதராசனார், டாக்டர்.வ.சு.ப.மாணிக்கம், டாக்டர்.எஸ்.இராமகிருஷ்ணன், சிதம்பர ரகுநாதன், டாக்டர்.மணவாளன், டாக்டர்.தமிழண்ணல் போன்றோர் இத்துறையில் பல சாதனைகளைச் செய்துள்ளனர். ஒப்பீட்டுத் துறையில் ஈடுபட்டு வை.சச்சிதானந்தன், செல்லப்பன், இராமகிருஷ்ணன் போன்றோர் டாக்டர் பட்டமும் பெற்றுள்ளனர்.

டாக்டர்.தொ.பொ.மீனாட்சி சுந்தரனார் ஒப்பிலக்கியத்தைத் தமிழகக் கல்விக் கூடங்களில் பாடமாக்கினார். மூன்றாவது உலகத் தமிழ்நாட்டில் தமிழும் மற்ற கலாச்சாரங்களும் என்ற கட்டுரை ஒப்பிலக்கியப் படிப்பிற்குத் தூண்டுதலாக இருந்தது. டாக்டர்.வ.சு.ப.மாணிக்கம் சங்க காலக் காதலைக் கிரேக்க வீரயுகப் பெண்மையுடன் ஒப்பிட்டார். இவர் ஒப்பியல் நோக்கு என்ற நூலையும் வெளியிட்டார். டாக்டர் வை.சச்சிதானந்தன் பாரதியின் சிந்தனைகளைப் பிற நாட்டுச் சிந்தனைகளுடன் ஒப்பிட்டார். இவரின் ‘பாரதியின் மேல்நாட்டுச் சிந்தனையின் தாக்கம்’ (1967) The impact of western thought on Bharathi என்ற நூலும், Whitman and Bharathi A Comparative Study (1978) என்ற நூலும் தமிழில் ஒப்பிலக்கிய ஓர் அறிமுகம் (1985) என்ற நூலும் தமிழ் ஒப்பிலக்கிய வரலாற்றில் சிறந்த பங்குடையவனவாகும். டாக்டர்.எஸ்.இராமகிருஷ்ணனின் ‘கம்பனும் மில்டனும்’ என்ற நூலும் ‘The Epic Muse: The Ramayana and Paradise Lost’(1971) என்ற நூலும் தலை சிறந்த படைப்புக்களாகும். டாக்டர் கே.செல்லப்பனின் ‘Shakespeare and Elango as Tragedians’ (1985) என்ற நூலும், சிதம்பர ரகுநாதனின் ‘பாரதியும் ஷெல்லியும்’ என்ற நூலும், ஜான் சாமுவேலின் ‘ஷெல்லியும் பாரதியும்’ ஒரு புதிய பார்வை, ‘இலக்கிய ஒப்பாய்வுக் களன்கள்’ என்ற நூல்களும் சிறந்த படைப்புக்களாகும். தமிழ்நாட்டில் ஒப்பிலக்கியத்தை நன்கு அறிமுகப்படுத்தியவர்களில் பேராசிரியர் தமிழண்ணலுக்குப் பெரும்பங்கு உண்டு. இவரின் ‘ஒப்பிலக்கிய அறிமுகம்’ என்ற நூலும், ‘சங்க இலக்கிய ஒப்பீடு’ இரு தொகுதிகளும் பல பல்கலைக்கழகங்களில் பாட நூல்களாக உள்ளன.

இன்று பல்கலைக்கழகங்களில் பாடமாக ஒப்பிலக்கியம் உள்ளது. மதுரை காமராசர் பல்கலைக்கழகம் முதன்முதலில் ஒப்பிலக்கியத்தைப் பாடமாக்கியது. இப்பல்கலைக்கழகம் 1978, 84 ஆண்டுகளில் கோடைக்கால ஒப்பிலக்கிய பயிற்சி பட்டறைகளை நடத்தியது. ஆய்வாளர்களும் மாணவர்களும் இன்று விரும்பிப் போற்றுகின்றனர்.

எஸ்.இராமகிருஷ்ணன் எழுதிய ‘கம்பனும் மில்டனும்’ (1956) நூல் சிறந்த ஒப்பிலக்கிய நூலாக விளங்கியது. இவர் இதே பொருளில் ஆய்வு மேற்கொண்டு The Epic Muse: The Ramayana and Paradise Lost (1971) என்ற தலைப்பில் டாக்டர் பட்டம் பெற்றார். பிறகு புதிய பார்வையில் கம்பனையும் மில்டனையும் ஒப்பிட்டு நூலாக வெளியிட்டுள்ளார். தமிழ் ஒப்பிலக்கிய ஆய்வில் இவரின் ஆய்வுகள் சிறந்த வழிகாட்டுதலாக அமைந்துள்ளன.

ஜி.வன்மிகநாதன் மாணிக்கவாசகரையும் ரூமி என்ற பாரசீகக் கவிஞரையும் ஒப்பிட்டுள்ளார். சிதம்பர ரகுநாதன் ‘கங்கையும் காவிரியும்’ என்ற நூல் தாகூரையும் பாரதியையும் ஒப்பிடுகிறது. இவரின் பாரதியும் ஷெல்லியும் என்ற நூலும் சிறந்த ஒப்பிலக்கிய நூலாக விளங்குகிறது. டாக்டர் எம்.முத்துராமன் கீதையையும் குறளையும் ஒப்பிட்டு நூலாக வெளியிட்டுள்ளார். ஜான் சாமுவேல் பாரதியையும் ஷெல்லியையும் ஒப்பிட்டுத் தமிழில் தந்துள்ளார். இவரின் ‘இலக்கிய ஒப்பாய்வுக் களன்கள்’ என்ற நூல் சிறப்பானதொரு நூலாகும்.

முனைவர் சண்முக.செல்வகணபதி புரட்சிக் கவிஞர் பாரதிதாசனையும், அமெரிக்கக்கவிஞன் கார்ல் சான்ட்பர்க்கையும் ஒப்பிட்டுப் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் மூலம் டாக்டர் பட்டம் (1991) பெற்றுள்ளார். இவரின் ஒப்பிலக்கிய நோக்கில் தமிழ் இலக்கியம் (1986) என்ற நூல் ஒப்பிலக்கியம் பயிலும் மாணவர்கட்குச் சிறந்த வழிகாட்டியாக அமைந்துள்ளது.

## 7.15. தமிழ் இலக்கியங்களை ஒன்றுடன் ஒன்று ஒப்பிடல்

தமிழ் இலக்கியங்களை ஒன்றுடன் ஒன்றினை ஒப்பிடல் என்ற முறையில் ஆய்வுகள் பலவும், கட்டுரைகள் பலவும் வந்துள்ளன. கபிலர் - பரணர் ஒப்பீடு, சிலம்பு மேகலை ஒப்பீடு, பெரியாழ்வார் திருப்பல்லாண்டு சேந்தனார் திருப்பல்லாண்டு ஒப்பீடு, தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சி மாணிக்கவாசகர் திருப்பள்ளியெழுச்சி ஒப்பீடு, கம்பராமயணமும் அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனையும் ஒப்பீடு, இன்னாநாற்பது இனியவை நாற்பது ஒப்பீடு, சிலம்பும் கண்ணகி புரட்சிக் காப்பியமும் ஒப்பீடு, மணிமேகலையும் மணிமேகலை வெண்பாவும் ஒப்பீடு, காவியமாந்தர்கள் ஒப்பீடு, தேம்பாவணி இயேசு காவிய ஒப்பீடு போன்ற பல்வேறு ஒப்பிலக்கிய ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பாரதிதாசன்-வாணிதாசன் பாடல்களில் உள்ள இயற்கைப் பாடல்களைப் பேராசிரியர் காத்தையன் ஒப்பிட்டு டாக்டர் பட்டம்

பெற்றுள்ளார். சி.கனகசபாபதி 'பாரதி – பாரதிதாசன் கவிதை மதிப்பீடு' என்ற தலைப்பில் மதிப்பிட்டுள்ளார். ரீட்டா எஸ்.முத்து தேம்பாவணி சீறாப்புராணக்கதைகள் ஓர் ஒப்பாய்வு என்ற தலைப்பில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். டாக்டர் எஸ்.பத்மா நாவுக்கரசர் நம்மாழ்வார் பாடல்களில் சமயநெறி, பக்தி நெறி ஒப்பீடு என்ற தலைப்பில் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார். டி.பரமேஸ்வரி என்பார் கம்பராமாயணம் - வில்லிபாரதக் காப்பியங்களில் எதிர்நிலைப் பாத்திரங்களை ஒப்பிட்டுள்ளார். இந்நூலாசிரியர் பாரதிதாசனையும் கார்ல் சான்ட்பர்க்கையும் ஒப்பிட்டு முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவை போன்ற பல்வேறு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு முனைவர், ஆய்வில் நிறைஞர் பட்டங்கள் பெறப்பட்டுள்ளன.

## 7.16. வழிகாட்டும் தமிழ் நூல்கள்

ஒப்பிலக்கிய ஆய்வுக் கோட்பாடுகளையும் செயல்முறைகளையும் பற்றி அண்மைக் காலத்தில் நூல்கள் பல தோன்றி வருகின்றன. இந்நூல்கள் ஒப்பிலக்கிய ஆய்வாளர்களுக்குச் சிறந்த வழிகாட்டிகளாக அமைந்து வருகின்றன. டாக்டர் தமிழண்ணல் அவர்களின் ஒப்பிலக்கிய அறிமுகம் (1973), க.கைலாசபதி அவர்களின் ஒப்பியல் இலக்கியம் (1969), டாக்டர் வி.சச்சிதானந்தம் அவர்களின் 'ஒப்பியல் இலக்கியம் (ஓர் அறிமுகம்) (1985) ஜான் சாமுவேல் அவர்களின் 'இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள் (1978), முனைவர் கா.செல்லப்பன் அவர்களின் ஒப்பிலக்கியம் கொள்கைகளும் செயற்பாடுகளும்' (1995), சண்முக.செல்வகணபதி 'ஒப்பிலக்கிய நோக்கில் தமிழ் இலக்கியம்' (1986) எனும் இவை போன்ற நூல்கள் தமிழின் ஒப்பிலக்கியக் கோட்பாடுகளை அறிமுகப்படுத்திய தமிழ் நூல்களாக விளங்குகின்றன.

இவையல்லாமல் திருக்குறளைப் பிறமொழி நீதிநூல்களுடன் ஒப்பிட்டு உரைக்கும் க.த.திருநாவுக்கரசு அவர்களின் 'திருக்குறள் நீதி இலக்கியம்' (1977) என்ற நூலும், டாக்டர் தமிழண்ணல் அவர்களின் சங்க இலக்கிய ஒப்பீடு(1979,85) இரு தொகுதிகளும், கதிர் மகாதேவன் அவர்களின் பழந்தமிழர் வீரப்பண்பாடு ஒப்பிலக்கியக் கணிப்பு (1980) என்ற நூலும், ஒப்பிலக்கிய நோக்கில் சங்ககாலம் (1975) என்ற நூலும், ரகுநாதனின் பாரதியும் ஷெல்லியும் (1985) என்ற நூலும், பாலாவின் 'பாரதியும் கீட்சும்' (1932) என்ற நூலிலும், பாரதிபித்தன் அவர்களின் ஆத்திசூடி இலக்கியம் என்ற நூலும், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையின் கம்பரும் வான்மீகியும் என்ற நூலும், ஜான் சாமுவேல் அவர்களின் ஷெல்லியும் பாரதியும் ஒரு புதியபார்வை என்ற நூலும் (1980) முனைவர் சண்முக செல்வகணபதியின் பாரதிதாசன் கார்ல்சன்பர்க்கு ஓர் ஒப்பியலாய்வு' (1998) என்ற நூலும் முன்னோடி நூல்களாக விளங்கி தமிழில் ஒப்பிலக்கிய வளர்ச்சியை மேம்படுத்தி வருகின்றன.

## 7.17. பல்கலைப்பாடத்திட்டம்

தமிழ்நாட்டுப்பல்கலைக்கழகங்களில் மொழிப்பாடம் கற்பவர்களுக்கு ஒப்பிலக்கியம் தனித்தாளாக அறிமுகப்பட்டுள்ளது. இவ்வகையில் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் ஏனைய பல்கலைக்கழகங்களுக்கு முன்னோடியாக விளங்கியது. தமிழ் முதுகலை மாணவர்கட்குச் சிறப்புப் பாடமாக ஒப்பிலக்கிய கொள்கைகள் என்ற தாளை அறிமுகப்படுத்தியது. மேலும் சங்க இலக்கிய ஒப்பீடு, தமிழ், மலையாள இலக்கிய ஒப்பீடு என்ற தாள்கள் வழி மாணவர் உலகிற்கு ஒப்பிலக்கியத்தை அறிமுகப்படுத்தியது. பின்பு சென்னை, பாரதிதாசன் பாரதியார், அண்ணாமலை போன்ற தமிழகப் பல்கலைக்கழகங்களில் பாடமாக்கப்பட்டது. ஒப்பிலக்கியப் பயிற்சிப் பட்டறை, புத்தொளிப்பயிற்சிகளை மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் போன்ற அமைப்புக்கள் நடத்தி வருகின்றன. தன்னாட்சிக் கல்லூரிகளிலும் ஒப்பிலக்கியப் பாடம் கற்பிக்கப்படுகிறது.

## 7.18. உலகத்தமிழ் மாநாடுகள்

உலகெங்கிலும் உள்ள தமிழர்களை ஒன்றுகூட்டி, தமிழ் ஆய்வை உலகத் தமிழ் மாநாடுகள் நடத்தி வருகின்றன. இதுகாறும் எட்டு மாநாடுகள் நடைபெற்றுள்ளன. இம்மாநாட்டு மலர்களில் வந்துள்ள ஒப்பிலக்கியக் கட்டுரைகள் இத்துறை வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிந்துள்ளன. முதலாவது உலகத் தமிழ் மாநாட்டில் மலேசியப் பல்கலைக்கழக இந்தியவியல் துறை விரிவுரையாளர் எஸ்.சிங்காரவேலு அவர்கள் தென்கிழக்கு ஆசியப் பகுதிகளில் வழங்கும் இராமசரிதங்களை ஒப்பியல் நோக்கில் பகுத்து ஆராய்ந்தார். சென்னையில் நடைபெற்ற (1968) உலகத் தமிழ் மாநாட்டில் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் வி.ஐ.சுப்பிரமணியம் அவர்கள் ‘தமிழ் இலக்கிய வரலாற்றில் திருப்பு முனைகள்’ என்னும் பொருளில் ஆற்றிய உரையில் ஒப்பிலக்கிய ஆய்வின் இன்றியமையாமையை விளக்கினார். இவ்வாறான முயற்சிகளால் ஒப்பிலக்கிய ஆய்வுப் பரப்பு எல்லையற்று பரந்து விளங்குகிறது.

## 7.19. ஒப்பிலக்கிய ஆய்வுப்பரப்பு – விளக்கம்

உலக மொழிகள் அனைத்திலும் இலக்கிய, இலக்கண அடிப்படையிலும் சமுதாயம், பண்பாடு அடிப்படையிலும் ஒப்பிலக்கியம் தொடங்கி வளர்ந்து பரந்துபட்டு காணப்படுவதை இக்கூறு விளக்கிற்று.

குறிப்பு

## வினா-விடை பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

**1) தமிழில் யாப்பு வடிவம் எங்ஙனம் எழுதப்பட வேண்டும்?**
அறிவியல் முறைப்படி எழுதப்பட வேண்டும்.

**2) Theory of Reception - விளக்கம் தருக.**
ஏற்றல் கொள்கை

**3) ஆலவா என்றால் என்ன?**
பழம் மரபுக்கதை (தொன்மம்)

**4) நால்வகை இலக்கியங்கள் யாவை குறிப்பிடு.**
1. தேசிய இலக்கியம் 2. உலக இலக்கியம் 3. பொது இலக்கியம்
4. ஒப்பிலக்கியம்

**5) இந்தியாவில் ஒப்பிலக்கியத் துறையை ஏற்படுத்தியவர் யார்?**
1957-இல் ஜாதவ்பூர் பல்கலைக்கழகத்தில் புத்ததேவபோஸ் என்பார் ஏற்படுத்தினார்.

**II. ஐந்து மதிப்பெண் வினா-விடை**

**6) உலக மொழிகளில் ஒப்பிலக்கியத்தை அறிய உதவும் காரணிகளை விவரி.**
(7.3, 7.4, 7.5, 7.6, 7.7, 7.8 ஆகியவற்றைத் தொகுத்து சுருக்கி எழுதுக.)

**7) உலகெங்கிலும் புராணக் கதைகள் இருப்பதை நிறுவுக.**
(7.9 தரும் செய்திகளை எழுதுக)

**8) நால்வகை இலக்கியப் பார்வைகளை விவரி.**
(7.12 முழுவதும் 7.12.1, 2, 3, 4 வரை)

**9) இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் ஒப்பிலக்கியம் பெறுமிடத்தை எழுதுக.**
(7.13, 7.14, 7.15, 7.16, 7.17, 7.18 ஆகிய செய்திகளை தொகுத்து சுருக்கி எழுதுக.)

**III. பத்து மதிப்பெண் வினா-விடை**

**10)** ஒப்பிலக்கிய ஆய்வுப் பரப்பு குறித்து கட்டுரை எழுதுக.
(கூறு 7-ல் உள்ள செய்திகளைத் தொகுத்து சுருக்கி எழுதுக)

# கூறு – 8 : ஒப்பிலக்கியக் கோட்பாடு – பிரெஞ்சுக் கோட்பாடு



## 8.1. முன்னுரை

ஒப்பிலக்கியக் கோட்பாடுகளின் அடிப்படையில் தனி இலக்கியப் படைப்புக்களுக்கிடையே ஒப்பீடு செய்தல், இலக்கியப் படைப்புக்களில் அடிக்கருத்துக்களின் அடிப்படையில் ஒப்பிடுதல், இலக்கிய வகைமைகளின் அடிப்படையில், காலப்பகுதி அடிப்படையில் ஒப்பிடுதல், இலக்கிய இயக்கங்களின் அடிப்படையில் ஒப்பிடுதல் என இலக்கியச் செல்நெறிகள் பல உள்ளன. இச்செல்நெறிகளுக்கு ஒப்பிலக்கியக் கோட்பாடுகளே பெரிதும் துணைநிற்கின்றன. அதில் பிரெஞ்ச் கோட்பாடு பெறும் இடத்தை காணலாம்.

## 8.2. நோக்கம்

பிரெஞ்ச் கோட்பாடு என்றால் என்ன, ஒப்பிலக்கிய உலகிற்கு பிரெஞ்ச் கோட்பாட்டின் பங்களிப்பு யாது, இது தொடர்பான ஆய்வாளர்கள், ஆய்வுகள் ஆகியவற்றை அறிந்து கொள்வது இக்கூறின் நோக்கமாகும்.

## 8.3. ஒப்பிலக்கியக் கோட்பாடு

'ஒப்பிலக்கியம் பண்பாடுகளைக் கடந்து இலக்கியப் பிரதிகளை ஆராய்வதில் ஈடுபடுகின்றது. இது பல்துறை சார்ந்ததாகும். ஒப்பிலக்கியத்துறை காலமும் வெளியும் கடந்த இலக்கியங்களின் தொடர்பு வடிவங்களைக் கருத்தில் கொள்கின்றது'' என சூசன் பாசுனெட் இன்றைய ஒப்பிலக்கியத்தின் நோக்கினையும் போக்கினையும் குறிப்பிடுகின்றார். பிரிட்டனைச் சேர்ந்த ஒப்பிலக்கியப் பேராசிரியர் சூசன் பாசுனெட்டின் "ஒப்பிலக்கியம் - ஒரு விமர்சன அறிமுகம்'' (1998) (Comparative Literature – A Critical Introduction) என்னும் ஒப்பிலக்கிய நூலினுள் ஒப்பிலக்கியத்துறையின் இரு ஆய்வுப் பள்ளிகளைச் சார்ந்த பிரெஞ்சுக் கோட்பாட்டையும், அமெரிக்கக் கோட்பாட்டையும், விமர்சனத்திற்கு உட்படுத்தியுள்ளார். அவர் இந்நூலினுள் இன்றைய சூழலில் அந்தக் கோட்பாடுகளின் பொருத்தம், ஏற்புடைமை மற்றும் பொருத்தமின்மை குறித்து விரிவாக விவாதித்து தன் சிந்தனைகளைப் பதிவு செய்திருக்கின்றார். அவர் பின்னை நவீனத்துவம், பின்னைக் காலனியம், பண்பாட்டு ஆய்வுகள் ஆகிய புதிய கோட்பாடுகளோடு ஒப்பிலக்கியத்தை உரையாடவும் உறவாடவும் செய்து அதனை அடுத்த கட்டத்திற்கு நகர்த்திச் செல்கின்றார். மொழிபெயர்ப்பில், பாலினம் சார்ந்த அடிக்கருத்தியல் ஆய்வுகள், பண்பாட்டு ஆய்வுகள் ஆகியனவற்றை

எதிர்கால ஒப்பிலக்கியத்தின் ஆய்வுப் பரப்புகளாக பாசுனெட் எடுத்து முன் வைக்கிறார்.





. 'ஒப்பிலக்கியம்' என்ற தொடர் இலக்கியக் கல்வியைக் கற்பித்தலில் 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே ஐரோப்பாவில் பயன்படுத்தப் ˙பட்டிருக்கின்றது. இத்தொடர் பிரான்சு நாட்டில்தான் கி.பி.1816 'Course de Literature Comparee' எனப் பயன்படுத்தப் பட்டிருக்கின்றது. இதனைத் தொடர்ந்து ஆங்கில இலக்கியத்தில் கி.பி. 1848இல் மாத்யூ ஆர்னால்டு என்பவர் 'Comparative Literature' என்னும் தொடரைப் பயன்படுத்தியுள்ளார். கி.பி. 1854இல் ஜெர்மனியில் மோரிஸ்கேரியர் என்பவரால் 'Vergleichande Literature' என்ற தொடர் கையாளப்பட்டிருக்கின்றது. ஒப்பிலக்கிய ஆய்வுகள் பல்கலைக்கழக அளவில் கி.பி.1890களில் பிரான்சு நாட்டிலும் அமெரிக்காவிலும் தொடங்கிவிட்டன.

'ஒப்பிலக்கியம்' என்னும் இலக்கியத்துறையைக் கொள்கை அடிப்படையில் பிரெஞ்சு நாட்டினரே உலகிற்கு முதன்முதலில் அறிமுகப்படுத்தியுள்ளனர். அவர்கள் ஒப்பிலக்கியத்தை இலக்கிய வரலாற்றின் ஒரு பகுதியாகவே கருதினர். ஐரோப்பிய நாடுகள் அடிமைத்தளையிலிருந்து விடுதலை பெற்று மக்களாட்சி மலருவதற்குப் போராடிய சூழலில், 'தேசியம்' என்ற சிந்தனைப் போக்கு உலக அரசியலின் மைய விசையாகச் செயல்பட்ட சூழலில்தான் பிரான்சு நாட்டில் ஒப்பிலக்கியம் தோன்றியது. இதன் விளைவாக20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒப்பிலக்கியத்தினை ஒரு தனித்துறையாக உலகிற்கு அறிமுகப்படுத்திய புருனேடீர் முதலான பிரெஞ்சு ஒப்பிலக்கியச் சிந்தனையாளர்கள், ஒப்பிலக்கியத்தைத் தேசியப் பண்புகளைத் தேடுவதற்கும் வரையறுப்பதற்குமான ஒரு ஊடகமாகப் பயன்படுத்தினர். பிரெஞ்சு, ஆங்கிலம், ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த ஒவ்வொருவரும் அந்தந்த நாட்டினரின் தலைசிறந்த படைப்பாளிகளின் சிறந்த தேசியப் பண்புகளைப் புரிந்து கொள்வதற்கு ஒப்பிலக்கிய வரலாறு அவர்களைக் கூர்மைப்படுத்த வேண்டுமென வலியுறுத்தினார் புருனேடீர்.

பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வு இலக்கியத் தொடர்களையும், தாக்கங்களையும் கண்டறிவதாகவே அமைந்திருந்தது. பிரெஞ்சு நாட்டின் ஒப்பிலக்கியத்தின் தந்தையாக விளங்கிய பால்வான் தீகம் (Paulvan Tieghem) 'பல்வேறு இலக்கியங்களுக்கிடையே நெருங்கிக் காணப்படும் உறவுநிலைகளைப் பற்றிய ஆய்வே ஒப்பிலக்கியம்' என ஒப்பிலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்தார். ஆதலால் பிரெஞ்சு நாட்டினரின் உறவுநிலை ஒப்பீட்டுக் கோட்பாடு, இலக்கியத்தின் படிப்பினைக் கண்டறியும் மூலமும் தாக்கமும் பற்றிய ஆய்வாகவே வளர்ந்தது. இந்த வகையான ஒப்பீட்டாய்வில் வரலாற்று நோக்கும் அறிவியல் அணுகுமுறையும் பிரதானமாகப் பின்பற்றப்பட்டன. படைப்பாளிகளுக்கு இடையிலான உண்மைத் தொடர்புகளைக்

காண்பதற்கு சமுதாய வரலாற்று நோக்கு நிலையினை மையமாகக் கொண்டனர். ஒப்பாய்விற்கு எடுத்துக் கொள்ளப்படும் இலக்கியங்களின் ஒத்த தன்மைகளை விளக்குவதற்கு காரணகாரிய ஆய்வுமுறையைக் (Cause and Effect Theory) கைக்கொண்டார்.

ஒப்பிலக்கிய ஆய்வுகளை ஓர் அறிவியல் பரிசோதனை முறையைப் போல நிகழ்த்திக்காட்ட முடியுமென ஹிப்போலைட் தெயின் என்னும் சமூகவியல் சார்ந்த ஒப்பிலக்கியத் திறனாய்வாளர்கள் கூறினர். பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வுகளில் அறிவியல் நோக்கும், மெய்ம்மைத் (facts) தொடர்களும் மிகுதியாக இடம்பெற்றமைக்கு அன்றைய ஐரோப்பாவில் 'காண்பதெல்லாம் உண்மை' என்னும் நேர்காட்சி வாதத் (Positivism) தத்துவக் கோட்பாடு மேலோங்கி இருந்தமையே முக்கியக் காரணமாகும். ஜே.எம்.கார், வில்லமெயின், ஆம்பியர், கையார்டு (Guyard) ஆகியோர் பிரெஞ்சு நாட்டின் முக்கியமான ஒப்பிலக்கியக் கோட்பாட்டாளர்கள் ஆவர். இவர்களின் ஒப்பிலக்கியக் கோட்பாடு தாக்கக் கோட்பாடு (Influence Theory) என்றழைக்கப்படுகின்றது.

ஐரோப்பா மற்றும் அமெரிக்க நாடுகளில் 1950கள் வரை பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வுமுறையான தாக்கக் கோட்பாடே செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது நினைவில் கொள்ளப்பட வேண்டிய வரலாற்று உண்மையாகும். 1960களில் ரெனிவெல்லக், ரிமாக் போன்ற அமெரிக்க ஒப்பிலக்கியக் கோட்பாட்டுச் சிந்தனையாளர்கள், பிரெஞ்சு நாட்டு ஒப்பிலக்கியக் கோட்பாட்டாளர்களின் தாக்கக் கோட்பாட்டை மறுதலித்தது இணைநிலை கோட்பாட்டு ஆய்வு முறையினை முன்வைத்தனர். இவர்கள் இலக்கியத்தைச் சமுதாயத்தோடும் வரலாற்றின் போக்குகளோடும் தொடர்புப்படுத்துவதை வன்மையாகக் கடிந்தனர். இலக்கியத்தைத் தனிமுழுமையாகவும், தனிப்பொருளாகவும், கற்பனையின் வெளிப்பாடாகவும் பயிலப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர். இவர்கள் பிரெஞ்சு நாட்டின் அறிவியல் அணுகுமுறைக்கு மாறாக அழகியல் கோட்பாட்டு அணுகுமுறையை முன்வைத்தனர். அத்துடன் இலக்கியத்தை இலக்கியத்தோடு மட்டும் அல்லாமல் ஏனைய அறிவுத்துறைகளுடனும் ஒப்பிடலாம் என்று ஒப்பிலக்கியத்தின் எல்லையையும் பரப்பையும் விரிவுபடுத்தினர்.

'ஒப்பிலக்கியம் என்பது குறிப்பிட்ட நாட்டெல்லையைத் தாண்டிய இலக்கிய ஆய்வு. அது இலக்கியகளுக்கிடையிலான உறவுநிலைகளை ஒருபுறம் ஆராய்கின்றது. மறுபுறம் இலக்கியத்தை நுண்கலைகள், இசை, ஓவியம், சிற்பம், தத்துவம், வரலாறு, அரசியல் முதலான ஏனைய அறிவுத்துறைகளுடனும் ஒப்பிட்டு ஆராய்கின்றது'' என்பது ரிமாக்கின் உலகப் புகழ்பெற்ற ஒப்பிலக்கியக் கொள்கை வரையறையாகும்.

விளக்கமுறையும் கிடைத்தளத்தன்மையும் கொண்ட அமெரிக்க ஒப்பிலக்கியக் கோட்பாடு 'புதுத்திறனாய்வு' (New Criticism) என்ற திறனாய்வு முறையின் பின்னணியில் தோன்றியதாகும். ஆலன்டேட், கிளியாந்த், புரூக்ஸ் ஆகிய அமெரிக்கப் புதுத்திறனாய்வாளர்கள்,

இலக்கியத்தைப் படைப்பாளிகளோடும் சமூகத்தோடும் தொடர்புபடுத்தாமல் தனிப்பொருளாகவும் முழுச்சுதந்திரமானதாகவும் கற்பனையின் வெளிப்பாடாகவும் கண்டறிந்து வெளிப்படுத்தியதே அவர்களுடைய ஒப்பிலக்கியப் பங்களிப்பாகும்.

குறிப்பு

## 8.4. காரணகாரிய முறையில் ஆராய்தல் (Cause and Effect Theory Method)

காரணமின்றிக் காரியம் இல்லை. காரணமும் காரியமும் பிரிக்க முடியாதவை. ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு காரணம் வேண்டும். காரியத்தின்பாற்பட்டது விளைவு ஆகும். எல்லா விளைவுகளுக்கும் காரணம் உண்டு. காரணங்களும் சூழ்நிலைகளும் மாறாதிருக்கும் வரையில் அவற்றினால் ஏற்படும் விளைவுகளும் மாறாமல் இருக்கும். இந்த அறிவியல் கோட்பாட்டின் அடிப்படையில் இயங்குவதே காரண-காரிய ஆய்வு முறையாகும். பிரெஞ்சுக் கோட்பாட்டாளர்கள் சமூக, அரசியல், பொருளியல் காரணங்களின் அடிப்படையில் இலக்கியம் தோன்றுவதாகக் கருதுவர். ஒப்பிலக்கிய ஆய்வாளர் ஹிப்போலைட் தெயின், 'இலக்கிய வரலாறு என்பது வரலாற்றைச் சுருக்கமாகத் தரும் கையேடு' எனக் குறிப்பிடுவது இதனை உணர்த்தும்.

நாட்டுப்புறப்பாடல்கள் வாய்மொழித்தன்மை கொண்டவை. இலக்கியங்களுக்கு வேண்டிய கருப்பொருள்களையும் அடி மூலப்பொருட்களையும் நாட்டுப்புறப்பாடல்களும், நாட்டுப்புறக்கதைப் பாடல்களும் அளிக்கின்றன. படைப்பிலக்கியங்களுக்கு நாட்டுப்புறப் பாடல்களின் அடிப்படைக்கூறுகள் உண்டு என்பதை வலியுறுத்தி, இலக்கியங்களின் தோற்றம், வளர்ச்சி குறித்து ஆராய்ந்தால் இவற்றை நன்கு புரிந்துகொள்ள முடியும் என பிரெஞ்சுக் கோட்பாட்டாளர்கள் கருதினார்கள். மேலும், இலக்கியம் நாடுவிட்டு நாடு பரவுகின்ற முறைகளைக் கண்டறிவதற்குக் காரணகாரிய ஆய்வு பெரிதும் பின்புலமாகவும் உதவியாகவும் இருந்திருக்கின்றது.

## 8.5. பிறப்புறவு ஆய்வு முறை

ஜெர்மனியில் கதே 'உலக இலக்கியம்' பற்றித் தூவிய வித்து 19 ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 20 ஆம் நூற்றாண்டிலும் ஐரோப்பாவில் முளைவிட்டது. இது இலக்கியத்தின் பொதுமைப் பண்புகளைத் தெளிந்து அறியும் ஆர்வத்தைத் தூண்டியது. கதேயின் நூல்கள் அனைத்தும் பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்க்கப்பட்டன. அந்நூல்களின் தாக்கத்தை பிரெஞ்சு படைப்பாளிகளும் திறனாய்வாளர்களும் நன்கு உணர்ந்தனர். இச்சூழலில் ஜெர்மனியில் மொழிநூல் ஆய்வுகளில் மொழி ஒப்பீடு வளர்ந்தது. அதுவே இலக்கிய ஒப்பீட்டிற்கும் ஒரு வழிகாட்டியாக அமைந்தது. பழைய புனைவியல் (Romanticism) வளர்ச்சிபெற்று மாறியது. அதற்குப் பதிலாக 'நேர்க்காட்சி வாதம்' (Positivism) என்னும் கோட்பாடு தலைமை பெற்றது. புனைவியற் காலத்தில் 'தேசிய இனக்கருத்து' என்ற

கருத்தாக்கம் நன்கு கால்கொண்டு முதிர்ந்தது. அது அனைத்து நாட்டு இலக்கியங்களின் போக்காகவும் அமைந்தது. இம்மனநிலையும் கூவியரின் உடற்கூற்றுப் பகுப்பாய்வு ஒப்பீட்டு முறைகள் புகழ்பெற்று ஏற்றுக்கொள்ளப்பட்ட சூழ்நிலையும் பிரெஞ்சில் ஒப்பிலக்கியம் வளரக் காரணங்களாக அமைந்தன.

குறிப்பு

உறவுடைய மொழிகளில் காணலாகும் இலக்கியப் படைப்புக்களை ஒப்பிட்டு ஆராய்ந்து அவற்றின் மூலத்தையும் தாக்கத்தையும் கண்டறியும் உறவுநிலை ஒப்பீட்டாய்வு பிரெஞ்சு நாட்டில் பிரபலமானது. பிரான்சு நாட்டில் 19 ஆம் நூற்றாண்டில் இம்மூலம் மற்றும் தாக்க ஆராய்ச்சியே இலக்கிய ஒப்பீட்டில் மேலோங்கி நின்றது. இனமொழிகளிடையே காணப்படும் இலக்கிய உறவு ஆராய்ச்சியை 'பிறப்புறவு ஆய்வு முறை' (Genetic Research) என்பர். இதற்குச் சான்றாக இராபர்ட் கால்டுவெல்லின் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (A comparative Grammer of the Dravidian languages, 1856) என்ற ஒப்பியன் மொழிநூலைக் குறிப்பிடலாம். இந்நூலினுள் திராவிட மொழிகளும் திராவிட மொழி இலக்கியங்களும் ஆராயப்பட்டுள்ளன.

ச.வே.சுப்பிரமணியன் 'திராவிட மொழி இலக்கியங்கள்' என்னும் ஒப்பாய்வு நூலில் கன்னடம், தெலுங்கு, மலையாளம், குடகு, பிற திராவிட மொழிகளின் இலக்கியங்களை தொடக்ககால இலக்கியங்கள், அற இலக்கியங்கள், பிற இலக்கியங்கள், காப்பியங்கள், இராமாயண நூல்கள், பாரத நூல்கள், பிரபந்த நூல்கள் (சிற்றிலக்கியங்கள்). நாட்டார் இலக்கியங்கள், சிறுவர் இலக்கியங்கள், தற்காலக் கவிதைகள், உரைநடை இலக்கியங்கள், நாவல்கள், சிறுகதைகள், நாடகங்கள், மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் என இலக்கிய வகைமைகளின் அடிப்படையில் திராவிட மொழிகளின் இலக்கியங்களை பகுப்பாய்வு செய்து ஒப்பீடு செய்திருப்பது மற்றொரு சிறந்த சான்றாகும்.

பிறப்புறவு ஆய்வுமுறையானது கருத்தடிப்படையில் (Thematology) இலக்கியங்களிடையே இடம்பெயர்ந்தவற்றைக் கண்டறிவதும், வடிவ அடிப்படையில் (Morphology) இனமொழிகளிடையே பரவியுள்ளனவற்றைக் கண்டறிவதும் என இருநிலைகளில் வளர்ந்துள்ளது. பொதுவாக இலக்கியப் படைப்புக்களின் அடிக்கருத்துக்கள் (Themes), குறிக்கோள்கள் (Idea and motifs) கதைப்பின்னல்கள் (Plots and plot construction), இலக்கிய வகைகள் (Genres), வடிவம் (Form), நடை(Style), இலக்கிய உணர்வு (feeling) போன்றனவற்றில் பெற்றது என்ன? புகுத்தியது யாது? என (sources and influence) ஆராய்வது வரை பிறப்புறவு ஆய்வு முறையில் அடங்கும்.

## 8.6. வரலாறு மற்றும் அறிவியல் பார்வை



ஒப்பிலக்கியக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வகுத்து ஒப்பியல் நோக்கில் ஆய்வு செய்வதற்குப் பிரெஞ்சுக்காரர்கள் வரலாற்று

நோக்கினையும் அறிவியல் பார்வையையும் முதன்மையாகக் கொண்டிருந்தனர். இலக்கியத்தை வரலாற்று நோக்கில் (Historical view) தக்க பின்புலங்களில் ஆராய்வதே பிரெஞ்சுக் கோட்பாடு எனச் சுருக்கமாகச் சொல்லிவிடலாம். அவர்கள் இலக்கியத்தை ஆராய்வதற்கு இவ் ஆய்வு முறைகளைப் பயன்படுத்தலாம் என நம்பினர். இதனை அறிவியல் வழி அணுகுதல் (Scientific Approach)என்றும் துணிந்து கூறலாம்.

## 8.7. ஒப்பீட்டு நூல்களின் வளர்ச்சி

சார்போனில், 'இலக்கிய ஒப்பீட்டுக் கழகம்' தோற்றுவிக்கப்பட்டது. பால்வான்தீகம் எழுதிய 'இலக்கிய ஒப்பீடு' (La Literature Compare) என்ற நூல் அடிப்படையான ஒப்பிலக்கியக் கொள்கை விளக்க நூலாகக் கொள்ளப்பட்டது. பெர்னாண்டு பால்டென்ஸ்பெர்கர் பிரெஞ்சுக் கோட்பாட்டின் முக்கியத்துவம் மற்றும் சிறப்புக்களை விளக்குவதற்கு மூன்று பெரும் நூல்களை எழுதிப் பதிப்பித்தும் வெளியிட்டார். ஜோசப் டெக்ஸ்ட் முதலாக பால்டென்ஸ்பெர்கெர், பால் ஹசார்ட், வான்தீகம், காரே, பாடைலன், ரொட்டியார் போன்ற பலரும் இவ் ஒப்பியல்துறையை முக்கிய இலக்கியக்கல்வியாக வடித்தெடுத்து நூல்களை எழுதியுள்ளனர். பால்டென்ஸ்பெர்கெர் 'இலக்கிய ஒப்பீட்டு ஆய்வுமலர்' (1921) ஒன்றை 'Revue de Literature Compare' என்ற பெயரில் தொடங்கினார்.

பிறப்புறவு ஒப்பாய்வுக் கல்வியை (Genetic Comparative Studies) அவர் பெரிதும் போற்றி வளர்த்தார். அவரைப் பின்பற்றி ஐரோப்பிய எழுத்தாளர்கள் பலரும், இலக்கியத்தோடு தொடர்புடைய பலவகைக் கலைகளின் தோற்றத்திற்கான மூல ஆதாரங்களையும் வளர்ச்சி நிலைகளையும் ஆய்ந்தறிந்து வெளிப்படுத்துவதே, இலக்கியத்தை நன்றாகப் புரிந்து கொள்வதற்கான சிறந்த வழிமுறையெனக் கருதினர். ஆகையால் முழுக்க முழுக்க மூலமும் தாக்கமும் குறித்ததான நூற்றுக்கணக்கான கட்டுரைகளை 'இலக்கிய ஒப்பீட்டு ஆய்வு மலர்' தேர்ந்தெடுத்து வெளியிட்டது இக்கோட்பாட்டிற்கு வலுச்சேர்த்தது எனலாம்.

## 8.8. 'ஆற்றல்மிக்க போக்கு' என்னும் ஒப்பீட்டுக் கொள்கை (Concept of Currents)

ஜான்ஜ் பிராண்டெஸ் (George Brandes) என்னும் ஒப்பிலக்கியச் சிந்தனையாளர் 'ஆற்றல் மிக்க போக்கு' (Concept of Currents) என்னும் புதிய ஒப்பீட்டுக் கொள்கையை முதன்முதலில் புகுத்தினார். பெர்டினாண்ட் புருனெடீர் 1900த்தில் பாரிசில் நடைபெற்ற முதலாவது ஒப்பீட்டறிஞர் மாநாட்டில் இக்கோட்பாட்டை ஆதரித்துப் பேசினார். காரணகாரிய ஆய்வினை மேற்கொண்டு அதனை முழுமையாக ஆதரித்துப் பரப்பிய ஹிப்போலைட் தெயின் (Hippolye Taine, 1828-1983) எந்தவிதமான இலக்கியத்திற்கும் காரணம் உண்டு என்பதை அழுத்தமாக வலியுறுத்திக் கூறினார். அக்காரணம் இயற்கையில் அல்லது பௌதீகத்தில்

பொருட்களின் சேர்க்கையினால் புதியதாக ஒன்று தோன்றுவதைப் போன்றது என விளக்கிக் காட்டினார். கலைகளின் ஒவ்வொரு படைப்பும் இவ்வாறு ஒரு காரணத்தால் தோன்றுவதுடன், அது எவ்வாறு தோன்றியதென விளக்கியுரைக்கப்படும் எனவும் அவர் வாதிட்டார்.

பூதவியல் பொருட்களைப் போலப் புலன்களால் உணரமுடியாதனவும் (Spiritual Events) அப்பொருட்தன்மையுடன், பொருட்தன்மை உடையன போல (Like Matter) தோன்றியனவே என்றார். குறிப்பிட்ட சில மூலக்கூறுகள் உருமாறியும் மறுஅமைப்புப் பெற்றதும் வேறுபட்ட தோர் உருவமைப்புடைய பொருட்களாவதைப் போல நுண்பொருட் கருத்துக்களும் இவ்வாறு மாறியமைந்து புதுவடிவங்களைப் பெற்று உருவாகின்றன. இங்ஙனம் ஒரு செடியின் வளர்ச்சிக்குக் காரணமான வேதியியல் மாற்றங்களைப் போல, ஒரு பாட்டு அல்லது ஓவியத்தின் படைப்பிற்கும், சிற்பியின் கைவண்ணத்தில் உருவாகும் சிலைகளுக்கும் கூட சில நுண்பொருட் கருத்துப் பரிமாற்றங்கள் காரணமாக அமைகின்றன. இவ்வாறு காரணகாரியக் கொள்கையை விளக்கிய தெயின் இலக்கிய ஒப்பீட்டாய்வாளர் இலக்கியத் தோற்றத்திற்கு மூலகாரணமான இனம், சூழ்நிலை, காலம், புலவனின் மனத்திறன் சார்ந்த கற்பனை, படைப்பாற்றல், படைப்புத்திறன் ஆகியனவற்றையும் மனத்தில் கொள்ளவேண்டும் என்றார். இவ்வகையில் அறிவியல் ஆய்வைப்போல இலக்கிய ஆய்வை மேற்கொள்ளலாம் என்றும், அதனைச் சரிபார்த்து மேலும் மேலும் நுணுக்கமாகவும் செம்மையாகவும் செய்துகாட்ட முடியும் என்றும் அவர் கூறினார். இறுதியாக ஒப்பியல் இலக்கியம், உலக இலக்கியம் என்ற கோட்பாட்டிற்கு நம்மை அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே அவரது குறிக்கோளாகும்.

பிரெஞ்சுக் கோட்பாட்டின்படி இரண்டும், இரண்டிற்கு மேற்பட்டனவுமான இலக்கியப் படைப்புக்களிடையே காணப்பெறும் உறவுநிலைகளை ஒப்பிட்டு ஆராய்வதுதான் ஒப்பிலக்கியம் அல்லது ஒப்பியல் இலக்கியம் என முதலில் கருதப்பட்டது. இதற்கு ஒப்பீட்டாய்வாளன் குறைந்தது இரண்டு மொழிகளில் தேர்ந்த அறிவு பெற்றிருக்க வேண்டுமென வலியுறுத்தினர். பெரும்பாலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் இலக்கியப் படைப்புக்கள் இடையே நிலவும் உறவுநிலைகளைக் காண்பதிலேயே சென்ற நூற்றாண்டில் ஒப்பியல் இலக்கியம் கருத்தைச் செலுத்தியுள்ளது.

## 8.9. பிரெஞ்சு – தேசியமும் ஆதிக்கமும்

உறவுடைய இலக்கியங்களுக்கு இடையிலான கொடுக்கல், வாங்கல் பரிவர்த்தனைகளைக் கண்டறிவதாகவே பிரெஞ்சு நாட்டின் ஒப்பிலக்கிய ஆய்வுகள் அமைந்திருந்தன. இதனை ஜே.எம்.காரின், ஒப்பிலக்கியம் இலக்கிய வரலாற்றின் ஒரு பகுதி இது பைன் (ஆங்கிலம்), புஷ்கின் (உருஷியா), கதே(ஜெர்மனி), கார்லைலே (ஆங்கிலம்), வால்டர் ஸ்காட் (ஆங்கிலம்)மற்றும் விக்னி (பிரெஞ்சு)

ஆகியோரின் படைப்புக்களுக்கிடையிலான மெய்ம்மைத் தொடர்புகளைக் கண்டறியும் பன்னாட்டு உறவுநிலைகள் பற்றிய ஆய்வு' என்னும் ஒப்பிலக்கிய வரையறை உறுதிப்படுத்துவதாகவும் வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளது. பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வாளர்களின் தாக்கக்கோட்பாட்டின் வரலாற்றுப் போக்கிலான பண்புகளையும், அறிவியல் பார்வையிலான அணுகுமுறையையும் அமெரிக்க ஒப்பீட்டாய்வாளர்கள் விமர்சனத்திற்கு உட்படுத்தினர். ஆனால் சூசன் பாசுனெட் மற்றொரு கோணத்தில் விமர்சித்தார். 'இரண்டு வேறுபட்ட அமைப்புக்களிலுள்ள இரண்டு பிரதிகளை அல்லது இரண்டு படைப்பாளிகளை ஆய்கின்ற இருமை ஆய்வாக அமைகின்றது. பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வு. இந்த ஆய்வுகளில் பிரெஞ்சு இலக்கியமும் இலக்கியப் படைப்பாளிகளும் கொடுப்பவராகவும், கொள்பவராகவுமே எப்போதும் செயல்பட்டிருக்கின்றது. இவ்வாறு உறவுநிலை ஆய்வாகவும், அன்பளிப்புச் செய்யும் செயல்முறையாகவும் இலக்கியத் தாக்கங்களைப் பேசுவதாகவும் பிரெஞ்சு ஒப்பிலக்கியம் அமைகின்றது. மேலும் பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள், பிரெஞ்சு இலக்கியங்களின் உயர்வு மனப்பான்மையைத் தங்கள் ஆய்வுகளில் பிரகடனப்படுத்தியுள்ளதாகவும் சூசன் பாசுனெட் மதிப்பிடுகிறார்.

பின்னையக் காலனியச்சூழல் ஒவ்வொரு பண்பாடும் இதரப்பண்பாடுகளை அங்கீகரிக்கும் 'திறவைத் தன்மை' கொண்டதாக அமையவேண்டுமென எதிர்நோக்குகின்றது. இதில் பண்பாட்டு மேலாதிக்கத்திற்கு இடமில்லை. அதாவது ஒரு குறிப்பிட்ட பண்பாட்டை மையப்படுத்தி உலகின் ஏனையப் பண்பாடுகளை விளிம்பு நிலைப்படுத்துவதற்கு இடமில்லை.

## 8.10. சூசன் பாசுனெட்டின் பங்களிப்பு

மேலைகநாடுகளில் படிப்படியாக வளர்ந்து 1950-1960 களில் ஒப்பிலக்கிய ஆய்வுகள் மிகுந்த செல்வாக்குடன் விளங்கின. ஆனால் 1970களில் இவ்ஆய்வுகள் தேக்கநிலையை நோக்கிச் சென்றன. 1970-1990 ஆகிய இருபதாண்டுகளில் ஐரோப்பாவில் புதுப்புதுத்திறானய்வுக் கொள்கைகள் இலக்கிய ஆய்வில் புகுத்தப்பட்டன. அமைப்பியல், பின்னையமைப்பியல், கட்டவிழ்ப்பு, பின்னை நவீனத்துவம், பெண்ணியம், காலனியம், பின்னைக் காலனியம் என்று திறனாய்வு இயக்கங்களும் அதன்வழிப்பட்ட திறனாய்வுக் கொள்கைகளும் மேலைநாடுகளில் தோன்றின. இந்த இலக்கிய இயக்கங்களும் அதன்வழிப்பட்ட திறனாய்வுக் கோட்பாடுகளும் தோன்றிப் பரவியபோது ஒப்பிலக்கிய ஆய்வாளர்கள் அவற்றுக்கு உடன்பாடாகவோ எதிர்மறையாகவோ எவ்வித எதிர்வினைச் செயல்களையும் மேற்கொள்ளவில்லை. அவைகளுக்கு ஈடுகொடுக்கும் வகையில் ஒப்பிலக்கியம் சார்ந்த புதிய இலக்கியக் கோட்பாடுகளைத் தோற்றுவித்து அவற்றை இலக்கியப் படைப்புலகிலும் ஆய்வுகளிலும் புகுத்த முன்வரவில்லை. மௌனத்தையே தங்கள் செயலாகக்கொண்டிருந்தனர். அவர்கள் இப்புதிய திறனாய்வுக்

கோட்பாடுகளைக் கொண்டிருந்தனர். அவர்கள் இப்புதிய திறனாய்வுக் கோட்பாடுகளைக் கடந்து ஒப்பிலக்கியம் வளர வேண்டியதன் அவசியத்தையும் தேவையையும் உணரவில்லை. இதன் காரணமாக 1980களுக்குப் பின்னர் ஒப்பிலக்கிய முறையில், ஒப்பிலக்கியக் கொள்கைகள் குறித்த திறனாய்வு மற்றும் ஆய்வு நூல்கள் எவையும் வெளிவரவில்லை.



இந்நிலையில் ஒப்பிலக்கிய ஆய்வின் நீண்ட தடைகளை நீக்கியவர். இங்கிலாந்து நாட்டு ஒப்பிலக்கியப் பேராசிரியரான சூசன் பாசுனெட் ஆவார். இவரது 'ஒப்பிலக்கியம் - ஒரு விமர்சன அறிமுகம் (1993)' என்னும் நூல் பின்னைக் காலனியச் சூழல், பின்னையமைப்பியல் முதலான இலக்கியக் கொள்கைகள் தோன்றி வளர்ந்த சூழலில் ஒப்பிலக்கியத்திற்கான புதிய களங்களையும் புதிய அடையாளங்களையும் முன்வைக்கின்றது. இந்நூல் 1990 வரை நிகழ்ந்த, மேற்கொள்ளப்பட்டு வந்த ஒப்பிலக்கிய ஆய்வுகளைக் கவனமாக ஆராய்ந்து அதன் பின்னணியில் ஒப்பிலக்கியத்தின் புதிய கோணங்களையும் பரிமாணங்களையும் முன்வைத்துப் பேசுவது குறிப்பிடத்தக்கதாகும். இந்த நூலின் உட்பகுதிகளாக அமைந்துள்ள இயல்பகுப்புக்கள் இதனைச் சுட்டிக்காட்டுகின்றன.

- அறிமுகம் - இன்றைய ஒப்பிலக்கியம் என்பது யாது?
- ஒப்பிலக்கியம் எவ்வாறு நடைமுறைக்கு வந்தது?
- ஐரோப்பிய எல்லைகளைக் கடந்த ஒப்பிலக்கியத்தின் மாற்றுக் கருத்தமைப்புகள்
- பிரிட்டனின் நிலப்பகுதிகளில் இலக்கியங்களை ஒப்பிடுதல்
- பின்னைக் காலனிய உலகில் ஒப்பிலக்கிய அடையாளங்கள்
- பண்பாடுகளைக் கட்டமைத்ததில் ஒப்பிலக்கியம், பயணக் கதைகளின் அரசியலும் ஒப்பிலக்கியமும்
- ஒப்பிலக்கியத்திலிருந்து மொழிபெயர்ப்பியல் ஆய்வுகளுக்கு முன்நகர்தல்.

இந்த நூலில் சூசன் பாசுனெட் பின்னை நவீனத்துவக் கொள்கைகளின் சாரத்தை (Essence) உள்வாங்கிக் கொண்டு, அக்கோட்பாடுகளின் வார்த்தைகளில் ஒப்பிலக்கியம் குறித்த சொல்லாடலை முன்வைக்கின்றார். இவர் இங்கிலாந்து நாட்டின் சாட்விக் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் என்பது குறிப்பிடத் தக்கதாகும். பிரிட்டானிய மற்றும் ஒப்பியல் பண்பாட்டு ஆய்வுகள் மையத்தின் தலைவராகவும் இவர் இருப்பது கூடுதல் தகுதியாகும். உலகிலுள்ள பல்வேறு பல்கலைக்கழகங்களில் பேராசிரியராகப் பணியாற்றிய பாசுனெட் ஒப்பிலக்கியம், அரங்கக்கலை, மகளிரியல், மொழிபெயர்ப்பியல் ஆகியனவற்றைத் தம் சிறப்புமிக்க ஆய்வுக் களங்களாகக் கொண்டவர். 'மொழிபெயர்ப்பியல் ஆய்வுகள் (1980)', 'மொழிபெயர்ப்பு : வரலாறும் பண்பாடும்' (1990) ஆகிய நூல்களின் ஆசிரியருமாவார். சிறந்த மொழிபெயர்ப்பாளரான இவர் கவிதைகளையும் படைத்து வருகிறார்.

பாசுனெட், ஒப்பிலக்கியம் குறித்த தனது நூலில் ஒப்பிலக்கியத்தின் இன்றையப் போக்குகளை மட்டுமல்ல. அதன் எதிர்காலத்தையும் கேள்விக்குள்ளாகின்றார். தேசியப் பண்பாடுகளின் எழுச்சியில் தோன்றிய ஒப்பிலக்கியம், ஐரோப்பிய மைய ஆய்வுநோக்கினைக் கடந்துசெல்ல வேண்டியதன் அவசியத்தையும் வலியுறுத்துகின்றார். இதன் காரணமாக ஒப்பிலக்கிய ஆய்வுலகில் நீண்ட நெடுங்காலமாகப் பின்பற்றப்பட்டு வந்த பிரெஞ்சுக் கோட்பாட்டினையும் அவர் மறுபரிசீலனைக்கு உட்படுத்தியுள்ளார்.



குறிப்பு

## 8.11. இயற்கை அறிவியல் கோட்பாடு

கி.பி.19ஆம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இயற்கை அறிவியல் புகுத்திய புதிய கொள்கைகள் இலக்கிய வரலாற்றை எழுதுவதிலும், இலக்கிய ஆய்விலும் மிகப்பெரிய மாற்றங்களை ஏற்படுத்தின. மெய்ம்மையியல், அறிவியல் என்பன வேறுபட்டன. மெய்ம்மையியல் இலக்கியங்களுக்கிடையேயான உறவைக் காண்பதற்கு மெய்ம்மைச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு அமைவதாகும். அறிவியல் என்பது ‘உயிரினக் கூர்தலறக் கொள்கை’யைக் குறிக்கும். இலக்கியப் படைப்புகளுக்கும் மாற்றங்களுக்கும் விதிமுறைகள் உண்டு என்பதைக் கண்டறிய இது தூண்டிற்று. இலக்கிய வரலாறு என்பது இலக்கியம் தோன்றியதற்கான மூலங்கள் எங்குண்டு? எந்நாட்டு இலக்கியத் தாக்கத்தால் ஒரு நாட்டிலக்கியம் தோன்றியது? எனக் கண்டறிய உதவியது. காலப்போக்கில் இலக்கியத்திலும் விதிகள், சட்டங்கள், முறைகள் என அறிவியல் கோட்பாடுகளை நிறுவும் நிலை ஏற்பட்டது.

இலக்கியம் கூர்தலறக் கோட்பாட்டின் வழி ஆராயப்பட்டது. இலக்கிய வரலாற்றில் இலக்கிய வகைமை, உயிரின வகைமையோடு ஒப்புமைப்படுத்திச் சிந்திக்கப்பட்ட. கூர்தலறக் கோட்பாட்டின்படி இங்கிலாந்து நாட்டில் சைமாண்ட்சு என்பவர். ஒவ்வொரு இலக்கிய வகையும், முளைவிடுதல், வளர்தல், பூத்துக் குலுங்குதல், அழிதல் என்ற விதிவழிப்பட்ட படிநிலை வளர்ச்சியை அடைவதைச்சுட்டிக்காட்டினார்.

இனமரபு, மானிடவியல், சமுதாயவியல் ஆய்வுகளுடனும் இலக்கியத்தைத் தொடர்புப்படுத்தி ஆய்ந்தனர். பிரெஞ்சு நாட்டு ஒப்பீட்டறிஞர் ஹிப்போலைட் தெயின், ‘எந்த விதமான இலக்கியத் தோற்றத்திற்கும் காரணம் உண்டு’ என்றார். அது இயற்கையில் அல்லது இயற்பியல் பொருட்களின் சேர்க்கையினால் புதியதொன்று தோன்றுவது என்றார். ஒரு செடியின் வளர்ச்சிக்குக் காரணமான வேதியியல் மாற்றங்களைப்போல, ஒரு பாட்டு அல்லது ஓவியப் படைப்பிற்கும் சில நுண்கருத்துப் பரிமாற்றங்கள் காரணமாகின்றன என விளக்கிய தெயின் ‘இலக்கிய ஒப்பீட்டாய்வாளன் இலக்கியத் தோற்றத்திற்கு மூலகாரணமான இனம், சூழ்நிலை, காலம், படைப்பாளியின் மனத்திறன் ஆகியவற்றைக் கருத்தில் கொள்ள வேண்டும் என்றார்.

குறிப்பு

## 8.12. முருகியல் கோட்பாடு

இயந்திரமுறை போல வலிந்து புகுத்திய இயற்கை அறிவியல் கோட்பாடுகள் கி.பி.19ஆம் நூற்றாண்டின் இறுதியில் வலுவிழந்தன. 'நூலின் சிறப்புக்களுக்காகவே நூலினைப் போற்றுதல்' என்ற கோட்பாடு புதுத் திறனாய்வாளர்களால் வளர்க்கப்பட்டது. பிற்காலத்தில் தோன்றிய ஓர் இலக்கியப்படைப்பாக்கம், முற்காலத்திய இலக்கிய நூலின் தொடர்ச்சியில்லாமல் தோன்றவியலாது. அதற்காகப் பின்னதற்கு முன்னதே காரணம்? என்பது எப்படி ஏற்கத் தகும் என்ற வினா எழுப்பப்பட்டது. ஆதலால் இலக்கியப் படைப்பு நூல்களின் தனிச்சிறப்பைத் தனித்து நோக்கி மதிப்பிடுவதற்கு மட்டுமே அறிவியல் முறைகளைப் பயன்படுத்த வேண்டும் என அமெரிக்க முருகியல் கோட்பாட்டாளர்கள் வலியுறுத்தினர்.

செருமானியர், பிரெஞ்சுக்காரர், தமிழர் ஆகியோரிடம் தேசிய இலக்கியப் பற்று மிகுதி. இதனைக் கருத்தில் கொண்டு ரெனிவெல்லலக், 'தேசிய மாநில விருப்பு வெறுப்புக்களைக் கடந்த நிலையையே ஒப்பிலக்கியம் உறுதியாக விரும்புகின்றது. அதற்காகப் பல்வேறு தேசிய இலக்கிய மரபுகளின் - இருப்பையும் சிறப்பையும் மறுக்கவும் குறைத்து மதிப்பிடவும் ஒப்பிலக்கியம் விரும்பவில்லை' என ஒப்பிலக்கியத்தில் தேசிய இயக்கத்தின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியுள்ளார்.

செருமானிய நாட்டுப் பெருங்கவிஞராகிய கதே 'உலக இலக்கியம்' என்னும் தொடரை உருவாக்கினார். (தனிப்பட்ட) இலக்கியங்களுக்கிடையே காணப்படும் வேறுபாடுகள் நீங்கிய ஓர் உலகப் பொது இலக்கியத்தைப் பெற நீண்ட நெடுங்காலமாகும் என அவர் கருத்துரைத்தார். ஒப்பிலக்கியம் இருமொழி இலக்கிய உறவுகளைக் கருத்தில் கொள்கின்றது. பொதுமை இலக்கியம் பல்வேறு மொழி இலக்கியங்களின் பொதுமைப் பண்புகளைக் கருத்தில் கொள்கின்றது.

## 8.13. பிரெஞ்சுக் கோட்பாடும் அமெரிக்கக் கோட்பாடும்

**"முக்கியமாக வெவ்வேறு இலக்கியங்களின் இடையே ஒன்றற்கொன்று உள்ள உறவுகளை ஆராய்வது ஒப்பிலக்கியத்தின் குறிக்கோளாகும்." – பால்வான்தீகம்**

பிரெஞ்சுக் கோட்பாடு, அமெரிக்கக் கோட்பாடு என்று பெயர் சூட்டுவது முற்றிலுமே பொருந்துவதாகாது. எனினும் நம் ஆய்வு எளிமை கருதி அவ்வாறு கூறிக் கொள்கிறோம். சுருக்கமாகக் கூறினால், இக்கோட்பாட்டு வளர்ச்சியில் மூன்று படிநிலைகள் புலனாகின்றன.

1. நாட்டுப் பாடல் ஆய்வுநிலை – வீரயுகப் பாடல்கள் பற்றிய ஆய்வு ஒப்பீட்டுக் களத்தில் முன்பு மேலோங்கி நின்ற காலம் உண்டு.
2. பிரெஞ்சு நாட்டு ஒப்பீட்டறிஞர்களிடம் மேலோங்கியிருந்த நெறிமுறைகள்.

3. அமெரிக்கர்களை இப்புதுத்துறையில் ஆர்வம் கொண்டு வளர்த்தபோது புதுவதாகப் புகுத்திய நெறிமுறைகள்.

## 8.14. நாட்டுப் புற இலக்கிய ஆய்வுகள்

நாட்டுப்புற இலக்கியக் கதைகள் (Fables and Fairy Tales), கதைப் பாடல்கள் (Ballads) போல்வன எவ்வாறு நாடு விட்டு நாடு பெயர்ந்து பரவிச் செல்கின்றன என்பது இவ்வாய்வின் அடிப்படையாக இருந்த காலம் ஒன்று உண்டு. மேலும், இந்நாட்டுப்புறக் கதைகளுக்கான கரு (Folktale themes) எங்ஙனம் எழுத்து வடிவ இலக்கியங்களுக்குள் புகுந்து நிலை பெறுகின்றன என்பதும் ஆராயப்பட்டது.

வாய்மொழி இலக்கியத்திற்கும், எழுத்து மொழி இலக்கியத்திற்கும் இவ்வாறு இடைத்தொடர்பு இருந்து கொண்டே இருப்பதை அறிஞர்கள் பலர் எடுத்துக்காட்டினர். இலக்கிய வகைகளின் தோற்றமும் வளர்ச்சியும் காண இது பெரிதும் பயன்பட்டது. இலக்கிய உத்திகள் பல நாட்டுப்புற பாடல்களிலிருந்து பெறப்பட்டதாலும், யாப்பு வடிவங்கள் பலவும் அவ்வாறே உருவாகி வந்தமை அறியப்பட்டதாலும் நாட்டுப் பாடல் இலக்கியக் கல்வி பெரிதும் போற்றப்பட்டது.

இலக்கியங்களுக்கான அடிக்கருத்துக்கள் (Themes) எவ்வாறு நாடு விட்டு நாடு பெயர்ந்தன என்பதே நன்கு ஆராயப்பட்டது. பலமொழிகளிலும் வழங்கும் பழங்கதைகள் (Legends) புராணக் கதைகள் (Myths), கற்பனைக் கதைகள் (Fairy Tales) ஆகியவற்றை ஒப்பிட்டு ஆராய்ந்தனர். இது இறுதியில் இலக்கியங்களில் அடிக்கருத்து ஒப்பீடாகவே (Thematology) ஆயிற்று. ஐரோப்பாவில் பல மொழிகளிலும் தோன்றிய இலக்கியங்கள் அனைத்திலும் அடிக்கருத்துக்கள் ஒரு தன்மையினவாக இருப்பதையும் இவற்றுள் பலவற்றுக்கு நாட்டுப்புறபாடல் அடிப்படை இருப்பதையும் கண்டறிந்தனர்.

நாட்டுப்புறபாடல் வடிவங்களே இலக்கிய வடிவங்களுக்குப் பெரும்பாலும் முன்னோடியாய் அமைந்தமையின் இலக்கியத்தின் புறநீர்மை சார்ந்த யாப்புவடிவ ஒப்பீடாகவும் (Morphology) இது வளர்ச்சி பெற்றது. ரஷ்யாவிலும் அதனைச் சார்ந்த ஸ்லாவிக் நாடுகளிலும் ஸ்காண்டி நேவியாவிலும் நாட்டுப்புறபாடல்கள் இன்றும் வழங்குகின்றன. தமிழகத்திலும் தென்னிந்திய மொழிகளிலும் இலங்கையிலும்கூட மிகுதியாக நாட்டுப்புற பாடல் ஆய்வு வழங்குகின்றது. ஆனால், மேலை நாட்டளவிற்கு இங்கு நாட்டுப்புற பாடல்கள் இடம்பெறவில்லை.

‘நாடோடிப் பாடல்கள்’என்று நாட்டுப்புற பாடல்களுக்கு ஒரு பெயர் உண்டு. நாடு விட்டு நாடு, ஊர் விட்டு ஊர், பெயர்ந்து திரிவோர்க்கு ‘நாடோடிகள்’ என்ற பெயருண்டு. இதுபோலவே இந்நாட்டுப்புறக் கதைகளும் பாடல்களும் இடம் பெயர்வன, எங்கும் பரவுவன என்பதை மேனாட்டு அறிஞர்கள் மெய்ப்பித்துள்ளனர். இங்கு நம் முன்னோர் இப்பொருள் அமைதி பட, ‘நாடோடிப் பாடல்கள், ‘நாடோடிக் கதைகள்’

என அழைத்து வந்தமை வியக்கத்தக்கது. எனவே, இவற்றை ‘நாடோடி இலக்கியம்’ எனல் தவறு என்பார் கூற்றுப் பொருந்தாமை அறியலாம்.

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

நாட்டுப்புற இலக்கிய ஆய்வில் ஒப்பீடு உண்டு எனினும் இதனையே நாம் ஒப்பிலக்கியம் எனக் கோடல் இயலாது. ரெனிவெல்லாக்கும், ஆஸ்டின் வாரனும் நாட்டுப்புற இலக்கியக் கல்வியை மதிப்பினும், அதனையே ஒப்பீட்டுத் துறையாகக் கோடல் தவறு என்பதைத் தமது ‘இலக்கியக்கொள்கை’ என்ற நூலில் விளக்கியுள்ளனர்.

டாக்டர்.வி.சச்சிதானந்தம் அவர்கள் இதுபற்றிக் குறிப்பிடுவது கருதத்தக்கது. “ஒப்பிலக்கியம் என்பது வாய்மொழி இலக்கியக் கல்வியையும் குறித்தல் கூடும். குறிப்பாக நாட்டுப்புறக் கதைகள் அவை இடம் பெயர்ந்து பரவுதல், அவை கற்பனையாகப் படைக்கப்படும் இலக்கியங்களின் மாறி அமையும் திறன் போல்வன இதில் அடங்கும். (However in practice Comparative Literature covers specific area. It may refer to the study of oral literature specially folk tales, their transformation info imaginative writing)

## 8.15. பிரெஞ்சு ஒப்பீட்டுக் கல்வி

பிரெஞ்சு நாட்டு அறிஞர்கள் உருவாக்கிய அக்கோட்பாடு காலத்தால் முற்பட்டது. மற்றவர்களுக்கு வழிகாட்டியாய் அமைந்தது செறிவுமிக்கது. பால் வான் தீகம் (Paul Van Tieghem) ‘ஒப்பிலக்கியத்தின் குறிக்கோள் வேறுபட்ட இலக்கியங்களுக்கிடையே ஒன்றற்கொன்று உள்ள உறவு நிலைகளை ஆராய்வது’ என்றார் (The object of comparative literature is essentially the study of diverse literature in their relations withone another.)

இக்கோட்பாட்டின்படி இலக்கிய வகைகளின் தோற்றம் அல்லது படைப்புப்பற்றிய ஆய்வு மிகுதியாக மேற்கொள்ளப்பட்டது. சமுதாயம், உளவியல், உயிரியல், ஆகியவற்றின் அடிப்படையிலும், கலைத்துறை அடிப்படையிலும் இலக்கியங்கள் எவ்வாறு உருவாகின்றன என்று ஆராய்வதில் பிரெஞ்சு நாட்டு அறிஞர்கள் ஆர்வம் காட்டினர்.

ஒரு வகையில் அறிவியல் நோக்கோடு இலக்கியத்தை அணுகும் முறை இங்கே தோன்றியது. எனலாம். பரிணாமம் எனப்படும் கூர்தல் முறை (Evolution) இலக்கியத்தில் ஏற்றிப் பார்க்கப்பட்டது. பகுப்பாய்வு உடற்கூற்றாய்வு (Anatomy) அடிப்படையில் செய்து பார்க்கப்பட்டது. காரணகாரிய முறையில் ஆராய்தல் (Cause and effect theory) அறிவியல் முறைகளுள் ஒன்றாகும். உலகில் நிகழும் எல்லா விளைவுகளுக்கும் காரணம் உண்டு என்றும், காரணங்களும் சூழ்நிலைகளும் மாறாதிருக்கும் வரை அவற்றால் ஆகும். விளைவும் மாறாது என்றும் அறிவியல் கூறும். இலக்கியமும் இதுபோலப் பல நாடுகளில், பல சூழ்நிலைகளில் காரண காரிய இயல்புக்கு ஏற்பத்தோன்றி வளர்ந்து வந்திருப்பதைப் பிரெஞ்சு

*Self-Instructional Material*

நாட்டு ஒப்பீட்டறிஞர்கள் எடுத்துக்காட்டினர். இலக்கியம் தோன்றுவதற்குச் சமூக, அரசியல் பொருளியல் காரணங்கள் பல உள்ளன. ஒரு நாட்டு வரலாற்றுக்கும் அந்நாட்டு இலக்கிய வரலாற்றுக்கும் தொடர்பு உண்டு. இலக்கிய வரலாறு என்பது வரலாற்றைச் சுருக்கமாகத் தரும் கையேடே (Literary history is a manual of history) என்ற அறிஞர் தெயினின் கூற்றும் இங்கு கருதத்தக்கதாகும்.

பிரெஞ்சு நாட்டு அறிஞர்கள் இலக்கியத் தோற்றம் பற்றிய ஆய்விற்கு நாட்டுப்புறபாடல் ஆய்வும் இன்றியமையாதது என்பதை உணர்ந்தனர். இலக்கியம் ஆற்றல் மிக்க போக்குகளால் காலந்தோறும் உந்தப்படுகிறது என்றும் இப்போக்குகளினின்றும் தொடர்புடைய மொழிகள் தப்பிக்க முடியாது என்றும் கருதினர். ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியைத் தொடர்ந்து உறவுடைய மொழி இலக்கியங்களில் எல்லாம் ஒரு விதமான வளர்ச்சிப் போக்கே காணப்படுவதற்கு இப்போக்குகளின் தாக்கமே காரணமாகும்.

இலக்கியத்தை வரலாற்று நோக்கில் (Historical View) ஆராய்வதே பிரெஞ்சு கோட்பாடு எனலாம். மேலும், இலக்கிய ஒப்பீடு என்ற சொற்றொடரில் ஒப்பீட்டிற்கு முறைகளுக்குப் ஒப்பீட்டறிஞர்கள் முக்கிய இடம் அளித்தனர்.

பிரெஞ்சு நாட்டில் சார்போனில் ‘இலக்கிய ஒப்பீட்டுக் கழகம்’ தோன்றியது. பால் வான் தீகம் எழுதிய ‘இலக்கிய ஒப்பீடு’ என்ற நூல் அடிப்படையான ஒப்பீட்டுக் கொள்கை விளக்க நூலாகக் கருதப்பட்டது. ஃபெர்னாண்டு பால்டென்ஸ்பெர்கெர்’ (Fernand Baldenspeger) பிரெஞ்சுக் கோட்பாட்டினை விளக்கவல்ல மூன்று பெரும் நூல்களை வெளியிட்டார். ஜோசப் டெக்ஸ்டு(Joseph Texte), பால் ஹசார்டு (Paul Hazard), காரே(Carre), பாட்டைலன் (Bataillion)ரோட்டியர் (Roddier) போன்ற அறிஞர் பலரால், அங்கு இவ்வொப்பீடு முக்கிய இலக்கியக் கல்வியாக உருப்பெற்றது.

பால்டென்ஸ்பெர்கர் 1921-இல் இலக்கிய ஒப்பீட்டு ஆய்வு மலர் (Revue be literature comparee) ஒன்று தொடங்கினார். பிறப்பு மரபு அல்லது பிறப்புறவு ஆய்வை (Genetic Studies) அவர் மிகவும் போற்றினார். அவரைப் பின்பற்றி ஐரோப்பிய எழுத்தாளர்கள் கலை, ‘இலக்கியங்களின் தோற்றத்திற்கான மூலக்கூறுகளை ஆராய்ந்தறிவது அவற்றை மிக நன்றாகப் புரிந்து கொள்வதற்கான சிறந்த வழி எனக் கருதினார். இலக்கியத்தைப் புரிந்து கொள்ள, இது எப்படித் தோன்றியது என்று தொடக்கத்தை ஆராய வேண்டும் என்றனர். இதனால் முழுக்க முழுக்க மூலமும் தாக்கமும் பற்றியதான நூற்றுக்கணக்கான கட்டுரைகளை இலக்கியஉறவுடைய மொழிகளில் உள்ள இலக்கியங்களை ஒப்பீட்டு ஆராய்ந்து அவற்றின் மூலத்தையும் தாக்கத்தையும் (Source and influence) கண்டறிதலே பத்தொன்பதாம் நூற்றாண்டில் போற்றப்பட்டது. இங்ஙனம் இனமொழிகளிடையே உள்ள இலக்கிய உறவு ஆராய்ச்சியைப் பிறப்புறவு ஆய்வுமுறை (Genetic

Approach) என்பர். அடிக்கருத்துக்களிடையே இடம் பெயர்ந்தவற்றைக் கண்டுபிடிப்பதும், வடிவ அடிப்படையில் (Morphology) இனமொழிகளிடையே பரவியுள்ளதைக் கண்டறிவதும் என இது இரு கூறுபட்டு வளர்ந்தது. 'உறவுடைய மொழிகளிடையே புகுந்தது யாது? பெற்றது என்ன? மூலம் எது? தாக்கம் பெற்றது எது? என ஆராய்வதே மேலோங்கி நின்றது. பொதுவாக இலக்கிய அடிக்கருத்துக்கள் (Themes) குறிக்கோள்கள் (Ideas and Motifs) கருப்பின்னல்கள் (Plots) இலக்கியவகை (Genres) வடிவம் (Form) நடை(Style) இலக்கியவுணர்வு போன்றவற்றின் மூலமும் தாக்கமும் பற்றி இது ஆராய்ந்தது என விரித்துக் கூறலாம்.

ஜார்ஜ் பிராண்டெஸ் (George Brandes) என்ற பிரெஞ்சு நாட்டு ஒப்பீட்டறிஞர் ஆற்றல் மிக்க போக்குக்கொள்கையை (Concept of Currents) முதன்முதலாகப் புகுத்தினார். ∴பெர்டினாண்டு புருனெடீர் (Ferdinand Brunetiere) பாரிசில் 1900இல் முதல் ஒப்பீட்டறிஞர் மாநாட்டில் இக்கொள்கையை ஆதரித்துப் பேசினார். அறிஞர் இப்போலைட்டுத் தெயின் (Hippolyte Taine) காரண காரிய ஆய்வை (Cause and effect theory) வற்புறுத்தி, எவ்விதமான இலக்கியத் தோற்றத்திற்கும் காரணம் உண்டு என்றார். இயற்கையில்அல்லது பௌதிகத்தில் பொருள்களின் சேர்க்கையினால் புதியதொன்று தோன்றுவது போன்றதே இலக்கியத்தோற்றமும் என அவர் விளக்கினார். கலையின் ஒவ்வொரு படைப்பும் அங்ஙனம் ஒரு காரணத்தால் உருவாவதேயாகும். எனவும், அது இங்ஙனம் தோன்றியது என அதன் காரணங்களை அல்லது மூலங்களை விளக்கியுரைப்பது எளிதே எனவும் அவர் எடுத்துரைத்தமை அறியற்பாலது. பூதவியல் பொருள்களைப் போலப் புலன்களால் உணரப்படாதனவும் (Spritual Events) அப்பொருள் தன்மையுடையன போல (matter) உருவாவனவேயாகும்.

குறிப்பிட்ட சில மூலக்கூறுகள் உருமாறி வேறு அமைப்புடையன உருவாவதுபோல நுண்பொருட்கருத்துக்களும் மாறி அமைந்து புது வடிவங்கள் பெற்று உருவாகின்றன. அறிஞர் தெயின் இலக்கியத் தோற்றத்திற்கு மூல காரணமான இனம், சூழ்நிலை, புலவனின் மனத்திறன் ஆகியவற்றை மனதிற் கொள்ள வேண்டும், என்றார். அறிவியல் ஆய்வைப் போலவே இலக்கிய ஆய்வை மேற்கொள்ள முடியும் என்றும், அதனைச் சரிபார்த்து மேலும் மேலும் திருத்தமுறச் செய்ய முடியும் என்றும், அவர் விளக்கினார். ஒப்பியல் இலக்கியம், உலக இலக்கியம் என்ற கோட்பாட்டிற்கு நம்மை அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே அவரது குறிக்கோளாகும். பெரும்பாலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளில் வழங்கிய இலக்கியங்களிடையே உள்ள உறவு, ஒற்றுமை ஆகியன பற்றிச் சான்றுகள் காண்பதிலேயே சென்ற நூற்றாண்டில் ஒப்பிலக்கியம் கருத்தைச் செலுத்தியது.

## 8.16. இலக்கிய ஒப்பீட்டுத் துறையின் முன்னோடி

இலக்கிய ஒப்பீட்டுத் துறையில் முற்பட்டது. மற்றவர் கட்கு வழிகாட்டியாயமைந்தது. பிரெஞ்சுக்கோட்பாடேயாகும். பல்வேறு ஒப்பீட்டறிஞர்கள் உருவாக்கியதும் செறிவுமிக்கதுமாகிய பிரெஞ்சுக் கோட்பாட்டினைக் கீழ் வருமாறு தொகுத்துரைக்கலாம்.

காரணகாரிய முறையில் ஆராய்தல் (Cause and effect Theory): எல்லா விளைவுகட்கும் காரணம் உண்டு என்றும், காரணங்களும் சூழ்நிலைகளும் மாறாதிருக்கும் வரை அவற்றாலாகும் விளைவும் மாறாதிருக்கும் என்றும் கொள்கின்ற அறிவியல் அடிப்படையில் இவ்ஆய்வு இயங்குவதாகும். சமூக. அரசியல். பொருளியல் காரணங்களின் அடிப்படையில் இலக்கியம் தோன்றுகிறது என்பர். அறிஞர் தெயின் குறிப்பிட்டது போல "இலக்கிய வரலாறு என்பது வரலாற்றைச் சுருக்கமாகத் தரும் கையேடேயாகும். (Literary History is a manual of history).

இலக்கியங்களுக்கு நாட்டுப்புறபாடல் அடிப்படையுண்டு என்பதை வலியுறுத்துதல்: இலக்கியங்களின் தோற்றம், வளர்ச்சி பற்றி ஆராய்வதால் அவற்றை நன்கு புரிந்து கொள்ள முடியும் என்று கருதினார்கள். மேலும் இலக்கியம் நாடுவிட்டு நாடு பரவுகின்ற விதத்தைக் கண்டறிய இவ்ஆய்வு பெரிதும் உதவியாகவிருந்தது.

உறவுடைய மொழிகளிலுள்ள இலக்கியங்களை ஒப்பிட்டாராய்ந்து அவற்றின் மூலத்தையும் தாக்கத்தையும் (Sources and Influences) கண்டறிதல், பத்தொன்பதாம் நூற்றாண்டில், இலக்கிய ஒப்பீட்டில் இம்மூல ஆராய்ச்சியே மேலோங்கி நின்றதென்பர். இனமொழிகளிடையே உள்ள இலக்கியங்களிடையே உள்ள இலக்கிய உறவு ஆராய்ச்சியைப் 'பிறப்புறவு ஆய்வுமுறை' (Genetic Approach) என்பர். கருத்து (The matology) அடிப்படையில் இலக்கியங்களிடையே இடம் பெயர்ந்தவற்றைக் கண்டுபிடிப்பதும். வடிவ அடிப்படையில் (Morphology) இனமொழிகளிடையே பரவியுள்ளவற்றைக் கண்டறிவதும் என இது இருகூறுபட்டு வளர்ந்தது. பொதுவாக இலக்கிய அடிக்கருத்துக்கள் (Themes), குறிக்கோள்கள் (Ideas and Motifs), கருப்பின்னல்(Plots), இலக்கியவகைகள்(Genres), வடிவம் (Form), நடை (Style), இலக்கிய உணர்வு போன்றவற்றில் பெற்றது என்ன் புகுத்தியது யாதென (Sources and Influence) ஆராய்வது அனைத்தும் இதிலடங்கும்.

இலக்கியம் ஆற்றல்மிக்க 'போக்கு'களால் காலந்தோறும் உந்தப்படுகிறது என்றும், இப்போக்குகளின்றும் தொடர்புடைய மொழிகள் தப்பிக்கவியலாது என்றும் கருதினர். ஒரு குறிப்பிட்ட காலப்பகுதியைத் தொடர்ந்து, உறவுடைய மொழி இலக்கியங்களிலெல்லாம் ஒருவிதமான வளர்ச்சிப் போக்கே காணப்படுவதற்கு இப் 'போக்குகளின் தாக்கமே

காரணமாகும். (The concept of currents and the cross currents of literature.)

இலக்கியத்தை வரலாற்று நோக்கில் (Historical View) ஆராய்வதே பிரெஞ்சுக் கோட்பாடு எனச் சுருங்கக் கூறலாம். இலக்கியத்தை நன்கு புரிந்துகொள்ள இவ் ஆய்வு முறைகள் பயன்படும் என்று கருதினர். இதனை அறிவியல் வழி அணுகுதல் (Scientific Approach) என்றும் கூறலாம்.

செருமனியில் கதே அவர்கள் 'உலக இலக்கியம்' பற்றித் தூவிய வித்து சென்ற நூற்றாண்டில் ஐரோப்பாவில் முளைவிட்டது. இலக்கியத்தின் பொதுமைப் பண்புகளை அறியும் ஆர்வத்தை இது தூண்டியது. கதேயின் நூல்களனைத்தும் பிரெஞ்சில் மொழிபெயர்க்கப்பட்டதனால் அதன் தாக்கம் நன்குணரப்பட்டது. மேலும் செருமனியில் மொழிநூல் (Philology) ஆய்வில், மொழி ஒப்பீடு வளர்ந்ததும் இலக்கிய ஒப்பீட்டிற்கும் ஒரு வழிகாட்டி ஆயிற்று. பழைய புனைவியல் (Romanticism) வளர்ச்சி பெற்று மாறியது. உலகியல் (Positivism) தலைதூக்கியது. புனைவியற் காலத்தில் 'தேசிய இனக்கருத்து' நன்கு கால்கொண்டு முதிர்ந்தது. அனைத்து நாட்டு இலக்கியக் கருத்தாகக் கனிந்தது. இம்மனநிலையும், கூவியரின் உடற்கூற்றுப் பகுப்பாய்வு ஒப்பீட்டு முறைகள் புகழ்பெற்று விளங்கிய சூழ்நிலையும் பிரெஞ்சில் ஒப்பியல் இலக்கியம் வளரக் காரணங்களாயின.

சார்போனில் 'இலக்கிய ஒப்பீட்டுக்கழகம்' (Institute de Literaure Compare) தோன்றியது. பால் வான்தீகம் (pal Van Tieghem) எழுதிய 'இலக்கிய ஒப்பீடு' (La Literature Compare'e) என்ற நூல் அடிப்படையான ஒப்பீட்டுக்கொள்கை விளக்க நூலாகக் கருதப்பட்டது. பெர்னாண்டு பால்டென்ஸ்பெர்கர் (Fernand Baldensperger) பிரெஞ்சுக் கோட்பாட்டினை விளக்கும் மூன்று பெரும் நூல்களை வெளியிட்டார். ஜோசப் டெக்ஸ்ட் (Joseph Texte) முதலாக பால்டென்ஸ்பெர் கெர், பால் ஹசார்ட்(Paul Hazard), வான்தீகம், காரே (Carre), பாடைலன் (Bataillon), ரொட்டியார் (Roddier), போன்ற அறிஞர் பலராலும் இவ் ஒப்பீடு முக்கிய இலக்கியக் கல்வியாக உருப்பெற்றது.

பால்டென்ஸ்பெர்கர் 1921இல் 'இலக்கிய ஒப்பீட்டு ஆய்வுமலர்' (Revue de literature compare'e) ஒன்று தொடங்கினார். பிறப்புறவு ஆய்வை அவர் மிகவும் போற்றினார். அவரைப் பின்பற்றி ஐரோப்பிய எழுத்தாளர் பலரும் கலைகளின் வளர்ச்சியையும் தோற்றத்திற்கான மூலக் கூறுகளையும் ஆய்ந்தறிவது, அவற்றை மிக நன்கு புரிந்து கொள்ளுதற்கான சிறந்த வழியெனக் கருதினர். இதனால் முழுக்க முழுக்க மூலமும் தாக்கமும் பற்றியதான நூற்றக்கணக்கான கட்டுரைகளை 'இலக்கிய ஒப்பீட்டு ஆய்வு மலர்' வெளியிட்டது.

குறிப்பு

ஜார்ஜ் பிராண்டெஸ் (George) ஆற்றல்மிக்க போக்குக் கொள்கையை (Concept of currents) முதன்முதலாகப் புகுத்தினார். பெர்டினாண்ட் புரூனெடீர் (Ferdinand Branetiere), பாரிசில் 1900இல் முதல் ஒப்பீட்டறிஞர் மாநாட்டில் இதை ஆதரித்துப் பேசினார். அறிஞர் ஹிப்போலைட் தெயின் (Hippelyte Taine 1828-1893) காரணகாரிய ஆய்வை (Causes and effects) வலியுறுத்தி, எவ்விதமான இலக்கியத் தோற்றத்திற்கும் காரணம் உண்டென்றார். அது இயற்கையில் அல்லது பௌதிகத்தில் பொருட்களின் சேர்க்கையினால் புதியதொன்று தோன்றுவது போன்றதென ஒப்பிட்டுக் காட்டி விளக்கினார். கலையின் ஒவ்வொரு படைப்பும் இங்ஙனம் ஒரு காரணத்தால் உருவாவதுடன், அதனால் அது இங்ஙனம் தோன்றியதென விளக்கியுரைக்கப்படும் எனவும் குறிப்பிட்டார். பூதவியல் பொருள்களைப் போலப் புலன்களால் உணரப்படாதனவும் (Spiritual events) அப்பொருட் தன்மையுடையன (matter) போல உருவானவேயாகும். குறிப்பிட்ட சில மூலக்கூறுகள் உருமாறியும் மறு அமைப்புப் பெற்றும் வேறுபட்டதோர் உருவமைப்புடைய பொருள்களாவது போல நுண்பொருட் கருத்துக்களும் இங்ஙனம் மாறியமைந்து புதுவடிவங்கள் பெற்று உருவாகின்றன. இங்ஙனம் ஒரு செடியின் வளர்ச்சிக்குக் காரணமான வேதியல் மாற்றங்களைப்போல, ஒரு பாட்டு அல்லது ஓவியத்தின் படைப்புக்கும் சில நுண் பொருட்கருத்துப் பரிமாற்றங்கள் காரணமாகின்றன. இங்ஙனம் விளக்கிய தெயின் ’இலக்கிய ஒப்பிட்டறிஞன் இலக்கியத் தோற்றத்திற்கு மூலகாரணமான இனம், சூழ்நிலை, காலம், புலவனின் மனத்திறன் ஆகியவற்றை மனத்திற் கொள்ள வேண்டும் என்றார். இவ்வகையில் அறிவியல் ஆய்வைப் போலவே இலக்கிய ஆய்வை மேற்கொள்ள முடியும் என்றும் அதனைச் சரிபார்த்து மேலும் மேலும் திருத்தமுறச் செய்ய முடியும் என்றும் அவர் விளக்கினார். இறுதியாக ஒப்பியல் இலக்கியம், உலக இலக்கியம் என்ற கோட்பாட்டிற்கு நம்மை அழைத்துச் செல்லவேண்டும் என்பதே அவரது குறிக்கோளாகும்.

## 8.17. ஒப்பிலக்கியக் கோட்பாடுகள் - பிரெஞ்ச் கோட்பாடு – விளக்கம்

பிரெஞ்சுக் கோட்பாட்டின்படி, இரண்டும் இரண்டுக்கு மேற்பட்டனவுமான இலக்கியங்களிடையே உறவுநிலைகளை ஆராய்வதுதான் முதற்கண் ஒப்பியல் இலக்கியம் என்று கருதப்பட்டது. இதற்கு ஒப்பீட்டாய்வாளன் குறைந்தது இரண்டு மொழிகளில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்று கருதினர். பெரும்பாலும் மேற்கு ஐரோப்பிய நாடுகளின் இலக்கியங்களிடையேயுள்ள உறவுபற்றிய சான்றுகளைக் காண்பதிலேயே, சென்ற நூற்றாண்டில் ஒப்பியல் இலக்கியம் கருத்தைச் செலுத்தியது எனலாம்.

## வினா-விடை -பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினாவிடை**

1) **பிரெஞ்சு நாட்டின் ஒப்பிலக்கியம் எவ்வாறு தொடக்கத்தில் அழைக்கப் பெற்றது.**

Course de literature compare – என்று கி.பி.1816-ல் அழைக்கப்பெற்றது.

குறிப்பு

2) **Comparative Literature - என்ற சொல்லை முதலில் பயன்படுத்தியவர் யார்?**

கி.பி.1848 இல் மாத்யூ அர்னால்டு என்பவர் பயன்படுத்தினார்.

3) **ஜெர்மனியில கதே தூவிய வித்து யாது?**

உலக இலக்கியம் - எனுஞ் சொல்.

4) **பிரெஞ்ச் நாட்டு ஒப்பியல் அறிஞர்கள் சிலரைக் குறிப்பிடுக.**

(i) பால் வான் தீகம் (ii) ∴பெர்னாண்டு பால்டென்ஸ்

(iii) காரே (vi) பாட்டைலன் (vii) ரொட்டியா

5) **இலக்கிய ஒப்பீட்டுத் துறையின் முன்னோடி எது?**

பிரெஞ்ச் கோட்பாடு.

**II. ஐந்து மதிப்பெண் வினாவிடை**

6) **ஒப்பிலக்கியக் கோட்பாடு என்றால் என்ன விவரி.**

(8.3 – னை எழுதுக)

7) **பிரெஞ்ச் கோட்பாடு பற்றிய அறிஞர்களின் கூற்றுகளை எழுதுக.**

(கூறு 8-ல் பிரெஞ்ச் அறிஞர்கள் பெயர்கள் வருமிடங்களில் தரப்பெற்ற செய்திகளை எழுதுக)

8) **பிரெஞ்ச் ஒப்பிலக்கிய ஆய்வு முறைகளைக் குறிப்பிடுக.**

(கூறு 8-ல் - 8-4, 8-5, 8-6, 8-11 ஆகியவற்றை எழுதுக.)

9) **பிரெஞ்ச் ஒப்பீட்டுக் கல்வி பற்றி விவரி.**

(கூறு 8-ல், 8-15 க்க உரிய செய்திகளை எழுதுக)

**III. பத்து மதிப்பெண் வினாவிடை**

10) ஒப்பிலக்கியக் கோட்பாடுகளில் - பிரெஞ்ச் கோட்பாடு பெறும் இடத்தை விவரிக்க.

(கூறு-8ல் 8-1 முதல் 8-17 வரையிலான செய்திகளை சுருக்கி எழுதுக.)

# கூறு – 9 : அமெரிக்க கோட்பாடு

## 9.1. முன்னுரை

பிரெஞ்சு நாட்டில் ஒரு சூழலில் ஒப்பிலக்கியம் வளர்ந்தது. அமெரிக்க நாட்டுச் சூழல் அதனிற் பெரிதும் வேறுபட்டிருந்தமையின் அந்நாட்டு ஒப்பிலக்கியத் துறை புதிய திசைகளில் கிளைவிட்டு விழுதூன்றி வளரலாயிற்று. செருமன் நாட்டுப் பெருங்கவிஞர் கதே அவர்களின் உலக இலக்கியக் கருத்து, செருமனியில் தோன்றிய ஒப்பியல் மொழி நூல் ஆய்வு, புனைவியற் காலத்துத் தேசீய கருத்து, இலக்கியத்தில் ஏற்பட்ட அழுத்தம், டார்வின் வகுத்த பரிணாமக் கோட்பாட்டுச் செல்வாக்கு, உடற்கூற்றுப் பகுப்பாய்வு முறைகள், நாட்டுப்புற இலக்கிய ஆய்வு வளர்ச்சி போன்ற பல சார்புகளினால் உந்தப்பட்டுச் சென்ற நூற்றாண்டில் பிரெஞ்சு நாட்டின்கண் இலக்கிய ஒப்பாய்வு முகிழ்ந்து.

## 9.2. நோக்கம்

அமெரிக்காவில் ஒப்பிலக்கிய நோக்கமும் போக்கும் எங்ஙனம் அமைந்தன. அமெரிக்கக் கோட்பாட்டின் படி ஒப்பிலக்கியம் உலகப்பொதுமையை நோக்கிய ஆய்வாக அமைதல், எச்.எச்.ரிமாக்கு தரும் விளக்கம், ஒப்பிலக்கியம் தேசியத் தன்மையையும் புறக்கணித்து வளர்ந்த விதம் ஆகியவற்றை அறிவது இக்கூறின் நோக்கமாகும்.

## 9.3. அமெரிக்காவில் ஒப்பிலக்கிய நோக்கும் போக்கும்

அமெரிக்க நாடு குடியேற்ற நாடாகும். ஐரோப்பாவைச் சேர்ந்த பல மொழியினரும் அங்குக் குடியேறியுள்ளனர். எனவே, ‘உலகப் பொதுமை மனப்பான்மை’ அங்கு எளிதில் வெற்றிபெற வாய்ப்பு இருந்தது. புதுத்திறனாய்வாளர்கள் (New Critics) பின்பற்றிய இலக்கிய இயக்கம் வலுப்பெற்றதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். புதுத்திறனாய்வாளர்கள் ஆசிரியர் வரலாறு, நூல் வரலாறு ஆகியவற்றுக்கு அப்பால் இலக்கியத்தைத் தனித்த நிலையில் நோக்கி, அதில் அமைந்துள்ள திறன்களைக் கொண்டே அதை மதிப்பிட வேண்டும் என்றார். நூலாசிரியர் பெயர் கூட முக்கியம் என்று அவர்களுக்குப் படவில்லை. இலக்கியம் தோன்றிய பின்னணி, ஆசிரியர் வரலாறு ஆகியவற்றால் இலக்கியத்திற்கு வெளியில் நின்றே அதை மதிக்கும் அல்லது வெறுக்கும் நிலை ஏற்படுகிறது. ஆனால் இலக்கியத்தினுள் புகுந்து அதனால் அதனை மதிக்கும் போக்கையே அவர்கள் விழைந்தனர். இப்போக்கு, பிரெஞ்சுக் கோட்பாட்டிற்கு எதிரானது ஆசிரியர் வரலாறும், நூல் தோன்றிய வரலாறும் தெரிந்தால்தான் யாருடைய பழைய படைப்புக்களாகிய மூலம் யாருடைய புதிய படைப்புக்களில் தம் செல்வாக்கை வீசியிருக்கக்கூடும் என்று கண்டறிய முடியும். எனவே, இது நூலைப்பற்றிய புறநிலை ஆய்வாகக் கருதப்பட்டது. அதனால் ஒப்பிலக்கியத்தை இத்தாக்கக் கோட்பாட்டினின்றும் (Influence theory) விடுவிக்க அமெரிக்கர்

முயன்றனர். ஒப்பிலக்கியமும் புதிய திசையில் புதிய நோக்கும் போக்கும் கொண்டு நடைபோடத் தொடங்கியது.



## 9.4. பிரெஞ்ச் மற்றும் அமெரிக்க கோட்பாடுகள் குறித்த அறிஞர்கள் நிலைப்பாடு



பிரெஞ்சுக்கோட்பாடு கடுமை மிக்கது. அமெரிக்கக் கோட்பாடு நெகிழ்வும் விரிவும் உடையது. அமெரிக்கக் கோட்பாட்டில் மிக முற்போக்கான பல கூறுகளைக் காணலாம். சுருக்கமாகக் கூறினால் பிரெஞ்சு நாட்டவர் ஒப்பீடு முறைகளில் மிகுதியான அழுத்தம் காட்டி ஆய்வு செய்தனர். அமெரிக்கரோ முறைகளைவிட இலக்கியமே முக்கியம் என்று இலக்கியத்தில் மிகுந்த அழுத்தம் வைத்தனர். உறவுடைய இலக்கியங்களிடைலேயே ஒப்புமைகளை, உறவுநிலைகளை, மூலத்தாக்கங்களைப் பிரெஞ்சு நாட்டவர் தேடினர். அமெரிக்கரோ ஒப்புமையுடைய எந்த இலக்கியத்தையும் அவை உறவுடையனவாயினும் அல்லவாயினும் ஒப்பிடலாம் என்றனர். அவர்கள் ஒப்பீட்டு எல்லையை விரிவுபடுத்தினர். பிறப்புறவு அற்றனவாயினும் ஒப்புமைக் கூறுகளை உடைய வெவ்வேறு மொழி இலக்கியங்களின் தலைசிறந்த நூல்களைப் பகுத்தும் ஒப்புமை கண்டும் (Analytic and analogical studies) ஆராய்வது இலக்கியத்தின் முருகியலை வெளிக்கொணர்ந்து, அவற்றின் சிறப்பியல்புகளை விளங்க வைக்க உதவுவது என்பது அமெரிக்க ஒப்பீட்டறிஞர்களின் கருத்தாகும்.

பிரெஞ்சு நாட்டவர் போற்றிய மூலமும் தாக்கமும்பற்றிய கொள்கையை அமெரிக்கர் வெறுத்தனர். அது விருப்பு வெறுப்புக்கு ஆளாக்குவது என்றும், இலக்கியத்தை முழுமையாக நோக்காமல் பிரித்துப் பிரித்துச் சிறுசிறு கூறுகளாக ஒப்பிடத் தூண்டுவது என்றும், தத்தமது நாட்டு இலக்கியமே சிறந்தது என்னும் மனப்பான்மையில் ஆராயப்படுவது என்றும் அவர்கள் குறை கூறினர்.

அமெரிக்காவில் 1899-ல் கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் ஆர்தர் கிறிஸ்டியின் (Arthur Christy) முயற்சியால் ஒப்பியல் துறை ஏற்படுத்தப்பட்டது. அவர், ‘ஒப்பியல் இலக்கியச் செய்தி மடல்’ என்ற இதழை 1942 முதல் 1946 வரை பதிப்பித்து வெளியிட்டார். பின்னர் ஹார்வேர்டு விசுகான்சின், வடகரோலினா போன்ற பல்கலைக்கழகங்களில் எல்லா இலக்கிய ஒப்பீடும் வளர்ந்தது. 1945க்குப் பிறகு 60க்கு மேற்பட்ட இடங்களில் இத்துறை ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பாவிலோ சார்போனுக்கு அடுத்து உட்ரெச்சில் மட்டுமே இலக்கிய ஒப்பீட்டுக் கழகம் அமைக்கப் பெற்றுள்ளது. அமெரிக்காவில் கண்ட பெருவளர்ச்சி வேறு எங்கும் காணுதற்கரியதாகும்.

## 9.5. அமெரிக்காவில் ஒப்பிலக்கிய வளர்ச்சி





‘யேல்’ பல்கலைக்கழகத்தில் இத்துறை மிக உயர்நிலைபெற்றது என்பர். ஆஸ்கார் ஜே.காம்ப்பெல், ரெனிவெல்லாக்கு ஆகியோர் இங்குப் பணிபுரிந்த பேரறிஞர்கள் ஆவர். வடகரோலினாவைச் சேர்ந்த வெர்னல் பால் பிரீடெரிச்சு (Wernal Paul Friederich) இந்தியானா பல்கலைக் கழகத்தைச் சார்ந்த ஹோர்ஸ்ட் பிரெஞ்சு (Hortz Frenz) ஆகியோரும் குறிப்பிடத்தக்கவர்.

வெர்னர் பால் பிரீடெரிச்சு ‘ஒப்பீட்டு ஆய்வாளராகப் பிறந்தவர் என்று சிறப்பிக்கப் பெறுவர். ஃபெர்னாண்ட் பால்டென்ஸ்பெர்கெர், பால் வான் தீகம் போன்ற பிரெஞ்சு நாட்டு அறிஞர்களுடன் தொடர்பு கொண்டு விளங்கியவர். ஐரோப்பாவில் ‘மனிதப் பண்பு நிலைக்களன்கள் உலகப் பொதுவானவை’ (Universal Human Values) என்ற கருத்தை வலியுறுத்தித் தொண்டாற்றிய பெருமை அவருக்கு உண்டு. பிரீடெரிச்சு 1945 முதல் தமது சொந்தச் செலவில் ‘ஒப்பிலக்கியச் செய்தி மடல்’ (Comparative Literature New Letter) ஒன்றைத் தட்டெழுத்துப் படிவமாக வெளியிட்டார். ஒரீகன் (Oregon) பல்கலைக்கழகம் வழியாக 1949 முதல், ஒப்பியல் இலக்கியம் (Comparative Literature) என்ற இதழைத் தோற்றுவித்தது மட்டுமன்றித் துணையாசிரியராகவும் விளங்கினார். வட கரோலினா பல்கலைக்கழகத்திலிருந்து வெளிவந்த, ஒப்பியல் பொது இலக்கிய ஆண்டு மலரின் (The year Book of comparative literature) ஆசிரியராக ஒன்பது ஆண்டுகள் பணியாற்றினார். இக்காலத்தில் ஒப்பியல் இலக்கியத்தின் விளக்கம், கொள்கை, பயன், எல்லை முறை யாவும் அவரால் தெளிவுறுத்தப்பட்டன. அவர் பிரெஞ்சு நாட்டு ஒப்பியல் அறிஞரான பால்டென்ஸ்பெர்சருடன் சேர்ந்து, ‘ஒப்பியல் இலக்கியக் கருவி நூற்றொகையினை (Bibliography of Comparative Literature) 1950-இல் வெளியிட்டார். நாளடைவில் இதுபோன்ற கருவி நூற்றொகைகள் பல வெளி வந்தன. பத்தாண்டுகளில் அமெரிக்காவில் ஒப்பியல் இலக்கியத்துறை பெரு வளர்ச்சி கண்டது.

1954-ல் அனைத்துலக ஒப்பியல் இலக்கியக் கழகம் (International comparative literature Association) நிறுவப்பெற்றது. 1955-ல் வெனிசில் அதன் முதல் மாநாடு நிகழ்ந்தது. அதன் இரண்டாம் மாநாட்டைப் பிரீடெரிச்சு 1958-ல் வடகரோலினாவைச் சேர்ந்த ஹில்லில் நடத்தினார். ‘அமெரிக்க ஒப்பியல் கழக’ மும் அப்போது நிறுவப் பெற்றது.

பேராசிரியர் எச்.எச்.ரிமாக் (Remark) தந்துள்ள விளக்கம் மீண்டும் குறிப்பிடத்தக்கதாகும். “ஒப்பியல் இலக்கியம் என்பது ஒரு குறிப்பிட்ட நாட்டு எல்லைகளுக்கு அப்பாற்பட்ட இலக்கிய ஆய்வாகும். ஒரு பக்கம் இலக்கியத்திற்கும் மறுபக்கம் பிற அறிவு சமயம் சார்ந்த துறைகளுக்கும் இடையேயுள்ள உறவுத் தொடர்புகளை ஆராய்வது. அவை கலைகள், தத்துவம், வரலாறு, சமூக அறிவியல், சமயம் முதலியனவாகும்.” (The

Study of literature beyond the confines of one particular country and the study of the relationships between literature on the one hand and the other of knowledge and beliefs such as the arts, philosophy, history, social, science, religion etc..on the other hand) இதிலிருந்து ஒப்பீட்டாய்வு என்பது நாட்டெல்லை கடந்தது என்பது போதரும். இலக்கியங்களிடையே மட்டுமன்றி இலக்கியத்தைப் பிறதுறைகளுடனும் ஒப்பிடலாம் என்பது புதுமையானது ஆகும்.

குறிப்பு

இலக்கியத்தின் முழுமையை (Totality of literature) கருத்தில் கொண்டு ஆராய வேண்டும் என்றும், எல்லா இலக்கியப் படைப்புக்களையும் இலக்கிய அனுபவங்களையும் ஒன்றாகக் கருதும் மனஉணர்வுடன் உலகளாவிய பார்வையில் எல்லா இலக்கியங்களையும் கற்பதே ஒப்பியலாகும் என்றும் ரெனிவெல்லாக்கு கூறுவது குறிப்பிடத்தக்கதாகும். (It will study all literature from an international perspective with a consciousness of the unity of all literary creation and experence).

அமெரிக்கர் வளர்த்த ஒப்பியல் துறை பிரிந்து விரிந்து சென்றது. இலக்கியத்தை நுண்கலைகளோடும் அறிவியலோடும் வரலாறு சமூகவியல் தத்துவம் உளவியல் போன்றவற்றோடு ஒப்பிடும் வகையில் ஒப்பியலின் ஆய்வுக் களத்தைப் பெரிதாக்கினர். ஒப்பீட்டிற்காக ஒப்பீடு (Comparison for its own sake) என்பதை அமெரிக்கர் மறுத்தனர். பிரெஞ்சுக் கோட்பாடு ‘முருகியல் நோக்கு’ உடையதாய் மலர்ந்தது. பிரீடெரிச்சு என்னும் அறிஞர் பிரெஞ்சுக் கோட்பாட்டை ‘அறிவியல் முறையில் அணுகுதல்” (Scientific Approach) என்றும், அமெரிக்கக் கோட்பாட்டை ‘முருகியல் முறையில் அணுகுதல்’ (Aesthetic Approach) என்றும் வருணித்தார். அமெரிக்கர்கள் எல்லாவற்றையும் புதிதாகப் புகுத்தினர் என நினைப்பது தவறு நுண்கலைகளுடன் ஒப்பிடுதல் உலகப் பார்வை முருகியல் நோக்கு போல்வனவற்றிற்காக வித்துக்களை நாம் பிரெஞ்சு நாட்டு வளர்ச்சியிலேயே காணமுடியும். ஒப்பீட்டுத்துறையைப் பிரெஞ்சு, அமெரிக்க நாட்டுப் பேரறிஞர்கள் மற்றும் கருத வேண்டும். இங்ஙனம் இவ் ஒப்பீட்டுத் துறை பெற்ற வளர்ச்சியை ஒப்பீட்டறிஞர் வெர்னர் பி.பிரீடெச்சு அவர்கள் எவ்வாறு கருதினார் என்பதைக் கீழ்கண்ட அவருடைய கருத்துப் புலனாக்கும்.

நமது ஒழிவு நேரங்களில் நாம் எழுதுகின்ற ஆராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கின்ற ஆய்வுத் தாள்கள், நாட்டு மக்கள் அறிய எழுதும் நூல்கள் போன்றவற்றில் நாம் நமது கலையை, சார்பு நிலையை, திறமையை வெளிப்படுத்துகிறோம். நம்மில் சிலர் அடிக்கருத்து (Thematology) ஆய்வு செய்கின்றனர். மற்றவர்கள் இலக்கிய வகைகளை உலகளாவிய நிலையில் ஆய்கின்றர் மற்றும் சிலரோ தாக்கம் பற்றிய ஆய்வை விரும்புகின்றனர். சிலர் இடைத் தொடர்பாளர்களின் (Intermediaries) இன்றியமையாமையை ஆய்கின்றனர். இன்னும் சிலரோ தங்களுடைய இரண்டு அல்லது மூன்று மொழி

குறிப்பு

இலக்கிய அறிவை வரலாற்றோடும் சமயத்தோடும் ஒப்புமைப்படுத்தி ஆராய்கின்றனர். மற்றவர்கள் நுண்கலைகளுடனோ அல்லது கலைத்திறனாய்வுடனோ இலக்கியத்தைத் தொடர்புபடுத்தி ஆய்கின்றனர். இலக்கியத்தின் சமுதாயப் பண்பைக் கண்டறிவதே பயனுள்ள ஆய்வுத்துறை எனக்கொண்டு அதனைத் தம் முன்னுள்ள ஒப்பியலாய்வாகச் சிலர் கருதுகின்றனர். மற்றும் சிலர் தலைசிறந்த முருகியற் கருத்துக்களை மேற்கொண்டு ஆராய்ந்து, தம் மிகுதிறமை புலனாகப் பாடுபடுகின்றனர். இக்கருத்து வேறுபாடுகளோடு வெவ்வேறு வகையான சிறந்த ஆய்வுகளை நாம் பெறமுடிகிறது. நூல்களும், கட்டுரைகளும் மிகச்சிறுதிறன் முதல் உலகளாவிய இயக்கங்கள் சார்ந்த பெருங்கோட்பாடுகள் வரை வேறுபட அமைகின்றன. அவை அரிதான பொருள் முதல் அடிக்கடி பயன்படும் பொருட்கூறுவரை ஆராய்கின்றன. ஆயினும் அவை ஒவ்வொன்றும் அந்தந்த ஆசிரியரின் ஒப்பற்ற தனிச்சிறப்பைப் புலனாக்குகின்றன. ஒப்பிலக்கியத்தில் அவ்வவ் ஆசிரியர் எவ்விதமான ஆய்வை மேற்கொள்ள விரும்புகிறார் என்பதையும் அவை புலனாக்கி நிற்கின்றன. இத்தகு மனங்கவரும் புதிய முடிவற்ற ஆய்வுக்களமாக (Fascinating new, inviting field) ஒப்பிலக்கியத்துறை விளங்குகிறது''

இலக்கியத்தை உலக நோக்கில் ஆய்வது, இலக்கியங்களிடையே உள்ள ஒப்புமைகளை ஆய்வது, இலக்கியத்தைப் பிற கலைகளுடனும் இயல்புடனும் ஒப்புநோக்கி ஆய்வது, இலக்கியத்தைப் புதுமை நோக்கில் ஆய்வது என இவ்வாறு இவ் ஒப்பிலக்கியத் துறை விரிந்து கொண்டே செல்கிறது.

## 9.6. உலகப் பொதுமையை நோக்கிய ஆய்வு

பிரெஞ்சுக் கோட்பாட்டின் வழிப்பட்டதே அமெரிக்கரின் ஒப்பியற்கோட்பாடு எனலாம். எனினும் முன்னது கடுமை மிக்கது் பின்னது நெகிழ்வும் விரிவுமுடையது. அமெரிக்கக் கோட்பாட்டில் மிக முற்போக்கான கூறுகள் பலவற்றைக் காணலாம். பிரெஞ்சு நாட்டினர் ‘இலக்கிய ஒப்பீட்டில்’ ஒப்பீட்டிற்கு அதிக அழுத்தம் தந்தனர். அமெரிக்கரோ இலக்கியத்திற்கு அதிக அழுத்தம் கொடுத்தனர். உறவுடைய இலக்கியங்களை மட்டுமல்லாமல் ஒப்புமையுடைய எவ்விலக்கியத்தையும் ஒப்பிடலாம் என்று அமெரிக்கர் கொள்கையை விரிவுபடுத்தினர். “வேறுபட்ட பல மொழிகளிலும் விளங்கும் இலக்கியங்களிற் பொருந்தியுள்ள உயிருள்ள உறவுகளைக் கண்டறிவதே இவ் ஒப்பீடு'' என்று கருதினர். இங்ஙனம் பிறப்புறவற்ற வெவ்வேறு இலக்கிங்களின் தலைசிறந்த நூல்களைப் பகுத்தும் ஒப்புமை கண்டும் (Analytical and analogical studies)ஆராய்வது, இலக்கியங்களின் முருகியலை வெளிக்கொணர்ந்து விளக்கவும் வரலாற்று முடிவுகளைக் காணவும் உதவும் என்று குறிப்பிட்டனர்.

பிரெஞ்சு நாட்டவர் போற்றிய மூலமும் தாக்கமும் பற்றிய கொள்கைகளை இவர்கள் வெறுத்தனர். விருப்பு வெறுப்புக்கு

ஆளாக்குவது என்றும் இலக்கியத்தை முழுமையாக நோக்காமல் பிரித்துப் பிரித்துச் சிறுசிறு கூறுகளாக ஒப்பிடத் தூண்டுவதென்றும் தத்தமது நாட்டு இலக்கியமே சிறந்தது எனும் மனப்பான்மையில் ஆராயப்படுவது என்றும் கூறிப் பிரெஞ்சுக் கோட்பாட்டைக் குறை கூறினர். இலக்கிய ஆராய்ச்சி உலக நோக்கில் அமைய வேண்டும் என்றனர். அமெரிக்க நாடு குடியேற்ற நாடாகையால் - ஐரோப்பாவைச் சேர்ந்த பல மொழியினரும் குடியேறியுள்ள நாடாகையால் - அங்கு ‘உலகப் பொதுமை மனப்பான்மை’ மிகவும் வெற்றி பெற்று விளங்கியது. பழமை போற்றுவதும் தனி இலக்கியப் பண்பாட்டு வளர்ச்சி நிலை கண்டதுமாகிய பிரெஞ்சுக்கு மாறாக அமெரிக்கச் சூழ்நிலை இருந்ததால், இந்நாட்டில் ‘ஒப்பீட்டுத்துறை’யும் உலகளாவியதாக வளர நேர்ந்தது. மேலும், அமெரிக்காவில் புதுத்திறனாய்வாளர்களின் (New Critics) செல்வாக்குப் பெருகியிருந்ததும் இதற்கு ஒரு காரணமாகும். இப் ‘புதுத் திறனாய்வாளர்கள்’ இலக்கியத்தை அதன் தனித்தநிலையில் நோக்கி, அதிலமைந்துள்ள திறன்களைக் கொண்ட மதிப்பீடு செய்யவேண்டும் என்று மிக அழுத்தமாக எடுத்துக் கூறினர். ஆசிரியன் வரலாறோ (Biograpy of the author) இலக்கிய வரலாறோ தேவையற்று என்றனர். இலக்கியம் தோன்றிய பின்னணி, அதன் அசிரியன் பற்றிய ஆய்வுகளால் - வரலாற்றாய்வால் - விருப்பு வெறுப்புத் தோன்றி இலக்கியத்தின் மதிப்பீடு குறைவு பட்டுவிடுமென்றனர். இலக்கியத்தை அவ்விலக்கியத்திற்காக மதிப்பிட வேண்டுமே தவிரப் பிறவாறு முயலுதல் கூடாதென்றனர்.

இந்நிலையில், அமெரிக்காவில் இருபாற்பட்ட நிலை இருந்தது. ஒன்று முன்னைய பழமையான நிலை் ஆசிரியன் வரலாறு சார்ந்தது் வரலாற்றுவழி வரிசைப்படுத்துவது மந்தமானது. மற்றது புதுத்திறனாய்வாளர்கள் விரித்துக் கூறியது் முழுவதும் தற்சார்பற்றது, பிறவற்றுடன் தொடர்பற்று (Detached), அணிநலன் ஆய்வாக அமைவது (Rhapsodic) பின்னணியும் அறிஞருடைய இலக்கிய ஆய்வுக்கருவிகளும் (Scholarly Apparatuses and Packgrounds) பற்றிக் கவலைப்படாதது. அதற்குப்பதிலாக படைக்கப்பட்ட நூல்களில் அவற்றைப் படைத்தவரின் ஒப்பற்ற தனித்திறன்களைக் காண்பது. பெரும்பாலும் இவை இரண்டிற்கும் இடைப்பட்ட வழியையே அறிஞர்கள் பெரிதும் போற்றினர். பிற்கூறிய புதுத்திறனாய்வாளரின் கோட்பாட்டால் இலக்கிய ஒப்பீட்டில் ‘வரலாற்றுக்கு’ இருந்த முக்கியத்துவம் குறைக்கப்பட்டது. ஒப்பியல் இலக்கியம் முருகியல் நோக்கில் (Aesthetic view) வளர இப்புதுத்திறனாய்வே காரணமாகும். புதுத்திறனாய்வாளரின் ‘வரலாற்று மறுப்பு’ இயக்கத்தைப் பின் வந்தோர் முழுவதும் ஏற்றுக்கொண்டிலர். எனினும், அத்திறனாய்வாளரின் தாக்கத்தால் “ஒப்பியல் இலக்கியம்” புதிய திருப்பமும் புதிய விளக்கமும் பெற்றது.

அமெரிக்காவில் 1899 இல் கொலம்பியா பல்கலைக்கழகத்தில் ஆர்தர் கிறிஸ்டியின் (Arthur Christy) முயற்சியால் ஒப்பியல்

குறிப்பு

இலக்கியத்துறை ஏற்படுத்தப்பட்டது. பின்னர் ஹார்வேர்டு, விஸ்கான்சின், வடகரோலினா போன்ற பல்கலைக்கழகங்களிலெல்லாம் இலக்கிய ஒப்பீட்டுத்துறை ஏற்பட்டது. 1945-க்குப் பிறகு 60-க்கு மேற்பட்ட இடங்களில் இத்துறை ஏற்பட்டது என்பர். ஐரோப்பாவிலோ சார்போனுக்கு அடுத்து உட்ரெச்சில் (Uttrecht) மட்டுமே இலக்கிய ஒப்பீட்டுக் கழகம் அமைக்கப் பெற்றது. அமெரிக்காவில் கண்ட பெரு வளர்ச்சி வேறு எங்கும் காணுதற்கரியதாகும்.

'யேல்' பல்கலைக்கழகத்தில் இவ் ஒப்பியல்துறை மிக உயர்நிலை அடைந்ததென்பர். ஆஸ்கார் ஜே.காம்ப்பெல் ரெனிவெலாக்கு (யேல் பல்கலைக்கழகம்), வடகரோலினாவைச் சேர்ந்த வெர்னர் பால் பிரீடெரிச்சு (Werner Paul Friedeaich), இந்தியானா பல்கலைக்கழகத்தைச் சார்ந்த ஹோர்ஸ்ட் பிரென்சு (Horst Frenz) போன்றோர் தலைசிறந்த அமெரிக்க ஒப்பீட்டறிஞர்களில் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

வெர்னர் பிரீடெரிச்சு, பிரஞ்சு நாட்டுச் சார்போன் பல்கலைக்கழகத்தில் விளங்கிய பெர்னாண்ட் பால்டென்ஸ்பெர்கெர், பால்வான்தீகம் போன்றோருடன் தொடர்பு கொண்டு விளங்கியவர். இவர் பலமொழி வழங்கும் ஸ்விட்சர்லாந்தில் பிறந்ததாலும் இளமையிலேயே பல மொழி அறிவுடையவராகக் கல்வியில் தேர்ச்சி பெற்றதாலும் இவரை 'ஒப்பீட்டாய்வாளராய்ப் பிறந்தவர். என்றே சிறப்பியர். ஐரோப்பாவில் 'மனிதப் பண்பு நிலைக்களன்கள் உலகப்பொதுமையாவன' (Universality of human values) என்ற கருத்தை வலியுறுத்தித் தொண்டாற்றிய பெருமை இவருக்குண்டு, கொலம்பிய பல்கலைக்கழகத்தில் ஆர்தர் கிறிஸ்டி 'ஒப்பியல் இலக்கியச் செய்திமடல்' (Comparative literature News letter) என்ற இதழை, 1942 முதல் 1949 வரை பதிப்பித்து வெளியிட்டார். பிரீடெரிச்சு 1945 முதல், தமது சொந்தச் செலவில் இது போன்றதொரு செய்திமடலைத் தட்டெழுத்துப் படிவமாக வெளியிட்டு ஏறத்தாழ 350 ஆர்வலர்களுடன் தொடர்பு கொண்டார். பத்தாண்டுகளில் அமெரிக்காவில் ஒப்பியல் இலக்கியத்துறை பெருவளர்ச்சி கண்டது. 'தற்கால மொழிக் கழகத்தில் (Modern language Association) இலக்கிய ஒப்பீட்டிற்கு ஒரு பிரிவு தொடங்கப்பட்டது. ஒரீகன் பல்கலைக்கழக (Oregon) வழியாக 1949 முதல் 'ஒப்பியல் இலக்கியம் (Comparative Literature) என்ற இதழ் வெளிவரத் தொடங்கியது. பிரீடெரிச்சு இதனைத் தோற்றுவித்தது மட்டுமன்றித் துணையாசிரியராகவும் விளங்கினார். இவர் வெளியிட்ட செய்தி மடல், 1952 தொடங்கி வடகரோலினா பல்கலைக்கழகத்திலிருந்து – "ஒப்பியல், பொது இலக்கிய ஆண்டுமலராக" (The year book of Comparative and General Literature) வெளிவரத் தொடங்கியது. அப்பல்கலைக் கழகத்தில் ஆங்கிலம் மூலம் செருமனியையும் போதித்து வந்து, ஒப்பியல் இலக்கியத்துறையையும் வளர்த்த பிரீடெரிச்சு அவர்களே இம்மலருக்கு ஒன்பதாண்டுகள் வளர ஆசிரியராகப் பணியாற்றினார்.

இக்காலத்தில் ஒப்பியல் இலக்கியத்தின் விளக்கம், கொள்கை, பயன், எல்லை, முறை யாவும் இவரால் தெளிவுறுத்தப்பட்டன.

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

பிரெஞ்சு நாட்டு பால்டன்ஸ்பெர்கருடன் சேர்த்து பிரீடெரிச்சு "ஒப்பியல் இலக்கியக் கருவி நூற்றொகை" (Bibiologrphy of comparative literature) ஒன்றை 1950 இல் வெளியிட்டார். இது படிப்படியாக வளர்ந்து ஒப்பிடுதற்கான பகுதிகளைச் சுட்டிக்காட்டும் பட்டியல்கள் 33,000 கொண்டதாக ஆயிற்று. இது போன்று 'அமெரிக்க ஜெர்மன்', அல்லது 'பிரஞ்சு ஜெர்மன்' அல்லது 'ஆங்கில பிரெஞ்சு' ஒப்பியல் இலக்கியக்கருவி நூல் தொகைகள் பல வெளி வந்தன.

சில காலம் அமெரிக்க ஒப்பீட்டறிஞரில் சிலர் முழுதும் பிரெஞ்சுக் கோட்பாடு வழி நின்றனர் மற்றும் சிலர் அதை முற்றும் மறுத்து அமெரிக்கக் கருத்தையே வலியுறுத்தினர். பிரீடெரிச்சு இவ் இரண்டு கருத்துக்களையும் உள்ளடக்கியவர் எனலாம். ஆராய்ச்சியில் முறைகட்கே (Methodology) சிறப்பளிப்பதைவிட இலக்கியத்தில் மிகுதியும் கவனம் செலுத்துக என இவர் வேண்டினார். இத்துறையில் எச்.எச்.ஹென்றி ரிமாக்கு (ர்நசெல சுநஅயம) ஒரு நடுநிலைக் கோட்பாட்டை வகுத்தார்.

1954இல் 'அனைத்துலக ஒப்பியல் இலக்கியக் கழகம்' (Interantional Comparative Literature Association) நிறுவப்பட்டது. 1955 இல், வெனிசில் அதன் முதல் மாநாடு நடைபெற்றது. அதன் இரண்டாம் மாநாட்டை வடகரோலினாவைச் சேர்ந்த சாப்பல் ஹில்லில் (Chapel Hill) 1958இல், பிரீடெரிச்சு நடத்தினார். அப்போது அமெரிக்க ஒப்பியல் இலக்கியக் கழகமும் நிறுவப்பட்டது. அரசியல் வழிப்பட்ட மொழி, நாடு, இனம் போன்ற தடைகள் தகர்க்கப்பட்டு, இலக்கிய ஒருமைப்பாடு போற்றப்பட்டது. இலக்கியத்துறை நுண்கலைகளோடும், அறிவியலோடும், வரலாறு, சமூகவியல், தத்துவம், உளவியல் போன்றவற்றோடும் ஒப்பிட்டு ஆராயலாம் என்று அமெரிக்கர் இதன் ஆய்வுக்களத்தை மிகவும் விரிவுபடுத்தினர். இதுபிரெஞ்சு நாட்டவர் கொள்கைக்கு அப்பாற்பட்டது. 'ஒப்பீட்டிற்காக ஒப்பீடு' (Comparation for its own sake) என்பதை அமெரிக்கர் மறுத்தனர். மூலமும் தாக்கமும் கண்டுபிடிப்பது 19 ஆம் நூற்றாண்டில் பெருவரவிற்றாக இருந்தது. அதனை முழுவதும் தேவையற்றது என மறுத்த அமெரிக்கர் இலக்கியஒப்பீடு அதன் முருகியலை வெளிக் கொணர்வதற்கே என்றனர். இவ்வகையில் அமெரிக்கக் கோட்பாட்டை முருகியல் நோக்கு (Aesthetic view) உடையது எனலாம். பிரீடெரிச்சு பிரஞ்சுக் கோட்பாட்டை அறிவியல் முறையில் அணுகுதல் (Scientific Approach) என்றும், அமெரிக்கக் கோட்பாட்டை முருகியல் முறையில் அணுகுதல் (Aesthetic Approach) என்றும் வருணிப்பார். அவர் குறிப்பிடுகின்ற விளக்கத்திலிருந்து, அமெரிக்காவில் இத்துறை எவ்வாறு வளர்ச்சி பெற்றது என அறியலாம்.

“நமது ஒழிவு நேரங்களில் நாம் எழுதுகின்ற ஆராய்ச்சிக்கட்டுரைகள். படிக்கின்ற ஆய்வுத்தாள்கள், நாட்டு மக்களறிய எழுதும் நூல்கள் போன்றவற்றில் நாம் நமது சுவையை, சார்பு நிலையை, திறமையை வெளிப்படுத்துகிறோம். நம்மில் சிலர் அடிப்பொருள் ஆய்வு (Thematology) செய்கின்றனர் மற்றவர்கள் இலக்கிய வகைகளை உலகளாவிய நிலையில் ஆய்கின்றனர் மற்றும் சிலர் ‘தாக்கம்’ பற்றிய ஆய்வை விரும்புகின்றனர் சிலர் இடைத்தொடர்பாளர்களின் (Intermediaries) இன்றியாமையாமையை ஆய்கின்றனர் சிலர் தங்களுடைய இரண்டு அல்லது மூன்று இலக்கியங்களின் அறிவை வரலாற்றோடும் சமயத்தோடும், தொடர்படுத்தி ஆய்கின்றனர். மற்றவர்கள் நுண்கலைகளுடனோ அல்லது கலைத்திறனாய்வுடனோ தொடர்புடுத்தி ஆய்கின்றனர் இலக்கியத்தின் சமுதாயப் பண்பைப் பயனுள்ள ஆய்வுத்துறையெனக் கொள்வதே தம்முன்னுள்ள ஒப்பியல் ஆய்வு என்பது சிலரது கருத்தாகவுளது மற்றும் சிலர் தலைசிறந்த முருகியற் கருத்துக்களை மேற்கொண்டு ஆராய்தலில் தம்மிகு திறமை புலனாகச் செய்கின்றனர். இக்கருத்து வகை வேறுபாடுகளால், வெவ்வேறு வகையான சிறந்த ஆய்வுகளை நாம் பெற முடிகிறது. கட்டுரைகளும் நூல்களும் மிகச் சிறு திறன் முதல் உலகளாவிய இயக்கங்கள் சார்ந்த பெருங்கோட்பாடுகள் வரை வேறுபட அமைகின்றன. அவைகள் அரிதான பொருள் முதல் அடிக்கடி பயன்படும் பொருட்கூறுகள் வரை ஆராய்கின்றன. ஆயினும் அவை ஒவ்வொன்றும் அந்த ஆசிரியரின் ஒப்பற்ற தனிச்சிறப்பைப் புலனாகுக்கின்றன. ஒப்பியல் இலக்கியத்தில் அவ்அவ் ஆசிரியர் எவ்விதமான ஆய்வை மேற்கொள்ள விரும்புகிறார் என்பதையும் அவை புலனாக்கி நிற்கின்றன. இத்தகு மனங்கவரும் புதிய, முடிவற்ற ஆய்வுக் களமாக ஒப்பியல் இலக்கிய ஆய்வுத்துறை விளங்குகிறது. (Fascinating, new, inviting field which is comparative literature)

இன நாடு எல்லைகளைக் கடந்த நிலையில் வைத்து இலக்கிய ஆய்வை மேற்கொள்வதே ஒப்பியல் இலக்கிய ஆய்வு என்பர். இந்நிலையில் உலக இலக்கியம் பொது இலக்கியம் ஆகியவற்றோடு ஒப்பியல் இலக்கியம், ஒன்றுபடுகிறது என ரெனிவெலாக்கு வற்புறுத்துகிறார். இலக்கியத்திறனாய்வு, இலக்கியவரலாறு, இலக்கிய கொள்கை மூன்றும் பிரித்தறிய முடியாதென, ஒன்றினொன்று செறிவுடையன என்று கருதுவதே ஒப்பியற் கோட்பாடாகும்.

இலக்கியத்தின் முழுமையைக் (Totality of Literature) கருத்திற்கொண்டு ஆய்வது இது. எல்லா இலக்கியப் படைப்புகளையும் இலக்கிய அனுபவங்களையும் ஒன்றாகக் கருதும் மனவுணர்வுடன், உலகளாவிய பார்வையில் அனைத்து இலக்கியங்களையும் கற்பது ஒப்பியல் இலக்கியம் என்ற ரெனிவெலாக்குக் கருத்துச் சிந்திக்கத் தக்கதாகும். (It will study all literature from an international perspective with a consciousness of the unity of all lite ary creation and experience)

குறிப்பு

## 9.7. பேராசிரியர் எச்.எச்.ரிமாக்கு (H.H.Remak) தரும் விளக்கம்

“ஒப்பியல் இலக்கியம் என்பது ஒரு குறிப்பிட்ட நாட்டு எல்லைகட்கு அப்பாற்பட்ட இலக்கிய ஆய்வாகும். ஒரு பக்கம் இலக்கியத்திற்கும் மறுபக்கம் பிற அறிவு, சமயம் சார்ந்த துறைகட்குமிடையேயுள்ள உறவுத்தொடர்புகளை ஆராய்வது. அவை கலைகள், தத்துவம், வரலாறு, சமூக அறிவியல்கள், அறிவியல், சமயம் முதலியனவாகும்.

உலக நோக்கில் இலக்கியத்தை ஆய்வது. ‘இலக்கியங்களிடையேயுள்ள உறவை ஆய்வது’ ஒப்புமைகளை (Parallalisms and analogies) ஆய்வது, இலக்கியத்தைப் பிறகலைகளுடனும் அறிவியல் வரலாற்றுத் துறைகளுடனும் ஒத்துநோக்கி ஒப்பிட்டு ஆய்வது, இலக்கியம் வடிவமைப்புக் கூறுகளால் (Structures) உருவாவதெனவும் பல்வேறு கலைக்கூறுகளால் ஆக்கப்பெறுவது (Systems) எனவும் இதுபோலப் புதுமை நோக்கில் ஆய்வது என இவ்வாறு இவ்வொப்பியல் இலக்கியத்துறை விரிந்து கொண்டே செல்கிறது.

தேசிய இலக்கியங்களை இது புறக்கணிப்பதாகவோ, ஒரு மொழி இலக்கியத்தின் தனிப்பண்புகளைக் குறைத்து மதிப்பிடுவதாகவோ கருதுதல் தவறு, இன்று நாம் கற்பதுபோலத் தனிமொழி இலக்கியத்தின் சிறப்பியல்புகளைக் கற்கலாம். ஆனால் ‘இலக்கியம் எல்லாம் ஓரினம்’ என்ற உயர்வு தாழ்வற்ற மனத்துடன் ஆராய வேண்டும். கலைகளுக்கும் அக்கலைகளில் ஒன்றாகிய இலக்கியக் கலைக்கும் இனவுறவு உண்டு ஒப்புமை உண்டு தத்துவம் அல்லது அறிவியலுடனும் தொடர்புண்டு. இவை அனைத்தையும் கருத்திற் கொள்ளுமாறு பரந்துபட்ட, ஆழமான இலக்கிய ஆராய்ச்சிக்குப் புதிய புதிய இலக்கியக் கொள்கைகளையும் ஆய்வுக்களங்களையும் ‘ஒப்பியல் இலக்கியம்’ நல்குகிறது.

## 9.8. தேசியத் தன்மையை புறக்கணித்தல்

பிரெஞ்சுக் கோட்பாட்டின் மீது அமெரிக்கர்கள் நிகழ்த்திய விமரிசனத் தாக்குதல்களையும் கண்டனங்களையும் போல, அமெரிக்க ஒப்பிலக்கியக் கோட்பாடு பெருமளவில் ஒப்பிலக்கியச் சிந்தனையாளர்கள் மற்றும் ஒப்பீட்டாய்வாளர்களின் தாக்குதல்களுக்கும் விமர்சனகளுக்கும் உட்படுத்தப்படவில்லை. இந்நிலையை முதலில் மாற்றிமைத்தவர் சூசன்பாசுனெட் ஆவார். இலக்கியங்களை நாட்டின் எல்லைகளைக் கடந்து உறவுகளற்ற நிலையிலும் ஒப்பிடுதல், ஏனைய அறிவுத்துறைகளுடன் இலக்கியப் படைப்புக்களை ஒப்பிடுதல் என ஒப்பிலக்கிய ஆய்வுகளை உலக நோக்கிலும், பல்துறை இணைவு சார்ந்தும் அமெரிக்கக் கோட்பாடு விரிவுபடுத்தியது. அதே சமயத்தில் ஓர்

இலக்கியப் படைப்பின் மொழி, இனம், பண்பாடு சார்ந்த தனித்தன்மைகளையும், தேசியத் தன்மைகளையும் அமெரிக்கக் கோட்பாடு புறக்கணிக்கின்றது.

இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் ஐக்கிய நாடுகள், காமன்வெல்த் நாடுகள் என்பன போன்ற அமைப்புக்கள் போரற்ற உலகத்தைப் பற்றிச் சிந்தித்தப்போது, அமெரிக்க ஒப்பிலக்கியத் திறனாய்வாளர்களும் ஆய்வாளர்களும் உலகளாவிய கலை, இலக்கியப் படைப்புக்களைப் பற்றிச் சிந்தித்தனர். இதன் காரணமாக அவர்கள் வெளிப்படையாகவே இலக்கியப் படைப்புக்களின் தேசியத் தன்மையைப் புறக்கணித்தது புலனாகின்றது.

அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர்கள் தலைசிறந்தவராகிய ஃபிரான் காய்ஸ் என்பவர், ‘தேசிய இலக்கியம்’ என்று ஓர் ஆய்வுப் பிரிவை ஏற்படுத்த முடியாது. அது இடுகுறியாகக் குறுகிய பார்வையைக் கொண்டதாகும். ‘ஒப்பிலக்கியம்’ என்பது ஒரு ‘கல்வியியல்’ துறை என்பதற்கும் அப்பாற்பட்டது. இது உலக இலக்கியங்கள் குறித்த ஒட்டுமொத்தப் பார்வையும் உடையது’ என்கின்றனர்.

பண்பாட்டு வேற்றுமைகளைப் புறக்கணித்து, ஒப்பிலக்கியத்தையே முதன்மைப்படுத்தும் இத்தகைய பார்வை ஒப்பிலக்கியத்தை ஒரு வகையான உலகச் சமயம் போல முன்மொழிவதாக அமைகின்றது என்கின்றார். சூசன் பாசுனெட் ரெனிவெல்லக்கும் ஆஸ்டின் வாரனும் ‘இலக்கியக் கொள்கை’ என்ற தமது நூலில் உலக இலக்கிய ஒருமை குறித்துக் கூறும் கருத்துக்களையும் பாசுனெட் அங்கத நடையில் விமர்சிக்கின்றார். அதிகமாக எதிர்பார்க்கின்றது. அது இலக்கியப் பார்வைகளையும் இலக்குகளையும் விரிவுபடுத்தமாறு வேண்டுகின்றது. அடைவதற்கு எளிதற்ற வட்டார மற்றும் மாநில உணர்வுகளை அடக்கியாளச் சொல்கின்றது’ என்கிறார்.

ஒப்பியல் சிந்தனையாளர்களின் இத்தகைய வெளிப்பாடு ஒருவகைப்பட்ட நுணுக்கமான அறிவினைக் கொண்ட சர்வதேசியத் தூதுவர் ஐக்கிய நாடுகளின் ஒப்பிலக்கியங்களுக்காகச் செயலாற்றுவதைப் போன்றிருக்கின்றது என்கின்றார் பாசுனெட். மேலும் ‘கலையும் மனிதமும் ஒன்றென்பதனைப் போல அனைத்துலக இலக்கியமும் ஒன்றே’ என்ற ரெனிவெல்லக், ஆஸ்டின் வாரன் ஆகியோரின் கோட்பாட்டை சர்வதேச நெருக்கடிகளாகிய முதல், இரண்டாம் உலகப்போர்களுக்குப் பின்னர் தோன்றிய இலக்கியங்கள் குறித்த இலட்சியம் பார்வை என மதிப்பிடுகின்றார் சூசன் பாசுனெட். இவ்வாறே ரெனிவெல்லக், எச்.எச்.ரிமாக் போன்ற அமெரிக்க இலக்கியப் பிரதியை மட்டும் எடுத்துக்கொண்டு ஆய்வு கருத்தில் கொள்ளாதது - சூசன் பாசுனெட்டின் விமர்சனத்திற்கு உட்படுத்தப்படுகின்றது. ரெனிவெல்லக் ஒப்பிலக்கியத்தை அறிமுகப்படுத்தி முன்மொழிந்த போது, ‘ஒப்பிலக்கியம் மொழி, இனம், அரசியல் எல்லைகளைக் கடந்து சுதந்திரமான இலக்கிய ஆய்வுகளோடு தான் தன்னை

அடையாளப்படுத்திக் கொள்கின்றது. ஒப்பிலக்கியத்தை ஒரு முறையியலுக்குள் சிறைப்படுத்த முடியாது. வரலாற்றுத் தொடர்புகளுக்குள் சிறைப்படுவதாக ஒப்பீடு இருத்தல் கூடாது.

இலக்கிய வரலாறு, இலக்கியக் கொள்கை, இலக்கியத் திறனாய்வு என்பன இலக்கிய ஆராய்ச்சியின் மூன்று முதன்மைப் பிரிவுகளாகும். இம்மூன்றும் ஒன்றோடொன்று உறவுநிலையில் தம்மை ஈடுபடுத்திக் கொள்வன. செயற்கையான வரம்புகளைக் கடந்த எளிமையான இலக்கியம் குறித்த ஆய்வாக உருவெடுக்கும் போதுதான் ஒப்பிலக்கியம் செழுமையடையும்' என்று குறிப்பிட்டார். இவரது இக்கூற்றில் இலக்கியம் குறித்த சமூக, பொருளாதார, அரசியல் விடயங்கள் வேண்டுமென்றே வெளிப்படையாகத் தவிர்க்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் 'ஒப்பிலக்கியத்தை அரசியலற்ற தன்மையில் மாற்றியதுதான் அமெரிக்க ஒப்பிலக்கியப் பள்ளியின் சாதனை' என்று சூசன்பாசுனெட் விமர்சிக்கின்றார். அமெரிக்கக் கோட்பாட்டின் மீதான சூசன் பாசுனெட்டின் விமர்சனம்.

(அ) இலக்கியப் படைப்புக்களின் தேசியக் குணங்கள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். அவை புறக்கணிக்கத் தக்கனவல்ல.

(ஆ) இலக்கியம் அது தோன்றிய சமுதாய, அரசியல் பின்புலங்களில் வைத்து மதிப்பிடப்படல் வேண்டும்.

என்னும் இருநிலைப் போக்குகளின் மையமாக அமைகின்றது. பாசுனெட்டின் இந்த அணுகுமுறை ஓரளவிற்குப் பிரெஞ்சு ஒப்பிலக்கிய ஆய்வுமுறைக்கு நெருக்கமானதாக இருக்கின்றது. அமெரிக்க ஒப்பிலக்கியத்தின் உலகளாவிய தன்மைக்கும், உருவவியல் சார்ந்த அழகியல் கோட்பாட்டிற்கும் - எதிரானதாக வைக்கப்படுகின்ற விமர்சனங்கள், பின்னைக் காலனியம் மற்றும் பின்னை நவீனத்துவக் கொள்கைப் பின்புலங்களில் புரிந்துகொள்ளப்பட வேண்டும். இவற்றுள் பின்னை நவீனத்துவம் பேரிலக்கியங்களாகிய காப்பியங்கள், உலக மனித ஒற்றுமை முதலான பெருங்கதையாடல்களையும் அதன் மையங்களையும் மறுக்கின்றது. பெண்ணிய இலக்கியம், ஆப்பிரிக்கப் பண்பாடு முதலான சிறுகதையாடல்களையும், விளிம்புநிலை மக்களின் வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளையும் ஆதரிக்கின்றது. அதன் முக்கியச் செயற்பாடு இலக்கியத்தை ஓர் அரசியல் செயல்பாடாக நோக்குவதாகும். பின்னைக் காலனியக் கொள்கைகளும் இலக்கியப் படைப்புக்களின் தேசிய அடையாளங்கள் மற்றும் அவ்விலக்கியங்கள் தோன்றிய நாட்டின் - மொழியின் தாய்ப்பண்பாடுகளையுமே வலியுறுத்துகின்றன. இந்தப் பின்னணியில் அமெரிக்க ஒப்பிலக்கிய அறிஞர்கள் எடுத்துக்காட்டிப் பேசும் உலகளாவிய பண்பாட்டு மதிப்புக்கள் என்னும் கருத்தமைப்பு நவீனக் கோட்பாடுகளின் அலைகளின் தாக்கத்தினாலும் வேகமான பரவுதலினாலும் அடித்துச் செல்லப்பட்டிருப்பதையே சூசன் பாசுனெட் எடுத்துக்காட்ட விழைந்துள்ளார்.

## 9.9. ஒப்பிலக்கிய வளர்ச்சியில் முன்னணி வரிசையில் அமெரிக்கா - அயல்நாடுகளில் ஒப்பிலக்கிய வளர்ச்சி



குறிப்பு

"மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதிலோர் மகிமையில்லை" என்ற பாரதியின் பாடலடிகளை எப்போதும் மறந்துவிடலாகாது. ஒப்பீடு என்பது மனிதஇனம் அனைத்திற்கும் உள்ள பொது உணர்வு என்றாலும், அதற்கான அணுகுமுறைகளை நெறிப்படுத்தித் தந்தவர்கள் மேலை நாட்டினரே. இந்த அணுகு முறைகளை அடையாளம் கண்டு நெறிப்படுத்தித் தருவதற்கு அவர்கள் கடுமையாக உழைத்துள்ளனர். இந்த உழைப்பின் போக்கையும் அதன் விளைவையும் அறிந்துகொள்ளுதல் ஒப்பிலக்கிய ஆய்வு அணுகுமுறையை வளர்த்தவர்களுள் அமெரிக்கர்கள். பிரெஞ்சுகாரர்கள், ஜெர்மானியர்கள், ரஷ்யர்கள் ஆகியோர் முன்னணியில் உள்ளனர்.

பிரான்சு நாடு பழமைப் பற்றுகொண்ட நாடு. தன் வரலாற்றுப் பெருமையைப் பேசும் நாடு. தன் மரபை யாருக்கும் எதற்கும் எளிதாக விட்டுக்கொடுக்க மறுக்கும் நாடு. இந்நாட்டில் ஒப்பியல் பார்வை காலூன்றுவதற்குக் காரணமாக இருந்தவர் ஹிபோலைட் தெயின் (Hipplolyte Taine) எனும் திறனாய்வாளர் ஆவார். 1840களில் இந்நாட்டில் உடற்கூறியல், உடல் இயங்கியல், புராணங்கள், தத்துவங்கள், மொழிக்குடும்பங்கள் ஆகிய துறைகளில் ஒப்பீட்டுப் பார்வை வலுப்பெற்றது.

இந்நாட்டைச் சார்ந்த ஆம்பியர் (Ampere) என்பவர்தான் "பிரெஞ்சு ஒப்பிலக்கியத்தின் தந்தை" என்று போற்றப்படுகிறார். இவரை "ஒப்பிலக்கியத்தின் கொலம்பஸ்" என்ற திறனாளிகள் குறிப்பிடுகின்றனர். இவர் ஜெர்மானிய இலக்கிய ஞானி கதேயை 1832 இல் சந்தித்தார். அப்போது அவர் ஆற்றிய Comparative History of Literature (1832) என்ற ஆய்வுரையை கதே மனம்திறந்து பாராட்டினார் என்பர்.

கல்வி நிலையில் முதன்முதலாக பிரான்சிலுள்ள லியோன் (Liyon) பல்கலைக்கழகத்தில் 1897 ஆம் ஆண்டில் ஒப்பிலக்கிய இருக்கை (chair for comparative Lit.Studies) ஒன்று தரப்பட்டது. பின்னர் இதுபோன்ற இரண்டாவது இருக்கை ஒன்று பாரிசில் உள்ள புகழ்பெற்ற சோர்போன் (Sorbonne) பல்கலைக்கழகத்தில் 1910 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. இதனைத்தொடர்ந்து பெட்ஸ் (Betz) என்பவர் 1920ஆம் ஆண்டில் ஒப்பிலக்கிய நூல்களில் விவரத்தொகுப்பு (Bibliography of CL) ஒன்றை வெளியிட்டார்.

பிரெஞ்சு ஒப்பிலக்கியத்தின் தந்தையாக ஆம்பியர் திகழ, இத்துறையின் இறைமைத் தந்தையாக (God Father) பால்டென் ஸ்பர்ஜர் (Ferdinand Baldensperger:1900) கருதப்பட்டார். இவர்தான் சோர்போன் பல்கலைக்கழகத்தில் இருந்த ஒப்பிலக்கிய ஆய்விருக்கையை, "ஒப்பிலக்கிய ஆய்வு நிறுவனம் "ஒப்பியலறிஞர்களின் மெக்கா" என்று

அப்போது அழைக்கப்பட்டதென்றால் இதன் சிறப்பு சொல்லாமலேயே விளங்கும். இவருக்கடுத்து இந்நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பேற்றவர், முன்பே குறிப்பிடப்பட்ட பால் வான்தீகம் ஆவார். இவர் 1921 வரை அங்குப் பணியாற்றினார்.

உலகப்போரின்போது ஜெர்மானியிடம் பிரான்சு 1940 இல் வீழ்ந்தது. 1950 வரை ஜெர்மனியின் பிடியில் பிரான்சு இருந்தது. மெல்ல மெல்ல நிலைமைகள் சீராகவே, 1963இல் மீண்டும் ஒப்பிலக்கிய ஆய்வு பிரான்சில் புத்துயிர் பெற்றது. அப்போது சோர்போன் பல்கலைக்கழக ஒப்பிலக்கிய நிறுவனத்தின் தலைவராக இருந்த ரெனே எடிம்பில் (Rene Etiemble) தூரக்கிழக்கு நாடுகளையும் (ஜப்பான், சீனா போன்ற) பிற ஐரேப்பிய நாடுகளையும் ஒப்பிலக்கிய ஆய்வுக்குக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும் என்று உழைத்தார். அது முதற்கொண்டு பிரான்சு தன்னுடைய குறுகிய ஒப்பிலக்கியப் பார்வையை அகல விரித்துப் பிறநாட்டு இலக்கியங்களையும் ஆராயத் தலைப்பட்டது. உலக ஒப்பிலக்கிய ஆய்வுக்கழகத்தின் தோற்றக் களமாக விளங்கிய பிரான்சு, ஒப்பிலக்கியத்தின் தாய்நாடு என்றால் அது மிகையாகாது.

**ஜெர்மனியில் ஒப்பிலக்கிய வளர்ச்சி**

பிரான்சு நாட்டவரைப் போலவே ஜெர்மானியர்களும் அமெரிக்கர்களும் முன்பிருந்தே ஒப்பிலக்கிய ஆய்வில் ஈடுபட்டு வந்துள்ளனர். கதே போன்ற இலக்கிய ஞானிகளும், பெதோவான் போன்ற கலை விற்பனர்களும் அந்நாட்டுக் கலை இலக்கியப் பாரம்பரியத்துக்கு எடுத்துக்காட்டுகளாகத் திகழ்பவர்களாவர். அறிஞர் கதேதான் முதன்முதலாக ‘‘உலக இலக்கியம்’’ (World Literature) என்ற தொடரைப் பயன்படுத்தினார். உயிரினங்கள் அனைத்திற்கும் ஒரு மூலம் (Urplanzie) இருந்தைப்போல, இலக்கியங்களுக்கும் ஒரு மூலம் இருந்திருக்க வேண்டும் என்று அவர் கருதினார். இந்த இலக்கிய மூலத்திலிருந்தே பிற இலக்கிய வகைகள் பல்கிக் கிளைத்திருக்க வேண்டும் என்று அவர் சொன்னார். கதேயின் இந்தக் கருத்து ஜெர்மானிய ஒப்பிலக்கிய அறிஞர்கள் மனதில் ஆழப்பதிந்து விட்டது. எனவே ‘‘ஒப்பிலக்கியம் என்றால் உலக இலக்கியம்’’ என்ற நினைப்பிலிருந்து விடுபட அவர்கட்கு பல வருடங்கள் ஆயின. ஒப்பிலக்கியம் குறித்தத் திறனாய்வுகளும், ஆய்வுரைகளும், வெளிவந்து கொண்டிருந்த சூழலில் 1887இல் கோக் (Kock) என்பவர் வெளியிட்ட ஒப்பிலக்கிய இதழ் ஒரு புதிய வெளிச்சத்தைத் தந்தது. அதன் முதல் இதழே ஜெர்மனியின் ஒப்பிலக்கிய வளர்ச்சி குறித்த நீண்ட கட்டுரையைத் தாங்கி வெளிவந்தது.

ஜெர்மானியிலுள்ள லீப்சிக் (Leipzig) பல்கலைக்கழகத்தில் 1920 முதல் ஒப்பிலக்கியம் ஒரு பாடமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால் அந்நாட்டில் ஏற்பட்ட அரசியல் கோளாறுகள் காரணமாக ஒப்பிலக்கிய ஆய்வுகள் முக்கியத்துவம் இழந்தன. பின்னர் பல வருடங்கள் கழித்து மென்ஸ்(Mainz) என்பவரால் ஜெர்மானியத் தலைநகரமாகிய Bonn

பல்கலைக் கழகத்தில் ஒப்பிலக்கிய ஆய்வுகள் தொடர்ந்து வளம்பெற்று வருகின்றன.



**ரஷ்யாவில் ஒப்பிலக்கிய வளர்ச்சி**

குறிப்பு

இந்தியாவைப் போன்று பல்வேறு இன, மொழி மக்களைக் கொண்ட ரஷ்யாவிலும் ஒப்பிலக்கிய ஆய்வுக்கான பரந்த களம் இருந்தது. அதனால்தான் அலெக்சாண்டர் வெஸ்லாவ்ஸ்கி போன்றோர் ஒப்பியல் நோக்கில் நாட்டுப்புற இலக்கியங்களின் இடம்பெயரும் தன்மைபற்றி ஆராய்வதற்கு வளமான களமாக ரஷ்யா அமைந்தது. இவரே ரஷ்ய நாட்டு ஒப்பிலக்கிய ஆய்வின் தந்தை எனப்போற்றப்படுகிறார். ரஷ்ய ஒப்பிலக்கிய ஆய்வு வளர்ச்சியில் சிர்முன்ஸ்கி (Zirmunsky) என்பாரும் குறிப்பிடத்தக்கவர் ஆவார். இவர் புஷ்கினை பைரனோடு ஒப்பிட்டும், கதேயின் படைப்புகளை ரஷியப் படைப்புகளோடு ஒப்பிட்டும் நூல்கள் பல எழுதினார். ரஷ்ய நாட்டில் ஒப்பிலக்கிய ஆய்வை வளர்ப்பதில் லெனின்கிராடில் உள்ள புஷ்கின் நிறுவனமும் (Pushkin Institute) மாஸ்கோவில் உள்ள கார்க்கி உலக இலக்கிய ஆய்வு நிறுவனமும் (Gorky Institute of World literature) தொடர்ந்து ஆர்வம்காட்டி வருகின்றன.

**அமெரிக்காவில் ஒப்பிலக்கிய வளர்ச்சி**

ஒப்பிலக்கியத்தின் ‘‘பிறந்த வீடு’’ பிரான்சு என்றாலும், அது வளம்பெற்ற இடம் ‘‘புகுந்த வீடான’’ அமெரிக்காவாகும். அமெரிக்கர்கள் பல இனத்தைச் சார்ந்தவர்கள். பெரும்பாலும் பலநாடுகளிலிருந்தும் பல்வேறு காரணங்களுக்காக அமெரிக்கா என்ற புதிய கண்டத்தில் குடியேறிய மூதாதையர்களின் வழித் தோன்றல்கள் அவர்கள். எனவே அவர்களிடம் பரந்த மனப்பான்மையும், மாற்றார் கருத்தை மனங்கொள்ளும் பக்குவமும் இயல்பாக இருந்தன. தாங்கள் கொண்டிருந்த பன்முகக் கருத்திற்கு வடிகாலாகவும் வாய்ப்பளிப்பதாகவும் ஒப்பிலக்கியம் திகழ்ந்ததைக் கண்டனர். இதனால் ஒப்பிலக்கியத் துறையைப் போட்டி போட்டுக்கொண்டு வளர்ப்பதில் அமெரிக்கர்கள் தீவிரம் காட்டினர்.

இதற்கான முதல் அடையாளமாக 1871 இல் கார்னல் பல்கலைக் கழகத்தில் (Cornell University) பொது மற்றும் ஒப்பிலக்கியம் பற்றிய கல்வி அறிமுகம் செய்யப்பட்டது. இதனைத் தொடர்ந்து புகழ்பெற்ற ஹார்வர்டு பல்கலைக்கழகம் (Harward University) தனது பங்கிற்கு 1890 இல் ஒப்பிலக்கிய ஆய்விருக்கை ஒன்றை ஏற்படுத்தியது. இதுவே 1904 இல் தனித்துறையாக உருவானது. 1910 முதல் இத்துறையிலிருந்து ஒப்பிலக்கிய ஆய்விதழ் வெளியாகத் தொடங்கியது. 1946இல் புகழ்மிகு ஒப்பிலக்கிய அறிஞர் ஹாரி லீவின் (Harry Levin) இத்துறைக்குத் தலைவர் பொறுப்பேற்றார்.

அமெரிக்காவின் புகழ்பெற்ற இன்னொரு பல்கலைக்கழகமான கொலம்பியா பல்கலைக்கழகம் இவர்களுக்கெல்லாம் முன்பு 1849லேயே

ஒப்பிலக்கியத்துறையைத் தொடங்கிய பெருமையைத் தட்டிச் சென்றது. இங்கிருந்து 1903 முதல் Journal of CL என்ற பெயரில் ஒப்பிலக்கிய ஆய்விதழ் வெளிவராலாயிற்று. அமெரிக்காவிலுள்ள ஆரிகான் பல்கலைக்கழகம் (University of Oregon)1950 முதல் ஒப்பிலக்கிய ஆய்விதழை வெளியிட்டு வருகிறது. தமிழ் இலக்கிய ஆய்வறிஞர் ஏ.கே.இரமானுஜன் பணியாற்றிய சிகாகோ பல்கலைக்கழகம் 1967 முதல் வெளியிட்டுவரும் புநசெந (இலக்கிய வகை) என்ற ஒப்பிலக்கிய ஆய்விதழ் இலக்கிய வகைகளைப் பற்றி ஆராய்வோர்க்குப் பெருந்துணையாக உள்ளது.

இன்று உலகநாடுகள் பலவும் தங்களது உயர்கல்வித் திட்டத்தில் ஒப்பிலக்கியத்தை இன்றியமையாத பாடமாக ஏற்றுக்கொண்டுள்ளன. உலக ஒற்றுமை, ஒருலகத்தன்மை (Globalisaion)இ உலக சமூகம் (Global Society), உலக அமைதி யாவும் போற்றப்படும் இக்காலச் சூழலில் ஒப்பிலக்கியம் தரும் பாடத்தை யாவரும் உணர வேண்டும் என்று அந்தந்த நாட்டு அரசுகள் கவனம் செலுத்துவதே இதற்குக் காரணம் எனலாம்.

## 9.10. அமெரிக்க கோட்பாடு – விளக்கம்

பிரெஞ்ச், ஜெர்மன், ரஷியா உள்ளிட்ட நாடுகளை பின்னுக்குத்தள்ளி அமெரிக்க கோட்பாடு தன் அகன்ற பார்வையாலும் பாதையாலும் உலகளவில் வீறு கொண்டு நடக்கின்றது.

## வினா-விடை பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

1) **அமெரிக்காவில் உலகப் பொதுமை மனப்பான்மை வேறூன்ற காரணம் என்ன?**

அமெரிக்கா ஒரு குடியேற்ற நாடு. அங்கு பல மொழியினரும் குடியேறி உள்ளனர்.

2) **அமெரிக்கர் எதை வெறுத்தனர்?**

பிரெஞ்ச் நாட்டவர் போற்றிய மூலமும் தாக்கமும் பற்றிய கொள்கையை வெறுத்தனர்.

3) **அமெரிக்காவில் 'ஒப்பியல் துறை'யை ஏற்படுத்தியவர் யார்?**

1899-ல் கொலம்பியாப் பல்கலைக்கழகத்தில் ஆர்தர் கிறிஸ்டி (யுசவாரச ஊாசளைவல) முயற்சியால் ஏற்படுத்தப்பெற்றது.

4) **அனைத்துலக ஒப்பியல் இலக்கிய முதல் மாநாடு எங்கு நடைபெற்றது?**

1955-இல் வெனிசில் நடைபெற்றது.

5) **இலக்கியப் படைப்புகளில் தேசியத் தன்மையைப் புறக்கணித்தவர் யாவர்?**

அமெரிக்கர்.

**II. ஐந்து மதிப்பெண் வினா-விடை**

6) **அமெரிக்காவில் ஒப்பிலக்கிய நோக்கும் போக்கும் அமைந்துள்ள விதத்தை எழுதுக.**

(9.3 –ல் உள்ளவற்றை எழுதுக)

7) **அமெரிக்காவில் ஒப்பிலக்கிய வளர்ச்சி எங்ஙனம் அமைந்தது விவரி.**

(9.5-ல் உள்ளவற்றை எழுதுக)

8) **அமெரிக்காவில் உலகப் பொதுமையை நோக்கிய ஒப்பிலக்கிய ஆய்வு குறித்து விவரி.**

(9.6-ல் உள்ளவற்றை எழுதுக)

9) **தேசியத் தன்மையை அமெரிக்கர் புறக்கணித்தது ஏன் என்பதை விவரிக்க.**

(9.8-ல் உள்ளவற்றை எழுதுக)

10) **ஒப்பிலக்கியத் துறையில் அமெரிக்கா பெறும் இடம் யாது? எழுதுக.**

(9.9-ல் உள்ளவற்றை எழுதுக)

**III. பத்து மதிப்பெண் வினா-விடை**

11) ஒப்பிலக்கியத்தில் அமெரிக்க கோட்பாடு பெறுமிடத்தை விவரி.

(9.1 முதல் 9.10 வரையிலான செய்திகளைத் தொகுத்து சுருக்கி எழுதுக)

# பிரிவு 3

## மொழிபெயர்ப்பு – பிறகலைகள்

## கூறு: 10 ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும்

### 10.1. முன்னுரை



மொழிபெயர்ப்பு என்பது ஒரு மொழியிலுள்ள இலக்கியத்தை தான் அறிந்த மொழியில் மொழி பெயர்ப்பதாகும். மொழிபெயர்ப்பினால் எம்மொழியில் உள்ள நூல்களையும் ஒருவர் தம் மொழியிலேயே கற்று உணரலாம். தொல்காப்பியர் பிறமொழி நூல்களை அடியொற்றி மொழி பெயர்த்து அமைத்தலையே விரும்பினார் என்பதற்கு 'மொழி பெயர்த்து அதர்ப்படயாத்தல்' என்ற சொல்லாட்சி உதவி செய்கின்றது.

எனவே மொழி பெயர்ப்பு தொல்காப்பியர் காலத்தில் இருந்திருக்கின்றது என்பது தெரிகின்றது. இன்று மொழிப் பெயர்ப்புத் துறை தனியொரு துறையாக வளரும் அளவுக்கு உயர்ச்சி பெற்றுள்ளது.

### 10.2. நோக்கம்

- ஒப்பிலக்கியத்தின் ஆணி வேர் மொழிபெயர்ப்பு எனில் மிகையில்லை.
- மொழிபெயர்ப்புகள் தான் ஒப்பிலக்கியத்துறையை உருவாக்க அடிகோலிட்டது.
- ஒப்பிலக்கிய வளர்ச்சி பாதைக்கு மொழிபெயர்ப்பு பணியின் பங்களிப்பு மிகவும் இன்றியமையாதது.

எனவே, ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் எனும் இக்கூறினை சற்று விரிவாக நாம் காணல் அவசியமாகிறது.

### 10.3 மொழிபெயர்ப்பின் வகைகள்

தியோடார் செவரி மொழிபெயர்ப்பினை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கிறார்.

1. முதல் பிரிவைச் சார்ந்தவை வெறும் செய்திகளைத் தருவன. எடுத்துக்காட்டாக விமான நிலையத்தில் பயணிகளுக்காகப் பல்வேறு மொழிகளில் எழுதப்பட்ட துண்டு அறிக்கைகள் அல்லது ஒரு மருந்து அல்லது இயந்திரத்தை எப்படி உபயோகிப்பது போன்ற விளம்பரம் இப்பிரிவில் அடங்கும்.

2. பொதுவாசகருக்காக ஆக்கப்பட்ட ஜனரஞ்சகமான மொழி பெயர்ப்புகள், வாசகர்கள் படிக்கும்போது இது மூலநூலா? மொழிபெயர்ப்பு நூலா? என்று கவலைப்படாததால் இப்பிரிவில் அடங்கிய மொழிபெயர்ப்புகள் தவறுடையதாகவும் இருக்கலாம். பெரும்பான்மையான

மேலைநாட்டுப் புனைகதைகளின் தமிழாக்கம் இவ்வகையினைச் சார்ந்தவையே. இந்த மொழி பெயர்ப்புகள் வாசகர்களை மகிழ்விப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதால் மொழி பெயர்ப்புக்கலையின் வளர்ச்சியை இதில் காண முடியாது.

3. இப்பிரிவு மிக முக்கியமானதாகும். ஏனெனில் இப்பிரிவில் உயர் தனி இலக்கிய நூல்களைப் புலமையோடு மொழி பெயரத்து எழுதப்பட்ட நூல்கள் அடங்கும். இம்மொழி பெயர்ப்பில் கவிதையிலிருந்து கவிதை, கவிதையிலிருந்து உரைநடை, உரைநடையிலிருந்து உரைநடையாக மொழி பெயர்க்கப்பட்ட அனைத்தும் அடங்கும். திருக்குறள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இப்பிரிவில் அடங்கும். உயர் தனி இலக்கியங்களின் ஆங்கிலமொழி பெயர்ப்புகள் இப்பிரிவில் அடங்கும்.

4. இப்பிரிவில் தொழில் நுட்ப வெளியீடுகளும் விஞ்ஞான நூல்களின் வெளியீடுகளும், வணிக நோக்கில் செய்யப்பட்டு வரும் மொழி பெயர்ப்புகளும் அடங்கும்.

மேலே கூறப்பட்ட பலமொழி பெயர்ப்பு வகைகளை நோக்கும்போது மூலநூலின் மொழியாக்கம் தம் மரபுக்கேற்ப மாறி வருவதைப் பார்க்கின்றோம். ஒரு நாட்டைச் சேர்ந்த நூலாசிரியர் மொழி பெயர்ப்பின் மூலம் வேறு ஒரு நாட்டுக்குக் கொண்டு வரப்படுகின்றார். மேலும் அவரது சூழ்நிலை, பழக்க வழக்கம், தனித்தன்மை ஆகியவற்றிற்கு ஏற்ப வழி நூலாசிரியன் தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்ளுகிறான்.

ஆங்கிலக் கவிஞரும் மொழி பெயர்ப்பாளருமான ஜான் டிரைடன் மொழிபெயர்ப்புக் கலையை - மூன்று வகையாகப் பிரிக்கிறார்.

1. சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்தல் (Metaphrase)
2. பொழிப்புரை (Paraphrase)
3. போலச் செய்தல் (Imitation)

சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பு என்பது வரிக்கு வரிக்கு கற்பனை கலவாத மொழி பெயர்ப்பாகும். எடுத்துக்காட்டு 16 ஆம் நூற்றாண்டின் கவிஞரும் நாடகாசிரியருமான பென்ஜான்சன் தந்துள்ள ஹொரெசின் கவிதைக்கலை என்ற நூலின் மொழிபெயர்ப்பாளன்தான் தேர்ந்தெடுத்த நூலை ஓரளவு உரிமையுடனும் சுதந்திரத்துடனும் மொழிபெயர்ப்பது. இவ்வகை மொழி பெயர்ப்பாளர் மூலநூலின் மொழி நடையைவிடப் பொருளை அதிகம் பின்பற்றுவார். மூல நூலை விரிவுப்படுத்துவதே இம்மொழி பெயர்ப்பின் நோக்கம். போலச் செய்தல் என்பது தெளிவாக நோக்கினால் மொழி பெயர்ப்பாகாது. மொழி பெயர்ப்பு என்பது மூல நூலை நினைவுகூறும் வகையில் எழுதப்படும் ஒரு புதிய நூல் ஆகும். கிரேக்கக் கவிஞர் பிண்டாரின் துள்ளற் கலிப்பாடல்கள் போலச் செய்தல் வகையைச் சார்ந்ததாகும்.

## 10.4. வாசகர் வகைகள்



சேவரி என்பவர் மொழி பெயர்ப்பை வகைப்படுத்தியதோடு வாசகர்களையும் வகைப்படுத்துகிறார்.

1. மூலநூலின் மொழியையே அறியாதவர்.
2. அந்நிய மொழி பயிலும் மாணவர்.
3. முற்காலத்தில் அந்நிய மொழி கற்று இப்போது மறந்திருப்பவர்.

முதல் வாசகர் ஆர்வத்தால் தூண்டப்பட்டு அல்லது இலக்கிய நயத்தில் ஈடுபட்டுப் படிப்பது, இரண்டாவது வகை வாசகர் மொழிபெயர்ப்பு நூலைப் படிப்பதன் மூலம் தனது அந்நிய மொழியறிவைப் பெருக்கிக் கொள்கிறார். மூன்றாமவர் 'மொழி பெயர்ப்பைப் படிப்பதன் மூலம் தன் அந்நிய மொழியறிவைத் திரும்பப் பெற ஆவலாயிருக்கிறார்.

## 10.5. மொழி பெயர்ப்பாளர் தகுதிகள்

மொழி பெயர்ப்புக்கலை எளிதானதன்று சிக்கலானது கயிற்றின் மேல் நடப்பது போன்று ஆபத்தானது. எனவே மொழிபெயர்ப்பாளன் பல தகுதிகளை உடையவனாக இருந்தால்தான் இப்பணியைச் செவ்வனே செய்ய இயலும். உலக இலக்கியங்களை மொழிபெயர்ப்பாளரின் வாயிலாகவே படிக்க இயலும் எனவே மொழிபெயர்ப்பாளரின் பணி இன்றைய இலக்கிய உலகிற்கு – முக்கியமாக ஒப்பீட்டுத்துறைக்கு இன்றியமையாததாகின்றது.

மொழிபெயர்ப்பாளர் குறைந்தது இருமொழி அறிவு பெற்றிருத்தல் வேண்டும். மூலமொழி, மொழிபெயர்க்கும் மொழி இரண்டிலுமே அறிஞர்களாய் இருக்க வேண்டும்.

காண்டேகர் எழுத்துக்களைச் சிறந்த முறையில் பெயர்த்தெழுதிய கா.ஸ்ரீ.ஸ்ரீ.கூறுகிறார். "நாம் எந்த மாநிலத்து மக்களுக்கு எந்த மொழியில் தருகிறோம் என்பதை நினைவில் கொண்டு அவர்களுக்கு எளிதில் கருத்து ஏற்கக் கூடியதாக மொழி பெயர்ப்பு அமைய வேண்டும்.

கவிதையை மொழிபெயர்ப்பவருக்கு கவிதை எழுதிய அனுபவம் இருக்க வேண்டும் என்கிறார்கள். மேலும் ஒரு கவிஞனே மற்றொரு கவிஞனை மொழி பெயர்க்க முடியும் மொழி பெயர்க்க வேண்டும் என்று கூறுகிறார்கள். கவிஞனாக இல்லாத மொழி பெயர்ப்பாளர் மூலநூலின் கவித்துவச் சிறப்புக்களை மொழி பெயர்க்கப் பொருத்தமுடையவரல்லர்.

மொழி பெயர்ப்பாளர் மொழி பெயர்க்கும் போது தான் எந்தத் துறையில் சிறந்து விளங்குகின்றாரோ அந்தத் துறையிலேயே கால் வைக்க வேண்டும். எடுத்துக்காட்டாக நாவலாசிரியர் நாவலையும் கவிஞர் கவிதைகளையும், சிறுகதை ஆசிரியர் சிறுகதைகளையும் மொழி பெயர்ப்பது நல்லது.

மொழி பெயர்ப்பாளர் மொழி பெயர்க்கும்போது புரியாமலோ அல்லது வேண்டுமென்றோ மூல நூலில் கூறப்பட்ட கருத்துக்களைச் சிதைத்து எழுதலாம். மாக்ஸ்வெல் ஆண்டர்சனின் 'புகழின் விலை என்ன' என்ற அமெரிக்க நாடக நூலினை ஜெர்மானிய மொழியில் ஆக்கியவர் தான் போரிடம் கொண்ட வெறுப்பையும் அதில் புகுத்தியிருக்கிறார். நோபல் பரிசு பெற்றவரான யுஜீன் ஏனில் எழுதிய 'கடவுளின் எல்லாக் குழந்தைகளுக்கும் இறகுகள் உண்டு', 'மயிரடர்ந்த குரங்கு' ஆகிய நாடகங்களின் ரஷ்யப் பெயரப்புகளில் பொதுவுடைமைக் கருத்துக்கள் வேண்டுமென்றே புகுத்தப்பட்டுள்ளன.

.இதுபோன்ற தவறான எண்ணங்களைப் புகுத்துதல் மூல நூலின் உட்கிடக்கையைப் பாழ்படுத்தி விடும். சில சேக்ஸ்பியர் நாடகத் தமிழ்மொழி பெயர்ப்புகளில் சில கவனக் குறைவு காணப்படுவதை காணலாம்.

எனவே மொழிபெயர்ப்பாளனுக்கு மூல நூலாசிரியனை விட நுண்ணறிவும் விருப்பு வெறுப்பு அற்ற தன்மையும் வேண்டும். தகுதியுடைய மொழிபெயர்ப்பால் மொழிபெயர்ப்புத் துறை வளர்வதோடு பல மொழிகளிலுள்ள நூல்களையும் பலரும் கற்பதற்கு வழியாக அமைகின்றது.

## 10.6. மொழிபெயர்ப்புக் கோட்பாடுகள்

மொழிபெயர்ப்பாளர்களிடையே பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கோட்பாடுகள் பற்றி நேர் எதிரிடையான கருத்து வேறுபாடுகள் நிலவி வருகின்றன. அவற்றைத் தியோடர் சேவரி ஆறு எதிரிடையான இணைகளாகக் குறைத்துத் தருகிறார். எ.கா.

1. ஒரு மொழி பெயர்ப்பு மூல நூலின் சொற்களை அப்படியே தர வேண்டும். ஒரு மொழி பெயர்ப்பு மூல நூலின் கருத்துக்களை அப்படியே தர வேண்டும்.

2. ஒரு மொழிபெயர்ப்பு படிப்பதற்கு மூலநூலைப் போலவே இருக்க வேண்டும். ஒரு மொழி பெயர்ப்பு படிப்பதற்கு ஒரு மொழி பெயர்ப்பு போலவே இருக்க வேண்டும்.

3. ஒரு மொழி பெயர்ப்பு மூலநூலின் மொழி நடையைப் பிரதிபலிக்க வேண்டும்.

மொழிபெயர்ப்பில் கவிதையின் வடிவினை மாற்றாமல் இருப்பது குறித்து வேறுபாடில்லை. ஆனால் மூலநூலின் அதே செய்யுள், வடிவம், தொடை முதலியவற்றை மொழி பெயர்ப்பில் கையாள்வதில் பல சிரமங்கள் உள்ளன. சில யாப்பு வகைகளை மூல நூலிலிருந்து மொழி பெயர்ப்பு நூலுக்குக் கொண்டு செல்லும் போது கடினமாக இருப்பதால் ஒதுக்கிவிட வேண்டிய சூழ்நிலை உருவாகுகின்றது. சிலப்பதிகாரத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கும் நிலைமண்டில ஆசிரியப்பாவை ஆங்கில ஏற்றசை ஐஞ்சீர் செந்தொடைப் பாவில் வெற்றிகரமாக மொழி பெயர்க்க

முடியும். திருக்குறளின் குறட்பா ஆங்கிலத்திலும் குறட்பா வடிவிலேயே மொழிபெயர்க்கப்பட வேண்டும். வேறு எந்தச் செய்யுள் வடிவையும் உபயோகிப்பது கேலிக்கூத்தாக அமைந்துவிடும்.

குறிப்பு

மொழி பெயர்க்கப்படும் நூலில் மூலநூலில் இருந்து முற்றிலும் அதற்குரிய பொருளையே தருதல் வேண்டும். வேறுபாடான கருத்தாக இருக்கக்கூடாது. பொருத்தம் என்பது மொழிபெயர்ப்புக் கோட்பாட்டில் முக்கியமானது. பகவத் கீதையின் மொழிபெயர்ப்பு மூலநூலை உண்மையான பொருத்தமுடன் பின்பற்றியிருக்கின்றது. பொருத்தம் என்பது மொழிநடையை விட பொருளையே முக்கியமாகக் குறிக்கும். பொருத்தக் கோட்பாடு ஒருமொழி பெயர்ப்பாளரை அவர் ஒரு மொழி பெயர்ப்பாளர்தான் படைப்பாசிரியர் அல்ல என்பதை நினைவுபடுத்தும்.

மொழிபெயர்ப்பாளர்களை பழமையினர் புதியோர் என இருவகையாகப் பகுக்கலாம். பழமையினர் தம் மொழி பெயர்ப்பை மூலநூலுக்கு மிக நெருக்கமாகக் கொண்டு வருகின்றனர். சொல்லுக்குச் சொல் விளங்கும் பொருளையும், அம்மூல மொழியின் தனித்தன்மை வாய்ந்த மரபு வழக்கங்களையும் கூட மாற்றாமல் மொழி பெயர்ப்பினைச் செய்கின்றனர். புதியோர் இதற்கு நேர் மாறாகச் செயலாற்றுகின்றனர். மொழிபெயர்ப்பைத் தம்மால் இயன்ற வரையில் ஆங்கில மரபுக்குரியதாக்குவதன் மூலம் மூலநூலின் மரபுக்குரியவன் என்பதைவிடத் தன்னைத் தாய்நாட்டு மரபிற்குரியவன் என்றழைக்க வழி செய்கின்றனர்.

சிறந்த மொழிபெயர்ப்பிற்கு மூன்று அடிப்படைத் தன்மைகள் உண்டு. அவையாவன.

1. மூலநூலின் கருத்துக்களை முழுமையாகக் கொண்ட எழுத்துப்படியாக அதன் மொழிபெயர்ப்பு அமைய வேண்டும்.

2. நடையும், கருத்துக்களை உணர்த்தும் போக்கும் மூலநூலில் எம்முறையில் அமைந்துள்ளனவோ அதன் முறையிலேயே மொழி பெயர்ப்பிலும் அமைய வேண்டும்.

3. மூலநூலின் எல்லாவிதமான எளிமைகளையும் அதன் மொழிபெயர்ப்பு பெற்றிருக்க வேண்டும்.

**அறிஞர்களின் கருத்துக்கள்**

மொழிபெயர்ப்புக்கலை பற்றி பல அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

‘மொழி பெயர்ப்பே ஒரு முறையில் கடினமான இலக்கிய வேலை அது முதல் நூல் எழுதுவதைக் காட்டிலும் அதிகமான தொல்லை கொடுப்பது.

கு.ப.இராஜகோபாலன்

குறிப்பு

'நம் தமிழ் மொழியின் ஆக்கத்திற்கு ஒரு தலையாக வேண்டுவனவற்றுள் மொழிபெயர்ப்புச் செயலும் ஒன்றாகும்.'

பண்டிதமணி மு.கதிரேசனார்.

'ஒரு நூலுக்கு ஒரு மொழி பெயர்ப்பு மட்டும் இருந்தால் போதாது. பல மொழிபெயர்ப்புகள் வேண்டும்'.

-க.ந.சுப்ரமணியம்

'மொழி பெயர்ப்பு என்பது உயிரோடுள்ள எல்லா மொழிகளுக்கும் அவசியமானது..தமிழ் மொழி வளம் பெற வேண்டுமானால் தமிழ் மக்கள் மற்ற நாட்டு மக்களோடொப்ப முன்னேற வேண்டுமானால் பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் கொணர்தல் வேண்டும்'. –

மு.அருணாசலம்.

'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்த்தல் வேண்டும். சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்து இங்கு சேர்ப்பீர்.

-பாரதியார்

'உலகின் ஒரு கோடியில் உருவாகும் சிந்தனை ஆற்றல் மறுகோடி வரை பலனளிக்க மொழிபெயர்ப்பு உதவுகிறது. மொத்தத்தில் மொழிபெயர்ப்பினால் சிந்தனை ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்படாமல் உலகப் பொதுவுடைமையாகி விடுகிறது.

-ருத்ர துளசிதசான்.

பலமொழிகள் நிலவும் உலகில் உலக இலக்கிய ஒருமை காணும் தன்மையும் வேண்டும்.

## 10.7. தமிழ் மொழி பெயர்ப்புகள்

தமிழ் மொழி பெயர்ப்பு நான்கு வகையாகப் பிரிக்கப்படும்.

1. தமிழிலிருந்து ஆங்கிலத்தில் ஆக்கப்பட்ட மொழிபெயர்ப்புகள்
2. ஆங்கிலத்திலிருந்து தமிழில் ஆக்கப்பட்ட மொழிபெயர்ப்புகள்
3. தமிழிலிருந்து வடமொழியிலும் பிற இந்திய மொழியிலும் ஆக்கப்பட்ட மொழி பெயர்ப்புக்கள்.
4. வடமொழியிலிருந்தும் பிற இந்திய மொழிகளிலிருந்தும், பிற உலக மொழிகளில் இருந்தும் தமிழில் ஆக்கப்பட்ட மொழிபெயர்ப்புகள்

அதிகப்படியாக தமிழ் நூல்கள் பிறமொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ள வரிசையில் முதலிடம் ஆங்கிலத்திற்கும் (274) இரண்டாவது மலையாளத்திற்கும் (96) மூன்றாவது தெலுங்கிற்கும் (60) நான்காவது இந்திக்கும் (50) ஐந்தாம் இடம் கன்னடத்திற்கும் (370) ஆறாம் இடம் வடமொழிக்கும் (37) கிடைக்கிறது. அதேபோல பிற

குறிப்பு

மொழிகளிலிருந்து தமிழில் பெயர்க்கப்பட்டுள்ளவைகளிலும் ஆங்கிலமே முதலிடம் வகுக்கிறது.(1303) இரண்டாம், மூன்றாம், நான்காம், ஐந்தாம், ஆறாம், ஏழாம், எட்டாம் இடங்களை முறையே வடமொழி (796) ரஷ்ய மொழி (280) வங்க மொழி (210) பிரெஞ்சு மொழி (81) மராத்தி மொழி(74) தெலுங்கு(71) மலையாளம் (67) முதலியன பெறுகின்றன.

மறைமலையடிகளாரும் பண்டிதமணி கதிரேசச் செட்டியாரும் மொழிபெயர்ப்புத் துறையில் ஈடுபட்டுத் தமிழ் மொழிக்குச் சிறந்த தொண்டாற்றியுள்ளனர். ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள சிறந்த நூல்களுள் ஒன்று எச்.ஏ.கிருஷ்ணபிள்ளையின் ‘இரட்சணிய யாத்திரிகம்’ ஆகும்.

இது ஜான்பனியனின் ‘யாத்திரிகளின் முன்னேற்றம்’ (Pilgrims Progress) என்ற நூலின் தழுவலாகும். சாமுவேல் யோவான் ஐயர் பன்னிரண்டு: பகுதிகளைக் கொண்ட மில்டனின் ‘சுவர்க்க நீக்கத்தில்’ ஏழு பகுதிகளை பத்தோன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலேயே மொழி பெயர்த்திருக்கிறார்.

மொழி பெயர்ப்பின் இன்றைய நிலையில் மொழி பெயர்ப்புக் கோட்பாடுத் திட்டம் முதிர்ச்சி பெற்றுள்ளது. நாம் மொழி பெயர்ப்புச் சகாப்தத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். மொழி பெயர்ப்புத்துறை உலக ஒருமையை வளர்க்கும் என்பது உறுதி.

## 10.8. மொழிபெயர்ப்பின் வரலாறு

உலக வரலாற்றில், புதுமைக்காலம் (Modern Age) என்பது அறிவு வளர்ச்சிப் பெருக்கால் உண்டான அறிவியல் முன்னேற்றம், மக்களுடைய வாழ்க்கையைப் பல துறைகளில் பாதிக்கத் தொடங்கிய காலமாகும். அதாவது நிலப்பிரபுத்துவ சமுதாய அமைப்பு நிலைகுலைந்து வாணிகப்பொருளாதாரத்தின் வழி இயந்திரப் பொருளதாரம் வளர்ந்து முதலாளித்துவ சமுதாயமாக எழுச்சியுற்றதன் தொடக்கமே புதுமைக்காலத்தின் முதல்நிலை ஆகும்.

மேலை நாட்டுக் கல்வியின் தாக்கத்தால் பதினெட்டாம் நூற்றாண்டில் ஒரு விழிப்புணர்ச்சி உண்டாயிற்று. புதிய கல்வி முறையால் உலகக் கண்ணோட்டத்துடன் கூடிய, அகன்ற பார்வையை இந்தியர்கள் சிலர் பெறலாயினர். ஐரோப்பியரின் வருகையால் நிலப்பிரபுத்துவ அரசுகள் நம் நாட்டில் சிதைந்து சீரழிந்தன. வெளிநாட்டாரின் வாணிகப் பொருளாதார அமைப்புகள் இந்தியாவின் அரசியலிலும், சமூகவியலிலும், பெரிய மாற்றங்களை உருவாக்கின. இத்தகைய சூழ்நிலையில், புதுமைக்காலம் என்பது தமிழ் நாட்டில் அரும்பலாயிற்று.

ஐரோப்பிய கல்வியின் தாக்கத்தால், புதிய இலக்கிய வகைகள், இந்திய மொழிகளில் தோன்றின. மற்றும் இலக்கியங்களை அணுகுவதற்குரிய தற்சார்பற்ற திறனாய்வு நெறிமுறைகளும் அரும்பின.

புதிய கருத்துகளையும், செய்திகளையும் அறிந்து கொள்ள வேண்டும். எனும் ஆவல் ஓரளாவிற்குக் கற்றவர்களிடத்துப் பெருகலாயிற்று. இந்த அறிவுப் பசியைத் தணித்துக் கொள்வதற்காகச் சில அறிஞர்கள், பிறமொழி நூல்களைக் கற்று, அவற்றை இந்திய மொழிகளிலே ஆக்கம் செய்ய முயன்றனர்.

இரண்டாவதாக பிறமொழியினரான ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவில், தங்கள் ஆட்சியை நிலைநாட்டத் தொடங்கிய பிறகு இந்திய மொழிகளும், ஆங்கிலமும் அறிந்த மொழிபெயர்ப்பாளர்கள் பலர் தேவைப்பட்டனர். கிழக்கு இந்திய வாணிகக் கம்பெனிக்கு இருமொழி வல்லுநர்களாக உதவிய இந்திய நாட்டு மக்களை 'துவிபாஷி' (இரு மொழி அறிஞர்) என்னும் பெயரால் சுட்டினர். ஒரு நூற்றாண்டிற்குள் இந்த 'துவிபாஷி' எனப்பட்டோர், துபாஷ் எனும் செல்வாக்கு மிக்க, பெரிய அதிகாரிகளாக வாழ்வு பெற்றனர். இங்கிலாந்தில் இருந்துவந்து இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பையும் நீதித்துறை நிர்வாகத்தையும் ஏற்றுக்கொண்ட ஆங்கிலேயர்களுக்கு அந்தந்த வட்டார மொழிகளைப் பயிற்றுவிக்கும் பொறுப்பினை அரசு ஏற்றது. இதன் மூலம் வட்டார மொழி நூல்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதற்குரிய வாய்ப்பும் உந்துதல் சக்தியும் தோன்றியது. இந்தப் பின்னணியில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தமிழில் மொழிபெயர்ப்புக் கலை நன்கு வளரலாயிற்று.

## 10.8.1. இலக்கியவகை

புராணங்களையும், சிற்றிலக்கியங்களையும் இயற்றுவதையே பொழுது போக்காகக் கொண்டிருந்த தமிழ்ப்புலவர்களிடையே மேலை நாட்டுக் கல்விமுறை, ஒரு புதிய திருப்புமையத்தை உண்டாக்கியது. ஐரோப்பிய இலக்கிய வகைகள் பல, இந்தியர்களுக்குப் புதுமையானவை. அவற்றை நம் நாட்டு எழுத்தாளர்களும் அறிஞர்களும் விரும்பிப் போற்றினர். இதுவரை எல்லாவற்றையும் செய்யுளிலேயே சொல்லிக் கொண்டு வந்த இந்தியர்களுக்கு, கருத்தை வெளியிடுவதற்குரிய சிறந்த சாதனமாக 'வசனம்' பயன்படலாயிற்று.

இத்துறையில், 'நாவல்' எனப்படும் நெடுங்கதைகள், சிறுகதைகள், இந்தியர்களைக் கவர்ந்த புதிய இலக்கிய வகையாகும். மற்றும் கட்டுரை எனும் புதுவகை உரைநடை இலக்கியம், பெருவழக்கிற்கு வந்தமை இங்குக் கருதத்தக்கது. இவற்றோடு, தன் உணர்ச்சிப்பாடல் (Lyrics) குறுங்காப்பியம், நாடகம் போன்ற இலக்கிய வகைகளும், மனித வாழ்க்கையோடு தொடர்புடைய உணர்ச்சிகளைச் சித்தரிக்கும் இலக்கியங்களாகப் பெருவாழ்வு பெற்றன. இதன் விளைவாகத் தமிழில் பல மொழிபெயர்ப்பு நூல்கள் தோன்றி வளர்ந்தன.

இவ்வாறு மொழிபெயர்க்கப்பட்ட நூல்களை,

1. மேலை நாட்டு மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை.

2. பிற இந்திய மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை

3. சீன, ஜப்பானிய மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை.

என வகைப்படுத்திக் கொள்ளலாம்.

குறிப்பு

## 10.8.2. மேலை நாட்டு மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை

பண்டைக் காலத்தில் நாகரிகத்தில் சிறப்புற்று விளங்கிய பண்டை கிரேக்க, ரோமானிய மொழிகள் ஏராளமான கலைச்செல்வத்தையும், இலக்கியச் செல்வத்தையும் உலகிற்கு வழங்கியுள்ளன. இவற்றுள் தொன்மைச் சிறப்பும், சிந்தனை வளமும் கொண்டது கிரேக்க நாகரிகம்.

பிளேட்டோவின் 'மாபெரும் உரையாடல்கள்' எனும் நூல் தொகுதி, உலகப் புகழ் வாய்ந்தது. அதில் இரண்டு குறு உரையாடல்கள் (Phaebo, Apology) சிந்தனைச் செம்மல் சாக்ரடிசின் கடைசி நாட்கள் சிலவற்றைச் சித்தரிக்கின்றன. அவற்றை முதன் முதல் தமிழாக்கம் செய்து 'சோக்ரதர்' எனும் பெயரால் தமிழுலகிற்கு சி.இராசகோபாலாச்சாரி யார் வழங்கியுள்ளார். மேலும் இவர் ரோமாபுரிப்பேரரசரான 'மார்க்கஸ் அரேலிஸ்' எழுதிய நாட்குறிப்பினை, 'ஆத்ம சிந்தனை' எனும் பெயரால் தமிழாக்கம் செய்துள்ளார். தமிழில் மொழிபெயர்ப்புக் கலையின் முன்னோடியாக விளங்கிய வே. சாமிநாதசர்மா அவர்கள், 'பிளேட்டோவின் குடியரசு' (Platoe's Rebublic) நூலினை சிறந்த முறையில் தமிழில் தந்துள்ளார். இதே நூலினை, பேராசிரியர் இராமனுசாச்சாரியார் மூலம் 'பிளேட்டோவின் அரசியல்' எனும் நூலாகத் தமிழாக்கம் செய்து சாகித்திய அகாடமி வெளியிட்டுள்ளது.

ஹோமரின் 'இலியத்' எனும் காப்பியம் தமிழில் முழுமையாக கீழ்த்திசைச் சுவடிநூல் நிலையத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இதைப்போன்றே ஹோமரின் 'ஒடிசி' என்ற காப்பியமும், 'எடிபஸ் வேந்தன்' எனும் நாடகம் மன்னன் 'ஈடிபசு' என்னும் பெயரிலும், தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

### 10.8.2.1. எபிரேயம்

எபிரேய மொழியில் உள்ள விவிலியம், சென்ற நூற்றாண்டில் முதன் முதலாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. இதனை யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலருடைய மேற்பார்வையில் இலங்கை கிருத்துவச் சங்கம் தமிழாக்கம் செய்ததாகத் தெரிகிறது. பழைய ஏற்பாட்டில் உள்ள 'சாலம்ஸ்' (Psalams) எனும் துதிப்பாடல்களைத் 'தேவ சங்கீதம் என்னும் பெயராலும், 'சாலமனின் Song of Song' என்னும் பெயராலும், தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் முதல் பல கிருத்துவ தமிழ்ப்புலவர்கள் தமிழாக்கம் செய்துள்ளனர்.

### 10.8.2.2. பாரசீக மொழி நூல்கள்

தமிழ்நாட்டு இஸ்லாமியப் புலவர்கள் பலர். பாரசீக மொழியில் உள்ள கதைகள், உரையாடல்கள், சிற்றிலக்கியங்கள் போன்றவற்றைச் சிறப்பாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். 'துத்திநாமா' என்னும் கிளிக்கதை, 'பெரிசிலியன் ஸ்டோரிஸ்' 'மனோரஞ்சிதத் திரட்டு' 'ஹிகயட்லாடியா' போன்ற சிறுகதை நூல்கள் பாரசீகக் கதைகளின் தமிழாக்கமாக விளங்குகின்றன.

உலகப்புகழ் வாய்ந்த உமர்கயாம் பாடல்கள், தமிழில் பன்னிரண்டு அறிஞர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆனால் தமிழாக்கம் செய்த கவிஞர்களுக்குப் பாரசீக மொழிப்பயிற்சி இல்லை. எனவே அவர்கள் ஆங்கிலத்தில் பிட்ச்ஜெரால்டு (Fitzerald) என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ள நூலைத் தழுவி, தமிழாக்கம் செய்துள்ளனர். இந்த பன்னிரண்டு மொழிபெயர்ப்புகளுள் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, சாமிசிதம்பரனார், ச.து.சு.யோகி ஆகிய மூவரும் செய்துள்ளவை தமிழுக்கு வலிவையும், பொலிவையும் ஊட்டுவனவாக உள்ளன.

### 10.8.2.3. அராபிய மொழி நூல்கள்

இஸ்லாமிய சமூகத்தின் புனிதமொழி அராபி எனப்படுவதாகும். இம்மொழியில் உள்ள புனித மறையாகிய திருக்குரானை இதுவரை ஏழு அறிஞர்கள் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். மற்றும், அராபிய மொழியில் வழங்கும் கதைப்பாடல்கள், காவியங்கள், தத்துவவிளக்க நூல்கள் ஆகியவை தமிழில் தரப்பட்டுள்ளன. அரபுக் கதைகள் சிறந்த முறையில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

மேற்காசியாவின் வளமிக்க மொழிகள் அரபும் பாரசீகமும் ஆகும். அராபிய மொழிகளில் ஏராளமானச் செய்யுள் இலக்கியங்கள் சிறப்புற்று விளங்குகின்றன. 'அராபிய ஞானப்புதையல்' எனும் பெயரில் 'குணங்குடி மஸ்தான் சாகிப்' தத்துவப் பாடல்களை மொழி பெயர்த்துத் தந்துள்ளார்.

அராபிய மொழியில் வழங்கும் கதைகள் உலகப் புகழ் வாய்ந்தன. ஆயிரத்து ஓர் இரவுகள் என்னும் அராபியக் கதைத் தொகுப்பை நான்கு வகையாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளனர். இந்தத் தொகுப்பில்லாமல் அலாவுதீன் அல்லது அற்புத தீபம், தாவீதுக் கதை போன்ற அராபியப் புதினங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இக்பாலுடைய கவிதைகளை 'இக்பால் கவிஅமுதம்' 'இக்பாலின் ஞானோதயம்' எனும் பெயர்களில் தமிழாக்கம் செய்துள்ளனர். கலீல் இப்ரான், ஜாலுதின் ரூமி முதலியோர் படைப்புகளும் தமிழின் மூலம் தமிழ் மக்கள் படித்தறியக் கூடியனவாக உள்ளன. குலிஸ்தான் என்னும் பாரசீக புதினம் 'பூங்காவனம்' என்ற பெயரில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

அனைத்துத் துறைகளிலும் இயற்றப்பட்ட அராபிய நூல்கள் ஸ்பெயின், சிசிலி, சிரியா ஆகிய நாடுகளில் நிகழ்ந்த மொழிபெயர்ப்புப் பிரதியெடுப்புப் பணிகள் வாயிலாக, 12ம் நூற்றாண்டிலிருந்து மறுமலர்ச்சிக் காலத்திற்குள்ளாக இலத்தீன் மொழியில் வெளிவந்தன. மேலை நாடுகளில் அந்நாளில் மொழிபெயர்ப்புத் தரமும் அறிவுத்திறமும் குன்றியிருந்த போதிலும் இடைக்காலத்தின் இறுதிப்பகுதியில் மேலை நாடுகள் முழுவதிலும் இந்த இலத்தீன் மொழி பெயர்ப்புகள் அறிவு வேட்கையை அதிகப்படுத்தின. உயிரியல் துறையில் பண்டைக் காலத்தவரின் புகழ் மிகு சாதனைகளை அராபியர் பேணிக் காத்தனர். அதோடு அவர்களே தேடிச் சேர்த்த புதிய விளக்கங்கள் மானுட அறிவை மேலும் வளப்படுத்தின.

கண்நோய் மருத்தவத்தில் நிகழ்ந்த இஸ்லாமிய சாதனைகள் பண்டைய கிரேக்கர்கள் அமைத்த அடித்தளத்தின் மீது எழுந்தவையே ஆகும். கண்நோய் மருத்துவம் பற்றி 'தாலமி' எழுதிய ஆய்வு நூல் தொடக்க நாளிலேயே அராபி மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுவிட்டது. அராபிப் பகுதியை அடிப்படையாகக் கொண்ட இலத்தீன் மொழி பெயர்ப்பு ஒன்று 12ம் நூற்றாண்டில் சிசிலியில் உருவாக்கப்பட்டது. கிரேக்க மூலமும் அராபி மொழிபெயர்ப்பும் காணாமற் போய் இப்பொழுது இலத்தீன் மொழிபெயர்ப்பு மட்டுமே எஞ்சியுள்ளது.

அராபி நூலாசிரியர்கள் சிலர், தங்களுடைய நூல்கள் இலத்தீன் மொழியில் பெயர்க்கப்பட்டதால் இலத்தீன் வடிவமாக்கப்பட்ட பெயர்களைத் தாங்கியவர்களாகப் புகழ் பெற்றார்கள்.

### 10.8.2.4. ஆங்கில மொழி நூல்கள்

ஏறக்குறைய 200 ஆண்டுகள், ஆங்கிலேயர்கள் ஆட்சியில் தமிழகம் இருந்ததை யாவரும் அறிவர். அதன் விளைவாக ஆங்கில இலக்கியங்கள் சிலவற்றைத் தமிழில் தருவதற்கு அறிஞர்கள் முயன்றுள்ளனர்.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த மாயூரம் வேதநாயகம்பிள்ளை, தமிழில், முதன்முதலாகப் 'புதினம்' எனும் இலக்கிய வகையைப் புகுத்தியவர் ஆவார். ஆனால், அவர் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபடாது மேற்கு நாட்டு சிந்தனையையும், பண்பாட்டையும் பிழிந்தெடுத்துப் பல தமிழ் நூல்களுக்கு பயன்படுத்தியுள்ளார். தமிழில் தற்சார்பற்ற பாடல்களைச் சமயத்தின் பிடியிலிருந்து மீட்டு, 'மனித வாழ்க்கை' எனும் புதிய பாடுபொருளைக் கொண்டு பல கவிதைகளை இவர் இயற்றியுள்ளார்.

வேதநாயகருடைய 'பெண்புத்திமாலை' எனும் நூலினுள் பேகன் (Bacon) எனும் அறிஞர், பெண்களின் முன்னேற்றத்திற்காக ஆங்கிலத்தில் எழுதியுள்ள கட்டுரைகள் பலவற்றின் சாரத்தைக் காணுகின்றோம். இவர் காலத்தையொட்டி வாழ்ந்த H.A.கிருஷ்ணபிள்ளை என்னும் தமிழறிஞர்: ஆங்கிலத்தில் ஜான் பேனியன் என்பவர் எழுதிய 'ஆன்மாவின்

முன்னேற்றம்’ அல்லது ‘பரதேசியின் முன்னேற்றம் (Pilgrims Progress) எனும் நூலினைத் தமிழில், ‘இரட்சணிய யாத்திரிகம்’ எனும் சிறப்பு மிகுத்தமிழ் காப்பியமாகப் படைத்துள்ளார்.

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் மில்டனுடைய பேரடைஸ் லாஸ்ட் (Paradaise Lost) எனும் காப்பியத்தின் முதல் காண்டத்தை ‘சுவர்க்க நீக்கம்’ எனும் பெயரால், வெ.சுப்பிரமணிய முதலியார் என்பவர், தமிழாக்கம் செய்துள்ளார். இது செய்யுளால் அமைந்தது. இதனையே சாமுவேல் வி.தாமஸ் என்பவர் ‘பூங்காவனப் பிரளயம்’ எனும் கதைப்பாட்டாகத் தந்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. கவிஞர் டெனிசனின் ‘Idylls of the king’ எனும் நெடும்பாடலை, ‘அரசனின் ஆயற்பாட்டு’ என ஆர்.பி.குழந்தை சாமி மொழிபெயர்த்துள்ளார்.

‘ஆங்கிலக் கவிதையின் பொற்களஞ்சியம்’ (The Golden Treasury of poem) எனும் நூலில் சிறப்புற்று விளங்கும் எண்பதுக்கும் மேற்பட்ட கவிதைகளைத் தேர்ந்தெடுத்து வே.திரிகூட சுந்தரம் பிள்ளை’ ‘ஆங்கிலக் கவிதை மலர்கள்’ எனும் நூலாகத் தமிழில் தந்துள்ளார் ‘கிரே’ என்னும் கவிஞரின் ‘கல்லறைக் கவிதை’ (The Elegy Written in the Country Churchyard) எனும் சிறப்புமிகு கவிதையை வி.கந்தசாமிப்பிள்ளை என்பவர். ‘இரங்கற்பா’ எனும் நூலாக மொழிபெயர்த்துள்ளார்.

அறிஞர் அ.கு.ஆதித்தார், ஷேக்ஸ்பியரின் ‘Venus and Adonis’ எனும் பாடலை ‘காமவல்லி’ எனும் கதைப்பாடலாகவும் ‘Helen of Troy’ எனும் பாடலை ‘துறையச் செல்வம்’ எனும் கதைப்பாடலாகவும் சொல்நயம், பொருள் நயம், வாய்ந்த இலக்கியங்களாகப் படைத்துள்ளார்.

எட்வின் ஆர்னால்டின் ‘The Light of Asia’ எனும் கதைப்பாடலை தேசிகவிநாயகம் பிள்ளை ‘ஆசிய ஜோதி’ எனும் கதைப்பாடலாகப் படைத்துள்ளார். ‘Shorab and Rustoub’ எனும் வீரச்சுவை மிகுந்த ஆங்கிலக் கதைப்பாடலை, கவிஞர் முடியரசன் ‘வீரகாவியம்’ எனும் பெயரில் தமிழாக்கம் செய்துள்ளனர். இதைப்போன்று ஆங்கிலக் கவிதைகள் பலவற்றைத் தனித்தனிப் பாடலாகப் பல அறிஞர்கள் மொழிபெயர்த்துத் தந்துள்ளனர்.

**நாடகங்கள்**

உலகப்புகழ் வாய்ந்த ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் தமிழில் பல அறிஞர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சில தழுவல்களாகவும் அமைந்துள்ளன. சான்றாகப் பம்மல் சம்பந்த முதலியாருடைய அமலாதித்தன்’ எனும் நாடகம் ஹாம்லெட் கதைக் கருவைத் தழுவி எழுதப்பட்டதாகும். ‘மனோகரா’ எனும் புதியதொரு தழுவல் நாடகத்தையும் உருவாக்கயுள்ளார். இதே ஆசிரியர் ‘ஜூலியஸ்சீசர்’ எனும் நூலை ‘சிம்மபுரிவீரன்’ எனும் பெயரில் தழுவலாக அமைத்துள்ளார்.

குறிப்பு

ஆஸ் யு லைக் இட் (As you like it), மேக்பத் (Macbeth) தி மர்ச்சண்ட் ஆப் வெனிஸ் (The Merchant of Venis) ஆகிய ஷேக்ஸ்பியரின் நாடகங்களை முறையே, 'விரும்பிய விதமே, 'மகபதி', 'வாணிபுர வணிகன் என்னும் பெயரில் பம்மல் சம்பந்த முதலியார் அவர்கள் சிறந்த முறையில் தமிழாக்கம் செய்துள்ளார்.

ஷேக்ஸ்பியருடைய நாடகங்களில் 'Othello' ' The Merchant of Venice', 'Tweldtth Night' எனும் நாடகங்கள் 'ஒத்தெல்வோ' எனவும், வெனிஸ் நகரவர்த்தகன்' எனவும் 'பன்னிரண்டாம் நாள் இரவு' எனவும், ஆறுவகையான மொழிபெயர்ப்புகள் தமிழில் வந்துள்ளன. 'As you like it' எனும் நாடகம், 'உன் விருப்பம் போல்', ரோசலின் சரித்திரம், 'விரும்பிய விதமே' 'மனம் போல மாங்கலியம்', 'எண்ணிய எண்ணியாங்கு' எனும் பல பெயர்களால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. 'ஒன்றும் இல்லா அமனி' என்னும் தலைப்பில் 'Much Ado About Nothing' எனும் நாடகமும், 'காற்று மழை அல்லது பிரசண்ட மாருதம்' என 'Tempest' எனும் நாடகமும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. 'புயல்' என்னும் தலைப்பில் இதே நாடகமும், 'Cymbeline' எனும் நாடகத்தை 'சரசாங்கி' எனவும், 'சிம்பலின்' எனவும் தமிழாக்கம் செய்துள்ளனர் 'A Midsummer Nights, Dream' Macbeth, King Lear, Romeo and Juliet, Julius Caesar முதலிய நாடகங்கள், தமிழில் பலரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் லிட்டன் பிரபு படைத்த 'The Secret Way' எனும் கவிதையைக் கருவாகக் கொண்டு 'மனோன்மணீய' நாடகத்தைப் படைத்துள்ளார்.

**சிறுகதை**

தமிழில் சிறுகதை எனும் இலக்கிய வகை, புதியதாகத் தோன்றியதாகும். இந்த இலக்கிய வகையைத் தமிழில் தொடங்கி வைத்தவர் வ.வே.சு.அய்யர் என்பவர் ஆவார். அவருடைய 'மங்கையர்க்கரசியின் காதல்' எனும் சிறுகதைத் தொகுப்பில் உள்ள சில கதைகள், ஆங்கில, பிரெஞ்சு, இத்தாலிய கதைகளைத் தழுவியனவாக அமைந்துள்ளன.

இவரைத் தொடர்ந்து, கு.ப.இராஜகோபாலன் புதுமைப்பித்தன் ஆகியோர் தமிழில் நூற்றுக்கணக்கான சிறுகதைகளைப் படைத்துள்ளார். தொடக்கக்கால சிறு கதைகளில் பல ஐரோப்பிய இலக்கியங்களைத் தழுவியும் கவியரசர் தாகூரின் வங்காள சிறுகதைகளைத் தழுவியும் அமைந்துள்ளன.

பால்சாக் என்னும் சிறுகதை எழுதாளரின் கதைகள் ஏராளமாக தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பால்சாக் கதைகள் எனும் தொகுப்பு தமிழில் சிறப்புடையதாகப் போற்றப்படுகிறது. இதைப் போன்றே மாப்பசான் கதைகள் பல தொகுதிகளாகத் தமிழில்

வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் அகிலன் மொழிபெயர்த்துள்ள மாப்பசான் சிறுகதைகள் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.





ஆங்கிலத்தில் இருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட சிறப்புமிக்க சிறுகதைகள், தமிழ் இலக்கிய வகைக்கு மேலும் மெருகூட்டி உள்ளது எனலாம். சாசருடைய 'The Cantebary Tales' எனும் கதை, தமிழில் 'கேண்ட்டர்பரிக் கதைகள்' என மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆஸ்கார் வைல்ட்டின் சிறுகதைகளைத் தொகுத்து, 'சிறந்த சிறுகதைகள்' எனும் தலைப்பில், தமிழில் தந்துள்ளனர். ருட்யார்டு கிப்லிங்கின் கதைகள், வில்லியம் மாரிஸ் கதைக் கொத்து, ஆகியவைத் தமிழில் வெளிவந்துள்ளன. 'நாத்தானியல் ஹாத்தார்னின் சிறு கதைகளை, அற்புதக் கதைகள்' எனவும், 'எட்கர் ஆலன் போ'வின் கதைகள் 'இதயக்குரல்' எனவும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. பிரெஞ்சு நாட்டு சிறுகதை மன்னன் மாபசானின் நூற்றுக்கணக்கான சிறுகதைகளை, புதுமைப்பித்தன் மொழிபெயர்ப்பாகவும், தழுவலாகவும் அமைத்துள்ளது சிறுகதை மொழிபெயர்ப்பில் குறிப்பிடத்தக்கதாகும்.

**புதினம்**

தமிழ் இலக்கியத்திற்குப் புதிய வரவாக வந்து சேர்ந்துள்ளது புதினமாகும். முதன்முதலாக 1881 இல் மாயூரம் வேதநாயகம்பிள்ளை அவர்கள், 'பிரதாப முதலியார் சரித்திரம் என்னும் புதினத்தைத் தமிழில் படைத்துள்ளார். அவரை அடியொற்றிப் பல ஆங்கில நாவல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

ஜேன் அயரின், 'அபலைப்பெண்', மார்க் ட்வைனின் 'அரசனும் ஆண்டியும்' 'ஆஸ்கார் ஒயில்டின்' அழியா ஓவியம்' என்னும் நாவல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன. 'மிஸ்டர் ஜெகிலும் மிஸ்டர் ஹைரும்' என்னும் நூலை 'இரட்டை மனிதன்' என்றும், 'தி லைப் அண்டு அட்வென்சர்ஸ் ஆப் ராபின்சன் குருசோ' என்னும் நூலை 'இராபின்சன் குருசோ சரித்திரம்' என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள இவை கற்பனை நயத்தோடு புதிய சமுதாயத்தைச் சித்தரிக்கும் ஆங்கில நாவல்களின் தழுவல்களாகும்.

சார்லஸ் டிக்கன்ஸ் எழுதிய 'A tale of two cities எனும் நாவலை 'இரு நகரக்கதை' என கா.அப்பாதுரையாரும், 'இருபெரும் நகரங்கள்' என கே.வேலன் அவர்களும் மொழிபெயர்த்துள்ளனர். ஜேன் ஆஸ்டினுடைய 'எம்மா' எனும் புதினம் தமிழில் நான்கு வகையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. வால்ட்டர் ஸ்காட்டின் 'ஐவன்ஹோ' (Ivenho) எனும் புதினம் 'ஐவன்ஹோ' எனும் பெயரால் ஆறு தமிழறிஞர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

ஹெமிங்வேயின் நோபல் பரிசு பெற்ற நாவல் 'கடலும் கிழவனும்' எனத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. 'கலிவரின் யாத்திரைகள்' எனும் தலைப்பில் 'கலிவர்ஸ் டிராவல்ஸ்' எனும் ஜோனதன் ஸ்விப்ட்

என்பாருடைய படைப்பு, இதுவரை எட்டு வகையாகத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி அய்யங்கார் ஆகிய இருவரும் ரேனால்ட்ஸ் நாவல்களைப் பலவகையானத் தழுவல் கதைகளாகத் தமிழில் வெளியிட்டுள்ளனர். ‘குமுதவல்லி’ அல்லது ‘நாக நாட்டரசி’ என்ற மறைமலையடிகளின் புதினம் ரேனால்ட்ஸ் படைத்த ‘லைலா’ என்னும் ஆங்கிலக் கதையின் தழுவலாகும். வால்டேருடைய ‘கேண்டிட்’ எனும் புதினம், ‘புதிர்’ எனும் பெயரால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.

‘கடவுளைத் தேடி அலைந்த கறுப்புப்பெண் (The black girl in search of god) எனும் பெர்னாட்ஷாவின் கதை தமிழில் கிடைக்கிறது. சைலசு மார்னர், டேவிட் காப்பர் பீல்ட், டாம்சாயர், புதையல்தீவு, வேக்பீல்ட் பாதிரியார், பகட்டுச் சந்தை, பவளத்தீவு, மறைந்த மாநகர், எனும் உலகப் புகழ் வாய்ந்த புதினங்கள் பல தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. புதுமைப்பித்தன் எழுதிய ‘பிரேத மனிதன்’ எனும் புதினம் ஆங்கிலக்கதையின் தழுவலாகும். ‘போரோ நீ போ’ எனும் புதினம் ‘A farewell to Arms’ எனும் ஹெம்மிங்வேயின் புதினத்தைத் தழுவியதாகும். பெர்ல். எஸ்.பக் எனும் நாவலாசிரியை எழுதிய ‘The good earth The pavilion போன்ற புதினங்களும் ‘நல்லமண்’ ‘மங்கையர் மாடம்’ எனும் பெயர்களில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

லியோ டால்ஸ்டாயின் அன்னாகரினா, போரும் காதலும் எனும் உலகப்புகழ் வாய்ந்த இரு புதினங்களும் சிறந்த முறையில் தமிழில் வெளிவந்துள்ளன. மார்க்சிம் கார்க்கியின் ‘தாய்’ எனும் புதினம். தமிழில் மூன்று வகையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இதுபோன்ற உலகப்புகழ் பெற்ற நூல்கள், பலமுறை மொழிபெயர்க்கும் சிறப்புக்குரியதாக அமைந்துள்ளன.

**கட்டுரை:**

ஆங்கில இலக்கியத்தில் செம்பாதிக்கு மேல் சிறப்புடையனவாக விளங்குவன ஆகும். அன்றாட வாழ்க்கைச் சிக்கல்களை உணரவும், உணர்த்தவும் தீர்க்கவும் பயன்படத்தக்க பல்லாயிரக் கணக்கான கட்டுரைகள், சொற்பொழிவுகள், மேடைப்பேச்சுகள், ஆராய்ச்சியுரைகள், ஆங்கில இலக்கியத்தை வலுப்படுத்தியுள்ளன. அவற்றுள் மிகச் சிலவே, தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் ஷெல்லியின் ‘A defense of poetry’ எனும் கட்டுரையை வி.ஆர்.எம். செட்டியார் என்பவர் ‘மின்னல்கீற்று’ எனும் தலைப்பிலும், அரிஸ்டாட்டிலின் ‘Poetics’ எனும் நூலை டாக்டர் அ.அ.மணவாளன் ‘கவிதையியல்’ எனும் கட்டுரைத் தொகுப்பாகவும் அளித்துள்ளனர். எட்மண்ட் பர்க்கின் சிறப்புமிகு பேச்சாளர்களின் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பேச்சுகளும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.



சார்ல்ஸ் லேம்பின் ‘கனவுலகக் குழந்தைகள்’ பேகனின் கட்டுரைகள், கார்லைலின் கட்டுரைகள், பெர்னாட்ஷாவின் கட்டுரைகள்,

இங்கர்சாலின் கட்டுரைகள், எமர்சன், இலியட், பெட்ரண்ட ரஸ்ஸல். சி.எம்.ஜோட்டு முதலிய அறிஞர்களின் கட்டுரைகள் சிறு சிறு நூல்களாகத் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன.



### 10.8.2.5. பிரெஞ்சு மொழி நூல்களின் தமிழாக்கம்

குறிப்பு

ஐரோப்பிய மொழிகளில் இனிமை வாய்ந்தவை பிரெஞ்சு மொழியும், இத்தாலிய மொழியும் ஆகும். இவற்றின் இலக்கிய வளம் உலகப்புகழ் வாய்ந்தது. பிரெஞ்சு மொழியின் கவிதைகளைப் பெரிதும் தமிழில் இதுவரை மொழிபெயர்க்கவில்லை. சுப்பிரமணியபாரதியார், பிரான்ஸின் தேசிய கீதத்தைத் தமிழாக்கம் செய்துள்ளார்.

**“அன்னை நன்னாட்டின் மக்காள்! ஏகுவம்**

**மன்னு புகழ் நாளிதுவே!**

**நம்மேல் கொடுங்கோல் செலுத்துவோர்**

**நாட்டினர் உதிரக் கொடிதனை!!**

எனத் தொடங்கும் இந்தப் பாடல், புதுவை மக்களால் போற்றிப் பாடப்பட்ட நாட்டுப் பாடலாகும். பிரெஞ்சு மொழியின் சிறப்பு வாய்ந்த, புதின ஆசிரியர்களான அலெக்சாண்டர் டூமாஸ், எமிலிஜோலா, மாப்பசான் போன்ற படைப்பாளர்களின் நாவல்கள் தமிழ்மக்கள் நன்கு அறிந்தனவாகும். ‘ஏழைபடும் பாடு’ எனும் பெயரால் சுத்தானந்த பாரதியாரும், ‘அம்பலவாணன் அல்லது நாவாய்க்கைதி’ எனும் பெயரால் பி.எஸ்.சுப்பிரமணியனும், விக்டர் யூகோவின் ‘லெஸ் மிசரபிள்’ எனும் புகழ்மிக்க பிரெஞ்சு நாவலைத் தமிழில் தந்துள்ளனர். இதே ஆசிரியருடைய ‘லீகாம்டே மாண்டி கிறிஸ்டோ’ எனும் புதினத்தை ‘மாண்டி கிறிஸ்டோ பெருமகன்’ எனவும், ‘அமரசிம்மன்’ எனவும் தமிழாக்கம் செய்துள்ளனர். அலெக்சாண்டர் டூமாசின், ‘திரி மஸ்கடியர்ஸ்’ எனும் நாவலை ‘மூன்று வீரர்கள்’ எனவும் மூன்று போராளிகள்’ எனவும் தமிழ்ப்படுத்தியுள்ளனர். விக்டர் யூகோவின் ‘லோம்கிரி’ எனும் புதினத்தை சுத்தானந்த பாரதியார் ‘இளிச்சவாயன்’ என மொழிபெயர்த்துள்ளார். இவ்வாசிரியருடைய கதையை ‘கடல் மறவர்’ எனவும் ‘கடல் வேட்டை’ எனவும் மொழி பெயர்த்துள்ளனர். வான்வெளிப் பயணத்தைப் பற்றி ‘ஜீன்ஸ்வோர்ட்’ என்பவர் எழுதிய சிங்சை, மையின்ஸ் ‘இன்பஇல்லம்’ எனும் கற்பனைக் கதைகளை நூலாசிரியரிடம் கேட்கவும் ‘ஆகாசப்பிரயாணம்’ எனவும் ‘80 நாளில் உலகம்’ ‘வான்வெளியில் ஐந்துவாரங்கள்’ – எனப் பலவாறாக மொழிபெயர்த்துள்ளனர்.

எமிலி ஜோலாவினுடைய ஜெர்மினல் எனும் புதினத்தைச் சுரங்கம், ‘தப்பிப்பிறந்தவள்’ எனும் பெயர்களில் தமிழில் தந்துள்ளனர். எமிலி ஜோலாவின், ‘நாநா’ எனும் புதினத்தை, கசங்கிய மலர்’ எனவும் தாசியின் மகள்’ எனவும் பல்வேறு பெயர்களில் தமிழ்ப் புதினங்களாகப்

படைத்துத் தந்துள்ளார்கள். மாபசனுடைய 'கதையும் கருத்தும்' காதல் சக்கரம், 'வாழத் தெரியாதவன்' போன்றனவும் புதினங்களாக தமிழில் வெளிவந்துள்ளன.

குறிப்பு

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த 'அனதோல் பிரான்ஸ் என்பவரின் 'ராஜிவாணி' என்னும் புதினத்தை, சாது ஜவானி' என்று தமிழாக்கியுள்ளார்கள். இப்புதினங்கள் அல்லாமல், வேறு பல கதைகளும், நாடகங்களும், கட்டுரைகளும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

### 10.8.2.6. பிற ஐரோப்பிய மொழிகளின் தமிழாக்கம்

இத்தாலிய மொழியிலிருந்து, 'இத்தாலியக் கதைகள்' எனும் கதைத் தொகுப்பையும், வாழ்க்கைப்படகு, எனும் கதைத் தொகுப்பையும் தமிழில் நாம் காணமுடிகிறது.

நார்வே நாட்டைச் சார்ந்த உலகப் புகழ் வாய்ந்த இப்சனின் நாடகங்கள், தமிழில் பல நூல்களாக வடிவெடுத்துள்ளன. 'தி பில்லர்ஸ் ஆப் சொசைட்டி (The pillars of Society), ஆன் எனிமி ஆப்த பீப்பிள் (An enemy of the People) என்னும் இரு நாடகங்களும், 'சமூகத்தின் தூண்கள்', 'மக்களின் பகைவன்' எனும் பெயரில் கா.திரவியம் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'கோபுரத்தின் உச்சியிலே 'தோல்வியின் சந்நிதானத்திலே' எனும் இரு நாடகங்களையும் கா.திரவியம் அவர்கள் மொழி பெயர்த்துள்ளார். 'பேய்கள்' (Ghosts) காட்டுவாத்து (The Wild Duck) எனும் நாடகங்கள் துரை. அரங்கசாமி என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன 'பொம்மையா? மனைவியா? (The Doll's House) எனும் நாடகத்தை. கா.நா.சுப்ரமணியம் என்பவர் தமிழாக்கம் செய்துள்ளார். அறிஞர் அண்ணாவின் நாடகங்களில் சில இப்சனின் நாடகங்கள் சிலவற்றைத் தழுவியதாக அமைந்துள்ளன. மாஜினின் ஜனநாயக தத்துவ விளக்கப் பேச்சுகள் சாமிநாத சர்மா அவர்களால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

#### ஜெர்மானிய மொழிபெயர்ப்புகள்

ஜெர்மன் மொழியில் 'கதே'யின் (Goethe) உலகப் புகழ் வாய்ந்த குயரளவ எனும் காப்பியத்தை, 'பாஸ்ட்' எனும் பெயராலும், வாஸ்து எனும் பெயரராலும் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். தென் மொழிகள் புத்தக டிரஸ்டின் சார்பில் 'ஜெர்மானிய இலக்கியத்தின் சிறப்புப் பகுதிகள்' எனும் மொழிபெயர்ப்பு நூல் ஒன்று, 'Classical Readings from Germen Literature' என்ற நூலின் தமிழாக்கமாக வெளியிடப்பட்டுள்ளது. ஜெர்மானிய மொழியில் செய்யப்பட்டுள்ள தத்துவ ஆராய்ச்சிகளும், மொழியியல் ஆராய்ச்சிகளும் அவ்வப்போது ஆங்கிலத்தின் வழியாக மொழிபெயர்கப்பட்டுள்ளன.

**ருஷ்ய மொழியில் மொழிபெயர்ப்புகள்**

கோவேந்தன் என்பவர் ‘எண்ணப் பறவைகள்’ ‘சிவப்புக் குயில்கள்’ எனும் ருஷ்ய மொழிக் கவிதைத் தொகுப்புகளைத் தமிழில் தந்துள்ளார். ‘ரகுநாதன் என்பவர் ‘சோவியத் நாட்டுக் கவிதைகள்’ எனும் தொகுப்பையும், ‘லெனின் கவிதாஞ்சலி’ எனும் கவிதைகளையும் தமிழாக்கம் செய்துள்ளார்.

தமிழ்ச் சிறுகதைகளை, வளப்படுத்திய பெருமை ருஷ்ய இலக்கியத்திற்குப் பெரிதும் உரித்தாகும். டால்ஸ்டாயினுடைய கதைகள் பலவகைத் தொகுப்புகளாகத் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. ‘செகாவ்’ எனும் படைப்பாளரின் சிறுகதைகளும், குறுநாவல்களும், தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. புஷ்கினுடைய பல்வேறு கதைகள் ‘தீபம்’ என்னும் கதைத் தொகுப்பாக வெளியிடப்பட்டுள்ளது. சிறுவர்களுக்கான இனிய ருஷ்ய சிறுகதைகள் தமிழில் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன. டால்ஸ்டாயினுடைய அக்கினிப் பரீட்சை எனும் புதினம், அன்னாகரினா, போரும் காதலும் போன்றவை சிறப்பு மிக்கப் புதினங்களாகத் தமிழில் வழங்குகின்றன.

மார்க்சிம் கார்க்கியின் ‘Mother’ எனும் புதினம் ‘அம்மா’ ‘அன்னை’ ‘தாய்’ என்னும் மூன்று தலைப்புகளில் தமிழில் வெளிவந்துள்ளன. ‘இவாங்துர்கனேவ்’ எனும் ருஷ்ய படைப்பாளரின் புதினங்கள், ‘உணர்ச்சிப் பெருவெள்ளம்’ ‘ஊமையின் காதல்’ ‘தந்தையும் மகனும், எனும் நூல்களாகத் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

‘அலெக்சாண்டர் குப்ரின் எழுதிய ‘யாமா தி பிட் எனும் புதினத்தைப் ‘பலிபீடம்’ எனும் பெயரால், புதுமைப் பித்தன் தமிழில் படைத்துள்ளார். இவற்றைப் போன்று சிறப்பு மிகு எழுத்தாளருடைய பல படைப்புகள் மொழி பெயர்க்கப்பட்டு வருகின்றன. டால்ஸ்டாயினுடைய ‘இருளின் வலிமை’ எனும் நாடகமும் ‘கோகோ’ என்பவருடைய ‘இன்ஸ்பெக்டர் ஜெனரல்’ என்ற நாடகமும் தமிழில் சிறப்பு மிக்கனவாகப் போற்றப்படுகின்றன.

**சீன ஜப்பானிய மொழிகளின் மொழிபெயர்ப்புகள்**

ஆசியாவில் சிறப்புற்று விளங்கும் பழம்பெரும் நாகரிக நாடு சீனா. இயந்திரத் தொழில் வளர்ச்சியில் முன்னணியில் நிற்பது ஜப்பான். இவ்விரு நாடுகளிலும் தனிப்பட்ட முறையில், இலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ளன. அவற்றுள் சிலவற்றை தமிழர்கள் நன்கு அறிந்துள்ளனர். ஹீவாங் —கு—பிட்ச் எனப்படும் கன்பூசியசின் ‘இளவேனிலும் இலையுதிர்காலமும்’ எனும் கவிதைத் தொகுப்பில் சில பகுதிகளை கா.அப்பாதுரையார் மொழிபெயர்த்துள்ளார். மா.சே.துங்கின் கவிதைகள் அண்மையில் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. சீனாவில் வழங்கி வரும் மகளிரைப் பற்றிய கதைகளைத் தொகுத்து ‘பனிப்படலத்துப் பாவை’

எனும் சிறுகதைத் தொகுப்பாக ந.பிச்சமூர்த்தி அவர்கள் மொழி பெயர்த்துள்ளார்.



'குங்போதங்' எனும் சீனர் எழுதிய நாவலைத் தழுவி 'கிழக்கோடும் நதி' என தா.நா.குமாரசாமி மொழி பெயர்த்துள்ளார். சி—யூ—சென் என்னும் சீனநாட்டுப் பெண் எழுத்தாளருடைய படைப்புகள் சிலவற்றை, பாரதியார் தமிழில் தந்துள்ளார். 'பெண்விடுதலை' எனும் தலைப்பில் அமைந்த கட்டுரையில் அந்த அம்மையாரின் கவிதையை அவர் பயன்படுத்தியுள்ளார்.

**'சியு யூசி யூதெங்**

**சவிஷா ஜென்'**

என்று முதலில் எழுத்துப் பெயர்ப்பு செய்து பிறகு அதன் தமிழாக்கத்தைப் பாரதியார் தந்துள்ளார்.

**'மாரிக்கால காற்றும்**

**மாரி நாள் மழையும்**

**மார் புண்ணாக வருத்துகின்றனவே'**

என்று அவர் மொழிபெயர்த்துள்ளார்.

தத்துவ ஞானிகளான கன்பூசியஸ், லவோட்சு, மென்ஷியஸ் முதலியோரின் நூல்களை 'முதுமொழிகள்' 'நடுவு நிலைக்கோட்பாடு' 'சிறப்பு மிகு கல்வி' 'மாண்பு மிகு நெறி' 'மென்ஷியஸ் போதனைகள்' எனும் நூல்களாகத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர்.

## 10.8.3. இந்திய மொழிகளிலிருந்து தமிழாக்கம்

பண்டைக் காலத்தில் சிறப்புற்று விளங்கிய இந்திய மொழிகள் வடமொழி பிராகிருதத்தின் வழி வந்த பாலி போன்றனவாகும். 'வடமொழி' நூல்கள் எனும் தலைப்பில் தமிழில் காலந்தோறும் எவ்வெவ்வாறு தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன என்பதை விரிவாக இருபதாம் நூற்றாண்டில் செய்யப்பட்டுள்ள சிறப்புமிகு மொழிபெயர்ப்புகள் சிலவற்றைக் கொண்டு காண்போம்.

### 10.8.3.1. வடஇந்திய மொழிகளின் தமிழாக்கம்

மகாகவி காளிதாசருடைய படைப்புகள் பல, தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் 'சாகுந்தல நாடகம்' 'மேகசந்தேசம்', 'ருதுசம்ஹாரம்', 'இரகுவம்சம்' போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கன. சாகுந்தல நாடகத்தை மட்டும், தமிழில் மூன்று அறிஞர்கள் மொழிபெயர்த்துள்ளார். மறைமலையடிகள், 'காளிதாசர் இயற்றிய சாகுந்தல நாடகம் எனவும், ஆர்.இராகவய்யங்கார், 'அபிஞ்ஞாந சாகுந்தலம், எனவும், கே.சந்தானம் 'சாகுந்தலம் ¸ மேகதூதம்' எனவும் தமிழாக்கம் செய்துள்ளனர். இராகவய்யங்காரின் மொழிபெயர்ப்பு

முழுவதும் செய்யுள் வடிவில் அமைந்தது. மறைமலையடிகளின் தமிழாக்கம் கலையழகு வாய்ந்தது. ஆனால் இவ்விரண்டு மொழிபெயர்ப்பே ஓரளவிற்கு தமிழறிவு உடையவர்களாலும் படித்துப் புரிந்து கொள்ளத் தக்கதாக உள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது.

வடமொழியில் சிறப்பு வாய்ந்த ‘மிருச்சகடிகம்’ எனும் காப்பியத்தை, ‘மண்ணியல் சிறுதேர்’ எனும் பெயரால், மு.கதிரேசஞ் செட்டியார் அவர்களும் மிருச்சடிகம் எனும் பெயராலேயே வேறு சில அறிஞர்களும் தமிழாக்கம் செய்துள்ளனர். பாணபட்டரின் ‘காதம்பரி’ எனும் கதைநூல் தமிழில் ஆறு அறிஞர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

‘தசக்குமார சரிதம்’ ‘முத்ராராட்சசம்’ போன்ற நாடகங்களும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. ‘பர்துருஹரி’எனும் கவிஞரின் ‘திரைசதகம்’ எனப்போற்றப்படும் ‘நீதி சதகம், ‘வைராக்ய சதகம்’ ‘சிங்கார சதகம்’ ஆகிய மூன்று நூல்களும் இந்நூற்றாண்டில் நயமிகு தமிழ்க் கவிதைகளாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. வடமொழியில் உள்ள ‘கதாசரித்திர சாகரம்’ என்னும் கதைத் தொகுப்பின் ஒரு பகுதி ‘கதைக்கடல்’ என்ற பெயரால் வெ.இராகவன் அவர்களாலும், ‘பஞ்சதந்திரப் பாடல்கள்’ என்னும் நூல், செய்யுள் வடிவிலும் உரை நடை வடிவிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

இக்கால மக்களிடையே தோன்றியிருக்கின்ற அறிவுப் பசியைத் தணிக்கும்பொருட்டு, வடமொழி நூல்கள பல தழுவலாகவும், சுருக்கமாகவும் அவ்வப்போது தமிழில் வெளியிடப்பட்டு வருகின்றன.

### 10.8.3.2. பிராகிருத மொழி

இந்திய நாட்டு மக்கள், இயல்பாக பண்டைக் காலத்தில் பேசிய மொழிகள் எல்லாவற்றையும் தொகுத்து பிராகிருதம் எனக் குறிப்பிடுவர். பிராகிருத மொழிகளுள் ஒன்றான பைசாச மொழியில் இயற்றப்பட்ட பெருங்கதைப் பற்றி முன்னரே நாம் பார்த்தோம்.

‘சாதவாகன பேரரசன்’ ‘ஹாலா’ தொகுப்பித்த ‘காதாசப்தசதீ’ எனும் பிராகிருத மொழி நூல், உலகப் புகழ் வாய்ந்தது. இதனை, அண்மைக் காலத்தில் இரா.மதிவாணன், ‘ஆந்திர அகநானூறு’ எனும் தழுவல் நூலாக தமிழ்ப்படுத்தியுள்ளார். இதை ‘சப்தசதியை’ ‘காதாசப்சதி’ (பா.எழுநூறு) எனும் தலைப்பில், பன்மொழிப்புலவர் மு.கு.ஜகந்நாத ராஜா’ தமிழாக்கம் செய்துள்ளார். இவருடைய தமிழாக்கம் மூலநூலை ஒட்டி அமைந்த சிறந்ததொரு மொழிபெயர்ப்பாகும்.

ஒப்பிலக்கியம்

குறிப்பு

### 10.8.3.2.1. பாலிமொழி

பாலிமொழியில் உள்ள 'தம்மபதம்' தமிழாக்கம் செய்யப்பட்டது இம்மொழியில் உள்ள புத்த ஜாதகக் கதைகளும், தேரிக்கதைகளும், சில தொகுப்புகளாக தமிழில் வெளிவந்துள்ளன.

இன்றைய இந்திய மொழிகளுள் இந்தி, குஜராத்தி, வங்காளம் போன்ற வட இந்திய மொழிகளிலிருந்தும், கன்னடம், தெலுங்கு, மலையாளம் போன்ற தென்னிந்திய மொழிகளிலிருந்தும் ஏராளமான நூல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

### 10.8.3.3. இந்தி

துளசிதாசருடைய 'இராம சரித்திர மானஸ் எனும் பக்தி இலக்கியம் ஆறு அறிஞர்களால் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. ஜெயசங்கர பிரசாத் படைத்துள்ள காமாயானி' எனும் காப்பியம், 'காமன்மகள்' எனும் நூலாக 'ஜம்தக்னி' எனும் அறிஞரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பிரேம்சந்தினுடைய புகழ்மிகு சிறுகதைகள் பல தொகுப்புகளாகத் தமிழில் வெளி வந்துள்ளன. இவை அல்லாமல் 'இந்தி சிறுகதைகள்' எனும் தொகுப்புகள் சாகித்திய அகாதமி போன்ற அமைப்புகளால் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன.

பிரேம்சந்தினுடைய நாவலான 'கர்மபூமி' என்பதனை 'அறக்கோட்டம்' எனத் தமிழில் மொழிபெயர்த்துள்ளனர். மற்றும் சுதர்சன், தர்மவீர் பாரதி, ஸ்ரீலால், கோவிந்த வல்லபவன் போன்ற எழுத்தாளர்களின் படைப்புகள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. கமலா காந்தவர்மாவின் நாடகம் 'அடிவானத்திற்கு அப்பால்' எனும் பெயரிலும், 'மோகன் ராகேஷின் என்னும் அறிஞரின் நாடகம், 'அரையும் குறையும்' எனும் பெயராலும் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. மற்றும சாகித்ய அகாதமி, நேஷனல் புக்டிரஸ்ட்டுபோன்ற அமைப்புகள், இந்தி மொழி நாவல்களையும் சிறுகதைகளையும் பேரளவில் தமிழாக்கம் செய்துள்ளன.

ராகுல சங்கிருத்தியாயன் என்ற அறிஞரின் படைப்பான 'சிம்ஹசேனாபதி' எனும் நூலை, கண.முத்தையா அவர்கள் 'வால்காவிலிருந்து கங்கை வரை' என்னும் பெயரிலும், மாஜினி என்பவர் 'சிந்து முதல் கங்கை வரை' என்ற பெயரிலும் தமிழாக்கம் செய்துள்ளனர்.

### 10.8.3.4. குஜராத்தி

குஜராத்தி மொழி பக்திப்பாடல்கள் பல, தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'ஸ்ரீமத் பாகவத ரஹஸ்யம்' என்ற 'ராமசந்திர டோங்க்ரே' வின் நூலை 'ஹரிஹர சர்மா' என்பவர், தமிழாக்கம் செய்துள்ளார். குஜராத்தி சிறுகதைகள். பல தொகுப்புகளாகத் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. குஜராத்தி மொழியில் சிறப்பு மிகு புதினங்களாகப் போற்றப்படும் சரஸ்வதி சந்திரன்,

*Self-Instructional Material*

இராஜநர்த்தகி, ஜெயதேவன், ஜெயசோமநாத் முதலிய புதினங்கள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. குஜராத்தி ஓரங்க நாடகங்களைத் தொகுத்து, சாகித்திய அகாதமி சிறப்புமிகு நூலாக வெளியிட்டுள்ளது. மற்றும், 'இருமினாளாவதி' எனும் கதையும் 'மீனாட்சி' எனும் கதையும், தமிழில் வெளியிடப்பட்டுள்ளன.

மகாத்மா காந்தியின் வாழ்க்கை வரலாறு 'சத்திய சோதனை'யாக தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது நாம் யாவரும் அறிந்ததாகும்.

### 10.8.3.5. மராட்டிய மொழி

தமிழ்நாட்டில் 'மராட்டியர்கள்' சிறிது காலம் ஆட்சி செய்தார்கள். எனினும், மராட்டிய நூல்கள் மிகுதியாகத் தமிழில் மொழிபெயர்க்கப் படவில்லை. 'பகவத் விஜயம்' எனும் மராட்டிய மொழி புராணமே தமிழில் பெருவழக்காக வழங்கி வருகின்றது. காண்டேகருடைய சிறுகதைகள் தமிழில் பல நூல்களாக வெளிவந்துள்ளன. 'அரும்பு' 'ஆஸ்திகள்' 'ஓடும் இரயிலே' 'கண்ணாடி அரண்மனை' 'கவியும் கனியும்' 'கருப்பு ரோஜா' 'கோடை மழை' 'தாழை முள்' 'மிஸ்லீலா' 'ஜமின்தார்மாப்பிள்ளை' முதலிய சிறுகதைத் தொகுப்புகள் தமிழ் வாசகர்களின் உள்ளங்களைக் கவர்ந்தவையாகும்.

வினோபாவின் குட்டிக் கதைகளும், தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. இவற்றோடு 'மராத்திய சிறுகதைகள்' எனும் தொகுப்பு தமிழில் வெளியிடப்பட்டுள்ளது நினைவு கூரத் தக்கதாகும். மராத்திய புதினங்களுள், ஏறக்குறைய காண்டேகருடைய புதினங்கள் யாவுமே, தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன எனலாம். 'இருதுருவங்கள்' 'எரிநட்சத்திரம்' 'கிரௌஞ்சபதம்' 'புயலும் படகும்' 'ஏயாதி' 'சுகம் எங்கே' 'வெறும் கோயில்' 'வெண்முகிலே' முதலிய காண்டேகரின் புதினங்களை கா.ஸ்ரீ.ஸ்ரீ. தமிழில் மொழி பெயர்த்துள்ளார். தேவதாசி, நான் பண்டர்வாடி, புதுமைப்பெண், போன்ற மராட்டிய நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. விநாயக்சவார்க்கர்' என்பவரின் 'முதல் இந்திய சுதந்திரப்போர்' மராட்டிய மொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட சிறந்த வரலாற்று நூலாகும்.

### 10.8.3.6. வங்காளி

இந்திய மொழிகளுள், வங்காள மொழி இலக்கிய வளம் மிக்க மொழியாகும். கவியரசர் இரவீந்திரநாத் தாகூரின் 'கீதாஞ்சலி' என்னும் உலகப் புகழ் வாய்ந்த தத்துவ நூலினைத் தமிழில், ஐந்து அறிஞர்கள் மொழிபெயர்த்துள்ளனர். அவற்றுள் வி.ஆர்.எம்.செட்டியார், அ.சீனிவாசராகவன், பா.வரதராசன் ஆகியோருடைய தமிழாக்கங்கள் சிறப்பு மிக்கன. 'கவியரசர் கண்ட கவிதை', இரவீந்திர கதைத் திரட்டு' போன்ற இரு பெரும் கவிதைத் தொகுதிகள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. மற்றும், காதற்பரிசு 'பட்டிப் பறவைகள்', 'கனிகொய்தல்', 'வளர்பிறை' போன்ற தாகூரின் பாடல்கள் தமிழில்

வெளியிடப்பட்டுள்ளன. சைதன்யருடைய பக்திப் பாடல்களும் பல தொகுப்புகளாகத் தமிழில் வெளிவந்துள்ளன.

த.நா.குமாரசாமி அவர்கள் சரத் சந்திரருடைய பல்வேறு சிறுகதைகளைத் தமிழாக்கம் செய்துள்ளார். 'அரசியல் கைதி முதலிய வங்கச் சிறுகதைகள்' 'இரு சகோதரிகள்' போன்றவை இங்கு குறிப்பிடத்தக்கன. இரவீந்திரநாத் தாகூரின் கதைகள் பல தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. சுப்பிரமணிய பாரதியார் மொழி பெயர்த்த சிறுகதைகள் சிறப்பு மிக்கன. இராமகிருஷ்ண பரமஹம்சரின் 'பரம ஹம்சர் சொன்ன கதைகள்' சில நூல்களாகத் தமிழில் வெளிவந்துள்ளன.

சாகித்ய அகாதமி வெளியிட்டுள்ள இரவீந்திர கதைத்திரட்டு சிறப்புமிக்க நூலாகும். பங்கிம் சந்திரருடைய ஆனந்த மடம், எனும் புகழ்மிக்க புதினம், தமிழில் ஐந்து அறிஞர்களால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதில் இடம் பெற்றிருக்கும் 'வந்தே மாதரம்' எனும் நாட்டு வாழ்த்துப் பாடலைப் பாரதியார், இருவகையாக மொழிபெயர்த்துள்ளார். மற்றும் பங்கிம் சந்திரருடைய புதினங்களும், சரத் சந்திரருடைய புதினங்களும் மிகுதியாகத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. வங்க மொழியின் சிறப்பு மிகு ஏழு குறுநாவல்களை நேஷனல் புக் டிரஸ்ட் சார்பில் தமிழாக்கம் செய்து வெளியிடப்பட்டுள்ளமை போற்றத் தக்கதாகும்.

தாகூருடைய 'நகைச்சுவை நாடகங்கள்' 'இரவீந்திர நாடகத் திரட்டு போன்ற நூல்களும் தமிழில் இடம் பெற்றுள்ளன. மற்றும் வங்காள மொழியில் இராஜாராம் மோகன்ராய் எழுதியுள்ள கட்டுரைகள் பலவும், ஆராய்ச்சிகளும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

### 10.8.3.7. தென்னிந்திய மொழிகளில் மொழிபெயர்ப்புகள்

தென்னிந்திய மொழிகளில் தமிழிற்கு அடுத்த நிலையில் தொன்மையானது தெலுங்கு. தெலுங்கு மொழியில் உள்ள 'வேமன்ன பத்தியம்' என்னும் தத்துவ நூல் தமிழில் ஐந்து மொழிபெயர்ப்புகளைக் கண்டுள்ளது. தெலுங்கு மொழியில் சிறப்புற்று விளங்கும் 'சுமதி சதகம்' தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது. இதைப்போன்றே, 'நரசிம்ம சதகம், ஸ்ரீவாசவி கன்னிகாபுராணம்' போன்ற நூல்களும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

தெலுங்குமொழி சிறுகதைகள், 'கதாபாரதி' எனும் பெயராலும், 'கதாரத்னாவளி' எனும் பெயராலும் தமிழில் வெளியிடப்பட்டுள்ளன. தமிழில் வழங்கும் தெனாலிராமன் கதைகள் யாவும், தெலுங்கிலிருந்து தமிழிற்கு வந்தனவாகும்.

தெலுங்கு மொழியின் நாவல்களில், 'ஆயிரம்தலைநாகம்', 'உருத்திர மாதேவி' 'கடைசியில் இதுதான் மிச்சம்' என்னும் நாவல்கள் தமிழ் மக்களிடையே நல்ல வரவேற்பினைப் பெற்றுள்ளன.

தெலுங்குமொழி நாடகங்களுள், 'கன்யா சுல்கம்' 'சிவகாமசுந்தரி' பரிணய நாடகம்' 'வாழ்வியல் இன்பம்' என்பனவற்றைத் தெலுங்கில் இருந்து தமிழில் மொழி பெயர்த்துள்ளனர்.

**கன்னடம்**

கன்னட மொழியிலிருந்து 'வசவேசுவரின் வசனங்கள் பல, முதுமொழிகளாகத் தமிழில் 400 ஆண்டுகளுக்கு முன்பே மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. 'விவேகசிந்தாமணி' என்னும் நூலும், 'அக்கமாதேவியின் அருளுரை' எனும் நூலும் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

'சிவகோட்டாச்சயாரின் நல்லறக் கதைகள் 'குரு தட்சிணை' 'கன்னடச் சிறுகதைகள்' என்னும் நூல்கள், தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. 'சாந்தலை' 'அழிந்த பிறகு' 'சிக்கவீர ராஜேந்திரன்' 'சொப்பன மாளிகை' 'பூனைக்கண்' முதலிய புதினங்கள் தமிழில் தரப்பட்டுள்ளன. 'ஆண்டு விழா' எனும் நாடகத் தொகுப்பு தமிழில் செல்வாக்கு உடையதாகும்.

**மலையாளம்**

தமிழோடு நெருக்கமான தொடர்புடைய மொழி மலையாளம், 'குமாரன் ஆசான்', 'வள்ளத்தோள்' முதலிய மகாகவிகளின் கவிதைகளும், 'மரக்குதிரை' 'கதாபாரதி' மலையாளச் சிறுகதைகள்' எனும் சிறுகதைத் தொகுப்புகளும், மலையாளமொழியிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன.

இந்துலேகா, ஏணிப்படிகள், செம்மீன், பனிமேகம், பைத்தியக்கார உலகம், வெறும் மனிதன், பேராசிரியர், முதலிய புதினங்கள் தமிழில் பெரு வழக்குடையன. 'கூட்டுப் பண்ணை அடிமை' முதலிய நாடகத் தொகுப்புகளும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

## 10.9. மொழிபெயர்ப்பின் வளர்ச்சி

இந்தியத் தேசியத் தலைவர்கள் எழுதிய அரிய நூல்களும், ஆற்றிய சொற்பொழிவுத் திரட்டுகளும், தமிழில் அவ்வப்பொழுது, மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.

'நேரு கண்ட இந்தியா' (Discovery of India) எனும் பெயரில் ஜெயா அருணாச்சலம் தமிழாக்கம் செய்துள்ளார். நேருவின் (Glimpses of world History) எனும் நூலினை, 'உலக சரித்திரம், எனும் தலைப்பில் ஓ.வி.அழகேசன் என்பவர் மொழிபெயர்த்துள்ளார்.

மகாத்மாகாந்தியின் பல்வேறு நூல்களும், சொற்பொழிவுகளும், வாழ்க்கை வரலாறும், நேரு தம் மகளுக்கு எழுதிய கடிதங்களும், இராஜேந்திர பிரசாத் வாழ்க்கை வரலாறும், நேதாஜி சொற்பொழிவுகளும், விவேகானந்தர், இராமகிருஷ்ணர் வரலாறுகளும், பேச்சுகளும், திலகரின்

‘கீதா ரகசியம்’ எனும் நூலும், அம்பேத்காரின் ‘சூத்திரர் யார்’ எனும் நூலும் தமிழில் பல பதிப்புகள் கண்ட சிறப்புமிகு நூல்களாகும். தாகூரின் சிந்தனையைப் பலப்படுத்தும் ‘Towards a universal Man’ எனும் நூலினை, ‘அனைத்துலக மனிதனை நோக்கி’ எனும் தலைப்பில், பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் மொழி பெயர்த்துள்ளார். இவ்வாறு தமிழில் மொழி பெயர்ப்பு அண்மைக் காலத்தில் பெருகி வருவதைக் காண்கிறோம்.

**குறிப்பு**

‘எல்லாம் தமிழ், எதிலும் தமிழ்’ என்னும் கொள்கைக்கு இணங்க, தமிழ்நாட்டில் பிறந்த தமிழன், தமிழிலேயே உலகக் கலைகள் அனைத்தையும் அறிந்து கொள்வதற்குரிய வசதிவாய்ப்புகளைத் தமிழக அரசு கடந்த முப்பது ஆண்டுகளாகச் செய்து வருகிறது.

கோவை கலைக்கதிர் அமைப்பின் சார்பில் தமிழ்ப்பாட நூற்குழு ஒன்றினை அமைத்து தமிழ் வழி பயிலும் கல்லூரி மாணவர்களுக்குத் தேவையான நூல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டன. இதனை அடுத்து தமிழ் வெளியீட்டுக்கழகம்’ என்னும் ஓர் அமைப்பினை நிறுவி, மொழிபெயர்ப்பு பயிற்சி வகுப்புகள் நடத்தி, நூற்றுக்கணக்கான தமிழ் நூல்களைத் தமிழக அரசு வெளியிட்டுள்ளது. இந்தப் பணியை இப்பொழுது தமிழ் நாட்டுப்பாடநூல் நிறுவனம் தொடர்ந்து செய்து வருகிறது.

தமிழக அரசு அமைத்த ‘சட்ட மொழிபெயர்ப்புக்குழு, ‘சட்டக் கலைச் சொல் அகராதி ஒன்றைத் தயாரித்ததோடு, இந்திய அரசியல் அமைப்பு முதல் பல்வேறு சட்டங்களைத் தமிழாக்கம் செய்து பல நூல்களாக வெளியிட்டு வருகிறது.

அனைத்திந்திய அமைப்புகளாக ‘நேஷனல் புக் டிரஸ்டும், சாகித்திய அகாதமியும் விளங்குகின்றன. இக்காலத்திற்குத் தேவையான இந்தியாவின் பிறமொழி நூல்களையும், வெளிநாட்டு சிறப்புமிகு நூல்களையும் அவ்வப்போது தமிழாக்கம் செய்து தமிழில் புதிய சிந்தனை வளர்வதற்கு உறுதுணையாக சாகித்திய அகாதமி இருந்து வருகின்றது.

யூனெஸ்கோ ஆதரவில் தொடக்கப்பட்ட ‘தென்மொழி புத்தக டிரஸ்ட்’, 30 ஆண்டுகளாகத் தமிழில் உள்ள சிறந்த நூல்களைத் தென்னந்திய மொழிகளிலும், தமிழல்லாத தென்னந்தியமொழிகளில் உள்ள சிறந்த நூல்களைத் தமிழிலும், மொழி பெயர்ப்பதற்கு ஆதரவு தந்து நூல்களை வெளியிட்டு வருகிறது. இந்நிறுவனம், தமிழில் ‘கூரியரை’ மொழிபெயர்ப்பு இதழாக வெளியிட்டு வருகிறது.

இத்தகைய அமைப்புகள் மட்டுமல்லாமல் தனிமனிதர்களின் முயற்சியாலும் பல நூல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவரவர்கள் விரும்பும் நூல்களைத் தேர்ந்தெடுத்து எத்தகைய அமைப்புகளையும் சாராமல் தங்களுடைய முயற்சியால் மொழிபெயர்த்து அறிஞர் பலர்

வெளியிடுகின்றனர். இதனால் மேலும் மேலும் மொழிபெயர்ப்பு நூல்களின் எண்ணிக்கை பெருகி வருகிறது.



## 10.10. மொழி பெயர்ப்பில் உள்ள பிரிவுகள்



உலகின் பல்வேறு பகுதிகளில் பெரிதும் மொழிபெயர்க்கப்படுபவை:

(1) இலக்கியங்கள், இலக்கியத் தொடர்பான ஆராய்ச்சிக் கட்டுரைகள், திறனாய்வுகள் முதலியன.

(2) வரலாறு, புவியியல், மனைஇயல் முதலிய வாழ்வியல் நூல்கள்.

(3) அறிவியல் நூல்கள் முதலியன என அறியலாம்.

இத்துறைகளுக்குரிய நூல்களே பெரிதும் மொழி பெயர்க்கப்படுகின்றன. இவ்வகை நூல்களை மொழி பெயர்க்கும்பொழுது ஒரே வகையான மொழிபெயர்ப்பு முறையைப் பின்பற்ற இயலாது. வெவ்வேறு துறையைச் சார்ந்த நூல்கள் தத்தமக்கென சில தனித்தன்மைகளைப் பெற்றுள்ளன. அத்தன்மைகள் மொழிபெயர்ப்பில் வெளிப்படும் வகையில், மூல மொழியில் உள்ளவாறே சற்றும் தரம் குறையாமல் மொழிபெயர்த்தல் வேண்டும்.

மொழிபெயர்ப்பு வல்லுநர்களின் குறிக்கோள் நிலையிலிருந்து நோக்கி மொழிபெயர்ப்புகளை வகைப்படுத்தியிருக்கிறார்கள். இவை பொருளை அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன.

**பொருள் நோக்கில் அமையும் மொழிபெயர்ப்புகள்**

1. நடைமுறைப் பயன் நாட்டவகை (Pragmatic)
2. கவினும், கவிதை நயமும் சுவைபயக்கும் கலைநயம் வாய்ந்தவை.(Aesthetic Poetic)
3. மனித இனப்பண்பாடுகளைத் தெளிவாக உணர்த்துவதை முக்கிய நோக்கமாகக் கொண்டவை (Ethnographi)
4. மொழியியில் வகை (Linguistic)

என நான்கு வகையாக மொழிபெயர்ப்புகளை வகைப்படுத்தலாம்.

## 10.11. கவிதை மொழிபெயர்ப்பு (Aesthetic Poetic)

உலகில் பல்வேறு நாடுகளில் வாழும் பல்வேறு மொழி இனங்களைச் சார்ந்த மக்கள் மொழிபெயர்ப்பின் மூலமாக உலக மகா கவிகளின் கவிதைகளைப் படித்துணர்ந்து, அவர்களைப் போற்றி வருகின்றனர். ஒரு நாட்டின் சிறந்த இலக்கியங்களை, இலக்கியம் சார்ந்த நூல்களை அல்லது அவைகளின் சிறப்புக் கூறுகளை மொழிபெயர்த்து வெளியிடுவதால் உலகின் பல்வேறு கண்டங்களையும் கடந்து மக்களிடையே அச்சிந்தனைகள் பரவும் வாய்ப்பு ஏற்படுகிறது. உலகில்

வாழும் மக்கள் இதனால் மற்ற நாடுகளின் இலக்கியச் சிறப்புக்களையும், உயர்வினையும், மொழி பெயர்ப்பின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

இங்கிலாந்தில் தோன்றிய ஷேக்ஸ்பியர் (1564-1616) ஈடு இணை இல்லாத மகாகவி என்று உலகம் முழுவதும் மொழிபெயர்ப்பினாலேயே அறிந்து கொள்ள முடிந்தது. மேலும் அந்நாட்டில் புகழ்பெற்ற கவிஞர்களான ஸ்பென்சர், மில்ட்டன், கீட்ஸ், ஷெல்லி, பைரன், ப்ரௌனிங், டெனிசன், முதலிய கவிஞர்களை இன்றும் நாம் நினைவு கூர்ந்து வருகிறோம். தாந்தே, கெய்த்தே, புஷ்கின், மாயா கோவ்ஸ்கி போன்ற மேலை நாட்டுக் கவிஞர்கள் நம்மோடு வாழ்வது போன்ற உணர்வை மொழிபெயர்ப்பினால் உருவாக்க முடிந்தது. ஸ்பானியமொழி, பிரெஞ்சுமொழி, ஜெர்மன்மொழி, சீனமொழி, ஆப்பிரிக்கமொழிக் கவிதைகளின் மூலம், அந்நாட்டோரின் சிந்தனைத் திறன், கற்பனைத் திறன், சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டும் நிகழ்ச்சிகள் ஆகியவற்றை அறிய முடிகிறது.

‘டிரைடன்’ என்பவர் விர்ஜிலின் கவிதைகளையும், ‘ஷெல்லி’ என்பவர் பிளேட்டோவின் கவிதைகளையும், ‘எஸ்ராபௌண்ட்’ என்பவர் சீனக் கவிதைகளையும், ‘கவிமணிதேசிக விநாயகம் பிள்ளை’, எட்வின் ஆர்னால்டின் கவிதைகளையும் மொழிபெயர்க்கும் முறை இருந்து வருகிறது என்பதையும், அவ்வாறு மொழிபெயர்க்கப்படுவது சிறப்பாகவும் அமைகிறது என்றும் அறிகின்றோம். எலியட், ஏடன், ஸ்பென்சர் போன்றோர் உலகப்புகழ்பெற்ற கவிஞர்களாகவர். இக்கவிஞர்களின் பெரும்புகழிற்கு அவர்களுடைய கவிதைகளின் மொழிபெயர்ப்பு முக்கியகாரணமாக அமைந்தது.

ஷேக்ஸ்பியரின் கவிதைகளை ரஷ்ய மொழியில் மொழிபெயர்த்த பாஸ்டர்நாக் (Nobel Laureate Pasternak) என்பவர் “ஒரு மரத்தின் கிளையைப் பதியம் போட்டு மற்றொரு மரத்தை உண்டாக்கும் பொழுது புதியமரம் முதல் மரத்தின் இயல்பைப் பெற்றிருக்குமேயன்றி அதுவே முதல்மரமாகிவிடாது. அதைப்போலவேதான் கவிதை மொழிபெயர்ப்பும் அமைகின்றது எனக் கூறியுள்ளார். இக்கருத்து மறுக்க முடியாத ஓர் உண்மையாகும்.

மூலக்கவிதை, முதன் முதலில் வாசகர்களை எந்த அளவு கவர்ந்திருக்குமோ, அதை மனத்தில் கொண்டு அந்த அளவுக்கு மொழிபெயர்ப்பாளர் தன் வாசகர்களைக் கவர வேண்டும் என்ற எண்ணத்தில் மொழிபெயர்க்க வேண்டும்.

பிரெஞ்சு மொழியிலும், ஜெர்மன் மொழியிலும் உள்ள சிறந்த கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பொழுது மூல கவிதைக்கே உரிய பல சிறப்புகள் போய்விடுகின்றன் அந்த மொழிபெயர்ப்புக் கவிதைகளை அடிப்படையாகக் கொண்டு

மலையாளத்திலோ, அல்லது வேறுமொழிகளிலேயே பெயர்க்கும் பொழுது மேலும் பல சிறப்புகள், அழகுகள் மங்கிவிடுகின்றன.

கவிஞன் தன் தாய் மொழியில் சிந்தித்து, அதற்குரிய சொற்களை, அந்த மொழிக்குரிய ஒலி இயல்புக்கு ஏற்றவாறு தெரிந்து எடுத்துக் கவிதை இயற்றுகிறான். இவ்வாறு அந்தக் கவிதை அமைப்பிற்கு ஓர் அழகுண்டு. பிறமொழியில் பெயர்க்கும் பொழுது, பொருளைத் தெளிவாக்கி விட முடியும். ஆனால் மூலத்தில் பொதிந்து கிடக்கின்ற கலைக் கூறுகளை உள்ளவாறு வெளிப்படுத்துவது சற்றுக் கடினம் எனலாம்.

''மிகச் சரியான மொழியாக்கத்தை அமைக்கவேண்டும் என்பது கவிதை மொழிபெயர்ப்பாளரின் நோக்கமாக இருத்தல் கூடாது. ஆனால் கவிஞனுடைய அகத்தெழுச்சியின் ஊற்றுக் கண்களைத் திறந்து காட்டும் ஆற்றலை மொழி பெயர்ப்பாளர் பெற்றிருக்கவேண்டும். இதன் மூலம் ஒத்த கவிதைகளை மொழியாக்கம் செய்ய இயலும்'' என்று ஸ்டீபன் ஸ்பென்டர் அவர்கள் கூறியுள்ள கருத்து, கவிதையை வெவ்வேறு வகையில் மொழிபெயர்க்கலாமா என்ற வினாவிற்கு விடையளிக்கிறது.

தற்காலத்தில் சங்க இலக்கியப் பாடல்கள் எளிமையான வகையில் வேற்று மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு வருகின்றன. கருத்தைச் சொல்லும் முறைகளில் எளிமையைக் கையாண்டால், அம்மொழிபெயர்ப்பு வெற்றி பெறும் என்பது தெளிவு. இத்தகைய நூல்களை அதாவது இலக்கிய நயம், கருத்துச் செறிவு வாய்ந்த நூல்களை மொழிபெயர்க்கும் பொழுது இரண்டு மொழிகளிலும் தெளிந்த அறிவும், இலக்கிய, இலக்கணப்புலமை பெற்ற இருமொழி வல்லுநர்கள் இணைந்து பணியாற்றுவது நல்லது.

சான்றாக,

**யாயும் ஞாயும் யாரா கியரோ**

**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளீர்**

**யானும் நீயும் எவ்வழி யறிதும்**

**செம்புலப் பெயனீர் போல**

**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே**
**(குறுந். எண்.40)**

எனும் சங்கப்பாடலை,

"Your mother and my mother

how are they related?

Your father and my father

What are they to

One another?

You and I

how do we know each other

Like the rain

and red earth

Our loving hearts are mingled

as one:

எனப் பேராசிரியர் டாக்டர்.எம்.சண்முகம் பிள்ளை டேவிட் உடன் (DAVID.E.LUDDEN) இணைந்து தமிழாக்கம் செய்துள்ளார்.

இவ்வாறு எளிமையாக மொழிபெயர்ப்பு அமைய இருமொழி வல்லுநர்கள் இணைந்து செயல்படுவது வெற்றியை அளிக்கும்.

## 10.11.1. கவிதையை மொழிபெயர்க்கும் விதம்

1. சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தல் கூடாது.
2. கவிதை, கவிஞராலேயே மொழிபெயர்க்கப்படல் வேண்டும். அப்பொழுதுதான் மூலக்கவிஞரின் கற்பனைநயத்தை வெளிக்கொணர முடியும். படிப்போரும் உணர முடியும்.
3. மூலமொழி கவிதையில் கூறப்பட்டுள்ள கருத்துக்களை மொழி பெயர்த்துக் கூறும்பொழுது கருத்துச் செறிவு, கலைநயம், கற்பனைத்திறன் குறைந்துவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.
4. இவற்றிற்கு மேலாக எளிமையும், தெளிவும் மிகமிக இன்றியமையாதன.
5. பொருளில் கருத்து முரண்பாடு இருத்தல் கூடாது, என்பதெல்லாம் கவிதையை மொழிபெயர்க்க முயலுவோர்க்கு ஒரு சில அடிப்படை வரையறைகளாக அமைகின்றன.

## 10.12. ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் - விளக்கம்

மொழிபெயர்ப்பின் இன்றியமையாமை, மொழிபெயர்ப்பாளரின் தகுதிகள், மொழிபெயர்ப்பின் பயன்கள், வகைகள் உலக அளவிலும், இந்திய அளவிலுமாக தமிழுக்கு கிடைக்கப்பெற்ற மொழிபெயர்ப்புகள், கவிதை மொழிபெயர்ப்பில் கவனிக்க வேண்டியவை உள்ளிட்ட பல செய்திகளை இக்கூறு வெளிப்படுத்தியுள்ளது.

குறிப்பு

## வினா–விடை பயிற்சி

**I. இரண்டு மதிப்பெண் வினா-விடை**

**1) ஜான் டிரைடன் மொழிபெயர்ப்பு கலையை எத்தனை வகைகளாகக் கூறியுள்ளார்?**

1. சொல்லுக்கு சொல் மொழி பெயர்த்தல் 2. பொழிப்புரை

3. போலச் செய்தல் என மூன்று வகைகளாகக் கூறியுள்ளார்.

**2) சேவரி வாசகர் வகைகளை எங்ஙனம் குறிப்பிட்டுள்ளார்?**

1. மூலநூலின் மொழியையே அறியாதவர்

2. அன்னிய மொழி பயிலும் மாணவர்

3. முற்காலத்தில் அன்னிய மொழி கற்று இப்போது மறந்திருப்பவர்.

என மூன்று வகையாகக் குறிப்பிட்டுள்ளார்.

**3) துவிபாஷி – என்போர் யார்?**

இருமொழி அறிந்த இந்திய வல்லுநர்களை கிழக்கிந்திய வாணிக கம்பெனி துவிபாஷி என்றது. இவர்கள் 'துபாஷ்' என்னும் பெரிய அதிகாரிகளாக விளங்கினார்.

**4) பாரசீக கவிஞரான உமர்கயாம் பாடல்களைத் தமிழில் மொழி பெயர்த்தவர்களுள் சிறந்தவர் யார்?**

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

**5) புதினத்தை (நாவல்) தமிழில் அறிமுகப்படுத்தியவர் யார்?**

மாயூரம் வேதநாயம் பிள்ளை

**II. ஐந்து மதிப்பெண் வினா-விடை**

**6) மொழிபெயர்ப்பின் வகைகளைக் கூறுக.**

(10.3-ல் உள்ளதை எழுதுக)

**7) மொழிபெயர்ப்பாளர் தகுதிகள் யாவை? விவரி.**

(10.5-ல் உள்ளதை எழுதுக)

**8) மொழிபெயர்ப்புக் கோட்பாடுகளை வரையறை செய்க.**

(10.6-ல் உள்ளதை எழுதுக)

**9) மொழிபெயர்ப்பின் வரலாற்றை விவரி.**

(10.8-ல் உள்ளதை எழுதுக)

**10) கவிதையை மொழிபெயர்க்கும் பொழுது செய்ய வேண்டியவை யாவை?**

(10.11-ல் உள்ளதை எழுதுக)

**III. பத்து மதிப்பெண் வினா-விடை**

*ஒப்பிலக்கியம்*

**11) ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் எனுந் தலைப்பில் கட்டுரை எழுதுக.**

(10.1 முதல் 10.12 வரையிலான செய்திகளை தொகுத்து சுருக்கி எழுதுக)

**குறிப்பு**

# கூறு-11: இலக்கியமும் பிற கலைகளும் - இலக்கியமும் வரலாறும்

## 11.1. முன்னுரை

இலக்கியத்தோடு கலைத்துறைகள் ஒப்பிடுவது என்பது இணைநிலையின் பாற்பட்டதாகும். ‘‘சிற்பம், ஓவியம், இசை, கூத்து போன்றவையும் இலக்கியமும் ஓர் கலையே’’ என்ற முடிவுக்கு இது நம்மை இட்டுச் செல்கிறது.

## 11.2. நோக்கம்

இலக்கியமும் பிற கலைகளும் ஒன்றோடொன்று தொடர்புடையனவாக இருத்தலை அறிதல்.

இலக்கியமும் வரலாறும் உலகளவில் எங்ஙனம் பார்க்கப்பெற்றது. இந்திய அளவில் இலக்கிய வரலாற்று அணுகுமுறை ஆகியவற்றை இக்கூறு வழி அறியலாம்.

## 11.3. இலக்கியமும் கலைகளும் (Literature and Arts)

இலக்கியமும் கலைகளும் காலந்தோறும் இணைநிலையான வாழ்வுபெற்று வந்துள்ளன என்பதற்குப் பல சான்றுகளைக் காட்டலாம். இலக்கியம், கலைகளை வாழ வைத்துள்ளது கலைகள், இலக்கியத்தை வாழ வைத்துள்ளன. இலக்கியத்தோடு தொடர்புடைய கலைகள் 1. ஓவியம், 2.சிற்பம், 3. இசை, 4. நடனம் (கூத்து) போன்றவைகளாகும்.

### 11.3.1. இலக்கியமும் ஓவியமும்

கலைகளுள் மிகப்பழமையானது ஓவியமாகும். நாகரிமற்ற மனிதன் காட்டில் வேட்டையாடித் திரிந்தபோது அவன் வரைந்த குகை ஓவியங்கள் இதற்குச் சான்றுகளாகும். தன்னுடைய கருத்தை வடிக்க வார்த்தைகள் இல்லாதபோது அவன் அவற்றை ஓவியங்களாகத் தீட்டினான். மொழி உருவாகாத நிலையில் சித்திர எழுத்துக்களை உருவாக்கினான். இவ்வாறு தொடக்கம் முதற்கொண்டே ஓவியங்கள் கருத்தைப்

புலப்படுத்தும் தகவல் தொடர்பு ஊடகமாகப் பயன்பட்டு வந்ததை அறியலாம்.



ஓவியத்திற்கும் இந்தியப் பண்பாட்டிற்கும் நிரம்பத் தொடர்பு உண்டு. ஓவியத்தின் சாயல் இலக்கியத்தில் படிந்தது இலக்கியத்தின் சாயல் ஓவியத்தில் படிந்தது. ஓவியத்தின் சாயல் இலக்கியத்தில் படிந்தமைக்கு எடுத்துக்காட்டாக நெடுநல்வாடையை ''ஓவியப்பாட்டு'' எனக் குறிப்பிடுவதைக் காணலாம்.

**"புனையா ஓவியம் கடுப்ப. (137-147)"**

எனும் அடிகளில் அரசமாதேவியின் வாடிய உள்ளத்திற்கேற்ப வடிக்கப்பெற்ற ஓவியக்காட்சியைக் காணலாம். இதேபோல,

**எவ்வகை உயிர்க்கும் உவமம் காட்டி**

**வெண்கதை விளக்கத்து வித்தகர் இயற்றிய**

**கண்கவர் ஓவியம்....**

எனும் மணிமேகலைப் பாடலடிகள் கருத்தைப் புலப்படுத்தும் ஓவியத்தின் ஆற்றலைத் தெற்றெனப் புலப்படுத்துகின்றன. பொருநராற்றுப்படையில் இடம்பெறும் யாழ்வருணனை (4-20), சிறுபாணாற்றுப்படை விறலியின் வருணனை (25-27) ஆகியவை அழகிய சொற்சித்திரங்களாகும். நில வருணனை (Landscape) என்பதுபோல, உருவ வருணனையும் (Picturesque) இலக்கியத்தில் உண்டு. இலக்கியத்தில் காணப்படும் ஓவியக்காட்சி போன்ற நிலவருணனைக்கு சான்று வருமாறு.

**செறியிலைக் காயா அஞ்சனம் மலர**

**முறியிணர்க் கொன்றை நன்பொன் கால**

**கோடல் குவிமுகை அங்கை அவிழ**

**தோடார் தோன்றி குருதி பூப்ப**

**கானம் நந்திய செந்நிலப் பெருவழி**

**வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்**

**திரிமருப்பு இரலையொடு மடமான் உகள (93-99)**

எனும் முல்லைப்பாட்டின் முடிவுப்பகுதி பூஞ்சோலையிடையே மான் உலவும் காட்சியை ஓவியமாக்கிக் காட்டுவதை உணரலாம்.

**இலக்கியத்தில் காணப்படும் உருவ வருணனைக்குச் சான்று வருமாறு:**

**அவ்வயிற்று அகன்ற மார்பின் பைங்கண்**

**குச்சின் நிரைத்த குரூஉமயிர் மோவாய்ச்**

**செவியிறந்து தாழ்தரும் கவுளன் (புற.257:2-4)**

(அழகிய வயிற்றையும் பரந்த மார்பினையும் பசுமையான கண்களையும் உடையவன். குச்சுப்புல் நிரைத்தது போன்ற நிறம் பொருந்திய மயிரினையும் நாடியையும், காதுவரை பரந்த முன்னே காழ்ந்த கன்னத்தையும் உடையவன்)

இவ்வாறு ஆநிரை கவர்ந்து வந்த வீரனின் தோற்றத்தை ஓவியக் காட்சியாக்கித் தருகிறார் பெயரறியாப் புலவர் ஒருவர்.

குறிப்பு

இலக்கியம், எடுத்துரைத்தலுக்கு (Narrative) ஒரு ஊடகமாகப் பயன்படுகிறது. அந்த ஊடகம் கவிதையாகவோ புனை கதையாகவோ இருக்கலாம். ஓவியமும் எடுத்துரைத்தலுக்குப் பயன்படும் மற்றொரு ஊடகமே. இந்தியாவில் இருக்கின்ற மிகப்பழமையான ஓவியங்கள் அஜந்தாவிலுள்ள குகை ஓவியங்களே. இவை கி.மு. முதல் இரண்டு நூற்றாண்டைச் சார்ந்தவை. இவற்றில் புத்தர் வாழ்க்கை நிகழ்ச்சிகள் கதைகள் போலச் சொல்லப்பட்டுள்ளன என்பர். பின்னரே இவை புத்த ஜாதகக் கதையாக எழுதப்பட்டன என்ற கருத்தும் உண்டு. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் பொற்றாமரைக் குளத்தின் சுற்றுச் சுவர்களில் நாயக்கர் காலத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் புராணச் செய்திகளை இன்னும் சொல்லிக் கொண்டிருக்கின்றன. இதேபோன்று தஞ்சை பெரியகோவில் கருவறையின் மேல்சுவற்றுச்சுவரில் இராஜாஇராஜ சோழன் காலத்திய தேவாரக்காட்சி ஓவியங்கள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்பர். பண்டைய காலத்துச் சித்தன்ன வாசல் ஓவியங்களும் எத்தனையோ செய்திகளைக் காண்போர்க்குச் சொல்கின்றன.

பொதுவாக ஓவியங்கள் இலக்கிய, புராணக் காட்சிகளை அடிப்படையாக வைத்து வரையப்படுகின்றன என்ற கருத்து உண்டு. இதன்படி எளிதில் விளக்க இயலாத கனவு, பிறப்பு, இறப்பு, தவம், துறவு, வழிபாடு, உருமாற்றம், முக்தி ஆகியவை தொடர்பான தொன்மங்கள் ஓவியங்களில் விளக்கம் பெறுகின்றன என்பர். இதனால் இலக்கியங்களைக் காட்டிலும் ஓவியங்கள் ஆற்றல்மிக்க ஊடகம் எனலாம். அதனால்தான் ‘‘ஆயிரம் சொற்கள் விளக்குவதாக ஓவியத்தூரிகையின் ஒரு இழுப்புச் சொல்லிவிடுகிறது’’ என்ற சீனப்பழமொழி உருவானது போலும்.

## 11.3.2. இலக்கியமும் சிற்பமும்

ஓவியம் போன்று சிற்பமும், மனித எண்ணங்களைக் குறிப்பாகப் புலப்படுத்த அமைந்த ஓர் ஊடகமாகும். கருத்தைப் புலப்படுத்துவதில் தமிழகக் கோயிற்சிற்பங்கள் மிகப் புகழ்பெற்றவை. நடராஜரின் ஆனந்தத் தாண்டவம் சிலையாக வடிக்கப் பெறும்பொழுது அது காண்பவர். அகத்தில் எழுச்சியைக் கிளப்புகிறது. ‘‘ஒன்றிப்பு’’ என்ற நிலை இலக்கியத்தையும் ஓவியத்தையும் காட்டிலும் சிற்பத்திலேயே அதிகம் நிகழ்கிறது. இலக்கியமும் ஓவியமும் ஒற்றைப்பரிமாண இயல்புடையதாய்

இருக்க சிற்பம் முப்பரிமாண இயல்பைக் கொண்டு மனிதனை அதிகம் பாதிக்கிறது இந்த பாதிப்பினை,

**குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்**

**பனித்த சடையும் பவளம்போல்மேனியில் பால்வெண்ணீறும்**

**இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்**

எனும் அப்பர் பாடலில் உணரலாம்.

## குறிப்பு

தொல்காப்பியர் இலக்கியத்திற்கு இருக்க வேண்டிய இன்றியமையாத இலக்கணமாக ''நோக்கு'' என்பதைக் குறிப்பிடுகிறார். சுருக்கமாகச் சொல்லப்போனால் இதனை இலக்கியத்தின் ''மையக்கரு'' அல்லது ''உயிரோட்டம்'' எனலாம். சிற்பத்திற்கும் இதுபோன்ற ஓர் உயிரோட்டம் உண்டு. இந்த உயிரோட்டத்தை அறியமுடிந்தால் அதுவே சிற்பிக்கும் வெற்றி சிற்பத்தை உணர்ந்தவனுக்கும் வெற்றி. இதனை புதுமைப் பித்தனின் ''சிற்பியின் நரகம்'' என்ற சிறுகதை நன்கு விளக்குகிறது.

நோக்கு என்பதை இன்னொரு விதத்தில் ''முழுமை'' என்று சொல்லலாம். எழுத்து, மாத்திரை, அசை, சீர், யாப்பு, அடி, தொடை என்றின்னவாறு கவிதையின் பல உறுப்புக்களும் ஏற்புற அமைந்து கவிதையுள் மறைந்து, கவிதை மட்டும் முழுமையாகத் தோன்றுவதே நோக்கு. அதுவே உயிரோட்டம் அதுபோன்ற முழுமை சிற்பத்திலும் இன்றியமையாதது. இவ்வாறு உறுப்புப் பலவாக இருந்தாலும் அதனுள் முழுமை தோன்றுவது இலக்கியத்திற்கும் சிற்பத்திற்கும் ஒத்த பண்பாகும்.

சிற்பங்களுள் கவிதைச் சிற்பங்கள் உண்டு கதைச் சிற்பங்கள் உண்டு காப்பியச் சிற்பங்களும் உண்டு. மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் கம்பத்தடி மண்டத்தில் உள்ள மீனாட்சி திருக்கல்யாணச் சிற்பம் கவிதையைச் சொல்கிறது. அக்கோயிலின் சுவாமி சன்னதி சுற்றுச்சுவரில் அமைந்துள்ள திருவிளையாடற் புராணச் சிற்பங்கள் ஒவ்வொன்றும் ஒரு கதையைச் சொல்கின்றன. மாமல்லபுரத்தில் பகீரதன் தவம் எனும் அகல்பாறைச் சிற்பத்தொகுதி காப்பியத்தைக் கண்முன் நிறுத்துகிறது.

கதைச்சிற்ப வேலைப்பாடுகளுடன் கூடிய தமிழ்நாட்டுக் கோபுரங்களைத் தமிழ் இலக்கியங்களின் அமைப்புடன் ஒப்பிட்டுக் காண்பார். தமிழறிஞர் தனிநாயகம் அடிகள். அவர் கூறுவதாவது:

தமிழ்நாட்டுக் கோபுரங்கள் பல கூறுகளாக அமைந்து எல்லாம் சேர்ந்து ஒரே முழுமையாக விளங்குவதுபோல, தமிழ் கவிதையும் சிறுபாடலாயினும், நெடும் பாடலாயினும் ஒரே முழுமையாக விளங்குகின்றது.

நெடுநல்வாடையை “ஓவியப்பாட்டு” என்று சொல்வதுபோல “சிற்பப்பாட்டு” என்றும் கூறுவர். சிற்பத்தினுடைய பல பகுதிகள் வருவதால் நெடுநல்வாடையைச் “சிற்பப்பாட்டு” (Sculptured Poem) என்பார் தமிழண்ணல், சிறுபாணாற்றுப்படையைச் “சிற்பச் சிறுபாணாற்றுப்படை” என்பார் ம.திருமலை.

## 11.3.3. இலக்கியமும் இசையும்

குறிப்பு

இலக்கியம் போன்று ஓவியமும், சிற்பமும், கட்புல ஊடகமாக அமைய, இசை செவிப்புல ஊடகமாக அமைகிறது. கட்புல ஊடகங்களில் கருத்துச் சிதறல்கள் (Distraction, Disintegration) தடைகள் (Noise) உண்டு என்கின்றனர். தகவலியலாளர்கள். செவிப்புல ஊடகத்தில் கருத்துச் சிதறல்களும் தடைகளும் குறைவு என்பது அவர்கள் முடிவு. எனவே, இலக்கியத்தில் ஓவியமும், சிற்பமும் பெற்ற செல்வாக்கைக் காட்டிலும் இசையின் செல்வாக்கு அதிகம் எனலாம்.

ஓவியமும் சிற்பமும் தனித்தனி ஊடகங்களாக இருந்து மனக்கருத்தாடல்களை நிகழ்த்துகின்றன. ஆனால் இசை, தனி ஊடகமாக இல்லாது வாய்ப்பாட்டோடு சேர்ந்தும் மெய்ப்பாடுகளுடன் கூடிய நடனத்தோடு இணைந்தும் பல்முனை ஊடகமாக ஆற்றல் பெற்றுத்திகழ்கிறது. இதனால் இலக்கியத்தை இசையாகவும், இசையை இலக்கியமாகவும் பார்க்கும் பார்வை செல்வாக்குப் பெற்றுள்ளது.

பண்டைய தமிழ் இலக்கியங்களில் இசை தலையாய இடத்தைப் பெறுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு பண் வகுக்கப்பட்டிருந்தது. காலையில் பாடும் பண், மாலையில் பாடும் பண் என்று வேறுபடுத்தப்பட்டிருந்தது. மணவிழாவில் பாடும் பண், பிற சடங்குகளில் பாடப்படும் பண் பற்றிய குறிப்புக்களும் உண்டு. யாழில் சிறிய யாழ்(சீறியாழ்) பெரிய யாழ் (பேரியாழ்) என்ற பகுப்பு இருந்தது. யாழின் அடிப்படையில் சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை என்று ஆற்றுப்படை இலக்கியங்கள் பகுக்கப்பட்டிருந்தன. இசைக்கருவிகளைப் பற்றிய ஞானம் தமிழர்களின் சிறப்பியல்பு என்பதை வீ.ப.கா.சுந்தரனாரின் தமிழிசைக் கலைக்களஞ்சியம் வெளிப்படுத்துகிறது.

மனிதர்களை மட்டுமின்றி விலங்குகளையும் இசை கட்டுப்படுத்தவல்லது என்பதைத் தமிழர்கள் கவிதைகளின் வாயிலாக உணர்த்தியுள்ளனர். இசை, கொலைஞர்களைக் கூட நல்லவர்களாக மாற்றிவிடும் ஆற்றல் உடையது என்ற உண்மையை,

**ஆறலைக் கள்வர் படைவிட அருளின்**
**மாறுதலைப் பெயர்க்கும் மருவுஇன் பாலை (பொருந: 21-22)**

என்ற பாடலடிகள் சொல்கின்றன.

குறிப்பு

இயற்கையில் திளைத்த தமிழர்கள் காதில் விழும் கானகத்து ஓசையை எல்லாம் இசையெனக்கூறி மகிழ்ந்தனர் என்பதற்குப் பின்வரும் பாடல் சான்றாகும்:

**ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்**

**கோடை யவ்வளி குழலிசை யாகப்**

**பாடின் அருவிப் பனிநீர் இன்னிசை**

**தோடமை முழவின் துதைகுர லாகக்**

**கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு**

**மலைப்பூஞ் சாரல் வண்டுயா ழாக**

**இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து (அக 821-7)**

(அசையும் மூங்கில் துளையின் மேல்காற்று புகுந்து எழுந்த ஒலி குழல் இசையாக, அருவியின் குளிர்ந்த நீரின் இனிய இசை தொகுதியாக முழங்கும் முழுவிசையாக, கூட்டமான கலை மான்கள் தாழ்ந்து ஒலிக்கும் நெடுங்குரல் பெருவங்கிய இசையாக, மலைச்சரிவிலுள்ள பூக்களில் மொய்க்கும் வண்டுகளின் ஒலி யாழிசையாக இவ்வாறு இனிய பலவாக ஒலிக்கும் இசைகளைக் கேட்டு மகிழ்ந்து)

பண்ணத்தி என்ற பகுதியில் பண்வகைகளைப் பற்றித் தொல்காப்பியர் விரிவாக விளக்குகிறார். வண்ணங்கள் இசையை மிகுவிக்கும் சந்தங்கள் பற்றிப் பேசுகின்றன. கலிப்பாட்டும், பரிபாட்டும் இசைப்பாட்டு வகையைச் சார்ந்தவை என்று தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர் கருதுகிறார். இசைநூல்கள் பல தமிழில் இருந்தன என்று அறிகிறோம். பெருநாரை, பெருங்குருகு எனும் நூல்களை அடியார்க்கு நல்லார் தம்முடைய சிலப்பதிகார உரையில் குறிப்பிடுகிறார். சிறுநாரை முதுகுருகு ஆகியவற்றை இறையனார் களவியல் உரைகாரர் குறிக்கிறார். இந்திரகாளியம், பரதசேனாபதியம் எனும் பெயர்களில் இசை நூல்கள் இருந்தை அறிகிறோம். குரவைப்பாட்டு, வள்ளைப்பாட்டு பற்றிய செய்திகளையும் சங்கப்பாடல்கள் சொல்கின்றன. ''இசையோடு தமிழ்ப்பாடல் மறந்தறியேன்'' என்று பக்தி இயக்கக் காலத்திலும் இசையின் தலைமை இலக்கியத்தில் தொடர்ந்ததை அப்பரடிகளின் வாக்கினால் அறியலாம். ''ஏழிசையாய் இசைப்பயனாய்'' என்று இறைவனை வாழ்த்துவதும் இதனை உறுதிசெய்யும், இதனுடைய வளர்ச்சியே இன்று திருவாசகமும் மேற்கத்திய சிம்பொனி இசையாக அறியப்படுகிறது.

''ஆயிரம் வார்த்தைகள் சொல்ல இயலாததை ஓவியத் தூரிகையின் ஒரு கீற்று சொல்லிவிடுகிறது. ஆனால் ஆயிரம் ஓவியக்கீற்றுகள் சொல்ல இயலாததைக்கூட இசையின் ஒரு கூறு (Node) சொல்லிவிடுகிறது''. இந்த சீனப்பழமொழியை அல்டஸ் ஹக்ஸ்லி (Aldus

Huxley) என்ற ஆங்கில நாவலாசிரியர் தம் நாவலொன்றில் கையாண்டுள்ளதை இங்கு குறிப்பிடுவது பொருந்தும்.



## 11.3.4. இலக்கியமும் கூத்தும்

குறிப்பு

கூத்து என்பது நிகழ்கலையில் (Perfoming Arts) ஒரு தகவலை எடுத்துரைப்பதாகும். கூத்து எடுத்துரை ஊடகமாக அமைந்து அது ஓவிய, சிற்ப இசை நிலைகளைத் தாண்டி இவை அனைத்தும் சேர்ந்த, அத்துடன் மெய்ப்பாடும் இணைந்த ஓர் ஆற்றல் மிகுந்த ஊடகமாக அமைகிறது. எனவே, எழுதப்படிக்கத் தெரியாத பாமர மக்களும் இசைஞானம் அற்றவர்களும் ஓவிய, சிற்ப நுணுக்கங்கள் தெரியாதவர்களும் கண்டு, கேட்டு அனுபவிக்கக்கூடிய ஓர் ஊடகமாக கூத்துக்கள் திகழ்கின்றன.

மொழி தோன்றுவதற்கு முன்பு மனிதன் தன்னுடைய எண்ணங்களை ஓவியமாக வரைந்து காட்டினான்: தன்னுடைய உணர்வுகளை ஆடிக்காட்டினான்: ‘‘போலச்’’ செய்தான்! இப்படி மனிதனுடைய ஆதிகலைகளுள் ஒன்றாகக் கூத்து திகழ்கிறது.

கூத்துக்கலைக்கு வலுவான களம் பண்டைத் தமிழகத்தில் இருந்தது. கலைஞர்களுள் ஒரு பிரிவினர் கூத்தர்கள் எனப்பட்டனர். இவர்கள் ஆடல் வல்லவர்கள். இவர்களுள் பெண் பாலர் விறலியர் எனப்பட்டனர். இவர்கள் தம் மெய்யில் விறல் (உணர்ச்சி) தோன்றுமாறு ஆடுவதில் வல்லவர்கள். இவர்களிடம் பயிற்சி பெறுபவர்களைக் ‘‘கல்லா இளைஞர்’’ என்று சிறுபாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. இவர்களை வள்ளல்களிடம் ஆற்றுப்படுத்திப் பாடப்பட்டதுதான் ‘‘மலைபடுகடாம்’’ எனும் கூத்தராற்றுப்படை. வழிபாடுகளுள் பெருந்தெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு என்பதுபோல, கூத்துக்களிலும் மன்றக்கூத்து, மக்கள் கூத்து என்ற இருவகைகள் இருந்திருக்கலாம் என்று கருத வாய்ப்புண்டு. மாதவி ஆடியது மன்றக்கூத்து புறப்பாடல்களில் குறிப்பிடப்படும் கூத்தர் ஆடியது மக்கள் கூத்து. இன்றும் இவ்விருவகை நிலைகள் தொடர்ந்து வருவதை அறியலாம். வடமொழியில் இவை முறையே மார்கம் என்றும், தேசி என்றும் குறிப்பிடப்படுகின்றன.

தமிழில் அவிநாயனார் எழுதிய கூத்தநூல் ஒன்று இருந்தது பற்றி அடியார்க்கு நல்லார் குறிப்பிடுகின்றார். இவை தவிர செயிற்றியம், விளக்கத்தார் கூத்து ஆகிய நூல்களும் இருந்தன. சங்க இலக்கியத்திலும், சிலப்பதிகாரத்திலும் குரவைக்கூத்து பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மகளிர் எழுவர் வட்டமாக நின்று ஆடுவது குரவைக்கூத்து என்பர். குன்றக் குறமகளிர் ஆடுவது குன்றக்குரவை. முல்லை நிலத்தில் ஆய்ச்சியர் ஆடுவது ஆய்ச்சியர்குரவை் இவைதவிர போர்க்களத்தில் வெற்றிபெற்ற மன்னனின் தேர்முன்பு, ஆடுவது முன்தேர்க்குரவை் தேரின் பின் ஆடுவது பின்தேர்க்குரவை. மன்றத்தில் ஆடும் பதினோர் ஆடல்களைப் பற்றிய குறிப்பையும், ஆடலரங்கம் பற்றிய விரிவான தகவல்களையும் சிலப்பதிகாரம் தருகிறது.

**குறிப்பு**

இலக்கியத்தில் மெய்ப்பாடு பற்றிய குறிப்பைத் தொல்காப்பியர் தருகின்றார். வடமொழியில் இதனை பரதர் ''ரஸம்'' (பாவம்) என்று குறிப்பிடுவார். ரஸம்தான் இலக்கியத்தின் உயிர்நாடி என்கிறார் பரதர். எண்வகை மெய்ப்பாடுகள் வாயிலாக இலக்கியமாந்தரின் உணர்வுகள் பாடல்களின் வெளிப்படுகின்றன என்பது தொல்காப்பியர் கருத்து. பாடப்படும் இலக்கியங்களின் வளர்ச்சியாகப் பாடலும் இசையும் கலந்த கீர்த்தனை நாடகங்கள் உருவாயின. கீர்த்தனையில் பாடுபவரின் மெய்ப்பாடுகள் பார்வையாளரிடம் உணர்ச்சியைத் தூண்டுவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இதற்கு எடுத்துக்காட்டாக இராமநாடகக் கீர்த்தனையை அருணாசலக் கவிராயர் அரங்கேற்றியபோது பார்வையாளர்கள் தாங்களும் பாத்திரங்களாகவே மாறித் தம்மை மறந்த நிலையைக் கூறலாம். இதே போன்று அரிச்சந்திரன் நாடகத்தில் லோகிதாசனை மடியில் கிடத்த சந்திரமதி புலம்பும்போது அது தங்களுக்கே நிகழ்ந்ததாகக் கருதி பார்வையாளர்களும் கண்கலங்கி அரற்றுவதுண்டு. சங்க காலத்தின் கையறுநிலைப் பாடல்களும் இதற்கு விதிவிலக்கல்ல.

**''சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே**
**பெரியகள் பெறினே**
**யாம்பாடத் தான்மகிழ்ந்து உண்ணு மன்னே**
**சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே**
**பெருஞ் சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே**
**என்பொடு சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே**
**அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தான்நிற்கு மன்னே''**
**(புற.235)**

எனவரும் அதியமான் இறப்புக்கு வருந்தி ஔவையார் பாடிய கையறுநிலைப்பாடல் அவர் நெஞ்சின் அவலத்தை அப்படியே பிழிந்து தருவதாக உள்ளது.

''எங்களுக்குத் தந்தைபோன்று இருந்தவன் இன்று எங்கு சென்றானோ?'' என்ற பொருள்பட, ''ஆசாகு எந்தை யாண்டுளன் கொல்லோ?'' என்று அவலச்சுவையைப் பிழிந்து தருகிறார் ஔவையார். இப்படிப்பட்ட மெய்ப்பாடுகள் நடித்துக் காட்டப்படும்போது அவை அவையினர் உள்ளத்தில் புதைந்துள்ள துன்ப உணர்வைக் கடல்மடை திறந்த வெள்ளம்போலக் கட்டவிழ்த்து விடுகின்றன. இதைத்தான் அரிஸ்டாடில் ஊயவாயசளளை என்றும், Purgation என்றும் குறிப்பிடுகிறார். இவ்வாறு இலக்கியம் கட்புலன் வாயிலாகக் கருத்தைப் புலப்படுத்தும் ஊடகமாக இருக்கிறது. நடனமோ, கட்புலனுக்கும், செவிப்புலனுக்கும் கருத்தைப் புலப்படுத்துவதோடு இலக்கியத்தின் கதைமாந்தர் பெற்ற உணர்வை வாசகரும் பார்வையாளரும் பெற்று அனுபவிக்க வைக்கின்ற மெய்சார்ந்த ஊடகமாகத் திகழ்கிறது. இதுவே

பிற்காலத்தில் திரைப்பட ஊடகமாக வளர்ச்சிபெற்று சமுதாயத்தின் போக்கையே திசை திருப்புகின்ற பேராற்றல் பெற்ற ஊடகமாகத் ‘‘தனியாட்சி’’ செலுத்திவருகிறது.



## 11.4. மேலைநாடுகளில் கலை, இலக்கியத் தொடர்புகள்



மேலைநாடுகளில் கலைக்கும் இலக்கியத்திற்கும் இருந்த தொடர்பும் பாதிப்பும் மிக அதிகம். அந்நாட்டு இலக்கிய இயக்கங்களின் போக்கை நிர்ணயிக்கின்ற காரணிகளாக ஓவிய, சிற்பப் புலப்பாட்டுச் சிந்தனைகள் திகழ்ந்தன. இலக்கிய இயக்கங்கள் வீறு கொள்வதற்கு ஐரோப்பிய நாட்டு ஓவிய, சிற்பக்கலைகளில் காணப்பட்ட புலப்பாட்டுச் சிந்தனைகளே அடிப்படைகளாயின.

ஐரோப்பாவில் நிலவிய நிச்சயமற்ற வாழ்க்கைச் சூழல், எப்போதும் சூழ்ந்திருந்த போர் மேகம், மரபுகளை அடித்து நொறுக்க வேண்டும் என்றிருந்த வேகம் இவையனைத்தும் ஓவியத்தில் பிரதிபலிக்கின்றன. ஓவியத்தில் இத்தகுப் புலப்பாட்டு முறையைத் தொடங்கி வைத்தவர். பிகாசோ (picasso) ஆவார். இருண்மை ஓவிய முறையை (Abstract Art) கேண்டிஸ்கி (Kandisky) என்பார் அறிமுகம் செய்தார். தொடர்ந்து கலைத்துறைகளில் சர்ரிலிஸ்டுகள், எக்ஸ்பிரஷனிஸ்டுகள், ஃபுயூச்சரிஸ்டுகள் ஆகியோர் உருவாகத் தொடங்கினர். 1915களுக்குள்ளாக இதன் செல்வாக்கு ஐரோப்பாக்கண்டம் முழுவதும் பரவியது. 20 ஆம் நூற்றாண்டு இசையின் மொழியினை ஸ்ட்ராவின்ஸ்கி (Stravinsky) என்பார் உருவாக்கினார் என்பர்.

இந்தக் காலகட்டத்தில்தான் அன்டன் செக்காவ் (1904), ஸ்ட்ரின் பெர்க் (1912), கா.ஃப்கா, யஹர்மன் ஹைஸ், டி.எச்.லாரன்ஸ், டபிள்யூ.பி.ஈட்ஸ், எஸ்ராபவுண்ட், ஜேம்ஸ் ஜாய்ஸ் போன்ற சோதனை முறைப் படைப்பாளர்கள் தங்கள் படைப்புகளால் இலக்கிய உலகத்தை வியப்பில் ஆழ்த்தினர். இசை, சிற்பம், ஓவியம் ஆகியவற்றில் கலைப் படைப்பாளர்கள் செய்துபார்த்த சோதனைகளின் தாக்கம் இவர்கள் படைப்புகளிலும் படித்தது. உள்ளத்தைப் பிரதிபலிப்பதற்கு எதிராக ஓவியங்கள் தீட்டப்பட்டன. இது Anti –Representationalism என்று அழைக்கப்பட்டது. தொடர்பற்ற இராகங்களின் தொகுப்பாக இசை மாறியது. இது யுவழளைஅ என்று அழைக்கப்பட்டது.

இதேபோன்று கவிதையில் கவிதைகளின் கட்டுமானங்கள் உடைக்கப்பட்டு ‘‘கட்டற்ற கவிதை’’ உருவானது. இது Verse-libre என அழைக்கப்பட்டது. இவற்றின் ஒட்டுமொத்த அறை கூவலாக ‘‘எந்தப் படைப்பாளியும் உண்மை என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளவில்லை’’ (No artist tolerates reality) என்ற நீட்சேயின் கூற்று அமைந்தது. ஆக, அக்காலத்து வாழ்க்கையின் ஒழுங்கற்ற, நிச்சயமற்ற, உண்மையற்ற வாழ்க்கையைக் கலை, இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன.

ஹாப்மன் (E.T.A.Hoffman) என்பவர் அதியற்புத கற்பனாவாதக் கவிதைகள் எழுதுவதில் புகழ்பெற்றவர். இந்தத் திறமை இவருக்குள்ள இசைஞானத்தால் வந்தது என்பர். இசைக் கலைஞராகவும், இசைக்குழுவை நடத்துநராகவும், இசைத் திறனாய்வாளராகவும் விளங்கிய இவரது கதைகளில் இசை முக்கியப் பங்கு வகித்தது. இது சொற்களின் இசை (Verbal Music) எனப்பட்டது. தமிழில் தி.ஜானகிராமனின் மோகமுள் நாவலில் இசையின் பங்கு பெரிது. இசையையும் இலக்கியத்தையும் இணைத்து 1968இல் ஸ்டீவன் (Steven Scher) எழுதிய Verbal Music in German Literature என்ற நூல் குறிப்பிடத்தக்கதாகும்.

இலக்கியத்தில் ஓவியத்தின் தாக்கம் என்பதைப் பொறுத்த வரையில் 1887இல் ஜெர்மானிய அறிஞர் கோஷ் (Max Koch) என்பார் வெளியிட்ட கருத்துக்கள் கலைஞர்களிடையே புதிய விழிப்பைத் தந்தன. நாவலாசிரியர் ஃபாஸ்டின் (Faust) சிந்தனைகளுக்கு இத்தாலிய மறுமலர்ச்சிக்கால ஓவியங்கள் காரணமாயின என்றார் கோஷ். இலக்கியமும் ஓவியமும் ஒன்றையொன்று எவ்வாறு வளப்படுத்திக்கொள்ள முடியும் என்பதை கோஷ் சான்றுகளுடன் நிறுவினார் என்பர். ரோகோகோ (Rococo) 1960இல் எழுதிய Cubism in Art and Literature என்ற நூல் இலக்கிய இயக்கங்கள் உருவாவதற்குக் கலைகளின் பங்களிப்பினை பற்றிப் பேசுவது.

20ஆம் நூற்றாண்டின் புகழ்மிகு இசைமேதை பித்தோவன் இலக்கியத்தின்மீது கொண்டிருந்த தாகமும், நாவலாசிரியர் ஹாஃப் மன்ஸ்தல் (Hofmansthal) இசையின் மீது கொண்டிருந்த மோகமும் ஒப்பிலக்கிய ஆய்வாளருக்குப் பெரு விருந்தாகும். வில்லியம் பிளேக் நாவல்களும், தாக்கரேயின் சிறுகதைகளும், ரோஸட்டியின் கவிதைகளும் ஓவியத்தனமானவை (Pictoral) என்று ஆங்கில இலக்கியத் திறனாய்வாளர்கள் கருதுவர்.

இவ்வாறு இசையாயினும், ஓவியமாயினும், சிற்பமாயினும் அது இலக்கியத்தின் மீதும், இலக்கியங்கள் பிற கலைகளின் மீதும் ஏற்படுத்தும் பாதிப்புகள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டுள்ளன. தொன்மைக்காலம் முதல் இன்றைய காலம் வரை இதற்கான சான்றுகள் இலக்கியங்களிலும் கலைகளிலும் படிந்துள்ளன. இந்நிலையில் இலக்கியம் கலையாகவும், கலைகள் இலக்கியமாகவும் தங்கள் இணைநிலையை நிறுவி வருகின்றன.

## 11.5. வாய்மொழி இலக்கியமும் வரிவடிவ இலக்கியமும்

வாய்மொழி இலக்கியம் உலகறிந்ததாக இருக்கும். இதனால் சிறந்த உலக இலக்கியங்கள் எல்லாம் வாய்மொழி அடிப்படையுடையனவாயிருக்க காண்கிறோம். நாட்டுப்புற இலக்கியத்தின் இயல்புகளை நாட்டுப்புற மக்களிடத்தில் கல்லாதவர்களிடத்திலும் குழந்தைகளிடத்திலும் காணலாம் என்பர். வாய்மொழியாக இருந்தவை

பல படிப்படியாக இலக்கிய வடிவம் பெற்றுவிட்டன. ‘‘வாய்மொழி இலக்கியம் மக்களிடையே வழங்கி வழங்கிக் குறிப்பிட்ட தொடர்த்தொகுதியாக, சிந்தனைத் தொகுதியாக, அடிக்கருத்து, பழங்கதைகளின் தொகுதியாகச் செறிவு பெறுகிறது. இவ்வாறு இது வழி வழியாக வழங்கப்பெற்று வருகிறது.’’ என்று ஆல்பர்ட்டு ஜெரார்டு கூறுகிறார்.

குறிப்பு

வாய்மொழி இலக்கியம் இயற்கையானது உள்ளவாறு கூறும் தன்மைமிக்கது. எழுத்துமொழி இலக்கியம் செயற்கையானது திரிபுபடக் கூறுதலும் அடங்கியது. வாய்மொழி இலக்கியம் நிலையற்றது அன்று. அதுதோன்றிய காலத்தில் மாறுதல் அதிகமாகவும் வரவர மாறுதல் குறைவாகவும் இருக்கும். ஓர் இலக்கியத்தின் நிலைபேறு, அதில் நிகழும் மாற்றங்களை ஒட்டியே நிகழ்கிறது என்பர். ‘‘மாற்றங்கள் மட்டுமே நிலைபேறாகிய உண்மை என நாமும் ஒப்புக்கொள்ளத் தொடங்கியிருக்கிறோம்.’’ என்பார் ஆல்பர்ட்டுஜெரார்டு.

வாய்மொழி இலக்கியம் என்பதும் யாரோ ஒருவரின் படைப்புத்தான். ஆயினும் ஊரும் பேரும் அறியப்படாமல் போகின்றது. குறிப்பிட்ட ஒருவரை ஆசிரியராகக் கொள்ள முடியாது. ஏனெனில் பலராலும் வழங்கப்பட்டு ஒரு வடிவம் பெறுகிறது. நாட்டுப் பாடலில் இடம்பெறும் ‘காதல்’ ஊர்பேர் குறிப்பிடாத பொதுச் செய்தியாகவே இருக்கும். அகப்பாடலில் ‘‘சுட்டி ஒருவர்ப் பெயர் கூறப்படாத தன்மை’’ நாட்டுப் பாடல்களின் வழிப்பட்டது என்பர், டாக்டர் மு.வ.

ஹோமரின் காப்பியங்கள் வாய்மொழி இலக்கியமாக இருந்து வடிவம் பெற்றவை என்பர். சிலப்பதிகாரம் இதுபோல வாய்மொழியாக வழங்கிய பகுதிகள் சிலவற்றைக் கொண்டிருக்கலாம் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். வடமொழி இராமாயண, மகாபாரதமும் வாய்மொழி வழிப்பட்டனவே என்பர் ஒரு சாரார்.

சிலப்பதிகாரத்தில் பல வரிப்பாடல்கள் வாய்மொழியை நினைவூட்டுபவை. கலித்தொகையில் வரும் குரவைப் பாட்டும் வள்ளைப்பாட்டும் நாட்டுப்பாடல்களின் இலக்கிய வடிவங்கள் எனலாம்.

**‘‘அகவினம் பாடுவாம் தோழி!...**

**வகைசால் உலக்கை வயின் வயின் ஒச்சி**

**பகைஇல் நோய்செய்தான் பயமலை ஏத்தி,**

**அகவினம் பாடுவாம் நாம்’’ (கலி:40**

நெற்குத்தும்போது பாடும் வள்ளைப்பாட்டு இலக்கிய வடிவம் பெற்றிருப்பதை நாம் இவற்றால் அறிய முடிகிறது. கலிப்பாவிலும் பரிபாடலிலும் இடையிடையே உரையாடல்கள் பல காணப்படுகின்றன. எனவே இவை குழுப்பாடல்களாக வழங்கின என்பது தெளிவு. அன்று பாணன், பொருநன், விறலி முதலியோர் குழுக்களாகப் பல்வேறு அரசவைகட்கும் சென்று ஆடிப்பாடி மன்னர்களையும் மக்களையும்

மகிழ்வித்தனர். புல வாத்தியங்களை முழக்கி, அவற்றிற்கியைப் பாடி ஆடினர். இவ்வாய்மொழி இலக்கியத்தின் வழிப்பட்டதே திணை இலக்கியம் என்பதற்கு ஐயமில்லை.

மாணிக்கவாசகர் திருச்சாழல், திருத்தெள்ளேணம், திருத்தோள் நோக்கம் என்று பல இலக்கிய வடிவங்களை நாட்டுப்புறப் பாடல்களிலிருந்து தந்துள்ளார். சுப்பிரமணியபாரதியார் பள்ளுப்பாட்டு, கிளிக்கண்ணி, நொண்டிச்சிந்து, கும்மி முதலியவற்றிற்கு இலக்கிய வடிவம் தந்துள்ளார். இங்ஙனம் இந்நெறி இன்று வரை வளர்ச்சி பெற்று வருகிறது.

மேனாட்டில் பதினெட்டாம் நூற்றாண்டு வரை வாய்மொழி இலக்கியம் சிறப்பிடம் பெறவில்லை. 1725-இல் விகோ (Vico)வும், அந்நூற்றாண்டின் இறுதியில் ஹெர்டரும் (Herder) பழங்கதைகள் புராணக்கதைகள், பாட்டுக்கள் என்ற ஒரு நாட்டின் உயிரோட்டமான நாடோடி இலக்கியத்திற்கு சிறப்பிடம் நல்கினர். ஹோமரின் காப்பியங்கள் முதற்கொண்டு நாட்டுப்பாடல் வழிப்பட்டனவே என்றும், பல புகழ்பெற்ற இலக்கியங்கள் இங்ஙனம் வாய்மொழி வழிப்பட்டனவே என்றும் அவற்றிற்கு இறுதியில் இலக்கிய வடிவம் தந்தவரே கவிஞர் என்றும் ஆராயப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரிம் சகோதரர்களும் (Grimm brothers) தம்முடைய ‘கட்டுக்கதை’களில் (Fairy tales) உலகெங்கும் வழங்கிய கதைகளைத் தொகுத்து, அவை நாடுவிட்டு நாடு பரவியுள்ளமையை மெய்ப்பித்து, அவற்றின் சிறப்புக்களை எடுத்துக்காட்டினர்.

## 11.6. இலக்கியமும் வரலாறும்

வரலாற்றியல் இலக்கியக் கண்ணோட்டம் 18-ஆம் நூற்றாண்டில் செல்வாக்குடன் விளங்கியது. அதற்குமுன் 17-ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியல் ∴பிரான்சி∴ பேகன், இலக்கியத்தைக் ‘காலத்தின் ஆன்மா’ (Spirit of the age) என்று சொல்லியிருப்பார். 18-இல் செல்வாக்குப் பெற்றிருந்த இக்கண்ணோட்டம் 19-ஆம் நூற்றாண்டில் ‘கலை, கலைக்காகவே’ எனும் கொள்கை வலுப்பெற்ற போது செல்வாக்கிழந்து. இம்மானுவேல் காண்ட், ஏ.சி.பிராட்லி, டபிள்யு.பி.கெர் முதலியவர்கள், வரலாற்றுப் பார்வைக்கு எதிராகக் குரல் கொடுத்தார்கள். ஆனால் பல்துறை ஆராய்ச்சி நோக்கும், மற்றும் பொதுவாக இலக்கியத் திறனாய்வும் ஒப்பிலக்கியமும் வளர்ச்சி பெற்ற இந்நூற்றாண்டில் இவ்வணுகு முறை மீண்டும் புத்துணர்வு பெற்றது. இன்று, இலக்கியவுலகில் தவிர்க்க முடியாத ஓர் அணுகுமுறையாக இவ் அணுகுமுறை விளங்குகிறது.

## 11.6.1. வரலாறும் இலக்கியமும்

குறிப்பு

அறிஞர்கள், திறனாய்வாளர்கள் மத்தியில் நடைமுறையில் இருப்பவற்றைச் சாராம்சமாகக் கொண்டு, வரலாற்றியல் திறனாய்வின் **'ஐ, இன், இல்'** எனும் முப்பெரும் பகுப்புகளாக வகைப்படுத்திக் காணலாம்.

அவை

1. இலக்கியத்**தை** வரலாற்றின் அடிப்படையில் அல்லது அதன் பின்னணியில் நோக்குதல் **(ஐ)**
2. இலக்கியத்**தின்** வரலாறு காணுதல் **(இன்)**
3. இலக்கியத்**தில்** வரலாறு கண்டறிதல், அதாவது, இலக்கியத்தை வரலாற்று மூலமாகக் கொள்ளுதல் **(இல்)**

ஆங்கில உலகில், இலக்கியத்தின் வரலாற்றை முதன் முதலாக எழுதியவராகக் கருதப்படுகின்றவர், தாமஸ் வார்ட்டன் (Thomas Warton). அதற்கு முன்னும் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டனவெனினும், அவை முழுமையாகவோ, சரியான வரலாற்றுக் கண்ணோட்டத்துடனோ எழுதப்படவில்லை. வார்ட்டன் (நான்கு பகுதிகளாக) எழுதிய 'ஆங்கிலக் கவிதை வரலாறு' எனும் நூலே (1774-81) இந்த வகையில் முதலாவதாகக் கருதப்படுகிறது. இத்தகைய முயற்சிகளின் வரலாறு பற்றி ரெனிவெல்லக், 'ஆங்கில இலக்கிய வரலாற்றின் எழுச்சி' (The Rise of English Liteary History - 1941) எனும் தனது நூலில் பல்வேறு சான்றுகளுடன் விளக்கிக் காட்டியுள்ளார்.

இதற்கு முன், (இலக்கிய) வரலாறு என்பது வாழ்க்கை வரலாறுகளின் தொகுப்பாகவே மேனாடுகளில் பல காலம் கருதப்பட்டு வந்தது. 18-இல் தான் வரலாற்றியல் பற்றிய கண்ணோட்டம் முறைப்பட்டது. தமிழில் இலக்கிய வரலாறு காண்பதற்குரிய முயற்சி, 19-இல் தொடங்கியிருக்கிறது என்று சொல்ல வேண்டும். (அதற்கு முன் சில புலவர்களைப் பற்றிச் சில கதைகள் உண்டு அவை, வேறு), ஈழத்துத் தமிழ் மண்ணில், ஆங்கிலக் கல்விச் சூழலில், இது தொடங்கியது. சைமன்காசிக் செட்டி (Simom Casie Chetty) என்பவரின் ஆங்கில நூலான “ வுாந வுயஅடை ீடரவயசஉா”இ1859-இல் வெளியாயிற்று. அகர வரிசையில் 196 புலவர்களின் வாழ்க்கை – பணி – பற்றிச் சுருக்கமாகக் கூறுகிறது, இந்நூல். இது எழுந்த காலத்தில் சங்க இலக்கியம் பதிப்பிக்கப் பெறவில்லை. சங்க இலக்கியப் பாடல்கள் பற்றியோ, 'வரலாற்றுச் சான்றுகள் பற்றியோ தெரியாதநிலையில், ஆசிரியர் மிகப்பெரும் சிரமத்திற்கு ஆளாகியிருப்பது தெரிகிறது. சில புராணக்கதைகளும், திருவள்ளுவ மாலையில் காணப்படும் பெயர்களும், கபிலரகவலும்தான் இவருக்குத் துணை. இவரை அப்படியே பின்பற்றி, ஆனால் மேலும் பட்டியலைப் பெருக்கி (214) – மற்றோர் ஈழத்தமிழரான

அ.சதாசிவம்பிள்ளை (J.R.Arnold) ‘பாவலர் சரித்திர தீபிகம்’ என்றொரு நூலை (தமிழில்) 1866- இல் வெளியிட்டார்.

தொடக்க காலத்திய இத்தகைய நூல்களில் புராண மரபு, தலைதூக்கி நிற்கிறது. காட்டாக ஔவையாரைப் பற்றிச் சற்று விரிவாகவே பேசும் இந்நூல்களில், இவர், ஒரு சங்கப் புலவர் என்ற கருத்தோட்டம் கிடையாது. மேலும், அதிகமான காலத்து ஔவையாரிலிருந்து சித்தர் மரபில், யோகநெறி போற்றி ‘ஔவைக்குறள்’ எழுதிய பிற்காலத்திய ஔவையார் வரை, தமிழ் இலக்கியத்தில் நிறைய ஔவைகள் உண்டு. ஆனால், மேற்கூறிய இரு நூல்களும் (இதன்பின் தண்டபாணி சுவாமிகளின் ‘புலவர் புராணம்’:1909) எழுந்த காலப்பகுதிகளில் சரியான தகவல்களோ வரலாற்றுணர்வோ கிடைத்திருக்க வாய்ப்பில்லை. எனவே, ஔவையார் பற்றிக் கூற, புராணக்கதை மரபுகளை நம்பியிருக்க வேண்டிய தேவைகள் இவர்களுக்கு ஏற்பட்டன.

எவ்வாறாயினும், தமிழில் இலக்கிய வரலாறு எழுதுதற்குரிய மனப்பான்மைக்கு முன்னோடி, சைமன் காசிக் செட்டிதான். நூலுக்கு உரிய இவரின் திட்டமும் ஆர்வமும் அழுத்தமானவை. ரோமானிய வரலாற்று நாயகர்களின் சுவாரசியமான சரிதைகளை ‘வாழ்க்கைகள்’ (Lives) என்ற பெயரில், புளுட்டார்ச் (Plutarch) எழுதினான். இந்த ‘வாழ்க்கைகள்’ தான், பின்னால் ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் பலவற்றிற்குக் கதைக் கருத்துக்களைத் தந்துள்ளன. இந்தப் புளுட்டார்க்கின் மேலுள்ள ஈடுபாட்டினால் போலும், இலக்கிய வரலாற்றைக் கவிஞர்கள் வாழ்க்கைகளாகக் கண்ட ஜான் டிரைடன் (துழாெ னுசலனநஇெ1683) இத்தகைய தனது நூலுக்கு ‘புளுட்டார்க்கின் வாழ்க்கைகள’ (ீடரவழசஉா’ள டுைநௌ) என்றே பெயரிட்டார். மேலும், புலவர்களின் வாழ்க்கைகளையே இலக்கிய வரலாறாகக் காணுகிற போக்கு மேனாட்டில் பல காலம் இருந்த ஒன்றுதான். சாமுவேல் ஜான்சனின் (னுச.துழாளெழெ) பிரசித்தி பெற்ற நூலாகிய ‘கவிஞர்களின் வாழ்க்கைகள்’ (Lives of the poets, 1779) இத்தகையதுதான். இவற்றை அறிந்து, இவற்றைப் பின்பற்றித்தான் சைமன் காசிச் செட்டி தனது நூலைத் திட்டமிட்டிருக்கிறார்.

தமிழில், இலக்கிய வரலாற்றை, அதன் சரியான பொருளில், விவாத விளக்கங்களுடன் எழுதியவர்களுள் முன்னோடி, பேராசிரியர் பெ.சுந்தரம்பிள்ளைதான் என்று சொல்ல வேண்டும். 1891-இல் சென்னை கிறித்துவக் கல்லூரி மலரில், பத்துப் பாட்டுக்கள் (The Ten Tamil Idyls) பற்றி அவர் எழுதிய விளக்கமான ஆங்கிலக் கட்டுரை, அக்காலத்திலேயே பலருடைய கவனத்தையும் கவர்ந்தது. இதே காலப்பகுதியிலேயே (கிறித்துவக் கல்லூரி மலரிலேயே) அவர் திருஞானசம்பந்தர் பற்றியும், ஆங்கிலத்தில் விளக்கமான கட்டுரை ஒன்று எழுதினார். ‘தமிழ் இலக்கிய வரலாற்றில் சில மைல்கற்கள் அல்லது திருஞானசம்பந்தரின் காலம்’ (Some Milestone in the History of Tamil

Literature or the Age of Tiru Gnanasambanda) எனும் விரிந்த நோக்கத்துடனான தலைப்புடன் கூடியது இக்கட்டுரை. கால ஆராய்ச்சிக்கு வித்திட்ட இவ்வாராய்ச்சிகள், இவற்றின் மேன்மை கருதி 1909-இல் 'தமிழியல் தொன்மை' (The Tamilian Antiquary) எனும் அக்காலத்திய மிகச் சிறந்த ஆய்வு இதழில் மறுபிரசுரம் செய்யப்பட்டன. இவற்றின் பின்னர், குறிப்பிடத்தக்கவை, இக்காலப் பகுதியில் தமிழில் வெளிவந்த மாணிக்கவாசகர் காலம் குறித்து கே.ஜி.சேஷ ஐயர் எழுதிய விளக்கமான ஆய்வும், 'தமிழ் இலக்கியத்தில் செவ்வியல் காலம்' (The Augustan Age of Tamil Literature) குறித்து என்.கிருஷ்ணசாமி ஐயங்கார் எழுதியதும், பத்துப்பாட்டுக் காலம் குறித்து டி.ஏ.ராமலிங்கம் செட்டியார் எழுதியதும் தமிழகத்துக் கவிஞர்கள் (The poets of the Tamil Lands) குறித்து ஜி.யு.போப் எழுதியதும் குறிப்பிடத்தக்கவை. தொடர்ந்து, எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை, முதல் முதலாக நூல் வடிவில் இலக்கிய வரலாறு எழுதினார். அதன் பின்னர், கா.சு.பிள்ளையின் இலக்கிய வரலாறு இரு தொகுதிகளாக வெளிவந்தது. அடுத்து, எஸ்.வையாபுரிப்பிள்ளை, தெ.பொ.மீ.,மயிலை சீனி.வேங்கடசாமி, மு.வ., அ.மு.பரமசிவனாந்தம், அ.சீனிவாசராகவன், க.கைலாசபதி, ஆ.வேலுப்பிள்ளை, ப.அருணாசலம், மு.அருணாசலம், வல்லிக்கண்ணன், சிட்டி, சிவபாதசுந்தரம், கா.சிவத்தம்பி முதலிய பலர் இலக்கிய வரலாறு எழுதினார்கள். இவர்களுடைய கால எல்லைகளும் அணுகுமுறைகளும் பலவகையின. இவற்றில் பல, இலக்கியங்களைப் பல வகையினங்களாகக் கொண்டு எழுதப்பட்டவை. மேலும், செக் நாட்டுத் தமிழறிஞர் டாக்டர் கமில் சுவலபில் எழுதிய 'A History of Tamil Literature' பலவகைகளில், தனிச்சிறப்புக்கள் கொண்ட ஒரு நூலாகும்.

இலக்கியத்திற்கு வரலாறு காண்பதில் அதாவது, இலக்கிய வரலாறு எழுதுவதில், நடைமுறையில் ஐந்து கோணங்கள் அல்லது வகைகள் இருப்பதை அவதானிக்கலாம். அவை:

1. நூற்றாண்டுக்கால வரிசை
2. அரச மரபு வரிசை
3. இலக்கிய வகைகளின் வழி
4. இலக்கிய இயக்கங்களின் வழி
5. கருத்து நிலைகளின் வழி

தமிழில் இலக்கிய வரலாற்று நூல்களில் இந்தப் போக்குகளைக் கவனிக்க முடியும் என்பது போகவும், இவற்றைப் பொதுவாகவும் தனித்தனிப் போக்குகளாகவும் எடுத்துக்கொண்டு வரலாற்று முறையியல்களை (Literary Historiagraphy) ஆராய்வதும் கூடும்.

ஒப்பிலக்கியம்

குறிப்பு

## 11.7. இலக்கியத்தில் வரலாறு காண்பது

வரலாற்றியல் அணுகுமுறையில், குறிப்பிட்ட 'இலக்கியத்தில் வரலாறு காண்பது' என்பது இலக்கியத்தை வரலாற்று மூலமாகக் (Sources of History) கொள்ளுதலாகும். இலக்கியங்களை வரலாற்றுக்குரிய சான்று மூலங்களாகக் கொள்வதைச் சில வரலாற்றுப் பேராசிரியர்கள் ஏற்றுக்கொள்வதில்லை. எனினும், குறிப்பாக அகழ்வாராய்ச்சிக் கண்டுபிடிப்புக்கள், கல்வெட்டுக்கள், செப்பேடுகள், நாணயங்கள் முதலிய முதன்மைச் சான்றுகள் கிடைக்காதபோதும், அல்லது சரிவரக் கிடைக்காத போதும் இவர்களுக்கே கூட இலக்கியங்களின் துணை பெரிதும் தேவைப்படுகிறது. மேலும் ஏனைய சான்றுகள் கூறும் செய்திகள், இலக்கியங்களில் விளக்கம் பெறுதலும் உண்டு. தவிரவும், தனித்தனியே அறிவுத் துறைகள் விதந்து கிளைந்து வளராத காலத்தில் இலக்கியமே, அக்காலத்திய அறிவியலிலிருந்து, மருத்துவம், சோதிடம் வரை அறிவுத் துறைகள் பலவற்றிற்கும் கொள்கலனாக இருந்தது.

'ஒரு நாட்டின் கவிதை வரலாறு என்பது, அந்த நாட்டின் அரசியல் விஞ்ஞான, சமய வரலாற்றின் சாராம்சமேயாகும்' என்பார் கார்லைல். 'இலக்கியம் என்பது காலங்கள் தோறும் காட்சி விளக்கக் குரல்களாகக் கேட்கும் ஒரு கூட்டுக் குரல் ஒலியே' என்பார், ரெனிவெல்லக். சார்லஸ் டிக்கன்ஸ், தாக்கரே, சார்லத் பிராந்தே, எமில் பிராந்தே முதலிய 19-ஆம் நூற்றாண்டு ஆங்கில நடப்பியல் நாவலாசிரியர்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'அவர்களின் எழுத்துக்கள், தொழில்முறை அரசியல்வாதிகள், பத்திரிக்கையாளர்கள், அறநெறியாளர்கள் ஆகியவர்களின் ஒருங்குசேர்ந்த குரல்களை விடவும் அக்காலத்திய அரசியல், சமுதாய உண்மைகளை அதிகமாகவே ஒலிக்கின்றன' என்று கார்ல் மார்க்ஸ் கூறுகின்றார். இதுபோல், பிரடரிக் ஏங்கல்ஸ், 'பிரெஞ்சு நாவலாசிரியான பால்.ஃ.ஜாக்கின் எழுத்துக்கள், (Comedia Humaine) தொழில்முறை வரலாற்றறிஞர்கள், பொருளாதாரவாதிகள், புள்ளி விவரக்காரர்கள் ஆகியவர்களை விடவும் உண்மையாகவும் அற்புதமாகவும் பிரெஞ்சு வரலாற்றைத் தருகின்றன என்று கூறுகின்றார். இந்தக் கூற்றுக்கள் இலக்கியங்களை வெறுமனே புகழ்வதற்காகக் கூறப்பட்டன அல்ல. ஆனால் அரசுத் தரப்பிலிருந்து வெளியாகும் கல்வெட்டுக்களையும், அரசர்களைப் புகழும் மெய்க்கீர்த்திகளையும், அரசு ஆணைச் செப்பேடுகளையும் அரசின் பல்வேறு துறைகளைச் சேர்ந்த பதிவிதழ்களையும் விடவும், மக்களின் உணர்வுகளையும் வாழ்வு அனுபவங்களையும் இலக்கியம் அதிகமாகவே சொல்லுகிறது என்பதில் என்ன சந்தேகம்? ஆனால், இலக்கியம் ஒரு கலை வடிவம் ஆவணம் அல்ல. எனவே, இதனைச் சான்றாகக் கொள்ளும்போது, சில எச்சரிக்கைகள் அல்லது நிபந்தனைகள் தேவைப்படுகின்றன.

'குடியேற்ற ஆதிக்கத்திலிருந்து இந்தியா விடுதலை பெறத் துடித்தபோது தமிழ்நாட்டில், அன்றைய மனவுணர்வுகளின் பின்னணியில்

*Self-Instructional Material*

(மூன்றாம் உலகநாடுகள் பலவற்றில காணப்பட்டது போலவே) தமது வரலாறு பற்றி அறிந்து கொள்ளுதற்குரிய ஆர்வமும் முயற்சியும், 19-ஆம் மற்றும் 20-ஆம் நூற்றாண்டுச் சந்திப்பில் காணத் தொடங்கின. அறிஞர்கள் வெ.கனகசபை, பேராசிரியர் பெ.சுந்தரம்பிள்ளை, பி.டி.சீனிவாச ஐயங்கார், எம்.சீனிவாச ஐயங்கார், தி.பொன்னம்பலம்பிள்ளை, கே.என்.சிவராஜபிள்ளை, அயோத்திதாசர், ஆபிரகாம் பாண்டிதர், எம்.எஸ்.பூரணலிங்கம்பிள்ளை, எஸ்.கிருஷ்ணசாமி ஐயங்கார், கே.ஜி.சேஷையர், மு.இராகவையங்கார், வி.ஆர்.ஆர்.தீட்சிகர், மறைமலையடிகள் - முதலியவர்கள் இவர்களுள் குறிப்பிட்டத்தக்கவர்கள்.

கிரேக்கத்தின் பழங்கால வரலாறு எழுதியவர்களுக்கு அந்நாட்டின் பழமரபுக் கதைகளும் காவியங்களும் நாடகங்களும் முக்கியமான சான்றுகளாக விளங்கின. வடஇந்தியாவின் தொன்மை வரலாறு எழுதியவர்களுக்கு வடமொழி இதிசாகங்களும் வேதங்களுமே முக்கிய சான்றுகளாக விளங்கின. இங்குத் தமிழகத்தின் தொன்மை வரலாறு கண்டவர்களுக்குச் சங்க இலக்கியங்களே அடிப்படைச் சான்றுகளாக அமைகின்றன. குறிப்பாக, வரலாற்றியல் அறிவு அதிகம் கைவரப் பெறாத காலத்தில் - ஏனைய வரலாற்றுச் சான்றுகள் அதிகம் கண்டறியப்பட்டும் அவை பலருக்கு எட்டியிருக்காத காலத்தில் - வரலாறு எழுதிய முன்னவர்களுக்கு இலக்கியங்களே கொளுகொம்புகளாக இருந்திருக்கின்றன. இதனால் பல சிரமங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

அறிஞர் வெ.கனகசபை, முதலில் ‘மதராஸ் ரெவியு’ வில் 1895-1901 காலப் பகுதியில் தொடராக எழுதி, பின்னர் 1904-இல் முழுநூலாக வெளியிட்ட ‘1800- ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்கள்’ (The Tamils Eighteen Hundred Years Ago) எனும் ஆங்கில நூலில் (இலக்கியத்தை ஆதாரமாகக் கொண்டெழுந்த தமிழக வரலாறு பற்றிய நூல்களில் இதுவே முன்னோடி), அப்போது சில ஆண்டுகளுக்கு முன்னர்தான் அச்சேறியிருந்த சங்க இலக்கியப் பாடல்களின் வழித், தமிழர்களின் தொன்மை வரலாற்றை எழுதிகிறார். அவருடைய காலத்தில் 1800 ஆண்டுகளுக்கு முன்னர் என்றால், இக்காலத்தில், 1900 ஆண்டுகளுக்கு முன் என்று பொருள். அந்நூலில் அவர், கி.பி.50-150 என்ற ஒரு நூற்றாண்டுக் கால (குறுகிய) பகுதிக்குள் மிக நீண்ட வரலாற்றுக் காலத் தமிழர்களின் முழுப் பழமையையும் அடக்கிவிடுகிறார். மேலும், ஐங்குறுநூறிலிருந்து, சிலம்பு, மேகலை, திருக்குறள், இன்னாநாற்பது, திருமுருகாற்றுப்படை வரை நீண்ட இலக்கியப் பரப்பை அந்தக் குறுகிய காலப் பகுதியின் எல்லைக்குள் அடக்கி விடுகிறார் - இவை, இந்நூலின் அடிப்டையான பலவீனங்கள். மேலும் அவருக்குக் கிடைத்த ஏனைய வரலாற்றுக் குறிப்புக்களும் மிகக் குறைவு. மெக்கிரிண்டில் (Mecrintle) என்பார் விளக்கிப் பதிப்பித்த, தாலமி, பெரிப்ளுஸ், மெகஸ்தனீஸ் வரலாற்றுக் குறிப்புக்கள், இவற்றில் முக்கியமானவை. அக்காலத்தில் வெளிவந்த ‘இந்தியப் பழைமைவியல்’ (Indian Antiquary) மற்றும் லோகன் என்பவரின் ‘மலபார் மலர்’ (Malabar Manual) ஆகிய ஆய்வுப் பத்திரிக்கைகளின் கட்டுரைகளும் இவருக்கு உதவின. பிற, மிகச்

சிலவே. இந்த எல்லைக்குட்பட்டு எழுதும்போது, சிரமங்கள் இயல்பே. ஆயினும் தமிழர் சமுதாயத்தை விரிவான முறையிலும், நல்ல திட்டத்துடனும் எழுதியுள்ள பான்மை மிகவும் கவனிக்கத்தக்கது. அக்காலத்து இலக்கியங்கள் கூறும் சமுதாயச் செய்திகளை முதன்முதலாகச் சாராம்சமாகத் தொகுத்துத் தந்த பெருமை அந்த நூலுக்கு உண்டு.

குறிப்பு

இவரையடுத்து வந்த அறிஞர்களுக்கு இவர் பட்ட சிரமங்கள் அதிகம் இல்லை. கல்வெட்டுக்கள், புதைபொருள் ஆராய்ச்சிகள், ஏனைய பிற வரலாற்றிஞர் குறிப்புக்கள் என்று பலவும் கிடைத்த நிலையில் - இவர்களுடைய வரலாறுகள், சற்று வலுவான தளத்தில் அமைந்துள்ளன. உதாரணமாக முன்னர்க் குறிப்பிட்ட கே.என்.சிவராஜபிள்ளையின் ‘பழந்தமிழரின் மரபுவழி’ எனும் நூல். இது, பதிற்றுப்பத்து, புறநானூறு முதலிய சங்கப்பாடல்களை மட்டுமல்லாமல், அகழ்வாராய்ச்சி, கல்வெட்டியல், தொல்பழைமைவியல், புவியியல், சமய, தத்துவ வரலாறுகள், அகராதிகள், பல மொழிகளின் இலக்கிய வரலாறுகள், பிற வரலாற்றிஞர்களின் வரலாற்று முறைமைகள், ஆய்வுப் பத்திரிகைகள் என்று பல திசைகளிலிருந்தும் எண்பதுக்கும் மேற்பட்ட நூல்களின் உதவிகளையும் பெற்றுள்ளது.

**சில எச்சரிக்கைகள்**

வரலாற்றியல் அணுகுமுறையில், திறனாய்வாளனுடைய 1. அகவய உணர்வுகள், ஆசைகள் 2. சமயம், சாதி, மொழி – விருப்பு வெறுப்புக்கள் 3. சான்றுகள் சரியாகக் கிடைக்காமை 4. சரியான கொள்கைகளும் வழிமுறைகளும் பெற்றிராமை – ஆகியவற்றின் காரணமாக,

1. பண்டைக்கால நிகழ்ச்சிகளுக்குச் சமகாலவிளக்கம் கூறுதல்
2. பண்டைக்காலக் கருத்தோட்டங்களைச் சமகால நிகழ்ச்சியில் ஏற்றிக் கூறுதல்.
3. நிகழ்வை நிராகரித்துவிட்டு, இறந்தகாலத்தைப் ‘பொற்காலமாக இலட்சியப்படுத்துதல்.
4. சில காலப் பகுதிகளையும் சில சான்றுகளையும் சில நிகழ்வுகளையும் ஒதுக்கியும் மறைத்தும் விடுதல் - அதாவது பிறழ்வு செய்தல்.

இத்தகைய தவறுகள் ஏற்படக்கூடும்.

## 11.8. வரலாற்று நோக்கில் இந்திய இலக்கிய வரையறையும் அணுகு முறைகளும்

இந்தியா ஒரு மிகப்பெரிய நாடு என்பது மட்டுமல்ல் துணைக் கண்டமாகக் கருதப்படுவது. மனித சமூகத்தில் ஐந்தில் ஒரு பகுதியினர் வாழும் இந்த நாட்டில் ஏராளமான மொழிகள் பேச்சு வழக்கிலும்

எழுத்துருவிலும் நிலவுகின்றன. இந்திய மொழிகளில் எழுதப்படும் இலக்கியங்கள் ‘இந்திய இலக்கியம்’ என ஒருமையிலும், ‘இந்திய இலக்கியங்கள்’ என பன்மையிலும் அழைக்கப்படுகின்றன. இந்திய இலக்கியம் என்ற கருத்தமைப்பைப் பற்றிப் பேசும்போது ஏறத்தாழ 3000 ஆண்டு பழமையுடைய இலக்கியங்களின் வரலாற்றையும், 32, 80, 483 சதுர கிலோ மீட்டர் பரப்பளவில் தோன்றிய இலக்கியங்களின் பல்வேறு பட்ட தன்மைகளையும் நினைவில் கொள்கிறோம். இந்திய இலக்கியம் என்பதன் வரையறையைக் காண்பதற்கு முன்னர் இந்திய மொழிகள் பற்றித் தெரிந்து கொள்வது பொருத்தமாக இருக்கும்



## 11.8.1. இந்திய மொழிச் சூழல்

இந்திய இலக்கியங்கள் தோற்றங் கொள்கிற பன்மொழிச் சூழலைப் பற்றி சுனீதிகுமார், சட்டர்ஜி, கிரியர்சன், கால்டுவெல் போன்ற அறிஞர்கள் விரிவான ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளனர். 1961-ஆம் ஆண்டு கணக்கெடுப்பு இந்தியாவில் 1652 பேச்சு மொழிகள் வழங்கி வருவதாகக் குறிப்பிடுகிறது. 1971-ஆம் ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட கணக்கெடுப்பு குறைந்தது. 1000 பேருக்குமேல் பேசுகின்ற இந்தியப் பேச்சுமொழிகள் 700 என்று தெரிவிக்கிறது. இதற்குப்பின்னர் நடத்தப்பட்ட கணக்கெடுப்பின்படி இந்தியாவில் குறைந்தது 5000 பேருக்குமேல் பேசுகின்ற 259 பேச்சுமொழிகள் வழக்கிலிருப்பதாக கே.எம்.ஜார்ஜ் கூறியுள்ளார். (1982: ப3) இந்தப் பேச்சுமொழிகளெல்லாம்,

1. இந்தோ – ஆரியன்
2. திராவிடம்
3. சைனோ – திபெத்தியன்
4. ஆஸ்டிரிக்

என நான்கு மொழிக் குடும்பங்களைச் சார்ந்தவை.

இந்திய அரசு, அரசியல் மற்றும் பண்பாட்டு ரீதியாக முக்கியத்துவம் பெற்ற மொழிகளாக 15 மொழிகளை அசாமி, உருது, ஒரியா, கன்னடா, காஷ்மீரி, குஜராத்தி, தமிழ், தெலுங்கு, பஞ்சாபி, வங்காளி, மலையாளம், மராத்தி, சமஸ்கிருதம், ஹிந்தி (சிந்தி) அங்கீகரித்துள்ளது. சாகித்திய அக்காதெமி நிறுவனம் இலக்கிய வளமுடைய - இலக்கியம் படைக்கப்படுகிற மொழிகளாக 22 மொழிகளை ஏற்றுக்கொண்டுள்ளது. இந்த 22 மொழிகளில் படைக்கப்படும் சிறப்பான இலக்கியப் படைப்புக்களையும் அவை பற்றிய திறனாய்வுகளையும் இந்திய மொழிகளிலும் ஆங்கில மொழியிலும் வெளியிட்டு வருகிறது.

‘பல மொழிகளில் எழுதப்பட்டாலும் இந்திய இலக்கியம் ஒன்றே’ (Indian Literature is one through written in many languages”) என்ற இந்திய தத்துவ மேதை டாக்டர் இராதாகிருஷ்ணனின் கூற்றே இந்திய இலக்கியத்திற்கு உரிய வரையறையாக பலரால் கூறப்படுகிறது் இந்தியா

ஒரே சமூகப்பகுதியாக பண்பாட்டுப்பகுதியாகதான் இருந்து வந்திருக்கிறது. தமிழ்நாட்டில் கி.பி.8,9 ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய பக்தி இலக்கியத்தின் வீச்சை இந்தியா முழுவதும் காணலாம். கிருஷ்ணதேவராயரின் விஜயநகரப் பேரரசு இன்றைய இந்தியாவின் பெரும் பகுதியை அரசியல் ரீதியாக ஒன்றுபடுத்தியிருக்கிறது. பொன்னைப் புதைத்து வைத்த நந்தன், பொன்மலிந்த பாடலிபுத்திரர், மௌரியர் (மோரியர்) ஆகியோரைப் பற்றி சங்க இலக்கியத்தில் காணப்படும் குறிப்புக்களும் சிற்சில பிரதேச வேறுபாடுகளும் பிராமி எழுத்து வடிவம் இந்தியாவின் பெரும் பகுதிகளில் வழக்கிலிருந்தமையும் இன்றைய இந்தியா மிகப் பழங்காலத்திலேயே ஒரே சமூகப் பகுதியாக – பண்பாட்டுப்பகுதியாக இருந்து வந்திருக்கிறது என்பதை உறுதிப்படுத்துகிறது. மேலும்,

1. கிராமியச்சமூகம்
2. சாதிய நிறுவனம்
3. குடும்ப அமைப்பு
4. கருமம், தருமம் ஆகியவற்றின் மீதான நம்பிக்கை
5. வேதங்கள் இராமாயணம், மகாபாரதம் போன்ற தொன்மங்களின் வழக்காறுகள்

ஆகிய சமூகப் பண்பாட்டுக் கூறுகள் 2000 ஆண்டுகளுக்கும் மேலாக இந்தியா முழுவதும் ஒரே மாதிரியாக நிலவியிருக்கின்றன.

## 11.8.2. இந்திய இலக்கியத்தில் இந்தியத்தன்மை

‘இந்திய இலக்கியம்’ என்ற கருத்தமைப்பைப் பற்றிப் பேசும் போது இந்தியத்தன்மை (Indianness) என்ற அதன் பண்பையும் இணைத்துப் பேசுவர். அதாவது இந்திய இலக்கியத்தின் ஒருமைத் தன்மைக்கு அதில் காணப்படும் இந்தியத் தன்மையினைப் பற்றி சுனீதிகுமார் சட்டர்ஜி தொட்டு பலரும் விளக்கியுள்ளனர், ‘‘இந்தியத் தன்மை என்பது சில நிலையான வாழ்க்கை மதிப்புக்களின் ஒன்றிணைப்பு. அது தனது அடையாளத்தை காலந்தோறும் தக்க வைத்திருக்கிறது’’ என இந்தியத் தன்மைக்கு டாக்டர் நாகேந்திரா விளக்கம் தருவார். (1986: ப.21) இந்த இந்தியத் தன்மையைச் சுனீதிகுமார் சட்டர்ஜி ‘பாரத தருமம்’ என வருணிப்பதாகக் கூறும் நாகேந்திரா, இந்தியத் தன்மையில் காணப்படும் அடிப்படைப்பண்புகளால் பின்வருவனவற்றைக் குறிப்பிடுகிறார்:

1. சில உயர்ந்த ஆன்மீக ஆற்றலின் மீது நம்பிக்கை
2. வாழ்க்கையின் மீதான நம்பிக்கை
3. ஒற்றுமை மனப்பான்மை
4. சமய அடிப்படையிலான மனிதநேயம்

5. அடிப்படைவாதமற்ற முற்போக்கான உண்மை என்ற கருத்தமைப்பின் அடிப்படையில் அமைந்த சகிப்புத் தன்மை.

இவைதான் இந்தியாவின் கூட்டுணர்வை (Collective Consciousness) அல்லது இந்திய உலக நோக்கை உருவாக்குகின்றன எனக் கூறும் நாகேந்திரா, இந்த வகையான ‘இந்தியா மக்களது கூட்டுணர்வின் அல்லது இந்திய உலக நோக்கின் கலையியல் வெளிப்பாடாகத்தான் இந்திய இலக்கியம் அமைகிறது’ என விளக்குகிறார்.

குறிப்பு

## 11.8.3. இந்திய இலக்கியம் - வரலாற்று அணுகுமுறை

இந்திய இலக்கியம் என்பதை ஒரே கருத்தமைப்பாகக் கண்டு முதலில் நூல்கள் எழுதியவர்கள், மேலைநாட்டினரே. இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் மூரிஸ் விண்டர்நிட்ஸ், ஆல்பர்ட்வெபர், கிரியர்சன் முதலானோர் இந்திய இலக்கிய வரலாறு என்ற பெயரில் நூல்களை எழுதியுள்ளனர். ஆனால், இவற்றில் பெரும்பாலும் சமஸ்கிருத இலக்கிய வரலாறே கூறப்பட்டுள்ளது. சுனீதிகுமார் சட்டர்ஜி 1958 இல் வெளியிட்ட ‘இந்திய இலக்கியம்’ (Indian Literature) என்ற நூல் தொகுதிதான் முதன்முதலாக 12 இந்திய மொழிகளில் காணப்படும் இலக்கியங்களைப் பற்றிச் சுருக்கமாக எடுத்துரைத்தது. இதற்குப் பின்னர், சாகித்ய அகாதெமியின் முதல் செயலராக இருந்த ஸ்ரீகிருஷ்ணகிருபளானி(Panoramic Glimpses of Modern Indian Literature), சுஜித்முகர்ஜி (Towards Literary History of India 1975), வி.கே.கோகாக் (The Concept of Indian Literature; 1979) ஆகியோர் இந்திய இலக்கியம் பற்றி வரலாற்று நோக்கில் நூல்கள் வெளியிட்டு உள்ளனர். இந்நூல்கள் இந்திய இலக்கியத்தின் ஒருமையை உணர்ந்து எழுதப்பட்டவை.

இலக்கிய வளமுடைய - இலக்கியச் செயல்பாடுமிக்க 15 இந்திய மொழிகளில் தோன்றிய இலக்கியங்களின் வரலாற்றை முறையாக முழுமையாகத் தொகுத்து வெளியிட்டவர் கே.எம்.ஜார்ஜ் தான், இவர் தலைமைப் பதிப்பாசிரியராக இருந்து மலையாளத்தில் இரு தொகுதிகளாக வெளியிட்டுள்ள ‘பாரதிய சாஹித்திய சரித்திரம்’ (1982) என்ற நூல் இந்திய இலக்கிய வரலாற்றைப் பழங்கவிதை, தற்காலக் கவிதை, நாவல், சிறுகதை, நாடகம் என இலக்கிய வகைகளின் அடிப்படையில் விளக்குகிறது. ஒவ்வொரு இலக்கிய வகையிலும் காணப்படும் பொதுத்தன்மைகளை விளக்கும் முகமாக ஒரு முன்னுரையும், அதைத் தொடர்ந்து தனித்தனியாக 15 மொழிகளில் அந்த இலக்கிய வகை வளர்ந்து வந்துள்ள வரலாறும் இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளது. இந்த நூல் 1984இல் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது.

மேற்காட்டிய நூல்களெல்லாம் பல்வேறுபட்ட இந்திய மொழிகளில் தோன்றிய இலக்கியங்களின் வரலாறுகளை ஒரே இடத்தில் தனித்தனியாகத் தொகுத்துத் தந்துள்ளன. இலக்கிய வரலாற்று நோக்கில் இவற்றில் இந்திய இலக்கியப்படைப்புக்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆனால், இவை பல மொழிகளில் தோன்றிய இந்திய இலக்கியங்களை ஒரே தளத்தில் வைத்து ஒப்பிட்டு ஆராய்வதற்கு உரிய அடிப்படையை ஏற்படுத்தியுள்ளன.

## 11.8.4. இந்திய இலக்கியம் - ஒப்பீட்டு அணுகுமுறை

'இந்திய இலக்கியம் ஒன்றே' என்ற கருத்தமைப்பை நிறுவுவதற்கு முதலில் பல இந்திய மொழிகளிலும் வெளியாகியுள்ள இலக்கியங்களை ஒப்பிட்டு ஆராய்ந்து, இவற்றின் பொதுத்தன்மைகளையும், தனித்தன்மைகளையும் காண்பது அவசியமாகிறது. பன்மொழிச் சூழலில் தோன்றும் இந்திய இலக்கியங்களைப் பின்வரும் முறைகளில் ஒப்பிட்டு ஆராயலாம்.

1. இலக்கிய வகைகள்
2. இலக்கிய இயக்கங்கள்
3. அடிக்கருத்துக்கள்
4. இலக்கியக் கொள்கைகள்
5. தாக்கம் மற்றும் செல்வாக்கு

இந்திய இலக்கிய வகைமை பற்றிய ஆய்வில் பழங்கால இந்திய இலக்கியங்களைப் புராணம், இதிகாசம், காப்பியம், சதகம், தூது முதலிய இலக்கிய வகைகளின் அடிப்படையில் ஒப்பிடலாம். தற்கால இந்திய இலக்கியங்களை கவிதை, நாவல், சிறுகதை, நாடகம் போன்ற இலக்கிய வகைகளாகவும் பகுத்து ஆராயலாம்.

(எ.கா.)

அ. ''தமிழ் - தெலுங்கு மொழிகளில் சதக இலக்கியங்கள்''

ஆ. ''தமிழ் - மலையாள தொடக்க நாவல்கள்''

(ச.சீனிவாசன், ம.கா.ப.,பிஎச்.டி, ஆய்வேடு 1993)

இ. ''இந்திய மொழிகளில் தூது இலக்கியம்''

ஈ. ''ஜெயகாந்தன்-கொடவடிகண்டி குடும்பராவின் நாவல்கள்''

உ. ''மு.வ.-காண்டேகரின் நாவல்கள்''

இலக்கிய இயக்கங்களைப் பற்றிய ஒப்பீட்டு ஆய்வில் பழங்கால இலக்கியங்களை பக்தி இயக்கம், ஞானியர் இயக்கம், (சந்த்துக்கள், நாத் சம்பிரதாயத்தினர், சித்தர்கள்) முதலான இயக்கங்களில் அடிப்படையில் ஆராயலாம். தற்கால இந்திய இலக்கியங்களை மறுமலர்ச்சி, புனைவியல், நடப்பியல், மிகை நடப்பியல், இருத்தலியம், போன்ற உலகப்பொதுவான இலக்கிய இயக்கங்களின் அடிப்படையில் ஆராயலாம்.

(எ.கா) அ. ''பாரதியார், குமாரன் ஆசான், குரஜாடா அப்பாராவு கவிதைகளில் புனைவியல்'' (பா.ஆனந்தகுமார், மதுரை காமராசர் பல்கலைக்கழக பிஎச்.டி. ஆய்வேடு, 1992)

ஆ. ''தமிழ்ப் பக்தி இலக்கியமும் கன்னட வீரசைவ இலக்கியமும்''

இ. ''தமிழ் - மலையாள நாவல்களில் இருத்தலியம்''

அடிக்கருத்துகள் பற்றிய ஒப்பீட்டு ஆய்வில் காதல், வீரம், இயற்கை, தேசியம், சாதி, வறுமை, குடும்பம் போன்ற அடிக்கருத்துக்கள் இந்தியமொழி இலக்கியங்களில் எங்ஙனம் கையாளப்பட்டுள்ளன என்பதைக் கண்டறியலாம். (எ.கா)

அ. ''திராவிட மொழி இலக்கியங்களில் தலைமுறை இடைவெளி''

ஆ. ''இந்திய நாவல்கள் காட்டும் குடும்பம்''

இ. ''பாரதிதாசன், ஜாகலா (தெலுங்கு) கவிதைகளில் வருண தரும எதிர்ப்பு''

இந்திய இலக்கியக் கொள்கைகள் பற்றிய ஒப்பீட்டு ஆய்வில் வடமொழியிலுள்ள தொனி, ரசம், வக்ரோக்தி போன்ற இலக்கியக் கொள்கைகளைத் தமிழ் மரபிலுள்ள உள்ளுறை, இறைச்சி, மெய்ப்பாடு போன்ற இலக்கியக் கொள்கையோடு ஒப்பிடலாம்.

(எ.கா)அ. ''பரதரின் ரசக்கோட்பாடும் தொல்காப்பியரின் மெய்ப்பாடும்''

தாக்கம் மற்றும் செல்வாக்கு என்ற முறையில் மேலைநாட்டு இலக்கியத்தின் தாக்கம் மற்றும் செல்வாக்கு இந்திய இலக்கியங்களில் புதுக்கவிதை, நாவல், சிறுகதை போன்ற வடிவங்களில் -- நனவோடை, அகமனக்குரல் முதலிய உத்திகளில் -- எங்ஙனம் இடம் பெற்றுள்ளன என்பதைஒரு நிலையில் ஆராயலாம். அதேபோல் இந்திய இலக்கியங்களுக்குள்

அ. சமஸ்கிருத மரபின் தாக்கம் பிற இந்திய மொழிகளில்

ஆ. தமிழ் மரபின் தாக்கம் பிற திராவிட மொழிகளில்

(''மலையாள 'இராம சரிதத்தில்' தமிழ் இலக்கிய மரபுகள்'')

இ. வங்க இலக்கியத்தின் (தாகூர், பங்கிம் சந்திரர்) தாக்கம் பிற இந்திய மொழிகளில் என்ற நிலையில் ஒப்பீட்டாய்வுகள் நிகழ்த்தலாம்.

இந்திய இலக்கியங்களுக்குள் ஒப்பாய்வுக் களங்களைத் தேர்ந்தெடுக்கும் போது காலம், சூழமைவு முதலிய சமூக வரலாற்றுப் பின்னணியைக் கவனத்திற் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, திருவள்ளுவரை ஒரு நீதிக்கவிஞர் என்ற அடிப்படையில் தெலுங்கிலுள்ள வேமனரோடு ஒப்பிட்டுச் சில ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. ஆனால் இந்த ஒப்பீட்டுக்களம் வரலாற்றுச் சூழமைவைக் கவனத்திற கொள்ளாமல் தேர்ந்தெடுக்கப்பட்டதாகும். திருவள்ளுவர் இந்தியாவில் நிலவுடைமை அரசு தோன்றிய இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். எனவே குடும்பம்,

குறிப்பு

அரசு முதலிய நிறுவன அமைப்புகளுக்கு அழுத்தம் கொடுத்துப் பாடியவர். ஆனால், வேமனர் பின்னனிடைக் காலத்தில் (17-ஆம் நூ.ஆ.)தோன்றியவர். எனவே பின்னிடைக்காலச் சிந்தனையில் மேலோங்கியிருந்த சாதி, கோவில் முதலியவற்றை எதிர்க்கும் நிறுவன எதிர்ப்பு, சமயச் சமரசப்பாங்கு, யோக நெறி என்ற கருத்துக்கள் அவரது படைப்புக்களில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன. எனவே வேமனரை அவரது சமகாலத்தில் தோன்றிய தமிழ்ச் சித்தர்களோடு ஒப்பிடுவதே பொருத்தமாக இருக்கும். அந்த ஒப்பீட்டின் மூலம் பின்னிடைக்கால இந்தியச் சிந்தனையின் பொதுத் தன்மைகளையும் பல பரிமாணங்களையும் அடையாளங்காண முடியும்.

சம காலத்தில் வாழ்ந்த அல்லது வாழுகின்ற இரண்டு இந்திய எழுத்தாளர்களை அல்லது இரண்டு இலக்கியப் படைப்புக்களை ஒப்பிடுவதற்குத் தேர்ந்தெடுக்கும் போதுகூட அந்த இரண்டு எழுத்தாளரையும் அல்லது இரண்டு இலக்கியப் படைப்புக்களையும் ஏதாவது ஒரு கண்ணியில் இணைக்க வேண்டும். காட்டாக, ‘‘பாரதியும் வள்ளத்தோளும்’’ பற்றிய ஒப்பீட்டாய்வில் அவ்விருவரையும் ‘தேசியம்’ என்ற கண்ணியில் - சரட்டில் - இணைத்துப் பார்க்கலாம்.

இவ்வாறு சமூக வரலாற்று அடிப்படையின்றி - இணைக்கும் கண்ணியின்றி – நிகழ்த்தப்படும் ஒப்பாய்வுகளை (கைலாசபதி குறிப்பிடுகின்ற நவீன ஒப்பியல் ஆய்வு நெறிக்குரிய விஞ்ஞானப் பண்பற்றவை இவை) இருப்புப்பாதை நெறியில்தான் செல்லும். அத்தகைய ஆய்வுகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட இலக்கிய ஆராய்ச்சிகளோ அல்லது படைப்புக்களோ ஆய்வின் இறுதிவரை ஒன்றையொன்று தொடாது தழுவாது.

இந்த ஆய்வுகளினால் வெறும் ஒற்றுமை வேற்றுமைப் பட்டியல்கள் தான் மிஞ்சும். இவற்றின் மூலம் இந்திய இலக்கியத்தின் ஒருமையையோ பன்முகத் தன்மைகளையோ காண இயலாது.

## 11.9. இலக்கியமும் பிற கலைகளும் - இலக்கியமும் வரலாறும் விளக்கம்

இவ்விரு தலைப்புகளும் நீண்ட நெடிய செய்திகளைச் சுமந்திருக்கின்றன. எனினும் இயன்ற அளவிற்கு சுருக்கி இக்கூறு அளித்துள்ளது. இவைத் தொடர்பான தேடல்களை படிக்கின்ற மாணவர்கள் தொடர்வார்கள் ஆயின் பயன்பெறுவர்.

## வினா-விடை பயிற்சி

**I.இரண்டு மதிப்பெண் வினா-விடை**

**1) இலக்கியத்தோடு பெருமளவில் ஒத்துப்போகும் கலைகள் யாவை?**

ஓவியம், சிற்பம், இசை, நடனம்

**2) ஓவியப்பாட்டு என்றழைக்கப்படும் நூல்?**

நெடுநல்வாடை

**3) ஆங்கில உலகில் இலக்கியத்தின் வரலாற்றை முதன் முதலாக எழுதியவர் யார்?**

தாமஸ் வார்ட்டன் (Thomas warton)

**4) '1800 – ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்கள்' – எனும் நூலை' எழுதி வெளியிட்டவர் யார்?**

வெ.கனகசபை

**5) சாகித்திய அக்காதெமி நிறுவனம் இந்தியாவில் இலக்கிய வளமுடைய மொழிகள் எத்தனை என்கிறது?**

22

**II. ஐந்து மதிப்பெண் வினா-விடை**

**6) இலக்கியமும் கலைகளும் எனுந்தலைப்பில் நீவிர் அறிந்ததை எழுதுக.**

(11.3ல் உள்ள செய்திகள் 11.3.1 – 11.3.4 வரை சுருக்கி எழுதுக)

**7) மேலை நாடுகளில் கலை இலக்கியத் தொடர்புகள் குறித்து எழுதுக.**

(11.4-ல் உள்ளவற்றை சுருக்கி எழுதுக)

**8) வாய் மொழி இலக்கியமும் - வரிவடிவ இலக்கியமும் பற்றி விவரி.**

(11.5-ல் உள்ளவற்றை எழுதுக)

**9) இலக்கியமும் வரலாறும் தரும் செய்திகளை எழுதுக.**

(11.6 முதல் 11.7 வரையுள்ள செய்திகளைத் தொகுத்து சுருக்கி எழுதுக)

**10) இந்திய இலக்கிய வரலாற்றியல் அணுகுமுறையை விளக்குக.**

(11.8-ல் உள்ள செய்திகளை எழுதுக)

**III. பத்து மதிப்பெண் வினா-விடை**

**11) இலக்கியமும் பிறகலைகளும் எனுந்தலைப்பில் கட்டுரை எழுதுக.**

(11.3 முதல் 11.3.4. வரை உள்ள செய்திகள் எழுதுக.)

**12) இலக்கியமும் வரலாறும் எனுந்தலைப்பை பற்றி அறிந்தவாறு எழுதுக.**

(11.6 முதல் 11.8 வரை உள்ள செய்திகளைத் தொகுத்து எழுதுக)

# பிரிவு 4

## பிறதுறைகள் - காலமும் இலக்கியமும்

## கூறு-12: உளவியலும் இலக்கியமும் பிற துறைகளும்

குறிப்பு

### 12.1 முன்னுரை

இலக்கியமும் உளவியலும் பொது அடிப்படையின என்பது இன்று நன்கு உணரப்படுகிறது. சிறப்பாக உள்ளுணர்வுப் பகுப்பாய்வு (Psycho analysis) இதற்கு மிகவும் பயன்படுகிறது. இதனை எடுத்துரைத்தவர் சிக்மண்ட் ∴பிராய்டு (Sigmund Freud) என்ற உளவியல் அறிஞர். அவர் மனத்தைப் புறமனம், அகமனம் (Conscious and Unconscious) என இரண்டாகப் பகுத்துக் காட்டினார் அவை ஒன்றனோடு ஒன்று எங்ஙனம் இணைந்தும் பிணைந்தும் செயற்படுவன என்பதையும் விளக்கினார்.

மனித நோக்கங்கள், நடத்தைகள், புராண மரபுகளையும் படிமங்களையும் படைக்கும் ஆற்றல்கள் ஆகிய இவை உளவியலுடனும் இலக்கியத்துடனும் தொடர்புடையன.

### 12.2 நோக்கம்

உளவியலுக்கும் இலக்கியத்திற்கும் இடையே உள்ள நிலைப்பாட்டை ஒப்பியல் அறிஞர்கள் கூறும் கூற்றுகளை அறிதல்.

உளவியலும் இலக்கியமும் எனும் இக்கூறுடன் தொடர்புடைய நாட்டுப்புறப்பாடல் துறை, மொழிபெயர்ப்புத்துறை, திறனாய்வுத்துறை முதலிய பிற துறைகளையும் அறிதல் இக்கூறின் நோக்கமாகும்.

### 12.3 உளவியலும் இலக்கியமும்

இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் சிக்மண்ட் ∴பிராய்டு அவர்களின் மன ஆய்வுகள் வழிவந்த அறிவைப் பயன்படுத்தி நினைவிலி உள்ளத்தை அது வெளிப்படுத்தும் படிமங்கள் வாயிலாக ஆராயும் உள்ளுணர்வுப் பகுப்பாய்வு முறையை ஏற்று, இலக்கிய ஆய்வு மேலும் மேலும் வளர்க்கப்பட்டது. கவிஞனின் நெட்டைக் கனவுகளுக்கும், அவனது நனவுப் படைப்புக்கும் உள்ள உறவைச் சிக்மண்ட் ∴பிராய்டு தமது ‘கனவுகளின் அடிப்படை விளக்கம்’ (The Interpretation of Dreams) என்ற நூலில் 1900-இல் விளக்கினார். அது முதற்கொண்டு இலக்கிய அறிஞர்கள் தாமும் இதனை நன்கு உணரத் தலைப்பட்டனர். தொடர்ந்து ∴பிராய்டின் எழுத்துக்கள் ‘அறிவும் அதன் அகமனத் தொடர்பும் (Wit and its relation to the unconscious) ‘விழைவு நிறைவேற்றக் கோட்பாடு’ (The concept of Wish-fulfillment) ‘நரம்புக் கோளாறுச் சிக்கல்கள்’ (The Problems of Neurosis) ‘படிவங்களின் பண்பியையுகள்’ (The Associative Character of Symbols) என்ற இலக்கியத் தொடர்பற்ற பொருள்களைப் பற்றி எழுந்தன. அவைக்

காலப்போக்கில் இலக்கியத்தில் ஏற்றிப்பார்க்கும் தன்மையுடையனவாயின. கலைஞனிடம் உள்ள குறிப்பிட்ட சில விளைவுகளை நிறைவு செய்யும் முயற்சியாகக் கலைகள் காணப்படுகின்றன எனப் ∴பிராய்டு நம்பினார். அது உலகத்துடன் கொள்ளும் 'காதலுறவு' (Love Affair) போன்றது. அதுசிலவற்றை ஏற்பதும் அங்கீகரிப்பதுமான ஆர்வம் பற்றியது, அதுபோலவே கலைஞன் தன் கலைஞர்களிடம் தோன்றும் பொது விழைவுகளையும் நிறைவேற்றுகிறான். கலை என்பது விழைவு நிறைவேறா மெய்ம்மைக்கும் விழைவு நிறைவுறும் கற்பனை உலகுக்கும் இடைப்பட்டதோர் பகுதியே'' என்பது ∴பிராய்டின் கருத்தாகும்.

∴பிராய்டின் நினைவிலி உள்ளம் (Unconscious) கலையில் செயல்படுவதை வைத்து இலக்கியத்திலும் அத்தன்மையான உத்திகள் பின்பற்றப்படுவனவாயின. பாத்திரமே தன் மனத்துள் நினைந்து சொல்வது போல் கதையைக் கூறிச் செல்லும்'' நனவோடை முறை (Stream of consciousness) அல்லது 'அகமன ஒரு கூற்று' (Internal monlogue) ஆகியன செய்து பார்க்கப்பட்டு வெற்றி பெற்றன. இம்முறைகள் பாத்திரங்களின் பண்புச் சித்திரங்களாக அமைந்து வாசகரை அப்பாத்திரங்களுடன் இணைத்துவிடுகின்றன. இவ்வாறு கற்பனை மாந்தரின் மனம் புலன்களின் வழிப்பட்ட அனுபவங்களில் வாசகரை நேர்முகப் பங்கேற்குமாறு செய்துவிடுகின்றன. உள்ளுணர்வுப் பகுப்பாய்வு இலக்கியக்கல்வியில் மூன்று திறன்களில் பயன்படுகிறது என்பர் லியான் எடல் அவர்கள்: 1) திறனாய்வில் பயன்படுகிறது 2) இலக்கியப் படைப்பான கல்விக்குப் பயன்படுகிறது. 3) வாழ்க்கை வரலாறு எழுதப் பயன்படுகிறது.

இலக்கியத்தை உளவியல் நோக்கில் ஆராயப் பல வழிகள் உண்டு 1) படைப்பாளர் உளவியல் 2) படைப்பாக்க உளவியல் 3) இலக்கியம் அளிக்கும் உளவியல் 4) அவையினர் உளவியல். இவற்றுள் முதல் இரண்டும் படைப்பாளி தொடர்பான உளவியலாகும். பொதுவாகக் கலைஞர்கள் பிறரினும் வேறுபட்டவர்களாக இருப்பர் என்றும் மிகையுணர்ச்சி உடையவராக இருக்கக்கூடும் என்றும் அவர் கூறினார். அவர்கள்பால் காணப்படும். சிற்சில குறைநிறைகளே அவர்களைக் கலைஞர்களாக்குகின்றன என்றார் அவர். கலைஞர்களின் வறுமையும், அவர்களது படைப்பாக்கத்திற்கு ஒரு காரணமாகும் என்பார் உளர். சிலர் புலவரின் இயல்பை நரம்பு நோய்க்கும் பைத்தியத்திற்கும் இடைப்பட்டதாகவும் கருதினார். கவிஞன் பிறரினும் ஒரு சிலவற்றில் மிகவும் குறையுடைவனாகவும், வேறு சிலவற்றில் மிகவும் நிறையுடைவனாக காணப்படுதல் உண்டு. அவனது இழப்பிற்கு ஈடாக, வேறு சிலவற்றில் அவன் தனிச்சிறப்புடையவனாக விளங்குகிறான். 'இலக்கியக் கொள்கை' என்ற நூலை இயற்றிய 'போப்' கூனர் குள்ளர் கோணற் காலினர், பிரௌஸ்ட் காசநோயும் நரம்பு நோயும் உடையவர். கீட்ஸ் பிறரை விடக் கட்டையானவர். தாமஸ்உல்∴ப் மிக உயரமானவர்.'' என்று கூறப்படுகிறது. சங்க காலத்திலும் பெருங்கண்ணன் முடமோசியார், நரைமுடி நெட்டையார், நெடுங்கழுத்துப் பரணர், நெட்டிமையார் போன்ற

பெயர்களைக் காணுமிடத்து ∴பிராய்டின் கருத்து உண்மையோ எனத் தோன்றுகிறது. உலக வழக்கிலும் ஐம்பொறிகளில் ஏதேனும் ஒன்றில் குறையுடையவர்கள் பிற புலன்களில் பிறரினும் மேம்பட்டவராய் விளங்கக் காண்கிறோம்.

எழுத்தாளர்கள் வாழ்க்கைச் சிக்கல்களிலிருந்து தப்பிக்கும் மனவுணர்வினாலேயே எழுதுகின்றனர் என்றும், தன் பிணிகளையும் குறைகளையும் தம் படைப்பின் மேல் ஏற்றி உரைக்கின்றனர் என்றும், தமது அனுபவத்தை எழுதுகின்றனர் என்றும், பலரால் பலவாறு கூறப்படுகின்றது. ஓர் எழுத்தாளரின் பல்வேறு மனநிலைகளின் பிரதிபலிப்புகளாகவே அவனுடைய பல்வேறு பாத்திரங்கள் படைக்கப்படுகின்றனவாம். இவையெல்லாம் மிகவும் சிக்கலான தெளிவுப்படுத்த வேண்டிய செய்திகளாகும். சங்கப் புலவர்களில் ஔவையார், ஆதிமந்தியார், வெள்ளிவீதியார் போன்ற பெண்பாற் புலவர்களின் அகப்பாடல்களில் வெளிப்படும் சோகவுணர்வு இவ்அவலத்தின் எதிரொலியே எனலாம்.

உருமேனிய நாட்டு அறிஞர் எல்.ரூசா (L.Rusa) கவிஞர்களை அடிப்படையில் மூவகையினராகக் காண்கிறார். 1) கவலையற்ற மகிழ் வகையினர். இவர்கள் கலையாக்கத்தில் இடையறா மகிழ்வும் பறவை போன்ற கவலையற்ற வாழ்வும் உடையவர் 2) குழம்பிய அவலவகையினர் முன்னதற்கு நேர் எதிரானவர் 3) சமநிலையுணர்வினர் அவலமும் மகிழ்வும் ஆகிய இருநிலைகளையும் சமநிலைப்படுத்தி அளிக்கும் தன்மையினர். இவ் இறுதி வகையினரே பெரும்பான்மையினர் என்றும், உலகப் பெருங்கவிஞர்கள் பலர் இவ்வகையினரே என்றும் ரூசா விளக்குகிறார். சங்கப் புலவர்களில் சிலர் மகிழ்வகையினர் என்றும், பெரும்பாலும் சமநிலையுணர்வினரே காணப்பெறுகின்றனர் என்றும் குழம்பிய அவல வகையினர் மிக அரிதாகவே காணப்பெறுகின்றனர் என்றும் கூறலாம்.

**வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி**
**நெடிய என்னாது சுரம்பல கடந்து**
**வடியா நாவின் வல்லாங்குப் பாடி**
**பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி**
**ஓம்பாது உண்டு கூம்பாது வீசி**
**வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை**

**(புறம்:47)**

என்று கோவூர்கிழார் விளக்கிக் கூறுவதாலும் இதை அறியலாம். ‘எங்கு வள்ளல்கள் உள்ளார்கள் என்று பழுத்த மரத்தை நாடும் பறவைகள் போலப் போவார்கள். நீண்ட தொலைவு என்று கருதாமல் பல சுரங்களைக் கடந்து செல்வார்கள். தங்களுடைய பக்குவப்படாத நாவினால் இயன்றவரை பாடி, கொடுத்ததை மகிழ்ந்து ஏற்றுச்

சுற்றத்திற்குக் கொடுத்து, தாமும் பிறகு உண்ண எனப் பாதுகாவாமல் பலருக்கும் அள்ளிக் கொடுத்துவிடுவார்கள். இதுவே பரிசில் வாழ்க்கையின் தன்மையாகும். தன்வெளிப்பாட்டு முனைப்பு (ego) என்பது ஒவ்வொருவரிடமும் உள்ளது. இதன் மேலோங்கிய நிலையையே கலைஞர்களிடம் காண்கிறோம்.

கலைஞரின் உளவியலுக்கு கலையின் உருவாக்கத்திற்கும் இடையேயுள்ள தொடர்பு நிலைகள் ஆராயத்தக்கன. அரையுறக்க நிலையில் கண்ட கனவுகள் போன்ற மன நிலையிலேயே கற்பனைகள் உருவாகின்றன. எப்போதும் அவன் ‘தன்னை’–‘தன் ஆற்றலை’ வெளிப்படுத்திக் கொள்ளவே துடிக்கிறான். கவிஞன் எந்நிலையில் படைப்பாளியாகின்றான்? அவனுக்கு ஏற்படும் தூண்டுணர்வு அல்லது அகத்தெழுச்சி (Inspiration) எவ்வாறு வாய்க்கின்றது? சிலர் இவ் அகத்தெழுச்சி தெய்வீக ஆற்றலால் ஏற்படுகின்றது என்பர். பத்திமை இலக்கியக் காலத்திலும், காப்பியக் காலத்திலும் இவ் இறைத்தூண்டுதல்கள் பற்றிய செய்திகள் உள்ளன. கம்பரது நாவில் காளிதேவி சூலங்கொண்டு பொறித்ததும் இவர் பாடும் ஆற்றல் பெற்றார் என்றும், சேக்கிழார் இறைவன் ‘உலகெலாம்’ என அடியெடுத்துக் கொடுக்க உடனே பாடத் தொடங்கினார் என்றும், குமரகுருபரர் இறையருளால் ஊமைத் தன்மை நீங்கப்பெற்றதும் ‘கந்தர் கலிவெண்பா’ பாடினார் என்றும் கூறப்பட்டு வரும் செய்திகள் இவண் நோக்கத்தக்கன. சிலர், கலைஞர்களிடம் இவ் ‘அகத்தெழுச்சி’ ஏற்படுவதற்கு அவர்கள் போதை தரும் அபின் போன்றவற்றை உட்கொள்ளுவதும் காரணம் என்பர். சங்கப் புலவர்களிடமும் நறவுண்ணும் வழக்கம் உண்டு. ஆனால் அதற்கும் கலைப்படைப்புக்கும் எந்த அளவு தொடர்புண்டு என்பது ஆராயத்தக்கது.

ஒரு சிலருக்கு அமையும் சூழலால் படைப்பாக்க உணர்வுமிகும் என்பர். வேறுசிலர் எழுதுமுறைகளால் இவ்வுணர்வு கூடுதல் குறைதல் உண்டு என்பர். கலைஞர்களின் பொருள் வருவாய்க் குறைவும் வாழ்க்கைச்சிக்கலும் கலைப்படைப்புக்குக் காரணம் என்பர். டாக்டர் ஜான்சன், பொருளாதார நெருக்கடியினால் தாம் எழுதியதை ஒப்புக் கொண்டாலும், ஒருவன் விடாமுயற்சியுடன் தன்னை ஆயத்தப்படுத்திக் கொண்டால் எப்போதும் எழுதலாம் என நம்பினார் அவர். தாமே எழுதுதல், தட்டெழுத்தில் அடித்தல், கூறி எழுதச் செய்தல் என்ற முறைகள்,இரவில் மட்டுமே எழுதல், அமைதியான சூழல்களிலேயே எழுத முடிதல் போன்ற நிலைகள் பலவுள. இவை எல்லாம் இலக்கியத்தைப் புறத்தே நின்று நோக்கும் ஆய்வுகளாகும். ‘அவையினர் உளவியல்’ என்பது படிப்பவர் தம் மன நிலையைப் பற்றியது சமுதாயத்திற்கும் கலைக்கும் உள்ள தொடர்பை ஆராய்வது சமுதாயத்தில் கலை விளைவிப்பன யாவை? கலையில் சமுதாயம் எவ்வெவற்றை விளைவிக்கிறது? என இவற்றிடையேயுள்ள உறவு நிலையைக் காண்பதுஅது.

இலக்கியம் அளிக்கும் உளவியல் என்பதே உண்மையில் இலக்கிய உளவியலாகும். அஃதொன்றே இவண் விரிவாக எண்ணற்பாலது ஏனெனில் இலக்கியத்தின் உள்ளார்ந்த தன்மையை, வளர்ச்சியை இது நமக்கு உணர்த்துகிறது. எனவே ஒரு சில எடுத்துக்காட்டுக்கள் வாயிலாகத் தமிழ் இலக்கியம் உளவியல் ஆய்வுக்கு எவ்வளவு ஈடுகொடுக்கிறது என்பதை இங்குக் காண்போம். பேராசிரியர் ரிமாக்கு அவர்கள் குறிப்பிட்டதற்கு ஏற்ப உளவியல் துறையிலும் ஓரளவு முழுமையான பயிற்சி பெற்றவரே இலக்கியத்தை அதனோடு ஒப்பிடத் தகுதியுடையவர் ஆவர்.

தொல்காப்பியர் குறிப்பிடும் இலக்கிய விதிகள், துறைகள், கூற்றுகள், மெய்ப்பாடுகள் போல்வன அனைத்தும் தனித்தனியே உளவியலுடன் ஒப்பிடத்தக்கனவாகும். முதல் கரு உரி எனப்பகுத்து, இயற்கைப் பின்னணிக்கு ஏற்ற காதலுணர்வைப் படைப்பதே சிறந்த உளவியல் அடிப்படையினதாகும். சங்கப் பாடல்கள் பலவும் ஒருபாற் கூற்றுகள், ஒரு சில தன் நெஞ்சிக்குக் கூறுவன, இவை இலக்கியப் போக்கு உடையனவாய் இருப்பதைக் கண்டு தெளிய வேண்டும். ஆய்வுத் துறையில் நாம் புதியன புகுத்துவதாய் இருந்தால் சங்கப் பாடல் ஒவ்வொன்றையும் பாடல் அமைப்பு, நடை, உரையாடல், கருத்தமைவு, நிகழ்ச்சிப் பின்னல், மாந்தர் படைப்பு போன்ற அடிப்படையில் உளவியலுடன் ஒப்பிட்டுக் காண வேண்டும். ''சங்க இலக்கியம் 1826 அகப்பாடல் உடைய காதல் இலக்கியம். ஒவ்வொரு பாடலிலும் ஆண், பெண் உள்ளங்கள் உள்ளன. இப்பாடல்களைக் கற்பவர். 3274 காதல் உள்ளங்களை பற்றிய அறிவு பெறுவர். மேலும் காதல் தலைமையுடைய இவ் இருவரையும் பற்றிப் பாங்கன் நினைத்தனவும் ஊரார். கண்டார் நினைத்தனவும் ஆகிய பல்வேறு உள்ளங்களின் அறிவினையும் பெறுவர்'' என்று டாக்டர் வ.சுப.மாணிக்கம் தமது 'தமிழ்க் காதல்' என்னும் ஆய்வு நூலில் குறிப்பிடுகின்றார்.

வியான் எடல் அவர்கள் ''மனிதனுடைய தொன்மைப் படைப்பாற்றல், படிமப் படைப்பாற்றல் போன்ற கற்பனைகளுடன் தொடர்புடையதே இலக்கியம் உளவியல், இக்கற்பனைகளை வெளியிடுவதற்குரிய மொழியையும் வடிவத்தையும் இடையறாது தேடிக் காண்பதுதான் அவனுடைய முயற்சி என்ற முறையில் இவற்றை ஆராய வேண்டும்'' என்றார். மேலும் அவர் இலக்கிய உளவியல் என்பது ஓர் இலக்கியப் படைப்பின் கட்டமைப்பையும் உட்பொருளையும் பற்றிய கல்வி, ஒரு வடிவத்தையும் பான்மையையும் அதற்கு நல்கும் கற்பனையைப் பற்றிய படிப்பு அதற்கு உருக்கொடுக்கும் கற்பனைத் தோற்றங்களையும் மனித நடத்தைகளை விவரிக்கும் முறைகளையும் பற்றிய ஆய்வு'' என்றார். ஒருவரது ஆளுமைத் திறம் ஒருமுகமாகச் செயல்படுவதாலும் நினைவில் உள்ளம் இயங்குவதனாலும் இவை எப்படி அமைகின்றன என அது ஆராய்கிறது.

குறிப்பு

சங்கப் பாடல்களைக் கொண்டு இவற்றை எளிதாக விளக்கலாம். ஒரு நெஞ்சம் அவல உணர்வால் எப்படித் துடிக்கும்? ஒரு முறைக்குப் பலமுறை துன்பத்தைச் சொல்லிச் சொல்லி அழுவது மனித இயல்பு. பலமுறை கூவும் குயிலினது குரலோசையில் ஏதோ அவலம் இருப்பதாகக் கருதுவதுண்டு. தமிழில் பலமுறை திரும்பவரும் செய்தி என்பதை அறிவிக்கக் குறைந்தது மும்முறையாவது காட்டுவர். மொழியாலும் பாடல் அமைப்பாலுமே அவலத்தை உணர்த்தும் கீழ்வரும் குறுந்தொகைப் பாடல் கூர்ந்து நோக்கத்தக்கது. சிறிய இலைகளை உடைய நெருஞ்சிப்பூ மேட்டு நிலத்தில் சில்லென்று பூத்துக் காட்சியளிக்கிறது. இப் பூ கண்ணுக்கு இனிமையாய்த் தோன்றினும் அருகில் நெருங்கிக் கால் வைத்தால் கடிதாகக் குத்தும் முட்களையுடையது ஆகும். முன்பு களவுக் காலத்தில் இனியவராக விளங்கிய காதலர், இப்போது மணம் முடித்து நெருங்கி வாழும் கற்புக்காலத்தில் அடிக்கடி பிரிந்து இன்னாதவராய் இருக்கின்றார். இதை நினைத்துத் தலைவி வருந்துகிறாள். இதனால் ‘நோம் என் நெஞ்சே’ என்று ஒரு முறைக்கு மும்முறை சொல்கிறாள். அவள் சொல்வதைக் கேட்கும் நமக்கும் இரக்கவுணர்வு மேலிடுகிறது. இவ்வாறு தன் ஆளுமையைப் படைப்பாக்கமாக வெளியிடும் (Creative put come of a personality) ஒரு முறை, வடிவத் தொடர்புடையதாய்ப் பல பாடல்களில் காணப்படும் ஒரு படிவ முறையையே (Pattern) உண்டாக்கியிருப்பதை நாம் சங்கத்தொகை நூல்களில் பல இடங்களில் காணலாம்.

**“நோம்என் நெஞ்சே! நோம்என் நெஞ்சே!**
**புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**
**கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு**
**இனிய செய்தநம் காதலர்**
**இன்னா செய்தல் நோம் என நெஞ்சே!”**
**(குறுந் : 202)**

அள்ளூர் நன்முல்லையாரின் இப்பாடல், அடிப்பட்டவன் பலமுறை சொல்லி அரற்றுவது போன்ற பாங்கில் யாக்கப் பெற்றுள்ளமையைக் காணலாம். இது திரும்பத் திரும்ப வருதல், சொல்லாட்சி (diction), உவமை, முரண்தொடை, (இனிய, இன்னா என்பன) ஆகிய எல்லாமே ஒருங்கிணைந்து அவலவுணர்வை விளைவிப்பதை நோக்கினால், இலக்கியம் எவ்வாறு உளவியலை விளைவிக்கும் என்ற உண்மை தெற்றெனப் புலனாகும்.

## 12.3.1 நினைவுத்தொடர் அல்லது சிந்தனை இயல்பு

‘நினைவுத் தொடர்’ (Association of thoughts) என்பது ஓர் உளவியல் உண்மை. ஒன்றை நினைக்க அதன் தொடர்புடையன பலவும் நினைவுக்கு வரும். ‘யார் எதனை நினைக்க, அது யாருடையதோ அவரது நினைவு அடுத்துத் தோன்றும். காணாமற் போன குழந்தையின்

சட்டையை, விளையாட்டுச் சாமானையோ பார்த்தால் உடனே அக்குழந்தையும் அதன் செயல்களும் நினைவுக்கு வந்து உள்ளத்தை வருத்தும், சீதை கரிய நிறமுடைய எதைக் கண்டாலும் இராமனின் உருவெளித்தோற்றம் நினைவில் வரப்பெற்று வாடினாளாம். காதலர்கள், இங்ஙனம் ஒருவரை ஒருவர் நினைவுகூர்ந்து வருந்துவர். மனத்தின் அடித்தளத்தில் இச்சிந்தனை இயைபு செயற்படுகிறது.

பாரி மகளிர் முன்னைய மாதம் முந்திய பௌர்ணமி நிலவில் தந்தையுடன் இருந்தார்கள். குன்றும் அவர்கள் வசமே இருந்தது. அவர்கள் அரண்மனை வாழ்வில், அளவற்ற வளச் சூழ்நிலையில், தந்தையின் அன்பின் தோய்ந்திருந்தார்கள். எல்லாம் கணப்பொழுதில் பொய்யாய், பழங்கதையாய், கனவாய்ப்போய்விட்டன. மறுமாதம், அடுத்த முழுநிலவு நாளில் அவர்கள் கபிலருடன் கானகத்தே நடந்து போகிறார்கள். அன்றும் பௌர்ணமியாதலால், அவர்களுக்குச் சென்ற மாதத்து நினைவு வருகிறது. ‘அடடா, போன திங்களில் எப்படி இருந்தோம்! இந்தத் திங்களில் இப்படி ஆய்விட்டோமே’ என்று வருந்துகிறார்கள். அந்த வருத்தம் ஒரு சிறந்த பாடலாக உருப்பெறுகிறது.

**அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவில்**

**எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்!**

**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவில்**

**வென்றுஎறி முரசின் வேந்தர்எம்**

**குன்றும் கொண்டார்! யாம் எந்தையும் இலமே! (புறம் - 12)**

‘போன மாதம் கடந்த முழுநிலவில் எம் தந்தையையும் நாங்கள் பெற்றிருந்தோம் எம் குன்றும் பிறரால் கொள்ளப்படவில்லை. ஆனால் இம்மாதம், இந்த முழுநிலவில் வெற்றி முழங்கும் முரசினை உடைய மூவேந்தர்கள் எம் குன்றைப் பறித்துக் கொண்டுவிட்டனர். நாங்கள் எங்கள் தந்தையையும் இழந்துவிட்டோம்!’’

இது ஒரு கருத்து அறிவிப்புப் (mere statement) போல் உள்ளது. ‘ஐயோ வருந்துகிறோமே, இப்படியாயிற்றே’ என ஒரு சொல்கூட இல்லை. பிறகு எவ்வாறு இது அவலவுணர்வை அப்படியே பிழிந்து தருகிறது? ‘அன்று அப்படியிருந்தோம்’ இன்று இப்படி ஆய்விட்டோம்’ என்ற முரண்சுவையும் அவலத்திற்கு அடிப்படை என்றாலும், அதை நிலவுமேல் வைத்து இயைபுச் சிந்தனையாக்கி இருப்பதனாலேதான் இச்செய்யுள் ஒருசில அடிகளில் ஈராயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும், அவல உணர்வை ஒன்றுபோல் விளைவித்து, உள்ளத்தில் நிலைத்த இடம் பெறுகிறது.

ஒப்பிலக்கியம்

குறிப்பு

## 12.3.2 குறிஞ்சிப்பாட்டு – ஓர் உளவியல் பாட்டு

குறிஞ்சிப்பாட்டு, அகத்திணையில் 'அறத்தொடு நிலை' என்னும் துறையைச் சார்ந்தது. 261 அடிகளை உடைய இந்நெடும்பாடலில் உளவியற் கூறுகள் பளிச்சிட்டு நிற்கின்றன. தாயிடம் தோழி தலைவியின் காதல் வாழ்வைப் பற்றி எடுத்துக் கூற வேண்டிய கட்டம். திருமணத்திற்குத் தாய் இசைவு தரும் வகையில் கூறவேண்டுமே தவிர, எதனையும் கெடுத்துவிடக்கூடாது. ஆகவே தோழி தாயிடம் மிகவும் தயவாகக் கூறத் தொடங்குகிறாள். குழந்தை,'அம்மா, அம்மா' என்று நயந்து கூப்பிட்டால் ஏதோ கேட்கப்போகிறது' என்றுதானே பொருள்படும். இங்கும் தோழி,'அன்னாய், வாழி வேண்டு அன்னை' என்று தொடங்குகிறாள். 'தாயே' என்றவள். மீண்டும் தாயே என்கிறாள். 'அம்மா! நீ வாழ்வாயாக! நான் சொல்வதை விரும்பிக் கேட்பாயாக! தாயே!'' இவ்வாறு தொடங்குவதிலிருந்தே பின்னே சொல்லப்போகும் கருத்தின் ஆழம், அகலம் அச்சம் ஆகியவை உணர்த்தப்படுகின்றன.

எட்டு அடிகள் வரை தாயின் பல்வேறு துன்பங்களையும் அடுக்கிக் கூறி ஏதோ தாயின் கவலைக்காகத் தான் கவலைப்படுபவள் போல எட்டாவது அடியில் 'அலவுற்று எய்யாமையலை நீயும் வருந்துதி!'' என்கிறாள் தோழி. தாயின்பால் அக்கறையுள்ளவள் போல் அவள் பேச்சைத் தொடங்குவது கவனிக்கத்தக்கது. தாயைத் தன்முகமாகச் செவிசாய்த்துக் கேட்கவைக்க இவ்உத்தியைப் பயன்படுத்துகிறாள் தோழி.

அடுத்து 26ஆம் அடி வரை தோழி, தாயின் அருமருந்தன்ன செல்வி வருந்தும் நிலையை விவரித்துக் 'கையற்று ஆனாச் சிறுமையின் அவளும் தேம்பும்' என்று கூறித் தலைவியின் நிலையைக் கூறுகிறாள். பின்னர் 29ஆம் அடியில் 'இருபேர் அச்சமோடு யானும் ஆற்றலேன்' என்று கூறி இங்ஙனம் விட்டிலே நீங்கள் இருக்கவும் அழுவதைப் பார்த்து எனக்கும் அழுகை அழுகையாக வருகிறது என்பாள், போலப் பேசுகிறாள் வீட்டிலே ஒரு சிக்கல் ஏற்பட்டுள்ளது. அச்சிக்கலைத் தீர்க்கும் முறையிலே அவள் நிகழ்ச்சிகளை விரித்துச் செல்வது. உளவியலுக்கும் கட்டமைப்புக்கும் பொருந்துகிறது. எனவே நிகழ்ந்தவை நிகழ்ந்தபடி நான் சொல்லப் போகின்றேன். சினமின்றிக் கேட்பாயாக!'' என்கிறாள் தோழி. 33ஆம் அடியில் 'நிகழ்ந்த வண்ணம் நீ நனி உணரச் செப்பல் ஆன்றிசின் சினவா தீமோ' என்று அவள் கூறுவதைக் காண்கிறோம்.

''ஒரு நாள் நீ தானே'' தினைப்புனம் காக்கச் செல்லுங்கள்' (39) என்று அனுப்பினாய்! அன்று மழை பொழிந்தது. அதனால் அருவியாடினோம். அப்படியே பாடிக்கொண்டு, கூந்தலை உலர்த்தி மலர்களைச் சேர்த்துப் பாறையில் குவித்தோம்!'' - இவ்வாறு கதை கூறுவது போலத் தாயின் மீது பழி போட்டுப் பேசுவது நோக்கத்தக்கது.' மேலும் 99 மலர் வகைகளை இங்குக் கபிலர் பெருமான் தோழி கூற்றாகக் கூறியுள்ளார். நூறு என்பதைவிடத் தொண்ணூற்று ஒன்பது' என்றால் கூடுதலாகச் சொல்வது போல ஒலிக்கிறது. மலர்களை அடுக்கிக்

*Self-Instructional Material*

கூறியவருக்கு நினைத்தால் இன்னும்ஒரு மலரா கிடைக்காது போய்விடும்? எனவேதான் உளவியல் உணர்ந்த கபிலர் 99 இல் நிறுத்தியிருக்க வேண்டும்.

பிறகு மர நிழலில் இருந்தது – வேட்டை நாய்கள் துரத்த, யானை மதங்கொண்டு பிளிறி ஓடிவரத் தலைவன் ஓடி வந்து, அவ்யானையை விரட்டியது – அவனால் காப்பாற்றப்பட்ட நிகழ்ச்சிகள் - தலைவன் தலைவியரிடையே காதல் ஏற்பட்டது. – பகற் - பொழுதை இவ்வாறு போக்குகையில் அவன் அருவி நீர் குடித்துச் சத்தியம் செய்தது - மாலையில் மகளிரை ஊர்ப்புறத்தே உள்ள ஊருணி வரை கொண்டு வந்துவிட்டு விட்டுப்போனது – அன்று முதல் நாள் தோறும் அவன் வருவது – அவன் வருகிற வழியில் சிங்கம், புலி, கரடி போன்றவற்றுடன் பிற வழித்துன்பம் அனைத்தும் இருப்பது - 'அதனால் தலைவனுக்கு ஏதும் நேர்ந்தால் என்ன ஆகும்?' என்று தலைவி வருந்துவது என இவ்வாறு நிகழ்ச்சிகளைத் தருக்க முறைபடி, அழகாகக் கூறிச் செல்கிறாள் தோழி.

**வலைப்படு மஞ்ஞையின் நலம்செலச் சாஅய்**

**நினைத்தொறும் கலுழுமால் இவளே…**

**வழுவின் வழாஅ விழுமம் அவர்**

**குழுமலை விடரகம் உடையவால் எனவே" (250-261)**

என்பது குறிஞ்சிப்பாட்டின் முடிவு. 'தலைவி இதை நினைக்குந்தோறும் அழுகிறாள்" என்று தோழி முடித்து விடுகின்றமை. அக்கண்ணீரை நிறுத்துவதும் நிறுத்தாததும் உங்கள் பொறுப்பு' எனத் தாயிடமே விட்டுவிடுவது போல உள்ளது. 'உண்மையில நீயும் வருந்துகிறாய், இவளும் வருந்துகிறாள், இரண்டு பேருக்கும் இடையே இருக்கும்யானும் வருந்துகிறேன்' என்று மிகவும் அக்கறையோடு தொடங்கிய அவள், தலைவியைத் தலைவனுக்கே மணம் முடித்துக் கொடுத்துவிட்டால் எல்லோருடைய துயரங்களும் நீங்கும்' என்றல்லவா முடித்திருக்க வேண்டும்? உலகியலில் மாந்தருக்கு எதிருணர்வே மிகுதி. அதுவும் இது போன்ற சிக்கலான சூழல்களில அவர்களிடம் எதிருணர்வே மேலோங்கி நிற்கும். எனவே இனிச் செய்யக் கூடியதைச் சொல்வதைக் காட்டிலும் சொல்லாமல் விடுவதே மேல் என நினைத்துவிட்டு விடுகிறாள் தோழி. இங்ஙனம் முதலிலிருந்து முடிவுவரை குறிஞ்சிப் பாட்டு உளவியற்பாங்கு மிக்க கட்டமைப்பு உடையதாய்த் திகழ்கிறது.

## 12.3.3 அகப்பாடல் மரபுகள்

அகப்பாடலில் வரும் துறைகள், புனைமரபுகள் பல உளவியலோடு தொடர்புடையனவாய் இருத்தலை உய்த்துணர்தல் தரும். எத்தனையோ மனித மனக்கூறுகள் அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் படம் பிடிக்கப்பட்டுள்ளன. 'சிறைப்புறம்' என்ற

துறையும் துறைத் தொடர்பும் உடைய பாடல்களில் தலைவனிடம் நேர்முகமாகக் கூறவியலாதன கூறப்படுகின்றன. உளவியல், பண்பாடு, நாகரிகம் ஆகியன கருதியே இங்ஙனம் மறைமுகமாகக் கூறும் மரபுகள் போற்றப்பட்டு வந்துள்ளன. குறிப்பால் உணர்த்தும் இம்மரபு நேர்முகமாகக் கூறுவதினும் வலுவுடையது என்பதை அன்றைய உளவியற் கவிஞர்கள் உணர்ந்திருந்தினராதல் வேண்டும்.

குறிப்பு

'செலவழுங்குதல்' என்ற துறையும் துறைத்தொடர்பும் உடைய பாடல்களிலும் இவ்வாறு உளவியற் சார்பான கருத்துக்கள் பல உள்ளன. தலைவன் தானே செலவழுங்குதல், தோழி செலவழுங்குவித்தல் என்பன தலைவன் செல்வானல்லன் என்பதைக் குறிப்பனவல்ல. சிறிது பொழுது தலைவியை ஆற்றி இருந்து பிறகு பிரிவதற்கே தலைவன் அங்ஙனம் தயங்குகிறான்.

**தொல்காப்பியரும்,**

**செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே**

**வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும்" (தொல்.பொருள்.183)**

என்றார், இல்லையென்றால் இத்துறை எவ்வாறு பாலையுள் அடங்கும்? பிரிவது தானே பாலையாகும்? பிரியவில்லை என்பதோ பிரியேன் என்பதோ எங்ஙனம் பாலையாகும்? இப்பாடல்களிலும் பிரிவுணர்வே தலைதூக்கி நிற்பதனால், உணர்வு நிலைகளைக் கூர்ந்து நோக்கிய அறிஞர்கள் இவற்றையும் பாலையுள் சேர்ந்தனர்.

இங்ஙனம் சங்கப்பாடல்கள் உளவியல் நோக்குடன் அணுகத்தக்கன. இக்காலக் கதை இலக்கியங்கள் பல உளவியலறிவுடன் எழுதப்படுகின்றன. பாலியல் உளவியற் சிக்கல்களைக் கொண்டு விளங்குவதால், அவை சிறந்த ஆய்வுக் களமாகப் பயன்படுகின்றன. இலக்கிய ஆய்வை உளவியல் நோக்கில் நிகழ்த்த அடிப்படை உளவியற் கூறுகளையேனும் நாம் கற்றுக்கொள்ள முயல வேண்டும்.

## 12.4 ஒப்பிலக்கிய நோக்கில் உளவியல் அடிப்படையில் நாட்டுப்புறப்பாடல் ஆய்வு

நாட்டுப்பாடல் ஆய்வின்கண் குறிப்பிடத்தக்க பெரும்பணி ஆற்றியவர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த பேராசிரியர் வி.ரட்லவ் (V.Radiov) ஆவார். மத்திய ஆசியக் கண்டத்தில் வாழும் தார்த்தாரியர்களின் (Tartars) வாய்மொழிப் பாடல்களைத் தொகுத்து, அவற்றில் கையாளப் பெற்ற இலக்கிய உத்திகளைப் பகுத்தாய்த்து கூறினார். வாய்மொழி இலக்கியத்தில் பாடுவோர் கேட்போர் தொடர்பு எத்தகையது பாடுவோரின் மனநிலையில் உள்ள இன்பம், துன்பம், பக்தி உள்ளிட்டவற்றை உளவியல் அடிப்படையிலும்ள இவை பாடப்பெறும் சமூகவிழாக்கள் யாவை இப்பாடல்களைப் பகுத்து ஆய்வதனால் புலனாகும் இலக்கிய உத்திகள் எவையெவை என்பன இவர் தெளிவுறுத்திய செய்திகளாகும்.

1911 இல் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்த திரு.எச்.எம்.சாடுவிக்கு (Chadwik) பழம் செருமானியரது காப்பியப்பாடல்களையும் கிரேக்கக் காப்பியப் பாடல்களையும் ஒப்பிட்டாய்ந்து அவை இரண்டும் வாய்மொழி இலக்கியமாகத் தோன்றியனவே என்றார். மேலும் வாய்மொழி இலக்கியத்தின் உலகப்பொதுமையை வலியுறுத்தினார். அதன் இலக்கிய உத்திகள் வரிவடிவ இலக்கியத்திற்கும் உரியனவே என நிலை நாட்டினார். இலக்கியத்தோற்றம் (The Growth of Literature) என்பது அவருடைய சிறந்த நூலாகும். மில்மன் பரி (Millman Parry) என்ற அமெரிக்கர் யூகோசிலேவிய நாட்டுப் பாடல்களைத் தொகுத்து, அவற்றை ஹோமரின் காப்பியங்களோடு ஒப்பிட்டு ஆராய்ந்து இலியாது, ஒதீசி என்ற அவ்விரு காப்பியங்களும் அந்நாட்டுப் பாடல்களோடு பெரிதும் ஒத்திருப்பதைக் கண்டார். இவ்வகையில் ஹோமரின் காப்பியங்கள் வாய்மொழிப் பாடல்களாக வழங்கி எழுத்து வடிவம் பெற்றனவே என ஐயத்திற்கு இடமின்றி, அறிவியல் முறைப்படி நிறுவிக்காட்டினார். இவரது ஆராய்ச்சி முடிவை முதற்கண் முறைப்படி ஏற்கமறுத்த அறிஞர் உலகம் பின்னர் இவரை 'ஹோமர் ஆராய்ச்சித் துறையில் ஒரு தார்வின்' எனப் புகழலாயிற்று. வீரயுகத்துக்குரிய பழைய வீரப்பாடல்களனைத்தும் வாய்மொழி இலக்கியமாகவே அமைவன என்பது இவர் கருத்து. இக்கருத்தைப் பின்பற்றி சி.எம்.பௌரா (C.M.Bowra) கிரேக்க வீரயுகத்தை ஆராய்ந்துள்ளார். திரு என். கே. சித் தாந்தா இராமாயண, மகாபாரதமாகிய இதிகாசங்களின் அடிப்படையில் 'இந்திய வீரயுகம்' பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்.

நாட்டுப்புறக் கதைகள் (Fables and fairy tales), கதைப் பாடல்கள் (Ballads) போல்வன எவ்வாறு நாடுவிட்டு நாடு பெயர்ந்து, பரவிச் செல்கின்றன என்பது இவ்ஆய்வின் அடிப்படையாக இருந்த காலம் ஒன்று உண்டு. இந்நாட்டுப் புறக் கதை கருத்துக்கள் (folk – tale themes) எங்ஙனம் எழுத்து வடிவ இலக்கியங்கட்குள் புகுந்து நிலைபெறுகின்றன என்பதும் ஆராயப்பட்டது. வாய்மொழி இலக்கியத்திற்கும் எழுத்துமொழி இலக்கியத்திற்கும் இவ்வாறு இடைத்தொடர்பு இருந்து கொண்டேயிருப்பதை இவர்கள் எடுத்துக் காட்டினர். இலக்கிய வகைகளின் தோற்றமும் வளர்ச்சியும் காண்பதற்கும், இலக்கிய உத்திகளை ஆராய்வதற்கும் இக்கல்வி இன்றியமையாததென அனைவரும் ஏற்றுக்கொண்டனர்.

நெடுங்காலமாக இலக்கியங்கட்கு உதவிய அடிக்கருத்துகள் நாடுவிட்டு நாடு பெயர்ந்த வரலாறே ஆராயப்பட்டது. பிறகு நாட்டுப்பாடல் ஆய்வாளர்கள் ஒவ்வொரு வகை இலக்கியத்திற்கும் உரிய மூலக்கூறுகளை வாய்மொழிப் பாடல்களில் தேடத் தொடங்கினர்.

பலமொழிகளிலும் வழங்கும் பழங்கதைகள் (Legends) புராணக்கதைகள் (Myths), கற்பனைக்கதைகள் (Fairytales), ஆகியவற்றை ஒப்பிட்டாய்தல் பிரான்சிலும் செருமனியிலும் பெருகியது.

இது இலக்கிய அடிக்கருத்து ஒப்பீடாக (Thematelogy) ஆயிற்று. ஐரோப்பாவைப் பொறுத்தவரை எல்லா மொழி இலக்கியங்களிலும் அமைந்துள்ள அடிக்கருத்துகள் ஏறத்தாழ ஒரு தன்மையினவாகயிருப்பதையும் இவற்றுள் பலவற்றுக்கு நாட்டுப்பாடல் அடிப்படையாயிருப்பதையும் கண்டறிந்தனர். உரிப்பொருள் சார்ந்த தலைமைக் கருத்துக்கள் (ஆழவகைள), அடிக்கருத்துக்கள் (Themes) பற்றிய ஆய்வாகி, பல மொழி இலக்கியங்களிடையேயுள்ள 'உறவை' ஆராய்தற்கு இது வழிகோலியது.

இதுபோல, இலக்கியத்தின் புறநீர்மை சார்ந்த இலக்கிய வடிவம் பற்றிய (Morphology) ஒப்பீடாகவும் இது வளர்ச்சி பெற்றது. ரஷியாவிலும் அதனைச் சார்ந்த நாடுகளிலும், ஸ்காண்டிநேவியாவிலும் நாட்டுப் பாடல்கள் இன்றும் வழங்குகின்றன. அங்கு இவ்ஆராய்ச்சி பெரிதும் போற்றப்படுகின்றது என்று கூறுவர்.

பின்னர் ஒவ்வோர் இலக்கிய வகைக்கும் நாட்டுப் பாடல் மூலங்காணுதல் என இவ் ஆய்வு மிகைப்படுத்தப்படலாயிற்று. எனவே, ரெனிவெலாக்கு இவ் ஆய்வினை 'ஒப்பியல் ஆய்வு' எனக் கொள்ளுதல் இயலாதென்றும் இது 'ஒரு நாட்டுப் பாடல் ஆய்வே' என்றும் கூறுவர். இன்றைய ஒப்பியல் இலக்கிய ஆய்வில் முன்போல முழு இடமும் இதற்கு அளிக்கப்படவில்லையெனினும் அவ்ஆய்வின் ஒரு பகுதியாக இது ஏற்கப்பட்டுள்ளது.

தமிழிலும், தமிழ் வழங்கும் இலங்கையிலும், ஏனைய தென்னிந்திய மொழிகளிலும் இன்றும் நாட்டுப்பாடல்கள் மிகுதியாக வழங்கி வருகின்றன. கண்ணகியைப் பற்றிய நாட்டுப் பாடல்கள் தமிழகத்திலும், மலையாளத்திலும், இலங்கையிலும் வழங்குகின்றன.

வடமொழியிலும் தமிழிலும் காணப்படும் பல புராணக்கதைகள், நீதிக்கதைகள், பழங்கதைகள் போல்வன உளவியல் நோக்கில் ஒப்பிட்டு ஆராயப்பட வேண்டியனவாகும். இதற்கு இருமொழி அறிவும் ஏற்றத்தாழ்வற்ற நடுநிலை மனப்பான்மையும் வேண்டும். ஒரு மில்மன்பரியோ, பௌராவோ கிடைப்பதற்குள் நம் நாட்டுப் பாடல்கள் பல வழக்காறற்றுவிடக் கூடும்.

## 12.5. உளவியல் அணுகுமுறையில் ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் (Comparative literature and Translation)

ஒரு மொழியில் (மூலமொழி) உள்ள கருத்துக்களைப் பிறிதொரு மொழியில் (பெறுமொழி) பெயர்த்தலே மொழி பெயர்ப்பாகும். அறிவுப் பரவலாக்கத்திற்கு மொழிபெயர்ப்பு ஆற்றிவருகின்ற பணி மிகப்பெரியது. அறிவியல், தொழில்நுட்ப வளர்ச்சியின் காரணமாக எல்லைகளைக் கடந்து, உலகமானது ஒரு ஒருங்கிணைந்த (united) பிரதேசமாக மாறி வருகின்ற இன்றைய சூழலில் மொழிபெயர்ப்பின் பாங்கு இலக்கிய வளர்ச்சிக்கு அவசியமாகிறது.

மனிதனின் பன்முகத் தேவைகள் காரணமாக மொழி பெயர்ப்பு இன்று பல துறைகளில் ஆளுமை செலுத்தினாலும் அதன் செல்வாக்கு மிகப்பழமையானதும் மிகப்பிரபலமானதும் கூட. பொதுவாக பழைய இலக்கியங்கள் கவிதைகளாகவே இருந்த தொடக்க காலத்தில் கவிதை மொழிபெயர்ப்பே போற்றப்பட்டது. பின்னர் இலக்கிய வளர்ச்சி காரணமாக மொழிபெயர்ப்பு என்பது

- கவிதை மொழிபெயர்ப்பு
- உரைநடை மொழிபெயர்ப்பு
- புனைகதை மொழிபெயர்ப்பு
- நாடக மொழிபெயர்ப்பு

என்று பரந்து விரிந்து வளர்ந்தது. இதுவும் ஒருவகையில் பிறமொழியில், பிறப் படைப்புகளில் ஒப்பிட்டு காணும் ஆவல்மிக்க படைப்பாளியின் உளவியலை சார்ந்தே அமைகிறது.

## 12.5.1 ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும்

**இரட்டைக் குழந்தைகள்**

ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் ஒட்டிப்பிறந்த இரட்டைக் குழந்தைகள் என்றே சொல்லலாம். தன் தாய் மொழி அல்லாத வேறொரு மொழியைக் கற்ற படைப்பாளன் அம்மொழியில் உள்ள இலக்கியத்தைச் சுவைக்கிறான். அவ்விலக்கியத்தில் உள்ள கருத்துக்கள் அவன் மனதைக் கவர்கின்றன. அந்த இலக்கியத்தில் காணப்படும் இலக்கியச் செழுமையைத் தாய்மொழியாக்கிக் கொண்டுவர வேண்டும் என்ற வேட்கையினால் உந்தப்பெற்று அதை மொழி பெயர்க்கின்றான். அந்த மொழிபெயர்ப்பு இலக்கியங்களைக் கற்கும் வாசகர்கள் அவற்றைத் தாய்மொழி இலக்கியத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கின்றனர். அத்தகைய ஒப்பீட்டின் வாயிலாக இலக்கியத்தின் தரம் நிர்ணயிக்கப்படுகிறது. இதுவே மொழி பெயர்ப்பின் மூலமாக ஓர் இலக்கியத்திற்குக் கிடைக்கும் உலகப் பயன் ஆகும். அப்போதுதானே ''யாதும் ஊரே யாவரும்'' கேளிர் என்ற பண்டைத் தமிழர்தம் உலகம் தழுவிய நோக்கு உலகிற்குத் தெரியவரும்!

தமிழ் இன்று செவ்வியல் மொழியாக உலக மொழியறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. செவ்வியல் மொழியாகத்தமிழும், கிரேக்க இலக்கியங்களுக்கு இணையாகப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் மொழிபெயர்ப்பும் அதன் வாயிலாக விளைந்த ஒப்பிலக்கிய நோக்குமே இதற்கு அடிப்படைக் காரணிகளாகும்.

## 12.6 ஒப்பிலக்கியம் திறனாய்வு நோக்கில்

குறிப்பு

**1 உளவியல் அணுகுமுறை -**

உளவியல், உள்ளத்தில் கோலங்களையும் கோணங்களையும், அதன் விழைவுகளையும் விளைவுகளையும் ஆராய்கிற ஓர் அறிவியலாகும். உயிரியலின் ஒரு பிரிவாக முன்னர்க் கருதப்பட்டு வந்த இது. குழந்தை உளவியல், மிகை (Abnormal) உளவியல், தொழிற்சாலைப் பணி உளவியல் (Industrial Psychology), சமுதாய உளவியல் முதலிய பல வகைகளையும் மற்றும் நடத்தை முறை (Behaviouristic) ஒன்றிப்பு முறை (Gestalt), அலசல் அல்லது பகுப்பு முறை (Analytic) முதலிய பல அணுகுமுறைகளையும் கொண்டுள்ளது. இவற்றுள் ∴பிராய்டியம் என்பது உளவியலை மருத்துவ முறைக்குட்படுத்தி, உளவியல் பகுப்பாய்வாக (Psycho Analysis) ஆராய்கிறது. இவருக்குப் பிறகு, குஸ்தவ் யுங், ஆட்லர், எரிக் எரிக்சன், எரிக் ∴புரோம், சலீவான், லக்கான் முதலிய பல உளவியல் அறிஞர்கள் இலக்கியத்தில் உளவியலைப் பொருத்திப் பார்ப்பதில் ஆர்வம் காட்டினர்.

இலக்கியம், ஒரு படைப்பாளியின் கைதேர்ந்த செய்திறனால் மட்டுமல்ல – பிரேத்தியேகமான ஒரு மன எழுச்சியினாலும் அமைவதாகும். ஒரு மனத்தின் வழியாக இன்னொரு மனத்துடன் அது பேசுகின்றது. மனித வாழ்வின் அனுபவங்களையும் மனித நடத்தையையும், அவற்றிற்கு அடிப்படையாக உள்ள மனத்தையும் (தன்னால் முடிந்த அளவு) ஆழமாகவும் அழகாகவும் சித்திரிக்க முயலுகிறது. இலக்கியத்தில் உள்ளம் ஓர் உண்மையாதலின், உளவியல் அதில் அக்கறை கொள்வதில் வியப்பில்லை. ‘மனித உள்ளத்தின் உணர்வே(human psyche) எல்லா அறிவியல்களுக்கும் கலைகளுக்கும் கருவறையாக ஆராய்கிற உளவியல், இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிக்கும் ஏற்புடையதாக இருக்க முடியும்’ என்று யுங் (பு.துரபெ) சொல்லுவார்.

இந்த ஏற்புடைமை, அதாவது இலக்கியத் திறனாய்வில் உளவியலின் பங்களிப்பு முக்கியமாக ஆறு நிலைகளில் காணப்படுகிறதெனலாம். அவை

1. இலக்கியப் படைப்பாக்கத்தின் அல்லது அது தோற்றம் பெறுவதன் வழிமுறைகளை உளவியல் நிலையில் புலப்படுத்துதல்
2. படைப்பாளியின் உள்ளத்து நிலையையும் அதற்குரிய காரணங்களையும் அறியக் கொண்டு வருதல். அதாவது படைப்பாளியின் சுயவரலாற்றைப் படைப்பில் காணுதல்
3. குறிப்பிட்ட இலக்கியத்தில் காணப்பெறுகின்ற கதைமாந்தர்களின் உணர்வுகளையும் செயல்களையும் விளக்குதல்

4. இலக்கியத்தில் தொல்படிமம்(Archetype) முக்கிய இடம் பெறுகிறது என்பதைக் கருதுகோளாகக் கொண்டு அதன் உருவாக்கத்தைப் புலப்படுத்துதல்
5. குறிப்பிட்ட இலக்கியப் படைப்பிலுள்ள தனிச்சிறப்பான சொற்களையும் தொடர்களையும் மற்றும் சிறப்பான உத்திமுறைகளையும் உள்ளத்து உணர்வுப் பிரதிபலிப்புக்களாக இனங்கண்டு விளக்குதல்
6. வாசகரிடம், இலக்கியம் ஏற்படுத்துகிற உறவையும் தாக்கத்தையும் காணுதல்.

சுருக்கமாகச் சொல்வதானால், இலக்கியத்தின் உள்ளர்த்தங்களையும் ஆழங்களையும் உளவியலின் வெளிப்பாடுகளாக உளவியல் திறனாய்வு பார்க்கிறது. மேலும், இலக்கியத்தின் மொழியமைப்பிலும், மற்றும் அதன் நிகழ்வுகளிலும் செய்திகளிலும் பிற கூறுகளிலும் காணப்படக்கூடிய உளவியல் பிரதிபலிப்புக்களை அது தேடுகிறது.

## 12.6.1 படைப்பு வழிமுறை

உளவியல் திறனாய்வு, குறிப்பிட்ட ஓர் இலக்கியம் என்றில்லாமல், ஒரு பொதுவான நிலையில் இலக்கியத்தின் பிறப்பு அல்லது வழிமுறை பற்றி அறிதற்கு விளக்கமுறையில் அக்கறை கொள்கிறது. இலக்கியம் எவ்வாறு படைக்கப்படுகிறது. அதன் வழிமுறைகள் என்ன என்பதற்குரிய உளவியல் நிலையிலான அகவயக் காரணங்களை விளக்குவதற்குரிய முயற்சி, பல காலமாகவே இருந்துவருவதுதான். முக்கியமாகப் புனைவியல்காரர்கள் இதில் ஈடுபாடு காட்டினர். வேர்ட்ஸ் வொர்த்தின் பிரசித்தமான கட்டுரையில் (Preface to Lyrical Ballads) இதனை வெகுவாகக் காணமுடியும். உணர்வுகளிலும் உற்சாகத்திலும், அனுபவங்களை உள்வாங்கிப் புலப்படுத்திவதிலும் ஏனைய மனிதர்களிலிருந்து, கவிஞர்கள் சற்றேனும் வித்தியாசப்பட்டவர்கள் என்றும், கவிதை ஒரு வித்தியாசமான மனஎழுச்சியினால் உருவாக்கப்படுகிறது என்றும் புனைவியல்காரர்கள் பேசுகிறார்கள். இத்தகைய 'மனஎழுச்சி' யை உண்டாக்கிக் கொள்வதற்காகப் பல கவிஞர்கள் குடிப்பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்கிறார்கள் என்றும் சொல்லப்படுவதுண்டு. கவிஞர்கள் சிலர் பெருங்குடிமக்களாகப் போதைகளுக்கு அடிமைப்பட்டுப் போவதுண்டு என்பது உண்மையே. ஆனால் எல்லாரும் அல்ல் சிலர் மட்டுமே அந்நிலைக்கு ஆளாகின்றனர். மேலும் உரைநடை (சிறுகதை, நாவல்) எழுத்தாளர்கள், இத்தகைய போதை எழுச்சியை ஒரு தேவையாகக் கருதுவதில்லை.

உணர்வு வயப்படுதல் என்பது பற்றிய இத்தகைய கருத்துக்கள், சற்று வேறுவகையில், பகுப்புமுறை உளவியல் ஆராய்ச்சியில்,'நரம்பியல் செயல் திரிபுகளாக' (Neurosis) விளக்கப்படுகின்றன. 'படைப்பு எழுத்தாளர்களும் பகல்நேரக் கனவு காணுதல்' என்னும் தனது கட்டுரையில், ∴பிராய்டு இவ்வாறுதான் படைப்பு வழிமுறைகளுக்கு

விளக்கம் காண முயலுகிறார். நனவிலி மனத்தின் (Unconsciious mind) ஒரு வெளிப்பாட்டு முறையாக அதனை அவர் பார்க்கிறார். ‘பிள்ளைப் பருவத்தில் குழந்தைத்தனமான விளையாட்டுக்கள் என்பது இயல்பு. வயது ஏறிவரும் காலத்தில் அதனைவிடுத்து, அதன் பதிலியாக,‘விநோதப் படுத்தலில்’ (psychic masochism) அவன் செயலைச் - சாதாரணமான சங்கதியை – செய்தியை – செயலைச் - சாதாரணமாக, இயல்பாகப் பார்க்காமல் ஓர் அற்புதமான – மாயமான – ஆற்றலாகவும் - பொருளாகவும் ஒரு கனவுத்தோற்றத்தின் தன்மையோடு பார்த்தல், விநோதப்படுத்தல் ஆகும்.

இத்தகைய விநோதப்படுத்தலை வெளிப்படுத்துவதற்குச் சாதாரண மனிதர்கள் கூசுகிறபோது, நரம்பியல் செயல் திரிபு கொண்டவனோ (அதாவது மனநிலையில் மாறுபாடு கொண்டவன்) அந்த விநோதங்களை வெளியே புலப்படுத்திக் கொள்கிறான்’ என்று அக்கட்டுரையில் பின்னணியில் இருப்பவை பாலியல் உணர்வுகளை முதன்மையாகக் கொண்ட நிறைவேறப்படாத ஆசைகளே என்றும், இவையே விநோதங்களின் வாசகனும் இத்தகைய மனநிலை காரணமாகவே, குறிப்பிட்ட கலைவடிவத்தில் ஈடுபாடு கொள்கிறான். மேலும், அத்தகைய விநோதப்படுத்தலில் தன்னை அவன் இனங்காணுகிறான் என்பதும் அவர் வாதம். இத்தகைய வாதத்தைப் பின்பற்றுகின்ற சிலர் இன்னும் ஒரு படி மேலே சென்று,‘கவிதைப் படைப்பு வழிமுறை என்பது, வலியில் மகிழ்ச்சி பெறுகின்ற – முக்கியமாகப் பாலியல் நிலையிலான அத்தகைய மகிழ்ச்சியைப் பெறுகின்ற – (psychic masochism) ஒரு தற்காப்பு உத்தியே’ என்று வருணிக்கின்றனர்.

கலைப்படைப்பை நரம்பியல் செயல் திரிபோடு சேர்த்து வைத்துப் பேசுவதை உளவியல் அணுகுமுறையில் வல்ல பல திறனாய்வாளர்களே மறுக்கின்றனர். ‘நரம்பியல் திரிபுக்கும் கவிதையாக்கத்திற்கும் இடையே பெரும் வேறுபாடு உண்டு. இதனை உணர்வது அவசியம்’ என்று கென்னத்பர்க் கூறுகின்றார். நரம்பியல் செயல் திரிபு கொண்டவன். விநோதமாக்குதலுக்கு அல்லது அரை மயக்கக் கற்பனையின் ஆதிக்கத்திற்கு உட்படுகிறவன். ஆனால் கவிஞன், விநோதமாக்குதலைக் கட்டுப்படுத்தி அதனை ஆள்கிற திறனுடையவன்’ என்பார், லியோனல் ட்ரில்லிங். எனவே இரண்டையும் ஒன்றாகப் பார்ப்பது தவறு.

## 12.6.2 ஒத்துணர்வு

இன்றைய அழகியலில், உள்ளத்தின் செயலையும் வெளிப்பாட்டையும் கருத்திற்கொண்டு, கலைப்படைப்பின் பிறப்புக்கு ‘ஒத்துணர்வே’(நஅியவால) முக்கியமான காரணம் என்று கூறப்படுகிறது. ஒத்துணர்வு என்பது பிறருடைய மனவுணர்வோடு தன்னுடைய மனநிலையானது, உணர்வு அடிப்படையில் ஒத்துப் போதலைக் குறிப்பிடுகிறது. இன்னின்ன சூழ்நிலைகள், இன்னின்ன

உணர்வுநிலைகளை எழுப்பக்கூடியவை என்பதனை நம் கடந்தகால அனுபவங்களும் மரபுகளும் கற்றுத் தந்துள்ளன. இந்நிலையில், அத்தகைய சூழ்நிலைகளில் ஒருவரைக் காணுகிற போது, நம்மை நாமே அச்சூழ்நிலைகளில் ஏற்றிக் காணுகிறோம் பொதுவாக, அப்போது அவர் பெறக்கூடிய அல்லது அப்படிப் பெறுகிறார் என்று நாம் இயல்பாகக் கற்பனை செய்கிற உணர்வு நிலைகளை நாமும் பெறுகிறோம். இவ்வாறு பிறருடைய உணர்வுகளிலும் ஒருமித்து, அவர்களுடன் தன்னை – தன் உணர்வுகளை – ஒருசேர இனங்காண்பதே ஒத்துணர்வு ஆகும். இது, அறவியல் ஒத்துணர்வு, அழகியல் ஒத்துணர்வு என இரண்டாகப் பகுத்துக் காண்பதற்கு உரியது. அறவியல் ஒத்துணர்வில், கருத்தாப் பொருளாகிய (Subject) நாம், அதாவது, காண்போர் அல்லது கேட்போர் என்ற நிலையில் உள்ள நாம், நமது உணர்வு நிலையை இழப்பதில்லை் நமக்கும் கருவிப்பொருளாகிய (object) அனுபவவாளனுக்கும் இடைவெளி இருக்கிறது. மேலும், நம்முடைய மொத்த மனநிலை, கடந்த கால அனுபவங்களை, நிகழ்வு விருப்பங்கள் மற்றும் குறிப்பிட்ட சூழ்நிலைகள் முதலியவற்றிலிருந்து இந்த அறவியல் ஒத்துணர்வு முற்றிலும் விடுபடுவதில்லை. தவிர, அறவியல் ஒத்துணர்வின்போது வினைபடு நிலைக்கு யாதானும் ஒரு அளவில் நாம் இட்டுச் செல்லப்படுகிறோம். உதாரணமாக, ஒரு கிழவி கீழே விழுந்துவிடுகிறாள். – அழுகிறாள். அதனைப் பார்க்க நேர்ந்த நாம், வருத்தப்படுவதோடு நின்று விடுவதில்லை. அவளைத் தூக்கிவிடவும் முயலுகிறோம். இது ஒரு வகையில் பரிவுணர்வு (Sympathy) என்றே அறியப்படுகிறது.

அழகியல் ஒத்துணர்வு என்பது, உள்ளார்ந்த போன்மை ஆக்கத்தை (Inner imitation) அதாவது 'போலச்செய்தல்' என்பதற்குரிய ஓர் உந்துணர்வை நம் உள்ளத்தே தூண்டிவிடுகிறது. அதாவது, ஒரு பொருளை நாம் பார்க்கிறோம் அல்லது கேட்கிறோம் என்றால் அதன் தாக்கம் நம் உள்ளத்தில் அந்தப்பொருளை ஒத்த சலனங்களை மேலும் நிகழ்த்துகின்றன. பார்த்த – கேட்ட – பொருளின் போலச் செய்தல் நம் உள்ளத்தே நிகழ்கிறது. மேலும், இத்தகைய அழகியல் ஒத்துணர்வின்போது, நம்மை நாமே 'மறந்து' ஒருவகையில் நிபந்தனையற்ற முறையில் கருவிப் பொருளோடு ஒன்றிப்போய் விடுகிறோம். முக்கியமாக, இத்தகைய அழகியல் ஒத்துணர்வின் அடிப்படையிலேயே கலை - இலக்கியம் பிறப்பெடுக்கிறது என்று சொல்ல வேண்டும். மேலும், வாசகன், குறிப்பிட்ட ஒரு படைப்பின் மேல் ஈடுபாடு கொள்வதற்கும் இவ் அழகியல் ஒத்துணர்வே, முக்கியமான காரணமாகவும் அமைகிறது.

குறிப்பு

### 12.6.3 வாழ்க்கை வரலாற்றுத் திறனாய்வு

கலைஞனை ஏனைய மனிதர்களைப் போல் அல்லாமல் சமுதாயத்தில் அந்நியப்பட்டுப் போன ஒருவகையான நோயாளியாகப் பார்ப்பது, நரம்பியல் - உளவியல் ஆராய்ச்சியின் முக்கியமான ஒரு கருதுகோளாகும். இந்த அடிப்படையிலேயே ∴பிராய்டிய

குறிப்பு

உளவியலாளர்கள் படைப்பாளியின் (உளவியல் அளவிலான) சுயவரலாற்றினை அவனுடைய படைப்பிலுள்ள நிலைகளிலிருந்தும் அலைகளிலிருந்தும் எழுப்பி விளக்க முயலுகின்றனர். அத்தகையவர்கள், இதனை (முன்னதை விடவும்) பயனுடையதாகவும், வாய்ப்புடையதாகவும் கருதுகின்றனர். படைப்பாளியின் வாழ்க்கையை அவனைப் பற்றிய பல்வேறு குறிப்புக்களிலிருந்தும் தொகுத்து அறிந்து, அதன் மூலம் அவனுடைய வெற்றி – தோல்விகள் பற்றிய செய்திகளையும், நிலைகளையும், உருவாக்கிக்கொண்டு அவற்றை அவனுடைய படைப்புக்களில் - சொற்கள் முதற்கொண்டு பாத்திரப்படைப்பு வரையிலான பல்வேறு அம்சங்களிலும் - பொருத்திப் பார்த்து விளக்குவது, அல்லது படைப்பிலுள்ள இத்தகைய அம்சங்களிலிருந்து அவனுடைய வாழ்க்கை அனுபவங்களும் உணர்வுநிலைகளும் இன்னின்ன மாதிரியாக இருக்கக்கூடும் என்று வடிவமைப்பது உளவியல் அடிப்படையிலான வாழ்க்கை வரலாற்றுத் திறனாய்வின் (Biographical Criticism) நோக்கமாகும்.

இவ்வகையான திறனாய்வின் மூலம், லியோனாடா டாவின்சி முதலிய கலைஞர்களின், படைப்புக்களுக்கும் வேர்ட்ஸ்வொர்த், கீட்ஸ், ஷெல்லி, பைரன், கிப்ளிங், எட்கார் ஆலன்போ முதலிய இலக்கியவாதிகளின் எழுத்துக்களுக்கும் பின்னணியாகவும் காரணமாகவும் அவர்களின் தனிப்பட்ட பாலியல் நிலையிலான வாழ்க்கை இருப்பதாக ஆல்பர்ட் மொர்டல் (Albert Mordell) எனும் திறனாய்வாளர் எடுத்துக் காட்டுகிறார். இவர் ∴பிராய்டின் காலத்தவர். அவரால் பாராட்டப்பட்டவர். ‘படைப்பாளி, இருக்கவே செய்கின்றான்’ (The Author always unconsciously in his works) என்பது அவரின் முடிவு. இதன் அடிப்படையில் அவர் சொல்கிறார். ‘புதிய ஓர் உண்மையைக் கண்டறிகின்றவனையும் பிரம்மாண்டமான அழகைச் சித்திரிக்கின்றவனையும் நாம் ஒரு மேதை என்கின்றோம். எப்போது? தீவிர மனவுணர்வுகளால் அழுத்தப்பெற்றவன். தனது உணர்வுகளைச் சமூகம் மதிக்கவில்லை என்ற முடிவுக்கு வந்த நிலையில் அவன் அப்படி உருவாகிறான். அழுத்தப்பெற்ற மனவுணர்வுகளுக்குத் திறன் வாய்ந்த சித்திரங்கள் தருகிறபோது அவன் ஒரு பெருங்கலைஞன். அழுத்தப்பெற்ற அவ்வுணர்வுகளிலிருந்து தப்பிக்கிற வழிகளைக் காண்கின்றபோது அவன் பெருஞ் சிந்தனைவாதி. தனக்கு மறுக்கப்பட்ட மகிழ்ச்சியினை (அந்த வகையான தடையின்றிப்) பிறர் எவ்வாறு பெறுவது என்ற வழியை இந்த உலகத்திற்குச் சொல்கின்றபோது அவன் ஒரு சிறந்த மனிதாபிமானி.

சமூக ஒழுக்கம் முதலியவற்றின் காரணமாக, மனவுணர்வுகள் சுதந்திரமாக வெளிப்படாமல் அழுத்தப்படுகின்றன. இவ்வுணர்வுகளும், அடிமனத்தில் ஆழமாய் மையங்கொண்டிருக்கும் பாலியல் உணர்வுகளும், நனவிலி மனத்தின் ஊடாக, அவனேயறியாத நிலையில் அவனுடைய சொல்லிலும் செயலிலும் வெளிப்படுகின்றன. கலைஞனிடம் இத்தகைய உணர்வுகள், அவனுடைய அறிவார்ந்த விருப்பங்களையும் உணர்வுகளையும் மீறி அவனுடைய கலைப்படைப்பில் வெளிப்பட்டு

விடுகின்றன. இவ்வாறு, உளவியல்காரர்கள். கலை வெளிப்பாடு என்பது பற்றிப் பேசுகின்றார்கள். காட்டாக, ஜேன் ஆஸ்டின் (Jane Austen)எனும் ஆங்கில எழுத்தாளரின் நாவல்கள் ஜியோ ∴ப்ரிகோரர் என்பார் ஆராய்கிறார். ஜேன் ஆஸ்டினுடைய மையமான நான்கு நாவல்களிலும் இடம்பெறுகிற நாயகியர், ஒரு குறிப்பிட்ட வகையான படிமத்தைப் பிரதிநித்துவப்படுத்துவதாக அவர் கூறுகிறார். இப்பெண்கள் ஒவ்வொருவருக்கும் இளமையான, அழகான – ஆனால் சரியில்லாத ஆடவர்களை நிராகரித்து விட்டுத் தாங்கள் மரியாதை கொள்கிற வேறு ஆடவர்களுடன் முதலில் மணம் பேசப்படுகிறது. இவர்கள் தங்கள் அம்மாக்களின் ஏற்பாடுகளையும் முடிவுகளையும் விடுத்து, அதற்கெதிராக அப்பாக்களின் பண்புகளைப் பிரதிபலிக்கக்கூடிய ஆடவர்களையே இறுதியில் மணந்து கொள்கின்றனர். இவ்வாறு அத்திறனாய்வாளர் காட்டுகிறார். நாவல் நாயகிகளின் இந்தச் செயல்கள், நாவல் ஆசிரியையின் அடிமனத்தையே பிரதிபலிப்பதாகவும், அந்த நாவலாசிரியையிடம்,'தந்தை மீதான மகளுக்குரிய பாலியல் வேட்கையுணர்வு' (எலக்ட்ரா மனவுணர்வு) காணப்படுவதாகவும் அவர் வருணிக்கிறார்.

கலைப்படைப்பின் உள் அமிழ்ந்த பொருள்களையும், ஒரு மனிதன் என்ற முறையில் கலைஞனின் மனவுணர்வுகளையும் உளவியல் ஆராய்ச்சியினால் விளக்க முடியும் என்பது ∴பிராய்டின் நம்பிக்கை. இதனைப் பின்பற்றித் தமிழிலும் சில முயற்சிகள் அரிதாக மேற்கொள்ளப்பட்டுள்ளன. காட்டாக, பாரதியின் காதல் பற்றிய சில பாடல்களுக்கும், கண்ணம்மா பற்றிய படிமத்திற்கும், அவருடைய பிள்ளைப் பிராயத்துக் காதல் ஏமாற்றங்களும், ஏக்கங்களும் உள்ளார்ந்த காரணங்கள் என்று கண்டறிந்து சொல்ல முயன்றுள்ளனர். இன்னும், மௌனியின் எழுத்துக்களில் காணப்படுகிற சாவு பற்றிய விளிம்போர பிரம்மைகள், பயம், விரக்தி, இருண்மை முதலியவற்றை அவருடைய சுயவாழ்க்கையிலுள்ள பிரத்தியேகமான நிலைகளாக – அவருடைய வாழ்க்கை வரலாற்றுத் தடயங்களின் பின்னணியில் பார்க்கலாம். இதேபோல், தமிழ் எழுத்தாளர்கள் பலருடைய எழுத்துக்களில் உள்ள சில உளவியல் காரணங்களைப் பார்க்க முடியும்.

அமெரிக்க திறனாய்வாளர் எட்மண்ட் வில்சன், உளவியலையும் சமுதாயவியலையும் தாராளமாக இணைத்து, இலக்கியப் படைப்பின் பிரத்தியேகமான சில கூறுகளுக்கும் செய்திகளுக்கும் (படைப்பாளனை மையமிட்ட) விளக்கங்களைக் கூற முயன்றுள்ளார். சார்லஸ் டிக்கன்ஸ் நாவல்களில் காணப்படும் கற்பனைகளுக்கும் மனவுணர்வுகளுக்கும் உரிய காரணங்களாக அந்தப் படைப்பாளியின் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவங்களை எடுத்துக்காட்டி விளக்கியுள்ளார். அவர், டிக்கன்சின் இளமைக்காலத்தில் அவருடைய அந்தச் சிறிய வயதில் டிக்கன்ஸ், பட்டறையொன்றில் கடின வேலைக்குச் சென்றது. அங்கே அவமானங்களும் சிரமங்களும்பட்டது. வேலைக்குக் கட்டாயமாக அனுப்பிய அம்மாவின் மீது கோபமும் மனத்தாங்கலும் கொண்டது

முதலியவை அவருடைய நாவல்களின் குறிப்பிட்ட உணர்வுகளுக்கும் போக்குகளுக்கும் காரணமாக அமைகின்றன என்று எட்மண்ட் வில்சன் எடுத்துக்காட்டுகின்றார். தமிழில் ந.பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தன், ஜெயகாந்தன் முதலிய எழுத்தாளர்களின் படைப்புக்களிலுள்ள அனுபவ வெளிப்பாடுகளையும் இதேபோல் அவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளின் பின்னணியில் ஆராயலாம்.

குறிப்பு

ஆனால் இங்கு ஓர் எச்சரிக்கை அவசியமாகிறது. படைப்பாளியின் வாழ்க்கைக்கும் அவனுடைய படைப்புக்கும் இடையே உள்ள உறவானது. எப்போதும் நேரடியானது அல்ல. மேலும் படைப்பாளனைப் பற்றிய விரிவான, சரியான தகவல்கள் கிடைக்காமலும் போகக்கூடும். இந்நிலைகளில், இத்திறனாய்வு முறை சிரமத்திற்கும் தடுமாற்றத்திற்கும் ஆளாகிறது. 'உளவியலாளர்கள் செய்வது போலப் படைப்பிலிருந்து படைப்பாளனைப் பார்க்கப் போவது. விபரீதமாகவும் பல சமயங்களில் வீணாகவும் போய்விடுகிறது' என்று டேவிட்டெய்ச்சல் சொல்கிறார். மேலும், இதனை இலக்கியத் திறனாய்வு என்றும் சொல்ல முடியாது' என்பது அவர் வாதம்.

## 12.6.4 ஓடிபஸ் மனவுணர்வு

ஷேக்ஸ்பியரின் நாடகங்கள் சிலவற்றிலுள்ள சிக்கல்கள், உளவியல் முறையில் விளக்கப்பட்டுள்ளன. ஹாம்லெட்டின் 'செய்வதா - இல்லையா' (To be or not be) என்ற தயக்கம் பிரசித்தமானது. ஹாம்லெட்டினுடைய தந்தையைக் கொன்றுவிட்டு அவனுடைய தாயை மணந்துகொண்டான். அவன் சிற்றப்பன். அந்தச் சிற்றப்பனை அவன் கொல்ல வேண்டும். தந்தையின் ஆவி அப்படிக் கேட்டுக் கொண்டுள்ளது. ஆனால் கொல்ல வேண்டியவன் தயங்குகிறான். ஏன் இந்தத் தயக்கம்? ஷேக்ஸ்பியர் சொல்லவில்லை. தயக்கத்தை ஒரு புதிராகக் கருதித் திறானய்வாளரகள் பல விளக்கங்கள் தருகிறார்கள். கொலை செய்ய அவன் தயங்குவதற்குரிய காரணம்:

1. அவனோடு பேசிய ஆவி, உண்மையில் தந்தையின் ஆவிதானா? என்பதை நிச்சயப்படுத்திக் கொள்ளவே.
2. இல்லை – கொலை செய்வது குற்றம் ஆகாதா என்ற குற்றவுணர்வின் உந்துதலே்
3. இல்லை – கிறித்துவ அறக்கோட்பாட்டுணர்வின் காரணமாகவே.
4. இல்லை – நம்பிக்கையுணர்வுக்கும் நம்பிக்கையின்மைக்கும் இடையிலான அக்காலத்திய சமூகத்தின் ஊசலாட்ட மனப்போக்கின் காரணமாகவே.
5. இல்லை – ஒருவகையான நாடக ஆர்வநிலையை ஏற்படுத்த விரும்பியதாலேயே்

6. இல்லை – நம்முடைய திட்டங்கள் முழுக்க நம் கையில் இல்லை. என்ற உண்மையை உணர்த்துவதற்காகவே.

இப்படிப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. இவை ஒரு பக்கம் ஆக, ∴பிராய்டு வேறு ஒரு விநோதமான காரணம் சொல்கிறார். அதனை அடியொற்றி அமெரிக்காவின் எனஸ்ட் ஜோன்ஸ், உளவியல் அடிப்படையிலான அக்காரணத்தை விரிவாக விளக்குகிறார். ∴பிராய்டு, ஜோன்ஸ் முதலியவர்களின் விளக்கப்படி - ஹாம்லெட்டிற்கு இருந்த உணர்வு, ஓடிபஸ் மனவுணர்வு ஆகும். அதன்படி, பாலபருவத்தில் அவனுக்குத் தன் தாயின் மீதான ‘பாலுணர்வு’ படிந்து கிடக்க, அதன் காரணமாக அவனுக்குத் தந்தையின்மேல் அவரைக் ‘கொல்ல வேண்டுமென்ற பொல்லாப்பு உணர்வு’ அந்த இளம்பருவத்தில் இருந்து வந்திருக்கிறது. பின்னர், தந்தை சிற்றப்பனால் கொல்லப்பட்டபோது, அதற்காகவே அந்தச் சிற்றப்பனிடம் தன்னையறியாமலேயே நனவிலி மனத்தின், தன்னை-தன் உணர்வை –அவன் இனம் காணுகிறான். அத்தகைய சிற்றப்பனைக் கொல்ல ஹாம்லெட்டை ஷேக்ஸ்பியரின் நாடக மாந்தரமாக அல்லாமல், இன்னின்ன சூழ்நிலைகளில் இன்னின்னவாறு நடந்தால் இன்னின்ன உணர்வுகள் தான் இருக்கும் என்று ஒரு வாய்பாடு அல்லது விதி (formula) கொண்டு அவனைப் பரிசோதனைக் கூடத்தில் கிடத்தியதுபோன்றுதான் இந்தப் பார்வை உள்ளது என்றும் கூறித் திறனாய்வாளர்கள் பலர் இதனை மறுக்கின்றனர். எனஸ்ட் ஜோன்ஸின் அணுகுமுறையில் தவறுகள் இருப்பதாக இன்னொரு உளவியல் திறனாய்வாளராகிய ட்ரில்லிங் கருதுகின்றார்.

ஓடிபஸ் என்பவன் கிரேக்க புராண நாயகன், பெற்றோரையறியாத அவன், தற்செயலாக (பின்னணியில் அவனை இயக்குபவர்கள் - தேவதைகள்) ஒரு சண்டையில் தன் தந்தையை (யாரென்று தெரியாமல்) கொன்று விடுகிறான். அந்த இடத்தில் இவன் அரசனாகவும் ஆக்கப்படுகின்றான். அன்றைய மரபிற்கேற்ப, பழைய அரசனின் மனைவியை – அதாவது தன் தாயை – (யாரென்று அறியாமல்) மணந்தும் கொள்கிறான். (உண்மை தெரிந்த பிறகு அழிந்து போகிறான் என்பது வேறு). இது ஓடிபஸ் கதை.

ஏற்கனவே, ஒரு மருத்துவர் என்ற முறையில் மனநோயாளிகளையும், எல்லை கடந்து போனவர்களின் மூளைக்கோளாறுகளையும் ஆராய்ந்து, அத்தகைய மன விகாரங்களுக்குக் காரணம் யாது என்று தேடிக்கொண்டிருந்த ∴பிராய்டுக்கு இந்தக் கிரேக்கக் கதை. பெரும்விருந்தாக அமைந்துவிட்டது. அன்றைய கிரேக்கத்தின் இனக்குழு வாழ்க்கையிலுள்ள பழக்க வழக்கங்களையும் மரபுகளையும் புறந்தள்ளிவிட்டுத் தனக்குகந்த உளவியல் பகுப்பாய்வு விளக்கத்தின் பொருட்டு இந்தக் கதையைத் தன் விருப்பத்திற்கேற்பப் பொதுமைப்படுத்துகிறார். ஒவ்வொருவன் மனத்திலும் பாலபருவத்தில் தாய் மீதான பாலுணர்வு இச்சை இருப்பதாகவும், அதன்

காரணமாக தந்தை மீதான பொல்லாப்பு – கொலையுணர்வு – அவனிடம் படிந்து கிடப்பதாகவும் அவர் விளக்கம் தருகிறார் தருகிறார். இந்த மனவுணர்வுக் கோளமே, ஒடிபஸ் மனவுணர்வு (Oedipus Complex) ஆகும். இதற்கு மறுதலையானது, எலக்ட்ரா மனவுணர்வு (Electra Complex) அதாவது, மகளுக்குத் தந்தை மீது, பாலபருவத்தில், பாலுணர்வு இச்சையும், இதன் காரணமாகத் தாயின் மீது பொல்லாப்புப் பகையுணர்வும் அப்பருவத்தில் படிந்து கிடப்பதாக இது விளக்கப்படுகிறது. சரி, ஒடிபஸ் போகட்டும் நம் நாட்டுப் பரசுராமன் கதை இதற்கு நேர்மாறானதாயிற்றே! தந்தை சொல் மிக்க மந்திரமில்லையென்று தாயைத் தண்டித்தவன் ஆயிற்றே. இதற்குப் பதில்?

இருக்க. தொடர்ந்து ஃபிராய்டு, உள்ளத்தினை மூன்று அடக்குகள் கொண்டதாகப் பகுத்து ஆராய்கின்றார். ஆழத்தில் படிந்த கிடப்பது அடிமனம் இது. பாலியல் அளவிலானது. இந்த அடிமன உணர்வு (Subconscious mind) ஒரு மனிதனின் வாழ்க்கையில் நாளாக ஆகப் பல வடிவங்களை எடுக்கும். இந்த அடிமனத்தின் மேலே மன விகாரங்களாகவோ, மீமனித ஆற்றலாகவோ (Super Ego) படிந்து கிடப்பது. உள்மனம். இது நனவிலி நிலையில் (Unconscious mind) உள்ளது. இன்ப வேட்கையின் (Pleasure Principle) வடிவாக உள்ள இந்த உள்மனமே, அடிப்படையில் மொத்தமான உள்ளத்தின் ஆற்றலுக்குக் காரணமாக இருப்பது ஆகும். மேலும், விருப்பம் நிறைவேற்றல் (Wish - fulfilment) மற்றும், அதன்பொருட்டாகவும் அதன் விளைவாகவும் ஏற்படுகிற மனஉளைச்சல்கள் முதலியவற்றின் தளமாக இருப்பது, இந்த நனவிலி மனமேயாகும். இனி, மூன்றாம் நிலையில், மேலடுக்கில் இருப்பது வெளிமனம் (Conscious mind) ஆகும். உள்மனத்தில் திருப்தி செய்ய இது இடைவிடாது முயலுகிறது. இது தருக்க ரீதியானது உணர்வுடையது தன்முனைப்புக் கொண்டது'. இவ்வாறு உள்ளத்தை மூன்று அடுக்குகளாகக் கூறுபடுத்தி விளக்குவார் ஃபிராய்டு.

உளவியல் இலக்கியத் திறனாய்வாளர்களைப் பெரிதும் கவர்ந்திருப்பது, நனவிலி மனம் பற்றிய கருதுகோள்களே. வெளிப்படா நிலையில் உள்ள இந்நனவிலி மனம், கடல் போன்றது. சாதாரணக் கடல் அல்ல் பாற்கடல் போன்றது. எத்தனையோ பொருட்கள் அதில் ஒளிந்து கிடக்கின்றன. அமிழ்ந்து அல்லது அவற்றைக் கடைந்து காண்பதில் உளவியல் சிந்தனையாளர்களுக்கும் அதன் வழிப்பட்ட திறனாய்வாளர்களுக்கும் ஈடுபாடு இருப்பதில் வியப்பு இல்லை. இந்த மனவுணர்வுக் கோலங்களில் ஒரு கோணம் தான், உணர்வுக் கோளம் (Complex) என்பது, ஹார்ட் என்பவர், ஃபிராய்டின் வழிநின்று, உணர்வுக்கோளம் என்பதற்கு விளக்கம் தருவார். 'நனவிலி மனவுணர்வுகள் பலவற்றின் திரட்சியே, உணர்வுக்கோளம் என்பது. அகமும் புறமும் ஆன பலவற்றின் திரட்சியே, உணர்வுக்கோளம் அகமும் புறமும் ஆன பல்வேறு பாதிப்புக்களை உடன்கொண்டு, திரட்சிகளாக

அல்லது குழுக்களாக ஒன்று குவிந்து கிடக்கின்ற நனவிலிச் சிந்தனைகளின் ஒழுங்கமைவு முறையே இது. எனவே, உணர்வுக்கோளம் என்பது ஒன்றல்ல் பல இவை தம்முள் தொடர்புடையன் பிறவற்றால் பாதிக்கப்படுவன் பிறவற்றைப் பாதிப்பன் பல வழிகளில் - சொற்களில் - செயல்களில் - பல முறைகளில் செயல்படுவன.' இவற்றுள் மிகவும் அடிப்படையானதும் முக்கியமானதும் - ஏற்கெனவே விளக்கிய ஒடிபஸ் உணர்வுக் கோளம் ஆகும்.

## 12.6.5 சொல்லும் உத்தியும்

இலக்கியங்களில் இடம்பெறும் மனவுணர்வுகளை விளக்கிக் கொள்வதற்குத் துணைபுரியும் உளவியல் திறனாய்வு, இலக்கியத்தின் சில பிரத்யேகமான உத்திகளையும் மொழிக்கூறுகளையும், புரிந்து கொள்ளவும் உதவுகிறது. அடிமனத்தின் பிரதிபலிப்பைச் சொற்கள் பிரதிபலிக்கும் என்ற கருதுகோளை அடிப்படையாகக் கொண்டது இது. முக்கியமாக, சாதாரணமாக வெளிப்படும் சொற்களையும் தொடர்களையும் விடவும் இவை உணர்வுபூர்வமாகக் கட்டுப்படுத்தப்படுகின்றன. வழக்கத்திற்கு மாறாக வருவனவும், தம்மை அறியாமல் கட்டுப்படுத்தப்படாமல் நாத்தடுமாறியும் நழுவியும் வருவனவும் உளறலாக விழுவனவும், பேசுபவனின் அல்லது எழுதுபவனின் உள்மனத்தை அதிகமாகப் புலப்படுத்தக்கூடியன என்பது உளவியலாளர்களின் கருத்து.

சிலம்பில், கோவலன் பற்றிப் (பொய்யாகப்) பொற்கொல்லன் சொன்னவுடன். 'கொன்றச் சிலம்பு கொணர்க' என்று பாண்டியன் நெடுஞ்செழியன் சொன்னான் என்றால், அது அவனுடைய அப்போதைய மனநிலையின் வெளிப்பாடே என்று பேசப்படுவது இங்கு நினைவுக்குரியது. அரசன் விசாரித்துப் பார்த்து அறிய முயலாமல், கொன்றாயினும், காரியம் செய்துவிடுகிற அதிகார மையத்தின் உள்மனக்குரலே, கட்டுப்பாடின்றி இவ்வாறு வெளிப்படுகிறது. சொல்லுக்கும் தொடருக்கும், நேரடிப்பொருளன்றியும் - உணர்வுகளைத் தாங்கி வரும் அவற்றிற்கு மறைமுகமான, உருவக அளவிலோ அல்லது குறியீட்டளவிலோ ஆன பொருட்களும் உண்டு என்பதை வலியுறுத்தும் உளவியல்காரர்கள், மொழிக்கூறுகளின் அத்தகைய பண்புக்கு உளவியலே காரணம் என்பர். எனவே, அத்தகையவற்றிலிருந்து படைப்பாளி அல்லது கதைமாந்தரின் உள்ளத்து உணர்வுகளை வெளிக்கொணர்ந்து காட்ட முயலுகின்றனர். அப்படியானால், பாண்டியனுடைய அந்தக் கூற்று, அவனுடைய அடிமனத்திலிருந்து அவனையறியாமலேயே நழுவி (slip) வருவதாகப் பொருள்படும்.

## 12.6.6 நனவோடை

சொற்களும், சொற்றொடர்களும் அன்றியும், உத்திகளும், உளவியல் திறனாய்வில் பெருங்கவனத்தைப் பெற்றுள்ளன. குறிப்பிட்ட இலக்கியத்தினுடைய குறிப்பிட்ட சூழலின் தேவை. கதைமாந்தரின் செயல்கள் மற்றும் உணர்வுகளின் முறைமை, படைப்பாளியின் நோக்கம்

இவை காரணமாக, சொல்லுகிற பாணியிலும் வடிவமைப்பிலும் வேறுபாடுகள் காணப்படும். ஏற்கனவே, ∴பிராய்டு கவிதையை நனவிலி மனத்தின் செயல்பாடுகளோடு இணைத்துப் பேசியிருப்பார். நனவுடை மனத்தோடு நனவிலி மனம் தொடர்ந்து போராடிக் கொண்டிருக்கிறது. பொதுமையிலிருந்து, தூலப்படுத்துதலை (concretisation) நோக்கி அது தொடர்ந்து தாவுகிறது. அதன்போது தூலமான அற்பங்களை அது காண்கிறது. இத்தகைய நனவிலி மனம், ஒரே சீராக நேர்கோட்டில் அமைவதில்லை. ஒன்றனைத் தொட்டு ஒன்று படர்வதாக அமைகிற அதன் திசைகள் எண்ணிறந்தன. வேகம் அளவு கடந்தது. நனவிலி மனத்தின் இந்தப் பண்புகளின் பின்னணியில், அதனோடு தொடர்ந்து போராடுகிற நனவுடை மனத்தின் நானாவித இயங்கு திசைகளை சித்திரிப்பது, நனவோடை உத்தி (Stream of consciousness) ஆகும். உள்ளார்ந்த தனிநிலைக்கூற்று (Interior monologue) என்பது இத்தகையதே யெனினும் இது பெரிதும் நாடக பாணியிலே அமைந்ததாகும். நனவோடை என்பது கதைமாந்தரின் உளவியல் வாழ்க்கையையும் அதன் முனைப்புக்களையும் அவற்றின் போக்கிலேயே சென்று சித்திரிக்கின்றது. நிகழ்ச்சிகளையும் அனுபவங்களையும் சொல்லுகின்றபோது அவற்றை அவற்றின் நேர்வரிசை முறையில் அல்லாமல், அவை உணரப்படுகின்ற முறையில், ஒன்றனைத் தொட்டு ஒன்று தாவியும் உருண்டும் போகிற முறையில் சொல்லுகிறது, இவ்உத்திமுறை.

இதனை மேலைநாடுகளில், வெர்ஜனியா உல்∴ப், ஜேம்ஸ்ஜோய்ஸ், ஹென்றி ஜேம்ஸ், ∴பிரான்ஸ் கா∴ப்கா, ஆல்பர்ட் காமு முதலியவர்கள் கையாண்டுள்ளனர். தமிழில் இந்தக் கோளங்கள் மிகக் குறைவு. ‘ஜீவனாம்சம்’ நாவலில் சி.சு.செல்லப்பா. இவ் உத்தியை (ஒரு பகுதியில்) அழகாகக் கையாண்டுள்ளார் ஆட்டு உரலில் மாவரைக்கின்ற ஜீவனாம்சத்தின் நாயகி, ஏற்கெனவே உள்வாங்கிய மனநிலை (Introvert) கொண்டவள். செயல்களை முன்னிறுத்தி நினைவுகளைக் கட்டுப்படுத்துகிற மனத்திறன் இல்லாத நிலையில், இறந்துவிட்ட தன் கணவன் பற்றியும், கணவர் வீட்டார் பற்றியும் அவள் நினைத்துப் பார்க்கிறாள். ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து பின்னோக்கிச் சென்று, காலத்தினால் பின்னோக்கியுள்ள காட்சிகளை முழுக்க அவளுடைய உள்ளத்தின் பிரதிபலிப்புக்களாக அவற்றின் போக்கில், முன் பின்னாக உணர்வுகளின் வழியே நிகழ்ச்சிகளும் உணர்ச்சிகளும், காட்சிகளும் அசைபோடப்படுகின்ற முறையில் ஜீவனாம்சத்தின் முக்கியமான இப்பகுதி அமைந்துள்ளது. மௌனியிடமும், லா.ச.ரா.விடமும் நனவிலி மனத்தின் இத்தகைய போக்குகள் சித்திரமாகியுள்ளதைப் பார்க்க முடியும். மற்றபடி தமிழில் இத்தகைய சித்திரங்கள் குறைவுதான். தமிழில், பின்னோக்கு உத்தி (flash back) அதிகம் உண்டு. குறிப்பிட்ட நினைவிலிருந்து காட்சிகள் பின்னோக்கிச் செல்வதாக அமைவதுவே இது. எனினும் இந்நினைவுகள், வரிசை முறையில் தொடர்புபட்டுப் பின்னப்படுகின்றன. ஆயின், நனவோடை உத்தியென்பது, நனவிலி மனத்திற்கும் நனவுடை மனத்திற்குமான போராட்டத்தில் சிதறுண்டு வரிசை பிறழ்ந்து ஓடுகின்ற

இயங்கு திசைகளைக் குறிக்கின்றது. இதன் சித்திரங்களை மனக்குகை ஓவியங்கள் என்றும் குறிப்பிடலாம்.



## 12.6.7 வாசகன்



உளவியல் திறனாய்வாளர்கள் அக்கறை செலுத்துகின்ற பிறிதொன்று - இலக்கியத்திற்கு வாசகர்க்கும் உள்ள உறவு பற்றியது. முன்னர் நாம் குறிப்பிட்டுள்ளது போல, வாசகர்களின் ஆர்வநிலைக்கு, முக்கிய காரணம், குறிப்பிட்ட இலக்கியத்தோடு ஓரளவாவது உள்ள அவனுடைய ஒத்த மனப்பாங்கு அல்லது ஒத்துணர்வே ஆகும். இது குறிப்பிட்ட படைப்பினுடைய பொதுவான மனவுணர்வின் அடிப்படையிலும் இருக்கலாம் அல்லது கதைமாந்தர்களின் நடத்தைகள், பிரதிநிதித்துவப்படுத்துகிற உணர்வுகள், படிமங்கள் முதலியவற்றின் அடிப்படையிலும் இருக்கலாம். மேலும், வாசகனுடைய மனவுணர்வை, திறமையான படைப்பாளி, பிறரை மனங்கொளச் செய்கிற தன் ஆற்றலினால் வென்றெடுத்து வாசகன் உள்ளத்தை ஆக்கிரமித்துக்கொண்டு விடுகின்றான். (எளிமையான வாசக மனவுணர்வு எளிமையாக ஆக்கிரமிக்கப்பட்டுவிடுகிறது – சோகத்தைச் சித்தரிக்கும் நாவலை வாசிக்கின்றபோது கண்ணீர் விடும் வாசகனை இன்றும் பார்க்க முடியும்)

வாசகன் உள்ளமும் அடிப்படையில் ஒருவகையான படைப்பாற்றல் தன்மை கொண்டதேயாகும். அந்தப் படைப்புணர்வை, அழகியல் உணர்வை,ஈடுகட்டுவதும் எழச்செய்வதும் இலக்கியத்தின் முக்கியமான செயல்பாடாகிறது. மேலும், விருப்பங்கள், ஏமாற்றங்கள், பயங்கள், உற்சாகங்கள் முதலியவற்றுடன் கூடிய ‘விருப்பம் நிறைவேறல்’ அல்லது அதன் விளைவான மனப்பாங்கு காரணமாக நடப்பிலிருந்தும் நடைமுறையுலகு தரும் சோர்விலிருந்தும் ஒருவகையான கற்பனையுலகுக்குத் தாவுகின்ற மனநிலை பலரிடம் இருக்கிறது. இத்தகைய ‘தாவுதல்’ மூலம் ஒருவகையான தப்பித்தல் மனநிலைக்குச் (Escapism) செல்லவும் செய்கிறான். இத்தகைய மனநிலை காரணமாகவும் வாசகனுக்குக் குறிப்பிட்ட சில இலக்கியங்களில் ஈடுபாடு ஏற்படுகின்றது என்று உளவியல்காரர்கள் கருதுகின்றனர். தவிரவும்,‘விநோதப்படுத்துதல்’ (fantasy) என்ற உணர்வும், அதில் லயிக்கின்ற மனநிலையும் வாசகரிடம் காணப்படுகின்றதெனவும் அதன் காரணமாகக் குறிப்பிட்ட சில படைப்புக்களில் அவனுக்குத் தனி ஈடுபாடு ஏற்படுகிறது எனவும், அவர்கள் கருதுகின்றனர். லக்கான் (Jacques lacan) உளவியல் பகுப்பாய்வை, அமைப்பியலில் மிகத் தீவிரமாகப் பின்பற்றியவர் போதித்தவர். இன்று, பின்னை அமைப்பியல் (Post-structuralism) என்ற கொள்கை. பகுப்புமுறை உளவியலைச் சார்ந்த ஒன்றாக - இது இல்லையேல் அது இல்லை என்று கூறுமளவிற்கு ஆகிவிட்டிருக்கிறது.

## 12.6.8 உளவியல் திறனாய்வாளர்கள்

குறிப்பு

குமாரி பாட்கினாகட்டும், லியோனல் ட்ரில்லிங்கோ, நார்த்ரோப்.ஃ.பிரையோ ஆகட்டும். குறிப்பிட்ட ஒரு அம்சம் அல்லது ஒரு கொள்கையை மட்டுமே வரையறையாகப் பின்பற்றுகிறார்கள் என்று சொல்ல முடியாது. தாராள முறையிலே, அவர்களில் மிகப்பலரும், உளவியலின் பல வழிமுறைகளைப் பயன்படுத்திக்கொள்கிறார்கள். இருக்க, தமிழில் படைப்பிலக்கியத்தில் உளவியல் சார்பு என்றால், சமுதாய உளவியலையே அதிகம் பார்க்க முடிகிறது. கு.ப.ரா.புதுமைப்பித்தன், தி.ஜானகிராமன், ஜெயகாந்தன் முதற்கொண்டு, கிருத்திகா, இந்திரா, பார்த்தசாரதி, வண்ணதாசன், வண்ணநிலவன், நகுலன், அம்பை, மாலன் முதலியவர்கள் வரையிலான படைப்பாளர்களிடம் இத்தகைய சித்திரங்களைப் பார்க்க முடியும். சமுதாய உளவியலின் வழிகாட்டுதல், இவர்களை அணுகுதற்கு உதவக்கூடியது. ந.பிச்சமூர்த்தி, தி.சோ.வேணுகோபாலன், சி.மணி, தருமு சிவராமு, மயன், பசுவய்யா, கலாப்ரியா, மஹாகவி, அப்துல் ரகுமான், அபி, ஆத்மனாம், பிரம்மராஜன், பிரேதா முதலிய புதுக்கவிதையாளர்களிடம் நனவிலி மனத்தின் கோணங்களைக் காணமுடியும். உளவியல் திறனாய்வாளர், கென்னத் பர்க் சொல்லுவார்‘திறனாய்வாளனுக்கு உளவியல் மேலும் பயனுடையதாக ஆக வேண்டுமானால், தனிமனிதக் குடும்பநிலை என்பதில் அமிழ்ந்து போய்விடாமல் விரிந்த பண்பாட்டுத் தளத்தின் தாக்கம் கொண்டதாக அதன் இடைவெளிக்குப் பாலம் சமைத்திட வேண்டும். இது கலையைச் சமுதாயத்தின் ஒரு குறியீட்டுச் செயல் வடிவமாகக் கருதுவதன் மூலமே சாத்தியப்படுகிறது.

## 12.7. உளவியலும் இலக்கியமும் பிறதுறைகளும் - விளக்கம்

சிக்மெண்ட் பிராய்டின் உளவியல் சிந்தனைகள், உளவியல் அடிப்படையில் நாட்டுப்பாடல், ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் திறனாய்வு நோக்கு ஆகிய பல துறைகள் ஒப்பிலக்கிய அடிப்படையில் விளக்கப் பெற்றன.

## வினா - விடை பயிற்சி

### I. இரண்டு மதிப்பெண் வினா - விடை

1. **‘கனவுகளின் அடிப்படை விளக்கம்’ என்ற நூலினை இயற்றியவர் யார்?**

சிக்மண்ட் ஃ.பிராய்டு

2. **இலக்கியத்தை உளவியல் நோக்கில் ஆராயும் வழிகளைக் குறிப்பிடுக.**

1. படைப்பாளர் உளவியல் 2. படைப்பாக்க உளவியல் 3. இலக்கியம் அளிக்கும் உளவியல் 4. அவையினர் உளவியல்

3. **இந்திய வீரயுகம் என்பதை ஆராய்ந்தவர் யார்?**

திரு.என். கே. சித்தாந்தா.

4. **ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் எப்படிபட்டவை?**
   இரட்டைக் குழந்தைகள் போன்றவை
5. **உளவியல் திறனாய்வாளர்கள் சிலரை குறிப்பிடுக.**
   குமாரி பாட்கினாகட், லியோனல் ட்ரில்லிங்கோ, நார்த்ரோப் ∴பிரையோ

**II. ஐந்து மதிப்பெண் வினா விடை**

6. **சிக்மண்ட் பிராய்டின் உளவியல் சிந்தனைகளை விவரி.**
   (12.1,12.2 – ல் உள்ள செய்திகளின் தொடக்கத்தில் உள்ளதை எழுதுக.
7. **குறிஞ்சிப்பாட்டு – ஓர் உளவியல் பாட்டு – என்பதை நிறுவுக.**
   (12.3.2 – ல் உள்ளவற்றை எழுதுக.)
8. **ஒப்பிலக்கிய நோக்கில் உளவியல் அடிப்படையில் நாட்டுப்பாடல் ஆய்வு குறித்து விவரி.**
   (12. 4 – ல் உள்ள செய்திகளை எழுதுக.)
9. **உளவியல் அணுகுமுறையில் ஒப்பிலக்கியமும் மொழிபெயர்ப்பும் குறித்து விவரி.**
   (12.5 ல் உள்ள செய்திகளை விவரி.)
10. **ஒப்பிலக்கியத்தில் திறனாய்வு நோக்கில் உளவியல் அணுகுமுறை அமைந்த விதத்தை எழுதுக.**
    (12.6 – ல் உள்ளவற்றை சுருக்கி எழுதுக.)

**III. பத்து மதிப்பெண் வினா விடை:**

11) **உளவியலும் இலக்கியமும் பிறதுறைகளும் தரும் செய்திகளை கட்டுரைக்க.**

    (12.1 முதல் 12.7 வரையள்ள செய்திகளை சுருக்கி எழுதுக.

# கூறு 13: இலக்கியமும் அறிவும் - இயற்பியல் கோட்பாடு

## 13.1 முன்னுரை

அறிவுலகில் நமது ஈடுபாடுகள் அனைத்திலும் நமது நோக்கம் உண்மை அல்லது மெய்மையைக் காண்பதாகும். உண்மை தேடும் பணியை நாம் ஆய்வு என்கிறோம். அப்பணிக்கு அறிஞருலகம் அவ்வப்பொழுது வளர்ச்சி பெற்ற கருவிகளைப் பயன்படுத்தி வந்திருக்கிறது. கருத்துலகிலும் காலத்திற்கேற்ற கருவிகளைப் படைத்த சமுதாயம்தான் வளர்ச்சிப் பாதையில் தேங்காது முன்னேறியிருக்கின்றது. “பழையன கழிதலும், புதியன புகுதலும் வழு அல, கால வகையினானே” என்பது கருத்துகட்கும் பொருந்தும், கருவிகட்கும்

பொருந்தும் உண்மை தேடும் முயற்சியில் கடந்த 2500 ஆண்டுகளில் ஏற்பட்ட கருவி வளர்ச்சியை, மூன்று ஆய்வு முறைகளாகக் காணலாம் அவை i) தர்க்க முறை ii) அறிவியல் முறை iii) அமைப்பு முறை இம்முறையில் இலக்கிய அறிவுப் பகுதியில் எவ்வாறு நம் தேடல் இருக்கின்றதோ அதே போல் அறிவியலின் அடிப்படையாக விளங்கும் இயற்பியல் கோட்பாடுகள் இலக்கிய அறிவிலிருந்து பிறந்ததாக கருதுவதற்கு உலகளாவிய இலக்கியங்கள் துணை நிற்கின்றன.



## 13.2 நோக்கம்

இலக்கியத்தில் அறிவின் பங்களிப்பை எதைக் கொண்டு நிறுவுவது, இயற்பியல் கோட்பாடுகள் இலக்கியத்திற்கு எங்ஙனம் பொருந்தி வரும் என்பதையும் இக்கூறு ஆராய்கிறது.

## 13.3 குவின்சி கூறும் இலக்கிய வகை

மனித மனத்தில் உள்ள அறிவுக்கூறு, உணர்ச்சிக்கூறு ஆகிய இரண்டையும் தனித்தனியே முனைப்பாக வெளிப்படுத்தும் பண்பு இலக்கியங்கள் இடையே காணப்படுகின்றன. இந்த நோக்கில் ‘அறிவு இலக்கியம்’ (literature of knowledge ) எனவும், ஆற்றல் இலக்கியம் (literature of Power) எனவும் ஆங்கிலத் திறனாய்வளரான குவின்சி (de Quincey) இலக்கியத்தை வகைப்படுத்தியுள்ளார்.

அறிவுறுத்துவதை நோக்கமாகக் கொண்டது ‘அறிவு இலக்கியம்’ என விளக்கம் தருவார், மனிதனின் அறிவைத் தூண்டி நெறிப்படுத்தம் நீதி நூல்களும் மக்களை இணங்குமாறு தூண்டும் வகையைச் சேர்ந்த இலக்கியங்களுக்கும் கருத்தே முதன்மையானது ஆகும். இவற்றுள் இவை படைக்கப்பட்டதன் நோக்கத்தை வெளிப்படுத்துவன கருத்துக்களேயாகும். இதில் உணர்ச்சிப் பெருக்கும் கற்பனைத் திறனும் இரண்டாம் இடத்தைப் பெறுகின்றன. வேறுவகையாகக் கூற வேண்டுமாயின் இவ்வகை இலக்கியம் தான் கூறவந்த கருத்தை வெளிப்படுத்திக் கவிதையை ஊடு பொருளாகக் கொண்டதே தவிர வேறுஇல்லை.

கருத்திற்கு முதன்மை இடம் தரும் படைப்பு இலக்கிய ஆசிரியன் உணர்ச்சிவயப்படாமல், காரணகாரியத் தொடர்புபடுத்தி படிப்போர் தெளிவாகப் புரிந்து கொள்ளத் தக்க வகையில் எதையும் எடுத்துரைக்க முயலுகின்றான்.

இதனால் ‘அறிவு இலக்கியம்’ - சார்பு இலக்கியத்தோடு பெரிதும் ஒத்ததாகத் தோன்றுகிறது.

பல நாடுகளிலும் மொழிகளிலும் இலக்கியம் பல தனித்தன்மைகளைப் பெற்றிருந்தாலும், தனக்கென சில வழிமுறைகளைப் பின்பற்றியிருந்தாலும், தோற்றத்திலும் வரலாற்று வளர்ச்சிப் போக்குகளிலும் அது பொதுவான பல தன்மைகளைப் பெற்றிருக்கிறது.

எனவே வரலாற்று வளர்ச்சிக் கட்டங்களை ஒட்டி இலக்கியங்களை அவற்றின் ஆழமான உள்ளோட்டங்களை (Undercurrents) அறிந்து கொள்ள உதவும். நாடுகளையும் அவற்றின் எல்லைகளையும், மொழிகளையும் அவற்றின் இறுக்கங்களையும் கடந்து இந்த உள்ளோட்டங்கள்தான் மனித குலத்தை நேயப்படுத்தக் கூடியவை, மனிதன் என்பதற்குரிய பொருளைப் புரிந்து கொள்ள வைப்பவை.

சோவியத் யூனியன் ∴பிரான்சு, பிரிட்டன், அமெரிக்கா முதலிய வளர்ச்சி பெற்ற நாடுகளில் அறிவியல் புனைக்கதைகள் (Science Fiction) தனி ஒரு இலக்கிய வகையாகக் கருதப்படுகிற அளவு வளர்ச்சி பெற்றுள்ளது. அறிவியல் வளர்ச்சியை ஒரு கூறாக வகைநிலை செய்யும்போது இவற்றின் பொதுமைக்கூறுகளை இனங்காண்பது இவற்றின் பொதுமைக்கூறுகளை இனங்காண்பது சாத்தியமாகின்றது. உதாரணமாக அங்கதம் (Satire) என்பது ஒரு வகை நிலை என்றால் அதனைச் சங்ககாலத்திலிருந்து – பின்னிடைக் காலத்தின் காளமேகப்புலவரை உட்படுத்தி இன்றையக் கவிதை வரை பொதுமைப்படுத்தி காண முடியும்.

## 13.4 இலக்கிய உணர்வும் அறிவும்

மனிதனிடத்துக் காணப்பெறும் அறிவு, உணர்ச்சி என்ற இரண்டனுள்ளும் உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்டே கவிதை பிறக்கிறது. உணர்ச்சி, அறிவைப்போல ஆராய்ச்சிக்கு உட்படுவதில்லை. அதனை அனுபவித்துக் காணலாமே தவிர, வேறு ஒன்றும் செய்தல் இயலாது. சர்க்கரை என்ற பொருளைப் பற்றியும் அதன் தனன்மையைப் பற்றியும், அதன் இயல்பு, ஆக்கம் என்பன பற்றியும் அறியவேண்டும். ஆனால் அதே சர்க்கரையின் இனிப்பு இயல்பை உணரவேண்டுமானால் வாயில் போட்டு அனுபவிப்பதைத் தவிர வேறு வழியில்லை. சர்க்கரையின் ஒரு துண்டுகூட இல்லாமல் அதன் இயல்பை ஆராயலாம். ஆராய்ந்து அதன் ஆக்கத்தை மற்றையோருக்கு எடுத்து விளக்கலாம். ஆனால், அதனை உண்ணும்பொழுது ஏற்படும் உணர்வுக்கு ஒரு பிடி சர்க்கரையை அவர்கள் வாயில் கொட்டுவதே சிறந்த வழி.

கவிதையும் சர்க்கரை போன்றதே, அதனைப்பற்றி அறிய வேண்டிய பொழுது அறிவின் துணைகொண்டு அதன் இயல்பு. தன்மை, புறத்தோற்றம், வடிவு, உள்ளீடு முதலியவற்றை ஆராயலாம். ஆனால், அவ்வளவோடு நின்றுவிட்டால் சர்க்கரையை அறிந்து கொள்ள வேண்டிய ஒருவன் சோதன இரசாயன நூலைப் படித்துப் (Organic Chemistry) பார்த்துத் திருப்தி அடைவதையே ஒக்கும். எனவே, கவிதையின் உண்மையான இயல்பை உணர வேண்டுமாயின் அதனை அனுபவித்துக் காணவேண்டுமே தவிர ஆராய்ந்து பயனில்லை.

## 13.5 அறிவும் அனுபவமும்

அறிவின் உதவி கொண்டே எதனையும் அனுபவிக்க முடியாதா என்ற ஐயம் சிலர் மனத்தில் எழலாம். அனுபவம் உணர்ச்சியின்

பாற்பட்டதே தவிர அறிவின்பாற் பட்டதென்று. குழந்தை ஒன்றை எடுத்துக் கொள்வோம். ஆக்குழந்தையின் அழகிலும் இன்பத்திலும் ஈடுபட்டுவிட்டால் இன்பமாகிய அனுபவம் தோன்றுகிறது. குழந்தை யாருடையது? அதன் தன்மை என்ன? என்ற ஆராய்ச்சிகள் அங்கே தோன்றுவதில்லை. அறிவு கொண்டு ஆராய்ந்தால் தோல், எலும்பு, சீழ், நரம்பு, பீழை, பிண்டம் என உருண்டு வடிவானதுதான் குழந்தை என்ற மெய்மை, வெளிப்படும், இதனை மறுத்தல் இயலாதுதான். ஆனால், இங்கு அனுபவம் தோன்ற வழியில்லை என்பதை நன்கு உணர முடியும். குழந்தையுடன் விளையாடும்பொழுது ஏன் இன்பம் தோன்றுகிறது என்று ஆராய வேண்டுவதானால் அறிவின் துணையை நாடலாம். எங்கே இன்பம் பிறக்கிறது, என்பதற்குக்கூட ஒருவாறு அறிவு விடை கூறும் ஆனால், இன்பம் எத்தகையது என்பதை அறிய அறிவால் இயலாது. உணரத்தான் முடியும். அதுவும் அனுபவித்துத்தான் உணர முடியும்.

## 13.6 அறிவின் தொழிலும் அனுபவத்தின் தொழிலும்

அறிவின் தொழிலையும் அனுபவத்தின் தொழிலையும் அறிய மற்றோர் எடுத்துக்காட்டினையும் காணலாம். கல்வி நிரம்பிய ஒருவன் இருக்கிறான். அவனுக்கு மீது சிறந்த அன்புடையார் ஒருவர் இறந்துவிட்டதாக வைத்துக் கொள்வோம். அப்பொழுது அவன் வருந்துகிறான், அழுகிறான், ஏன்? பிறந்தவர் யாவரும் இறப்பது உறுதி, எனும் உண்மையும், ‘முடி அணிந்த மன்னரும்முடிவில் ஒருபிடி சாம்பல் ஆவர்’ எனும் சிறந்த உண்மையும் அவன் அறியாததா? அறிவின் துணை கொண்டு ஆராய்ந்தால் அழுவது பேதமை என்பதும் வெளிப்படாதா? நாமம் ஒருநாள் அவ்வாறு சாகத்தான் போகிறோம் என்ற உண்மை அவன் அறியாததா? பின்னர் ஏன் அழுகிறான்? அழும்பொழுது அவன் அறிவு எங்கு சென்றுவிட்டது? அங்ஙனம் கற்றறிந்த ஒருவன் படும் துயரத்தைக் கண்டு சிலர் அவனை எள்ளி நகையாடுவதோடு நில்லாமல் துன்பத்தை மிகவும் பெரிதாக்கிக் கொள்கிறான் என்று கூறுவதையும் கேட்கிறோம். அவ்வாறு அவர்கள் கூறியதை கேட்டவுடன் அவன் தன்னுடைய துயரத்தை விட்டுவிடுகிறானா? இல்லையே, ஏன்? அவன் அறியாதது ஒன்றையும் ஒருவருங் கூறிவிடவில்லையல்லவா? ஆதலால்தான் அதை கேட்டதும் அவன் துயரம் ஆறிவிடவில்லை. இதிலிருந்து ஓர் உண்மை வெளிப்பட்டடே தீரும். அதாவது ஒருவன் துயரமாகிய உணர்ச்சியில் ஈடுபட நேரும் பொழுது அவனுடைய அறிவு மறைந்து விடுகின்றது. அவனே அவ்வுண்மையை அறிந்து எவ்வளவு முயன்றாலும் அவ்வறிவை வெளிக்கொணரமுடிவதில்லை, உணர்ச்சி மேமெ்ழலும்புகிறது. எனவே, ஒன்று மேம்பட்ட காலை ஏனையது தாழ்ந்து நிற்றல் உறுதி.

ஔவையார் அதியமானின் மறைவின் பொழுது பாடியதும், பாரியின் மறைவின் பொழுது அவன் மகள்கள் பாடியதும், கோப்பெருஞ்சோழனின் மறைவின்பொழுது பொத்தியார் பாடியதும் இங்கு நினைவுக்கூரத்தக்கது. முற்றும் துறந்த பட்டினத்தாரும் தன் தாய்

இறந்தபின் பாடிய பாடல்கள் படிப்பவரை அழவைத்துவிடும். எத்தகைய அறிவின் உயரத்தில் ஒருவரும் இருப்பினும் அனுபவம் அவர்களை மேலும் மெருகூட்டி எழுதவும் பாடவும் வைத்து விடுகிறது. தெரு ஓரங்களில் இறந்தவர்களை சுற்றி அழுபவர்களைப் பார்த்து இரக்கபட்டுக்கொண்டே செல்ல மட்டும் தாம் நாம் பழக்கப்பட்டிருக்கிறோம். அறிவின் உச்சத்தில் உள்ளவர்கள் இரக்கத்தை வெளிப்படுத்தும் பொழுதும் கூட தனித்து அழுகின்றனர். அழிவின் வழிப் பட்ட அனுபவங்களே இலக்கியங்கள். இவ்விலக்கியங்களில் அறிவுப் பகுதியை மேலும் விரித்துக் காணலாம்.



## 13.7 இலக்கியமும் அறிவும்

அறிவுத்துறைக்குரிய மனிதப் பண்பியல் (Humanities) நூல்கள் எல்லாம் வரலாறு. உளவியல், மெய்பொருளியல் முதலியன தத்தம் துறைக்குரிய அறிவையே நமக்குத் தருகின்றன. அந்நூல்களின் மூலம் நாம் உணர்ச்சியைப் பெற இயலாது. ஆனால், பொதுவாக இலக்கியம் எனப் போற்றப்படும் நூல்கள் எல்லாம் நம் உள்ள உணர்வுகளைக் கவரும் ஆற்றல் உடையனவாக உள்ளன. இந்த உணர்ச்சியே இலக்கியத்திற்கு நிலை பேற்றுத் தன்மையை அளிக்கிறது.

இலக்கியம் இன்புறுவதோடு அமையாது, அறிவுறுத்துவதாகவும் செயல்படுகிறது. படிப்பவருடைய உள்ளத்தைச் செம்மைப்படுத்தி பண்படச் செய்து நன்நெறியில் நாட்டம் கொள்ளுமாறு தூண்டுவது இலக்கியத்தின் மற்றொரு பொதுப் பண்பாகும். இலக்கியத்திற்கே பெரிதும் உரிய 'தனிப்பெருஞ் சிறப்பு இயல்பு' எனவும் இதனைக் கூறலாம்.

இன்புறுத்துவதை மட்டும் இலக்கியத்தின் நோக்கமாக ஒரு காலத்தில் மேல்நாட்டவர் கருதினர். ஆனால், இன்புறுத்துவதோடு வாழ்க்கையைத் திருத்தி, செம்மைப்படுத்தும் ஆற்றல் உடையதாக இலக்கியம் விளங்க வேண்டும் என்ற கருத்து இப்பொழுது வலுவடைந்து மனித வாழ்க்கையில் அடிப்படையாகக் கொண்டு தோன்றுவதே இலக்கியம், மனித வாழ்க்கையைப் பிரதிபலிப்பதன்மூலம், அது தனிச் சிறப்புமிக்க கலையாகத் திகழ்கிறது. எனவே வாழ்க்கையின் தீவிரப் பங்கினை அது, கொள்கிறது. வாழ்க்கையை ஆராய்கிறது. அதன் நிரை குறைகளை அம்பலப்படுத்துகிறது, அதிலிருந்து படிப்பினைகளைப் பெறத் தூண்டுகிறது. இவற்றின் மூலம் வாழ்க்கையைச் செம்மைப்படுத்த – சீர்படுத்த அது முயலுகிறது.

உலகப் பெருங்கவிஞர்களான நக்கீரர், வள்ளுவர், இளங்கோ, கம்பன், பாரதி, காளிதாசன், ஹோமர், வெர்ஜில், தாந்தே, ஸேக்ஸ்பியர், கெதே, புஷ்கின், மாகோயோவோஸ்கி போன்றோரின் இலக்கியப் படைப்புகளை ஆராய்கின்ற பொழுது அவற்றின் தனிச்சிறப்பு பெரிதும் புனைந்துரைப்பதாகிய கற்பனைத் திறனையே அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளதைக் காணுகின்றோம். இதிலிருந்து கற்பனைத் திறனாகிய

புதியன படைக்கும் ஆற்றல், முதன்மையான இலக்கியப் பண்பாகத் தோன்றுகிறது.

*ஒப்பிலக்கியம்*

**குறிப்பு**

நிலைபேறில்லா உலகில் நிலைபெற்று வாழும் உண்மைகளே 'காலம் கடந்து வாழும் மெய்ப்பொருள்கள்' எனப் போற்றப்படுகின்றன.

உலகப் பழம்பெரும் நாகரிக நாடுகளின் சிறப்புமிகு குறிக்கோள்கள் எல்லாம் அவர்களுடைய இலக்கியங்களின் மூலமே இன்றுவரை உலகில் வாழ்ந்து வருகின்றன. பாபிலோனிய, கிரேக்க, ரோமானிய, சீன, இந்திய பண்பாடுகளின் விழுமிய இலட்சியங்களே இதை தெரிவிக்கின்றன.

ஏறக்குறைய ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் உலகில் வேறெந்த நாட்டிலும் 'அனைத்து உலக சகோதரத்துவம்' பற்றிய சிந்தனை அரும்பவில்லை. இன்றைய பொதுவுடைமையாளர், கார்ல்மார்க்கே, முதன்முதலில் இக்கோட்பாட்டை உலகிற்கு வழங்கியவர் எனப் பெருமிதத்தோடு கூறுவர்.

ஆனால் தமிழ்நாட்டில் சங்ககாலப் புலவன் 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' எனும் அனைத்து உலக கோட்பாட்டைத் தமிழ்மொழியின் மூலம் அறிவுறுத்தியுள்ளதைப் புறநானூறு எனும் தமிழிலக்கியம் தெரிவிக்கிறது. இத்தகைய நிலைபேறுடைய புத்துலகச் சிந்தனையைப் போன்று ஒலிக்கும் குறிக்கோள்கள் பல, இன்னும் பண்டை உலக இலக்கியங்களில் வீறுடன் விளக்குவதைக் காணுகின்றோம். தமிழருடைய ஒப்பற்ற குறிக்கோள்கள் பல, அவற்றுள் தலைசிறந்தவை, வாழ்க்கை வாழ்வதற்கே! இனிய இல் வாழ்க்கையே சிறந்த அறவாழ்க்கை, கற்பு, விருந்தோம்பல், இறைவன் அடிசேர்தல், 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' அன்பின் வழியது உயிர்நிலை' என்பனவாகும். இவை சங்கப்பாடல்களில் தொடங்கி, இன்றுவரை வளர்ந்து வந்துள்ள தமிழ் இலக்கியங்கள் பலவற்றிலும், யாதாகிலும் ஒரு வகையில் வெளியிப்பட்டு வருகின்றன.

## 13.8 இலக்கியத்தில் அறிவுநிலை

தாம் புதியனவாகக் கண்டறிந்த உண்மைகளைப் பிறருக்கு எடுத்துரைக்க வேண்டும் . அதன் மூலம் புதிய கருத்துக்களை மக்களிடத்தில் பரப்ப வேண்டும் எனும் ஆரா இயற்கை அவாவினால் உந்தப்பட்டு, இலக்கியம் படைக்கப்படுவதுண்டு, இதனை 'அறிவுநிலை ஆர்வத்துடிப்பு' எனவும் கூறுவர். இந்தக் கண்ணோட்டத்தில் கருத்தைத் தெரிவிக்கும் கலையே இலக்கியம் என்பர்.

சங்ககாலச் சான்றோர் ஒருவர் 'உலகம் இன்னும் ஏன் அழியாமல் இருக்கிறது? எனும் சிக்கலான வினாவிற்கு விடை காண முயன்றுள்ளார். அவருடைய சிந்தனை அலைகள் இடையே அமிழ்தம் போன்ற ஒரு கருத்துப் பளிச்சிடுகிறது. தனக்கென, வாழாது பிறருடைய நலத்திற்காக அயராது உழைக்கும் சான்றோர்கள், (''உண்டல் அம்ம'' ''தனக்கென

*Self-Instructional Material*

முயலா நோன்தாஞ் பிறர்க்கென முயலுநர் உண்மையானே ''(புறநா – 182) உள்ளமையால் தான் உலகம் இன்னும் அழியாமல் இருக்கிறது எனும் முடிவிற்கு வருகிறார். தம்முடைய சிந்தனையால் திடுமெனத் தோன்றிய அவ்வறிவொளியினை உலகிற்கு உணர்த்த வேண்டும் எனும் உள்ளத்துடிப்பால் அந்தப் புலவர் ஆட்கொள்ளப்பட்டார். இதன் விளைவாகவே, 'உண்டாலம்ம இவ்வுலகம்' எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாட்டினை அவர் படைத்துள்ளார்.

தொல்காப்பியரின் ''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்'' (தொல், பொருள், அகத் 53) எனும் நூற்பாவின் நுட்பமான பொருளை அறிதல் வேண்டும் வரலாற்றுக் காலம் நெடுக, தமிழ்' அறிஞர்கள் இடையே 'புலனெறி வழக்கு' என்பது பற்றித் தோன்றியுள்ள எண்ணல் போக்குகளை இங்குத் தொகுத்துக் காண, அடிப்படை உண்மைகள் சில புலனாகும். இலக்கியத்தில் இடம் பெறும் வழக்கே. 'புலனெறி வழக்கு' என்பதைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் வாயிலாக அறிகிறோம். 'புலம்' எனும் சொல்லிற்கு 'அறிவு என்பது பொருள் இதனை வேர்ச்சொல்லாகக் கொண்டே 'புலமை' 'புலவர்' எனும் சொல் 'அறிவையும்' 'அறிவுடையவர்' எனும் பொருளையும் தருவனவாகவே, தமிழருடைய சிந்தனை வளர்ச்சியில் தொடக்க காலத்தில் கருதப்பட்டன. ஆனால், காலப்போக்கில் பாட்டியற்றும் பாவலனை – கவிஞனைச் சுட்டுவற்குரிய சொல்லாகப் புலவர் என்பதை வழங்கலாயினர்.

அரை குறையாகக் கற்றவர்களிடையே எவ்வளவு வேறுபாடு இருந்தாலும் நன்கு கற்றுத் தேர்ந்தவர்களிடையே அவ்வளவு வேறுபாடு காணோம், உயர்ந்த கலைஞர்களிடையிலும் அவ்வளவு வேறுபாடு காணோம். அதனால்தான் எந்த நாட்டில், எந்தக்காலத்தில், எந்த சூழ்நிலையில் தோன்றியவர்களாக இருந்தாலும் உயர்ந்த கலைஞர்கள் ஒரே தன்மையுடையவர்களாகத் தோன்றுகின்றார்கள். கபிலர், திருவள்ளுவர், கம்பர், பாரதி, வால்மீகி, காளிதாசர், சேக்ஸ்பியர், ஜான்மில்டன், தாந்தே, புஷ்கின், டால்ஸ்டாய், தாகூர் ஆகியோர் இடம், காலம், சூழ்நிலை முதலான வேறுபாடுகளைக் கடந்தவர்களாகத் திகழ்கின்றனர்.

## 13.9 அறிவு வளர்ச்சிக்கான பாதை:

இலக்கியங்களைப் பொதுப்பட வாயாரவும் வானளாவவும் புகழ்ந்து பேசித் தீர்ப்பதை விட அதன் சிறப்புடைப் பண்புகளைக் கண்டுபிடித்துச் சொல்லப்பழக வேண்டும். ''அறிவியல் அறிஞுனுகுப் பொருள்களின் மீதே அக்கறை, அவற்றின் பெறுமதியில் அன்று'' என்ற அறிவியற் கோட்பாட்டை டாக்டர் க. கைலாசபதி சுட்டிக் காட்டுவார். இம்மனப்பான்மை தமிழ் இலக்கியத் திறனாளிகட்கு வருதல் வேண்டும்.

தமிழ் இலக்கியங்களின் பொதுப்பண்புகளையும் தனித்திறன்களையும் துருவி ஆராய்ந்து வெளிக்கொணர்தல் வேண்டும்.

அவற்றைப் பிறமொழி இலக்கியங்களுடன் ஒப்பிட்டுக் காட்டி, உலக இலக்கிய வளர்ச்சியில் தமிழரின் பங்கு இது எனச் சுட்டிக் காட்டுமளவு நமக்குத் திறமை வளர வேண்டும். அதற்குப் பிறமொழி இலக்கியங்களைக் கசப்புணரவின்றிக் கற்கும் மனப்பான்மை நமக்கு முதலில் வரவேண்டும். தமிழ் இலக்கியமே சிறந்தது, சிறந்தது எனக் கிளிப்பிள்ளை போல ஒப்பிப்பதை விட்டு விட்டுத் தமிழ் இலக்கியத்திலுள்ள சிறந்த பண்புகள், திருந்திய வடிவங்கள் இவை இவை என்று கண்டறிந்து கூறப்பழக வேண்டும். அதற்குத் தமிழ் இலக்கியத்தை மட்டுமேனும் ஆழ்ந்து ஈடுபட்டுக் கற்கும் மன்ப்பான்மை வேண்டுமென்றோ?

## 13.10 அறிவின் இன்றியமையாமை

கல்வி அறிவின் அவசியத்தை உணர்ந்த புலவர்கள் தம் இலக்கிப் பாடல்களின் வழியே மக்களிடம் அறிவு பசியைத் தூண்டினர், ‘சான்றோனாக்குதல் தந்தைக்கு கடன்’’என புறநானூறு கூறுகிறது, ஔவை பாட்டி ‘மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கில், மன்னருக்கு தன் நாடல்லால் சிறப்பில்லை, கற்றோர்க்கு சென்ற இடமெல்லாம் சிறப்பு என்கிறார், மேலும் ‘ஆற்றுணா வேண்டியதில்’ என்கிறார். வள்ளுவர் கல்வி அறிவு இல்லாதவரை கண்கள் இல்லாதவராகவே கூறுகிறார். ‘‘எண் என்ப ஏன எழுத்தென்ப’ இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு’ என எண் பற்றிய அறிவையும் , எழுத்தைப்பற்றிய அறிவையும் அறியத் தூண்டுகிறார், ‘கீழ்பால் ஒருவன் கற்பின் மேற்பால் ஒருவனும் அவன் கட் படுமே’’ என சங்ககால மன்னன் கூறுவதன் அவசியம் என்ன? இலக்கியங்கள் என்பவை நம் அறிவு வளர்ச்சியை நாளும் தூண்டிவந்து இன்று ‘பறவையை கண்டான் விமானம் படைத்தான்’ ‘எதிரொலி கேட்டான் வானொலி படைத்தான்’ எனுமாறு இலக்கிய அறிவு அறிவியலின் வளர்ச்சிக்கு வித்திட்டு விஞ்ஞான உலகிற்கு நம்மை உயர்த்தி உள்ளதை ஒப்பு கொள்ள வேண்டும். இனி அறிவியல் வழியில் இலக்கியம் பற்றிக் காணலாம்.

## 13.11 இயற்பியல் கோட்பாடு

16- ஆம் நூற்றாண்டின் முடிவரை தர்க்க முறைதான் உண்மையைக் காணப் பயன்படும் கருவியாக இருந்தது. ‘அறிவியற் கலைகளின் அரசி’ என்று கருதப்படும் கணிதத்துறை முழுவதுமே தர்க்க நீதியில் தான் உருவாக்கப்பட்டது. புள்ளி நேர்கோடு போன்ற சில ஒப்புக் கொள்ளப்பட்ட அடிப்படை உண்மைகளின் மீது எழுதப்பட்ட உன்னதக் கோபுரம்தான் ‘வடிவ கணிதம்’ (Geometry).

ஆய்வு முறைகளில் ஒரு மகத்தான மாறுதலை உருவாக்கியவர் கலிலியோ (Geleileo) நாம் உண்மை என நம்பும் பல கருத்துக்கள், சித்தாந்தங்கள் இயற்கை நிகழ்வுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கப்பட வேண்டும் இயன்ற வகையில் சோதிக்கப்பட வேண்டும். சோதனையின்

விளைவுகள் நமது முடிவுகளோடு, கொள்கைகளோடு ஒப்பிட்பட வேண்டும். அவை ஒத்திருந்தால் நமது கொள்கைகள் சரியானவை, அப்படி ஒத்திராவிடில், நமது நம்பிக்கைகள், கொள்கைகள் சோதனைகளின் முடிவுகட்கு ஏற்ப மாற்றப்பட வேண்டும். இப்படிப்பட்ட அணுகுமுறையை எண்ணி, அதைத் தானே பல சோதனைகட்குப் பயன்படுத்தி, அதன் வழியில் அறிவியல் முறை (Scientific Method) என்னும் வழியை உலகுக்களித்தவர் கலிலியோ, இம்முறை உருவாவதற்கப் பதினேழாவது நூற்றாண்டில் பலர் உதவியுள்ளனர் என்றாலும் இதற்குத் தந்தை எனக் கலிலியோவைக் கூறுவதே பொருந்தும்.

இயற்பியல் (Physics) வேதியியல் (Chemistry) போன்ற அறிவுத்துறைகள் இந்த முறையின் பயனாக வளர்ந்தவையே ஆகும். மருத்துவம், பொறியியல், வேளாண்மை போன்ற துறைகளும் சோதனை முறையின் துணை கொண்டு வளர்ந்தவையேயாகும். இந்தத் துறைகள், சோதனைகள் இன்றி வளர சுருக்கமாகக் கூறுவதானால், அறிவு வளர்ச்சி, 16 – ஆம் நூற்றாண்டுக்குப் பின்னர் வாத மேடைகளில் இருந்து சோதனைச் சாலைகட்கு இடம் பெயர்ந்தது. மனித சமுதாயத்தில் கடந்த முந்நூறு ஆண்டுகளில் ஏற்பட்ட மகத்தான மாற்றங்களின் கரு அனைத்தும் உருவான இடம் சோதனைச் சாலைகளைப் பற்றி பாஸ்ட்டரின் (Louis Pasteur) பின்வரும் கூற்று அறிவு வளர்ச்சியில் அவற்றின் முக்கியத்துவத்தை உணர்த்தும்.

“சோதனைச் சாலைகள்” என்று குறிப்பிடப்படும் அந்தப் ‘புனித இல்லங்கள்’மீது அக்கறை காட்டுங்கள், அவை பெருக வேண்டும், வளம்பெற வேண்டும் எனக் கோரிக்கை எழுப்புங்கள், அவை வருங்காலத்தின் திருத்தலங்கள் மனித நலத்தின் மகிழ்ச்சியின் கோயில்கள், அங்குதான் மானிடம் தன் மாண்பில் உயர்கிறது, சக்தியில் வளர்கிறது தரத்தில் உயர்கிறது.

புதிய புனைவுகள் கண்டுபிடிப்புகள் ஆகியன மேதைமையின் மின்னலாக (Flash of Genius) மின்னலின் வெளிச்சமாக இல்லாமல், முறையான முயற்சிகளால் அறிஞர்கள் உருவாக்கக் கூடியவையாயின. பதினெட்டாவது நூற்றாண்டில் ‘ஜெர்மானிய விஞ்ஞானிகள் இயற்றுதற்கானவழியை இயற்றினார்கள் என்று ஆங்கிலத் தத்துவ அறிஞர்களும்கணித மேதையுமான வொய்ட் ஹெட் (A.N. Whitehead) கூறுவார்.

இந்தியப் பண்பாடு தலைசிறந்து விளங்கிய காலத்திலும், சீன நாகரிகத்திலும், எகிப்திய நாகரிகத்திலும், கிரேக்க, ரோமானிய நாகரிகங்களிலும், அதற்குப் பின்னர், 17 – ஆம் நூற்றாண்டு வரையிலும் இமயமென நின்ற மாமேதைகள் பலர் இருந்து மறைந்தார்கள் என்றாலும் 18, 19, 20 – ஆம் நூற்றாண்டுகளில் ஏறபட்ட அறிவுப் புரட்சி, அதற்கு முந்திய காலங்களில் ஏற்படவில்லை, காரணம், அன்றைய அறிஞர்களின் ஆற்றல் குறைவானது என்பது அன்று. அவர்கட்கு ‘அறிவியல் முறை’

என்னும் இந்த ஆய்வுக் கருவி கிடைக்கவில்லை. அன்று அது உருப்பெறவில்லை தர்க்க முறையைக் கொண்டு அவர்களால் செய்ய முடிந்தது அவ்வளவுதான். அறிவியல் முறை தர்க்க முறையினின்றும் முழுதும் வேறுபட்டதன்று, அதற்கு மாறானதுமல்ல. அதனிலிருந்து வளர்ந்த ஒன்று. அதனை உள்ளடக்கிய ஒன்று. தர்க்க முறையைப் பயன்படுத்தி ஒரு சித்தாந்தத்தை நிறுவுகிறோம் அதைச் சோதனை மூலம் சரிப்பார்க்கிறோம். அதே போல சோதனை மூலம் கிடைத்த தகவல்களை அலசிஆய்ந்து. தர்க்க முறையைப் பயன்படுத்திச் சில சித்தாந்தங்களை நிலை நாட்டுகிறோம். எனவே பரிமாணத்தைக் கூட்டிய ஒன்று.

இயற்பியல் (பௌதிகம்) பண்டைக் கிரேக்க மொழியில் இயற்கை என்ற பொருளை உடையது. வெளியின் வழி காலத்தின் வழி அதன் இயக்கம் அதனோடு தொடர்புடைய கொள்கைகளான ஆற்றல் மற்றும் விசை முதலியவை பற்றிய இயல் மெய்யியல் மாற்றம் இயல் வேண்டுமெனில் பேரண்டம் எப்படி நடந்து கொள்கிறது என்பதைப் புரிந்து கொள்ள இயற்கையில் நடத்தப்படும் பொதுவான பகுப்பாய்வு ஆகும்.

மிகப் பழமையான கல்வித் துறைகளுள் ஒன்று இயற்பியல் ஆகும். வானிலையும் உள்ளடக்குவதால் மிகப் பழமையானதென்றே கூறலாம். கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக வேதியியல், கணிதத்தின்சில கூறுகள். மற்றும் உயிரியலும்யியல்ன் பகுதியாக இயற்பியலும் உள்ளது.

17 – ஆம் நூற்றாண்டு அறிவியல் புரட்சிக்குப் பின்னர் இயற்கை அறிவியல் தனித் தள்மையுடன் தங்களுக்கே உரிய வகையில் வளர்ந்து வந்துள்ளது.

இயற்பியல் தேற்றக் கொள்கைகளை உடைய அறிவியல் மட்டுமன்று, ஓர் சோதனை முறை அறிவியலும் ஆகும். இயற்கை நிகழ்வுகளை திருத்தமாகவும் உள்ளபடியாகவும் கண்டறிய இயற்பியலில் எடுக்கப்படும் முயற்சிகளால் எண்ணவியலா எல்லைகளை இது எட்டியுளளது. தற்போதைய அறிவுப்படி, அணுவினும் மிகச்சிறிய நுண் துகள்களைப் பற்றியும், பேரண்டத்தின் தொலைவிலுள்ள விண்மீன்களின் உருவாக்கம் குறித்தும் எவ்வாறு நமது பேரண்டம் உருவாகியிருக்கலாம் என்றும் இயற்பியல் விவரிக்கிறது. இந்த மாபெரும் கற்கை டெமேதக்கிரட்டிசு, எரடோசுதெனிசு, அரிசுட்டாட்டில் போன்ற மெய்யியலாளர்களிடம் தோன்றி கலீலியோ கலிலி, ஐசக் நியூட்டன், லியோனார்டு அய்யர், ஜோசப் லூயி லாக்ராக்சி, மைக்கேல் பாரடே, ஜேம்ஸ் கிளார்க், மக்ஸ்வெல், ஆல்பர்ட் ஐன்ஸ்டைன், நீலசு போர், மேக்ஸ்பிளாங்க், வெர்னர் ஐசன் பர்க், பால்டிராக், ரிச்சர்டு ∴பெயின்மான், ஸ்டீபன் ஹேக்கிங் போன்ற இயற்பியளாளர்களால் வளர்த்தெடுக்கப்பட்டுள்ளது. பல தொன்மையான நாகரிகங்கள் விண்மீன்களும் வானத்தில் தோன்றும் நிகழ்வுகளும் குறித்து விளக்கம் தேடி வந்துள்ளன. இவற்றில் பல இயல்பானவையாக இல்லாது மெய்யியல் சார்ந்து இருந்தன. இயற்கை மெய்யில் என்று அறியப்படும்

இக்கருத்துகோள்கள் கி.மு 650 – 480 கால கிரேக்கத்தில் பரவியிருந்தன. சாக்ரடீசுக்கு முந்தைய மெய்யியலாளர்கள் இயற்கை நிகழ்வுகள் இயற்கைக்கு ஒவ்வாத விளக்கங்களை எதிர்த்து வந்துள்ளனர்.

ஓவ்வொரு நிகழ்விற்கும் ஓர் இயற்கையான காரணம் இருக்கும் என வாதிட்டனர். இவர்கள் காரணங்களாலும் உய்த்துணர்வாலும் கருத்துக்களை முன் வைத்ததுடன் இவர்களது பல கருதுகோள்களும் வெற்றிகரமாக சோதிக்கப்பட்டன. இருப்பினும் புவியை மையமாகக் கொண்டு வரையறுக்கப்பட்ட இக்கருது கோள்கள் சமயங்களின் ஆதரவுடன் அடுத்த இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு கோலோச்சின அறிவியலின் இருண்ட காலமாக அறியப்படும் இக்காலம் 1543 - இல் தற்கால வானியலின் தந்தை என அறியப்படும் நிக்கோலசு கோப்பர்னிக்கசு வெளியிட்ட சூரியனை மையமாகக் கொண்ட ஆய்வுக் கட்டுரையால் முடிவுக்கு வந்தது.

கோப்பர்னிக்கசு கோட்பாடுகளை முன் மொழிந்தாலும் இதற்கான சோதனை பூர்வ சான்றுகள் இயற்பியலின் தந்தை என அறியப்படும் கலீலியோ கலிலியால் வழங்கப்பட்டது.

மேகஸ் பிளாங்கின் குவாண்டம் கோட்பாடுகள் மற்றும் ஐன்ஸ்டைனின் சார்புக் கோட்பாடுகளால் தற்கால இயற்பியல் உருவானது.

## 13.12 இயற்பியலின் மையக் கோட்பாடுகள்

இயற்கையின் அடிப்படை உண்மையைக் கண்டறிய முற்பபடும் இயற்பியல் பல பிரிவுகளைக் கொண்டுள்ளபோதும் முதன்மையான ஐந்து கோட்பாடுகளாக இவற்றைக் குறிப்பிடலாம் பேரியலளவிலான நகர்வுகளைக் குறித்த மரபார்ந்த விசைபாயல், ஒளி முதலிய மின்காந்த நிகழ்வுகளை விவரிக்கும் மின்காந்தவியல், வெளிநேரம் மற்றும் நியூட்டனின் ஈர்ப்பு விதிகளை விவரிக்கும் ஐன்ஸ்டைனின் சார்புக் கோட்பாடு. மூலக்கூற்று நிகழ்வுகளையும். வெப்பப் பரிமாற்றத்தையும் விவரிக்கும் வெப்ப இயக்கவியல் மற்றும் அணு உலகின் நடத்தைகளை ஆராயும் குவாண்டம் விசையியல் ஆகும்.

### 13.12.1 மரபார்ந்த விசையியல்

மரபார்ந்த விசையியல் ஒளியின் வேகத்தை விட மிகக் குறைவான விசைவோட்டத்துடன் நகரும் பெரிய அளவிலுள்ள பொருட்களை விவரிக்கிறது.

### 13.12.2 மின்காந்தவியல்

மின் புலத்தினாலும் காந்தப் புலத்தினாலும் செறிவூட்டப்பட்ட துகள்களின் வினையாற்றலை விவரிக்கும் இயற்பியல் பிரிவே மின்காந்தவியல் ஆகும்.

## 13.12.3 சார்புக் கோட்பாடு

20–ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் அறிமுகப்படுத்திய சார்புக் கோட்பாடு இரு ஆய்வுப் பிரிவுகளாகப் பிரிந்துள்ளது.

அவை: i) சிறப்புச் சார்புக் கோட்பாடு

ii) பொதுச் சார்புக் கோட்பாடு

**i) சிறப்புச்சார்புக் கோட்பாடு**

இதில் ஐன்ஸ்டைன், என்ட்ரிக் லொரன்சு மற்றும் ஹெர்மான் மின் கோப்ஸ்கி போன்றோர் வெளி மற்றும் நேரம் குறித்த கருத்துக்களை ஒன்றிணைந்து நான்கு பரிமாணங்களைக் கொண்ட வெளிநேரம் என்ற கோட்பாட்டை நிறுவினர். நியூட்டனின் அறுதியிட்ட நேரத்தைப் புறக்கணித்ததுடன் மாற்றவியலா ஒளியின் வேகம், காலவிரிவு, நீள குறுக்கம் மற்றும் பொருண்மைக்கும் ஆற்றலுக்கும் உள்ள சமானம் ஆகிய புதுக் கருத்துக்களை இக்கோட்பாடு அறிமுகப்படுத்தியது நியூட்டனின் விதிகள் இக்கோட்பாட்டின் ஒரு சிறப்பு நிலைத் தீர்வாக உள்ளது.

**ii) பொதுச் சார்புக் கோட்பாடு**

வெளிநேரத்தின் வடிவியல் உருக்குலைவாக நியூட்டன் ஈர்ப்பு விதியை ஆராய்கிறது. திணிவுகளை மட்டுமே கொண்ட கோட்பாடுகளை போலன்றி இந்தக் கோட்பாடு ஆற்றலையும் வெளிநேர வளைவுகள் மூலம் கணக்கில் கொள்கிறது.

இதற்கென தனியான கணிதப்பிரிவாக் நுண்கணிதம் உருவாகியுள்ளது. ஈர்ப்புவிசையால் ஒளி வளைக்கப்படுதல், புதனின் சுற்றுப்பாதையினால் மாற்றம் போன்ற நிகழ்வுகளை இக்கோட்பாட்டால் விளக்க முடிகிறது. பொதுச் சார்புக் கோட்பாடினால் வானியற்பியலில் பயன்படும் ஓர் புதிய ஆய்வுத்துறையாக அண்டவியல் உருவாகியுள்ளது.

## 13.12.4 வெப்ப இயக்கவியல்

வெப்ப இயக்கவியல் எவ்வாறு வெப்பப் பரிமாற்றம் நிகழ்கிறது என்றும் இந்த ஆற்றலைக் கொண்டு எவ்வாறு வேண்டியப் பணியை செய்திட இயலும் என்றும் ஆராய்கிறது. இந்தப்பிரிவில் பொருட்களின் (திண்மம், நீர்மம், வளிமம்) போன்ற நிலை எவ்வாறு மாற்றமடைகின்றன எனவும் ஆராய்கிறது.

பேரளவில் காணும் போது கன அளவு, அழுத்தம், வெப்பநிலை போன்ற மாறிகளின் மாற்றங்களால் எவ்வாறு பொருட்கள் தாக்கமடைகின்றன என்பதையும் விவரிக்கிறது வெப்ப இயக்கவியல் விசைப்பொறிகள், நிலை மாறிகள், வேதியியற் தாக்கம், போக்குவரத்து

நிகழ்வுகள், கருங்குழி போன்ற பல்வேறு அறிவியல் மற்றும் பொறியியல் துறைகளில் பயன்படுத்தப்படுகிறது.



## 13.12.5 குவாண்டம் விசையியல்



அணு அமைப்புகள் மற்றும் அணு உட்கூறமைவுகள் குறித்தும் மின்காந்த அலைகளுடன் இவற்றின் இடைவினைகள் குறித்தும் கண்காணிக்கக்கூடிய அளவுகளால் விவரிக்கின்ற இயற்பியலின் பிரிவே குவாண்டம் விசையியல் ஆகும். இது அனைத்து சக்தியும் தனித்தனி துணுக்கங்கள் அல்லது பொதிகள் அல்லது குவாண்டங்களாக வெளிப்படுகின்றன என்பதை அடிப்படையாகக் கொண்டது.

குவாண்டம் கோட்பாட்டின்படி அலைச்சார்பு மூலமாக அறிந்து கொள்ளக்கூடிய அடிப்படைத்துகள்களின் கவனிக்கப்படும் பண்புகளை குவாண்டம் விசையியல் நிகழ்தகவு அல்லது புள்ளிநிலை கணக்குகள் மூலமே நிரூபிக்கிறது. மரபார்ந்த விசையியலின் மையமாக நியூட்டனின் இயக்க விதிகளும் ஆற்றல் அழிவின்மையும் அமைந்துள்ளனதைப் போன்று குவாண்டம் விசையியலில் சுரோடிங்கர் சமன்பாடு மையமாக உள்ளது. ஓர் இயங்கு அமைப்பின் வருங்கால நடத்தையை முன்னறியவும் பகுத்தாய்ந்து நிகழ்வுகளின் அல்லது முடிவுகளின் சரியான நிகழ்தகவுகளை அலை இயக்க சார்புகள் மூலம் தீர்மானிக்கவும் இச்சமன்பாடு உதவுகிறது.

20 -ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் கண்டறியப்பட்ட குவாண்டம் விசையியல் இயற்பியலில் ஓர் புரட்சியாக அமைந்தது. தற்கால இயற்பியலின் ஆய்வுகளில் அடிப்படையாக குவாண்டம் விசையியல் அமைந்துள்ளது.

## 13.13 இலக்கியமும் அறிவும் - இயற்பியல் கோட்பாடு – விளக்கம்

இலக்கியங்கள் மனித உணர்வின் அடிப்படையில் வடிக்கப்பட்டிருந்தாலும், உணர்ச்சியை கடந்த அறிவு வழிபட்ட நிலைக்கு முன்னேறி அதற்கு மேலும் ஒருபடி மேற்சென்று அறிவியல் எனும் பாதையைத் திறந்து வைத்துள்ளது. இலக்கியங்களில் அறிவியல் சார்ந்த பல துறைகள் பேசப்பட்டிருப்பினும் உலகளாவிய அளவில் இலக்கியங்களில் இயற்பியல் சார்ந்த செய்திகளே சிறப்பிடம் பெறுகின்றன.

## வினா – விடை பயிற்சி

**I இரண்டு மதிப்பெண் வினா – விடை**

1. **குவின்சி இலக்கியங்களை எங்ஙனம் வகைப்படுத்துகிறார்?**

   i) அறிவு இலக்கியம் ii) ஆற்றல் இலக்கியம்

2. **உலகப் பெருங்கவிஞர்கள் சிலரை குறிப்பிடுக.**

குறிப்பு

நக்கீரர், வள்ளுவர், இளங்கோ, கம்பன், பாரதி, காளிதாசர், ஹோமர், ஜெர்ஜில், தாந்தே, ஸேக்ஜ்பியர், புஸ்கின் போன்றோர்

**3. புலவர் எனும் சொல்லின் பொருள் யாது?**

அறிவுடையோர்

**4. இயற்பியல் என்ற சொல்லின் பொருள் என்ன?**

இயற்பியல் (பௌதீகம்) பண்டைக் கிரேக்க மொழியில் இயற்கை என்ற பொருளை உடையது

**5. இயற்பியலின் மையக் கோட்பாடுகள் எத்தனை வகைப்படும்?**

ஐந்து

**II ஐந்து மதிப்பெண் வினா – விடை**

**6. குவின்சி கூறும் இலக்கிய வகை யாது? விவரி**

(13.3 - இல் உள்ள செய்திகளை எழுதுக)

**7. அறிவின் தொழிலும் அனுபவத்தின் தொழிலும் பற்றி விவரிக்க.**

(13.6 - இல் உள்ள செய்திகளை எழுதுக)

**8. இலக்கியமும் அறிவும் குறித்து விளக்குக.**

(13.7 - இல் உள்ள செய்திகளை எழுதுக)

**9. இயற்பியல் கோட்பாடு என்றால் என்ன?**

(13.11 - இல் உள்ள செய்திகளை எழுதுக)

**10. இயற்பியலின் மையக் கோட்பாடுகள் யாவை? விவரி**

(13.12 - இல் உள்ள செய்திகளை எழுதுக)

**III பத்து மதிப்பெண் வினா விடை**

**11. இலக்கியமும் அறிவும் எனுந் தலைப்பில் கட்டுரை எழுதுக.**

13.3 முதல் 13.10 உள்ள செய்திகளை எழுதுக)

**12. இயற்பியல் கோட்பாடுகள் என்றால் என்ன விவரிக்க**

(13.11 – 13.12 ஆகிய இரு தலைப்பின் கீழ் உள்ள செய்திகளை எழுதுக)

# கூறு – 14:

# சார்பியல் கோட்பாடுகள் காலமும் இலக்கியமும்

குறிப்பு

## 14.1. முன்னுரை

இயற்பியலில் (பௌதீகம்) மிகவும் முக்கியமான சார்பியல் கோட்பாட்டைக் கண்டுபிடித்து வெளியிட்டவர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் (ஜெர்மன் மொழியில் அவருடைய பெயர் ‘ஒரு கல்’ ஐன் - ஒன்று, ஸ்டைன் - கல்(ஸ்டோன்) இவருக்கு இப்பேர்பட்ட ஒரு கொள்கை மனதில் உதித்தது எப்படி? எப்படியாயினும் இவரது சார்பியல் கோட்பாடுகளும் அதன் மூலம் காலமும் இலக்கியமும் பற்றிக் காணலாம்.

## 14.2 நோக்கம்

அறிவியல் அணுகுமுறையை இலக்கியத்தோடு இணைத்து ஆராய்ந்து, அறிவியலின் தோற்றுவாயாக இலக்கியங்கள் இருப்பதை நிறுவ ஐன்ஸ்டைனின் சார்பியல் கோட்பாடுகள் கொண்டு ஆராயும் போக்கு திறனாய்வாளர்களிடம் இந்நூற்றாண்டில் முகிழ்த்துள்ளது. அதனை அறிவதே இக்கூறின் நோக்கம் ஆகும்.

## 14.3 ஐன்ஸ்டைனும் சார்புக் கோட்பாடும்

What is your future ambition? என்று சிறுவயதில் ஆங்கில மொழிப் பரீட்சைகளில் கேட்கப்படும் போது ஐ றயவெ வழ டிநஉழஅந ய னழஉவழச ழுெ னயல என்ற பதில்தான் அதிகமாக இருக்கும். ஆனால் இந்தக் காலம் மலையேறிப் போய் I want to become a time traveller என்ற தற்போதைய சிறார்கள் எழுதும் காலம் வந்துவிட்டது. இதற்கு காரணம் இப்பொழுது வெளிவரும் நேரத்தை மையமமாகக் கொண்ட புனைக்கதைகள், திரைப்படங்கள், பத்திரிகையில் வெளியாகும் கட்டுரைகள்,சமூக வலைத்தளங்களில் வெளியாகும் காணொளிகள் என்பனவற்றின் தாக்கமே.

நேரம் தொடர்பாக ஆரம்பத்தில் கருத்து வெளியிட்ட முன்னோடிகளில் முதலிடம் வகிப்பவர் தான் ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் இதற்காக அவர் வைத்த கோட்பாடுதான் சார்பியல் கோட்பாடு இதனை அவர் இரு கட்டமாக வெளியிட்டார். 1905-இல் சிறப்புச் சார்பியல் கோட்பாடும் 1915-இல் பொதுச் சார்பியல் கோட்பாடும் இவரால் வெளியிடப்பட்டன.

சார்பியல் கோட்பாடு ஐன்ஸ்டீனால் கூறப்பட்டது என்பதைத் தவிர, சார்பியல் கோட்பாட்டில் என்ன கூறினார் என்பது தெரியாது. இதற்கு காரணம், நாமும் ஐன்ஸ்டீன் ஆக மாறி, அவருடைய உள்ளத்தில் நேரம் தொடர்பாக ஏற்பட்ட சந்தேகங்களின் தொடக்கம் அவர் அக்கேள்விகளுக்கு விடையை அடையும் வரை, அதே ஒழுங்கில்

சிந்திப்பது. இதனாலேயே, நம்மில் பலர் இம்முயற்சியால் தோல்வியடைகின்றோம்.



நியூட்டனின் இயக்க விதிகள் கூட இவ்வாறுதான் நிறுவப்பட்டிருக்கும், ஆனால், நியூட்டனின் மூன்றாம் விதி என்ன கூறுகின்றது என்று கேட்டால், ஒவ்வொரு தாக்கத்திற்கும் எதிரானதும்,சமமானதுமான மறுதாக்கம் உண்டு என்று ஒரே மூச்சில் சொல்லி முடிப்போம். ஆனால் நாம் இங்கு நியூட்டன் ஆக மாறி சிந்திப்பதில்லை.

குறிப்பு

ஆகவே, கணிதப்பாடத்தில் 'நிறுவல்' கணக்குகளில் முதலில் விடையைத் தருவார்கள், பின்னர் இது எப்படி வந்தது என்று நாம் நிறுவ வேண்டும். இங்கு 'விடையாக' அதாவது எதை நாம் நிறுவவேண்டுமோ, அது என்னவென்று ஓரளவுக்கேனும் தெரிந்திருக்க வேண்டும். அதே போல், ஐன்ஸ்டீனின் சார்பியல் கோட்பாடுகள் என்ன சொல்கின்றன என்று கேட்டால், நியூட்டனின் மூன்றாம் விதியை ஒரே மூச்சில் சொல்லி முடிப்பது போல் சார்பியல் கோட்பாட்டை எப்படி சொல்வது?

## 14.4 சிறப்புச் சார்பியல் கோட்பாடு (Special theory of Relativity)

ஆல்பர்ட் ஐன்ஸ்ட்டின் 1905-இல் சிறப்புச் சார்பியல் கோட்பாட்டை வெளியிட்டார், இதில் அவர் கூறிய கருத்தினை இலகு தமிழில் கூறுவதாயின்,

''நகரும் கடிகாரம் மெதுவாக இயங்கும்'' அதாவது யாதாயினும் ஒரு வேகத்தில் நகர்ந்து கொண்டிருக்கும் ஒரு கடிகாரம் காட்டும் நேரத்தை விட ஒரு ஸ்தானத்தில் இருக்கும் கடிகாரம் காட்டும் நேரம் எப்போதும் அதிகமானதாக இருக்கும்.

### 14.4.1 எடுத்துக்காட்டு

நண்பர் ஒருவர் கொழும்புவிற்கு புறப்படுகிறார். நான் அவரை வழியனுப்ப மட்டக்களப்பு புகையிரதத்திற்கு செல்கிறேன். தற்பொழுது நேரம் சரியாக மாலை 7 மணி இருவருடைய கடிகாரங்களும் 7 மணியைக் காட்டுகின்றன. அவர் கொழும்பு புகையிரத நிலையத்தை அடைந்த கணம் என்னைத் தொலைபேசியில் அழைக்கிறார். அப்போது எனது கடிகாரத்தின் நேரம் அதிகாலை 5.40 மணி எனில், ஐன்ஸ்டீனின் சார்பியல் கோட்பாட்டின் அடிப்படையில் எனது நண்பனின் கடிகாரம் 5 மணி 40 நிமிடங்களை விட குறைவாக காட்ட வேண்டும். ஏனெனில் அவர் நகர்ந்திருக்கிறார். ஆனால் உண்மையில் எமது கடிகாரத்தின் உணர்திறன் மட்டுப்படுத்தப்பட்டுள்ளது. நாம் மிக உணர்திறன் கூடிய கடிகாரங்களை (மைக்ரோ செக்கன், நானோ செக்கன்) பயன்படுத்துவோமாயின், இம்மாற்றங்களை உணரமுடியும். எனினும், இந்தப் புகையிரத உதாரணத்திற்கான நேர வித்தியாசம் நனோ செக்கனிலும் பல மடங்கு சிறியதாகவே இருக்கும்.

அப்போ எப்பதான் நம்ம watch – y டைம் குறைத்துக் காட்டறத பார்க்கலாம்? என்ற உங்களுடைய அனென எழஉைந எனக்கு கேட்குது. இதற்கு நீங்கள் ஒளியின் வேகத்தை அண்மித்த வேகத்தில் பயணிக்க வேண்டும்.

நீங்கள் ஒளியின் வேகத்தை எவ்வளவுக்கு அண்மிக்கிறீர்களோ, அதற்கு நேர் விகித சமனாக உங்களுடைய நேரமும் தாமதமாகும். அதாவது உங்களுடைய கடிகாரம் பிந்தி ஓடும். நீங்கள் வேகத்தை அதிகரிக்கிறீர்கள், உங்கள் கடிகாரமும் அதற்கேற்ப அதிகளவு பிந்தி ஓடுகிறது. ஒரு கட்டத்தில் நீங்கள் ஒளியின் வேகத்தை அடைவீர்களாயின். உங்கள் கடிகாரம் நகராது அப்படியே நிற்கும். இதைத்தான் நமது இயற்பியல் (Physics) ஆசிரியர்களிடம் சார்பியல் கோட்பாடு என்ன சொல்கிறது என்று கேட்டால் ‘ஒளியின் வேகத்தில் பயணித்தால் வயது மாறாது’ என்று கூறுவார்கள். இப்பொழுது அதன் அர்த்தம் புரிகிறதா?

அப்போ ஒளியின் வேகத்தை விட அதிகமான வேகத்தில் பயணித்தால்! என்ற உங்கள் Mind voice உம் எனக்கு கேட்கிறது. நிச்சயமாக கடிகாரம் பின்னோக்கி சுழலும். இன்னொரு விதத்தில் கூறுவாயின், நீங்கள் இளமை நோக்கிப் பயணிப்பீர்கள், இதை ஐன்ஸ்ட்டின் இரட்டை முரண்(Twin Paradox) என்ற கோட்பாட்டின் அடிப்படையில் இலகுவாக விவரித்தார்.

## 14.5 இரட்டை முரண் (Twin Paradox)

ஒத்த இரட்டையர்கள் (Identical Twins) இருவரை ஐன்ஸ்ட்டின் உதாரணமாகக் கொள்கிறார். இவர்களின் பண்புகள் எல்லாமே ஒரே மாதிரியானவை. இவர்களில் ஒருவர் விண்வெளி வீரர் மற்றையவர் விண்வெளிப் பொறியியலாளா தற்பொழுது இருவருக்கும் வயது முப்பது. இதில் ஓர் விண்வெளி ஆய்விற்காக முதலாமவர் விண்வெளிக்கு விண்கலம் மூலம் செல்கிறார்,மற்றையவர் பூமியில் இருந்து கொண்டு விண்வெளி ஆய்வை மேற்கொள்கிறார். பூமியில் இருப்பவர்க்கு வயது 60 ஆகும்போது ஆய்வு நிறைவுறுகிறது. தனது சகோதரர் விண்வெளியிலிருந்து பூமிக்குத் திரும்புகிறார். இரு சகோதரரும் பூமியில் இருப்பவரின் வயது அடிப்படையில் 30 வருடங்களின் பின்னர் சந்திக்கின்றனர். ஆனால் விண்வெளியில் இருந்து வந்தவர் இளமையாகத் தோற்றமளிக்கிறார். விண்வெளி வீரரிடம் வயதைக் கேட்க, தனக்கு ஐம்பது வயதே ஆகிறது என்கிறார். இதற்கு காரணம் என்ன? அவர் ஒளிக்கு அண்மித்த வேகத்தில் பயணித்து இருக்கிறார். அதனால் பூமியின் முப்பது வருடங்கள், அவருக்கு 20 வருடங்களே, அதாவது பூமியின் 30 வருடங்களுக்கு அவருடைய 20 வருடங்கள் விரிவடைந்துள்ளது. இதையே நேரம் விரிவடைதல் என்கிறார் ஐன்ஸ்டீன்.

குறிப்பு

அடுத்து, நாம் வயது மாறாமல் இருக்க ஒளியின் வேகத்தில் பயணிப்பது சாத்தியமா? என்று கேட்டால், ஐன்ஸ்டீனின் கருத்துப்படி அது சாத்தியமில்லை. அவர் என்ன கூறுகிறார் எனில் எமது வேகம் அதிகரிக்க அதிகரிக்க அதற்கு நேர் விகித சமனாக எமது பருமனும் அதிகரிக்கின்றது. நாம் ஒளியின் வேகத்தை அடையும்போது எமது பருமன் முடிவிலி திணிவை அடைகின்றது. முடிவிலித் திணிவை நகர்த்த முடிவிலி சக்தி தேவை. எனவே ஒளியின் வேகத்தில் பயணிப்பது சாத்தியம் இல்லை என அவர் நிறுவுகிறார். எனினும் ஒளியின் வேகத்தை விட குறைவான வேகத்தில் பயணிப்பது சாத்தியம் என்கிறார். ஆக நாம் ஒளியின் வேகத்திலோ அல்லது அதற்கு அதிகமான வேகத்திலோ பயணிக்க முடியாது. இன்னொரு வகையில் கூறுவதாயின் நாம் கடிகாரத்தை சுழலாமல் நிறுத்தவோ (ஒளியின் வேகத்தில் பயணித்தால்) பின்னோக்கி சுழல வைக்கவோ(ஒளியை விட அதிகமான வேகத்தில் பயணித்தால்) முடியாது. எனினும் கடிகாரத்தை முன்னோக்கி மெதுவாக சுழல வைக்க முடியும்.

இப்போது, கடிகாரம் தானே பிந்தி ஓடும் நமக்கு எப்படி வயது குறையும்? என்று உங்களுக்கு ஒரு சந்தேகம் இருக்கும். கடிகாரம் மட்டுமல்ல நீங்களும் ஸ்லோமோ ஆகி விடுவீர்கள். உங்கள் இதயத் துடிப்பு, சுவாசம், கலப்பிரிவு, கல இறப்பு என அனைத்தும் ஸ்லோமோ ஆகி விடும். உதாரணத்திற்கு தொலைக்காட்சியில் கிரிக்கெட் பார்க்கும்போது ஒவ்வொரு பந்து வீச்சின் முடிவிலும் ஸ்லோமோ அழவலைபெ - இல் அதனைத் திரும்பிக் காட்டுவார்கள். அதில் காட்டுவது போல, நாமும் நம்மைச் சூழவுள்ளனவும் மெதுவாகவே இயங்குவோம்.

ஆனால் அதனை எம்மால் உணர முடியாதிருக்க இப்போது உங்களுக்கு ஐன்ஸ்டீன் சிறப்புச் சார்பியல் கோட்பாட்டில் என்ன கூறினார் எனப் புரிந்திருக்கும்.

இன்று நமது பாடத்திட்டத்தில் நியூட்டனின் இயக்க விதிகள் எவ்வளவு முக்கியத்துவம் பெறுகிறதோ, அதே அளவு முக்கியத்துவத்தை எதிர்காலத்து குழந்தைகள் பாடத்திட்டத்தில் சார்புக் கொள்கை' முக்கியத்துவம் பெறும். (காலத்தின் கோலம் அத்தியாயம். 02 – Sathik Mohamed, January 20, 2018, 7.41 pm https:/config..lk/2018/01/20 illution of time)

ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் இரு பெரும் கோட்பாடுகள் சார்புக் கோட்பாடு பொதுவாக சார்புக் கோட்பாடு என்று கூறப்படுகிறது.

## 14.6 சார்புக் கோட்பாடு

- கணக்கிடப்படும் வெவ்வேறு அளவுகள், பார்வையாளரின் திசைவேகத்தைப் பொறுத்தே அமையும் குறிப்பாக, காலமும் வெளியும் விரிந்தோ சுருங்கியோ இருக்கலாம்.

- ❖ வெளிநேரம்: வெளியும் காலமும் ஒருசேரவே கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். ஒன்றைப் பொறுத்து மற்றொன்று அமையும்.
- ❖ அனைத்து பார்வையாளர்களுக்கும் ஒளியின் வேகம் ஒரு மாறிலியாகும்.

குறிப்பு

சார்புக்கோட்பாடு அல்பர்ட் ஐன்ஸ்டீன் முன்வைக்கப்பட்ட பிரபலமான கோட்பாடாகும். $E=mc^2$ என்ற தனது சமன்பாட்டின் மூலம் மிகச் சிறிய துகள்களால் கூற மிகப்பெரிய அளவில் சக்தியை வெளியிட முடியும் என்பதை உணர்த்தினார்.

## 14.6.1. சிறப்புச் சார்புக் கோட்பாடு

(Special theory of relativity) என்னும் கொள்கை ஆல்பர்ட் ஐன்ஸ்டீனால் 1905-ல் வெளியிடப்பட்ட கருத்தாக்கமாகும். இது துகள்களின் இயக்கம் தொடர்பானது. இது எந்தவொரு இயக்கமும் சார்பானது என்றும், எதுவும் தீர்க்கமானதாக இருக்காது என்றும் ஒரு கருத்தை முன் வைத்தது இதற்கு முன்னரே 1687 ஆம் ஆண்டில் சர்.ஐசக் நியூட்டன் பொருட்களின் இயக்கங்கள் தொடர்பான விதிகள் அன்றாட வாழ்க்கையோடு தொடர்புபட்ட இயக்கங்களுக்குப் பொருத்தமாக அமைந்தது.

**சிறப்புச் சார்புக் கோட்பாட்டின் கருதுகோள்**

சிறப்புச் சார்புக் கோட்பாடு இரண்டு கருதுகோள்களைக் கொண்டுள்ளது.

1. ஒளியின் வேகம் மாறாத் தன்மை கவனிப்பவர்களுடைய சார்பு வேகம் எதுவாக இருப்பினும் அவர்கள் எல்லோருக்கும் ஒளியின் வேகம் ஒன்றே.
2. எந்தவொரு சடத்துவக் குறியீட்டுச் சட்டத்திலும் இயற்பியல் விதிகள் ஒன்றே, சார்பு நிலையில் துகள் ஒன்றுடன் இயங்கிக் கொண்டிருக்கும் ஒருவருக்கும், சோதனைச் சாலையில் நிலையாக இருக்கும் ஒருவருக்கும் இயற்பியல் விதிகள் ஒன்று என்பதே இதன்பொருள்.

## 14.6.2 பொதுச் சார்புக்கோட்பாடு

பொதுச் சார்புக்கோட்பாடு என்பது 1916 ஆம் ஆண்டில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனால் வெளியிடப்பட்ட ஈர்ப்புக்கான வடிவவியல் கோட்பாடு ஆகும். பொதுச் சார்பின் மையக் கருத்து வெளியும் நேரமும் வெளிநேரம் எனப்படுவதன் இரண்டு அம்சங்கள் என்பதால் வெளிநேரம் அதில் இருக்கும் பொருள், ஆற்றல் உந்தம் என்பனவற்றின் காரணமாக வளைந்து காணப்படுகிறது.

குறிப்பு

### 14.6.2.1 எடுத்துக்காட்டுகள்

1. ஒரு மானிடன் பேருந்தின் உள் ஓடிக் கொண்டிருக்கும்போது அதைப் பேருந்திற்கு வெளியே இருந்து பார்ப்பவர்களுக்கு ஓடுபவர் பேருந்தின் வேகத்திலேயே ஓடுவதாய்த் தோன்றும். (உதாரணம்: ஒரு மணி நேரத்துக்கு 100 கி.மீ, ஆனால் பேருந்தின் உள் அமர்ந்து பார்ப்பவர்களுக்கு அந்த மானிடர் ஒரு மணி நேரத்திற்கு 20 கி.மீ., வேகத்திலேயே ஓடுவதாய் தெரியும். அதன் காரணம் சிறப்புச் சார்புக் கோட்பாடு ஆகும். பேருந்தின் உள் இருந்து பார்ப்பவர் ஏறக்குறைய ஓடும் மானிடரின் வேகத்திலேயே பேருந்தில் செல்வதால் அவருக்கு மானிடரின் ஓட்ட வேகம் குறைவாகவே தெரியும் ஆனால் பேருந்திற்கு வெளியே இருப்பவர் நின்று கொண்டிருப்பதால் அவருக்கு அம்மானிடரின் ஓட்ட வேகம் அதிகமாகத் தெரியும்.

2. தற்போது பேருந்தில் வெளியே இருந்து பார்த்தவர் அடுத்த பேருந்தில் ஏறிச் செல்கிறார் எனில் அவரின் எடை கூடும். பேருந்து போகும் திசையில் அவர் சுருங்குவார். அவரின் கடிகாரம் சற்று மெதுவாக ஓடும். ஆனால் இவற்றின் மாறுபாடுகளை கணிப்பது மிகவும் கடினமாகும். அவரின் கைக்கடிகாரத்தின் நேர வித்யாசம் ஒரு நொடியில் பல கோடி கோடி மடங்குகள் குறைவாக இருப்பதால் அதை மானிடர் எளிதாக உணர முடியாது.

இதைப்போன்ற எளிதில் புரிந்து கொள்ள முடியாது ஐன்ஸ்டீன் தந்த விளக்கங்கள் அமைந்ததால் இவருடைய இந்தக் கோட்பாடுகளுக்கு எதிர்ப்பும் வந்தன.

## 14.7 நியூட்டன் விதிகளும் சார்புக்கோட்பாடும்

நியூட்டனின் விதிகளின்படி குறைவான வேகத்தையும் குறைந்த ஈர்ப்பு விசையையும் கொண்ட அண்டப் பொருட்களின் தன்மைகளையே கண்டறிய முடியும். வேகமாகவோ அதிக ஈர்ப்பு விசையோடு இயங்கும் அண்டப் பொருட்களின் தன்மைகளையோ நியூட்டன் விதிகளின்படி கணிப்பதில் பிழைகள் நேரலாம். இதற்கு உதாரணமாக புதன் கோளின் சுற்றுப் பாதையிலும் உள்ள தன்மைகளை கணிப்பதில் உள்ள பிழைகளைக் கூறலாம். ஆனால் இதை ஐன்ஸ்டீன் சார்புக் கோட்பாட்டின்படி பிழையில்லாமல் கணிக்க முடியும். காரணம் இங்கு நியூட்டனின் விதிகள் பெருமளவு புவியின் உள்ளும் ஐன்ஸ்டீனின் சார்புக் கோட்பாடு வானியல் ஆராய்ச்சிகளிலும் ஆதிக்கம் செலுத்துகின்றன.

## 14.8 ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் புகழும் இகழும்

ஆல்பர்ட் ஐன்ஸ்டினுக்கு சார்புக்கொள்கை பெரிய புகழைப் பெற்றுத் தந்தது. அவர் இதை கண்டறிந்ததற்காக நிகோலஸ், கோபர்நிகஸ், கெப்லர், ஐசக் நியூட்டன் போன்றவர்களுடன் ஒப்பிடப்பட்டார். சார்புக் கொள்கை கண்ட ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் ஒரு யூத மதத்தவர் என்பதால் அவரை நேரடியாக விமர்சிக்காமல் சார்புக்

கொள்கையை புரிந்து கொள்வதில் இருந்த இடர்களை காட்டி விமர்சித்தனர்.





அவ்வாறு சிறப்புச் சார்புக் கோட்பாட்டை விமர்சித்தவர்கள் 1.எட்மண்டு விட்டேகர்(1954) 2. ஜெரால்டு ஹால்டன் (1960) 3. கேசு வாணி (1965) 4. ஆர்தர் மில்லர் (1973) 5. ஆப்ரகாம் பயசு (1982) 6. எலிய சாகர் (1983) 7. ஜான் சுடேச்சல் (1995) 8. மீட்டர் கலிசன் (2002) 8. கிரிஸ்டோபர் ஜான் (2003) 10. ஒலிவர் தரிகோல் (2004) 11. அனட்டோலி அலெக்சுவிச்சு இலகுனோவ் (2004) 12. ஹார்வே பிரவுன் (2005) 13. ரோஜர் செர்ப் (2006) 14. சால் கட்ஜர் (2005) 15. சுகாட் வால்டர்

**பொதுச்சார்புக் கோட்பாட்டை விமர்சித்தவர்கள்**

1. விட்டேகர்
2. அல்பர்சிடு ∴பொல்சிங் (1993)
3. கொரி, ரென், சுடேச்சலும் வின்எர்பெர்கும் (1197∴2003)
4. அனட்டோலி அடிலக்சுவிச்சு இலகுனோவ் (2004)
5. வியூன்சும் சோமரும் (2005)
6. டேவிட் ரோவ்(2005)

**சார்புக் கொள்கையின் சிறுபான்மைப் பார்வை**

சார்பு கொள்கை அனைத்து நவீன கொள்கைகளையும் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் இக்கொள்கைகளே நவீன இயற்பியலுக்கு மாதிரியாய் கருதப்படுகிறது. ஐன்சுடீன்தான் சார்புக் கொள்கையை கண்டறிந்தவர் என்று பலர் கூறினாலும் சிலர் இவருக்கு முன்னரே தாங்கள் சார்புக் கொள்கைளைக் கண்டுள்ளோம் என்றும் கூறியிருக்கின்றனர்.

## 14.9. ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் (Albert Einstein) (மார்ச் 14, 1879 – ஏப்ரல் 16, 1955)

இவர் குறிப்பிடத்தக்க பயன்பாட்டுக் கணிதத் திறமைகள் கொண்ட ஒரு கோட்பாட்டு இயற்பியல் அறிஞர் ஆவார். இருபதாம் நூற்றாண்டின் மிக முக்கியமான அறிவியலலாராக பொதுவாகக் கருதப்படுகிறார். இவர் புகழ்பெற்ற சார்புக்கோட்பாட்டை முன் வைத்ததுடன், குவாண்டம் எந்தரவியல், புள்ளியியல் எந்திரவியல் மற்றும் அண்டவியல் ஆகிய துறைகளிலும் குறிப்பிடத்தக்க பங்குகளில் செசய்துள்ளார். ஒளி மின் விளைவைக் கண்டுபிடித்து விளங்கியமைக்காகவும், கோட்பாட்டு இயற்பியலில் அவர் செய்த சேவைக்காகவும் 1921-ல் இவருக்கு இயற்பியலிலுக்கான நோபல் பரிசு வழங்கப்பட்டது. மேலும் இவர் கொப்லி பதக்கம் (1925) மெக்ஸ் பிலாங்க் பதக்கம் (1929) பெற்றவர் ஜெர்மனியில், உல்ம், ஆர்ட்டம் பேர்க் கில் பிறந்தவர். 76 வயதில் 18.4.1995 – ல் பிரின்ஸ்டன், நியூ ஜெர்சியில் காலமானார்.

தற்காலத்தில் பொதுப் பயன்பாட்டில் ஐன்ஸ்டைன் என்ற சொல் அதிக புத்திக்கூர்மையுள்ள ஒருவரைக் குறிக்கும் சொல்லாக மாறிவிட்டது. 1999-ல் புதிய ஆயிரவாண்டைக் குறித்து வெளியிடப்பட்ட டைம்(இதழ்) ‘இந்த நூற்றாண்டின் சிறந்த மனிதர் என்ற பெயரை ஐன்ஸ்டீனுக்கு வழங்கியது.

## 14.10 பிரௌனியன் இயக்கம்

1905-ல் வெளிவந்த அவரது முதலாவது கட்டுரையான, நிலையான திரவத்தில் தொடங்கும் சிறிய துணிக்கைகளின் வெப்ப மூலக்கூற்றுக் கொள்கையில் வேண்டப்படும் இயக்கத்தில் அவரது பிரௌனியன் இயக்கம் தொடர்பான ஆராய்ச்சியை விவரித்தது.

அப்போது சர்ச்சைக்குள்ளாகியிருந்த திரவ இயக்கவியலைப் பாவித்து முதன்முதலில் அவதானிக்கப்பட்டு பல ஆண்டுகள் கடந்த நிலையில், இப்போதும் கூட திருப்தியான விளக்கம் கொடுக்கப்படாத இந்த பிரௌனியன் இயக்கமானது அணுக்கள் இருப்பதற்கான அனுமான ரீதியான ஆதாரமாகக் கொள்ளப்படலாம் என இக்கட்டுரை நிறுவியது. அத்துடன் அப்போது சர்ச்சையில் இருந்த இன்னொரு விடயமான புள்ளிவர எந்திரவியலையும் (Satistical Mechanics) இது தெளிவுபடுத்தியது.

இக்கட்டுரை வெளிவரும்முன் அணுக்கள் என்பது ஒரு பயன்பாட்டு கோட்பாடாக அங்கீகரிக்கப் பட்டிருந்தாலும், அணுக்களின் இக்கருத்தை தொடர்பாக பிற இயற்பியலாளர்களுக்கும் வேதியியலாளர்களுக்கும் இடையில் சூடான விவாதங்கள் நடைப்பெற்று வந்தன. அணுக் கொள்கைத் தொடர்பான ஐன்ஸ்டீனின் புள்ளிவிபரம் ரீதியான விளக்கம், சாதாரண நுணுக்குக் காட்டியினூடாக நோக்குவதன் மூலம் அணுக்கள் எண்ணும் வழியினைப் பரிசோதனையாளர்களுக்கு வழங்கியது. அணுக்கெதிரான கொள்கையை வில்கெல்ம் ஓஸ்ட்வால்ட் என்பவர் கொண்டிருந்தார். இவர் ஐன்ஸ்டீனின் பிரௌனியனின் இயக்கம் தொடர்பான முழுமையான விளக்கம் காரணமாகத்தான், தான் அணு தொடர்பாக நம்புதலைப் பெற்றிருந்தார் எனப் பின்னாளில் அர்னால்ட் சொமர்பெல்ட் என்பவரிடம் கூறியிருந்தார்.

ஐன்ஸ்டைனின் மிக புகழ்பெற்ற சமன் பாடான $E=mc^2$ சிறப்பு சார்பு கொள்கையின் மூலம் தருவிக்கப்பட்ட பொருண்மை – ஆற்றல் சமன்பாடு ஆகும். இது நிறை ஆற்றல் எவ்வாறு நிறையாக மாறுகிறது, நிறை எங்கே போகிறது என்பதயும் விளங்குகிறது. மேலும் இச்சார்பியல் கொள்கையின் மூலம் கால-வெளி வரைபடத்தை வரைய ஏதுவாகிறது. இது கால பயணம் போன்ற சுவாரசியமா கருத்துகளுக்கு அடிகோலுகிறது.

## 14.11. இலக்கியத்தில் அறிவியல் வழி அணுகுமுறை

இன்றைய உலகில் அறிவியலின்’ சாதனைகள் எல்லாத் துறைகளிலும் எல்லாத் தளங்களிலும்’ அது தடம் பதித்திருக்கிறது.

உணர்வுக்கும் உணர்வுப்பூர்வமான அழகுக்கும் உள்ளார்ந்த படைப் பாற்றலுக்கும் உரிமை பூண்ட இலக்கியத்திலும் கூட அறிவியல் அழுத்தமாகத் தாக்கம் கொண்டுள்ளது. பொதுவாகக் கலை இலக்கியத்தின் படைப்பாக்க முறைகளுக்கும் உணர்வு நிலைகளுக்கும் மாறுபட்டதாக அறிவியல் கருதப்படுவது இயல்பு. ஆயின் அது இலக்கியத்தின் தளங்களிலும் பார்வையிலும் மாற்றத்தையும் விசாலத்தையும் ஏற்படுத்தி வருகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. எனவே, கலை-இலக்கியத்தை அறிவியலுக்குப் புறம்பானதாக, எதிர் எதிர்நிலையில் வைத்துப் பார்ப்பது என்பது இனி முடியாது இரண்டும் வித்தியாசமானவையாக இருக்கலாம். ஆனால் முழுவதும் முரண்பட்டவை அல்ல: தொடர்பு கொண்டவை. சற்றுக்காலம் முன்வரை, புகழ்பெற்ற பல சிந்தனையாளர்களும் திறனாய்வாளர்களும் கலை இலக்கியத்தையும் அறிவியலையும் முரண்படுத்திப் பார்த்தனர். இன்று இரண்டையும் தொடர்புபடுத்திப் பார்க்க முயலுபவர்களே அதிகம்.

நவீன தகவல் தொடர்பு சாதனங்கள் மூலமாகவும், புதிய அதிதிறன்கள் மூலமாகவும அறிவியல், கலை-இலக்கியத்திற்குச் சாதனங்கள் சமைத்துத் தருவது ஒரு பக்கம் இருக்க , அதுவே பாடுபொருளாக உள்ளடக்கமாக அமைந்து வருவதனை முன்னேறிய நாடுகளில் காணலாம். அறிவியல் புனைகதை (Science Fiction) எனும் இலக்கிய வகைப்பாடு இன்று பிரசித்தம் தமிழில் ஆங்காங்கே (உதாரணம் -சுஜாதா) சில முயற்சிகள் காணப்பட்டாலும் - இன்னும் இங்கு இது முகிழ்க்கவில்லை. ஆனால் அறிவியலில் திறன் பெற்றவர்கள் இலக்கியத்தில் தீவிர ஆர்வங்கொள்வார்களானால’, இது ஒன்றும் அரிதல்ல. அறிவியலின் வீச்சுக்களை முன் எப்போதையும் விட இப்போது, இன்னும் வலுவாகப் படைப்பாளி எதிர்கொள்ள வேண்டியவனாகிறான் ஆயின், இங்கு இதுபற்றி ஆராய்வது நோக்கமல்ல. இலக்கியத்திற்கு அறிவியலின் பங்களிப்பில் இன்னொரு வலுவான முனையை இங்குப் பார்க்கலாம்.

இலக்கிய அணுகுமுறையும் அடிப்படையில் ஓர் அறிவாராய்ச்சி முறையேயாகும், திறனாய்வினை மேலும் கூர்மைப்படுத்துவதற்கும் செழுமைப்படுத்துவதற்கும் அறிவியலின் வழிப் பெறலாகும் சில வழிமுறைகள் வழிப்படுத்துகின்றன. இலக்கியத்தின் உண்மைகள் பற்றிய பிம்பங்களும் சிக்கல் நிறைந்த கலையுருவாக்க முறைகளும் அவை வெளிப்படுகிற விதங்களும் அறிவுச்சார்ந்த புதிய கோணங்களில் புலப்படும் என்பது அறிவியல் வழியிலான திறனாய்வின் அடிப்படைக் கருதுகோளாகும்.

அறிவியல் நெறி , இலக்கியத்தின் கட்டுமானங்களையும் பாடுபொருள்களையும் அறிவதற்கு ஒரு நல்ல சாதனமாகப் பயன்படுவதைப் பார்க்கலாம். தமிழில் இது சோதனை முயற்சிதான் ஆனால், பயன் தரக்கூடிய முயற்சியாகும். அறிவியலில் பல துறைகளும் பல கோட்பாடுகளும் உண்டு. இவற்றின் வழிமுறைகள் சில (ஓரளவு எச்சரிக்கையுடன்) இலக்கியத்தைப் புரிந்து கொள்வதற்கு உதவுகின்றன.

பரிமாணக் கோட்பாடு (Evolution Theory), உறுப்பியல் கொள்கை (Organic Theory) கணக் கோட்பாடு (Set Theory), நவீன தகவலியக் கோட்பாடு, சைபர் நேடிக்ஸ் முதலிய பல. திறனாய்வுக்கு உதவக் கூடியன. அதுபோலவே, சார்பியல் கோட்பாடு (Relativity Theory) இலக்கியத் திறனாய்வுக்கு ஒரு புதிய கோணத்தைத் தரக்கூடியது ஆகும். இக்கோட்பாடு, இலக்கியத் திறனாய்வுக்கு எவ்வாறு பொருந்தி வருகிறது என்பதைப் பார்ப்பதன் மூலம் திறனாய்வினுடைய ஒரு புதிய கோணத்தைத் இக்கோட்பபாடு, இலக்கியத் திறனாய்வுக்கு ஒரு புதிய கோணத்தைத் இக்கோட்பாடு, இலக்கியத் திறனாய்விற்கு எவ்வாறு பொருந்தி வருகிறது என்பதைப் பார்ப்பதன் மூலம் திறனாய்வினுடைய ஒரு புதிய பரிமாணத்தை இங்கே பார்க்கலாம். காலம் இடம் என்ற தளங்களும், அவற்றின் இணைவும் சார்புமாகிய பண்புகளும் திறனாய்வில் இதுகாறும் கவனத்தைப் பெறவில்லை. பெற்றாக வேண்டியது மிகவும் அவசியம். சார்பியல் கோட்பாடு இதற்கு பெரிதும் உதவகிறது. தத்துத்தையும் உளப்படுத்தியுள்ள இவ்வறிவியல் கோட்பாடு, திறனாய்வு உலகில் ஒரு புதிய பாதை அமைக்கும்.

அறிவியல் உலகில் இருபதாம் நூற்றாண்டில் திருப்பத்தில் கிடைத்த பெருந்திரவியம்-சார்பியல் கோட்பாடு (’Theory of Relativity) பற்றிய அறிவிப்பாகும். பௌதீகவியலில் ஒரு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. அக்கோட்பாடு, காலமும் இடமும் சார்பிலாத் தனிமுதலகளாய் (absolute) கருதப்பட்டு வந்தமைக்கு மாறாக, அவை சார்புடையவையே என்பது நிலைநிறுத்தப்பட்டது. கலீலியோ, மிக்கேல்சன் ஆகியவர்களைப் பின்பற்றித் தமது 25-ஆம் வயதில், ஐன்ஸ்டீன் (Einstein) சார்பில் கோட்பாட்டை (1905-இல்) உலகுக்கு அறிவித்தார். மேல்-கீழ், வலம்-இடம், நீண்டது-குறுகியது, காலை-மாலை போன்ற பல கருத்து நிலைகளும், காலம்-இடம் என்பவற்றை ஒட்டிறெழுகின்ற சார்பு நிலைக் கருத்துக்களே, அது போலவே, ஒரு பொருள் ஒரு இடத்தை விட்டு இன்னொன்றிற்கு இடம் பெயர்கிறது’ என்ற கருத்தும் சார்பானதே. அதாவது ஒரு பொருள், இடம், பெயர்ந்திருக்கிறதாய்ச் சொல்கிறோம் என்றால், அது பிற பொருள்களைச் சாரந்த தனது இடைநிலையை மாற்றிக் கொண்டுவிட்டது என்பதே பொருள் பொருள்களின் இயக்கம், புறவிசைகளால் (external forces) பாதிக்கப்படுகிறது. அப்பொருள், ஓய்வு நிலையிலோ, நேர்கோட்டு பாதையிலான ஒரு சீரான இயக்கத்திலோ இருப்பது என்பது அதனுடைய சடத்துவம் அல்லது நிலைமவிதி (Law of interia) ஆகும் .அத்தகைய பொருள் மீது, உராய்வு விசை (forces of riction) எனும் புறவிசை செயல்படுகிற போது, அது பாதிப்புக்குள்ளாகிறது. எனவே, பொருளின இயக்கம் மற்றும் அதன் திசைவேகம் (velocity) என்பது, புறவிசையின் தன்மைகளையும் அதன் நிலைம விதியினையும் சார்ந்து அமைகிறது.

ஆனால் அன்றாட வாழ்வில் இந்த விதியின் செயற்பாடு நேரடியாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்வதில்லை. இருப்பினும்,

இயல்பாகவும் வலுவாகவும் அது மனிதக் கருத்தோட்டத்தினும் சிந்தனைமுறையிலும் பிணைந்துள்ளது. எனவே, இதனைக் கண்டறிய வேண்டுமானால் புறவிசையினால் தாக்குறும் பொருளின் இயக்கத்தை அனுமானிப்பது அவசியமாகிறது. இதனைப் பரிசோதித்துத் தீர்மானிக்க வேண்டும். அந்தப் பொருளிலிருந்து விலகித் தனியே அமைகிற ஒரு தளம் தேவை, அது மேற்கூறிய பொருளினைப் போலவல்லாமல் ஓய்வு நிலையில் (state of rest ) உள்ள ஒரு பொருளாக இருக்க வேண்டும். இதனை, 'நிலைம ஆய்வுச் சட்டகம்' (referemcce frame) எனலாம். இச்சட்டத்தினை ஓய்வுநிலையில் அல்லது ஒரே சீரான இயக்கத்தில் இருப்பதாய்க் கொண்டு, பரிசீலனைக்குரிய பெருளின் இயக்கத்தினைக் கண்டறியலாம். அவ்வாறு பல நிலைமச் சட்டங்களிலிருந்து, இவ் இயக்கத்தினைப் பார்க்கும்போது, எந்தச் சட்டகத்திலிருந்து பார்வையிடப்படுகிறதோ அதனைச் சார்ந்ததாக இவ்வியக்கம் அமைகின்றதை அறியலாம்: இதுவே சார்பியல் இயக்கக் கோட்பாடு என்றழைக்கப்படுகிறது. காலம்-இடம் என்பனவற்றில் இது புதிய கண்ணோட்டத்தைத் தந்துள்ளது.

காலம், இடம், புறவிசை, திசைவேகம் முதலியன. சடப்பொருள்களுக்கு மட்டுமின்றி மேலும் கலை, இலக்கியம ஆகியன அமைய முடியாததல்லவா? இலக்கியத்தில் இடம்பெறுகின்ற செய்திகள் , அவற்றின் செய்திகள் , அவற்றின் தன்மைக்கும் தேவைக்கும் ஏற்ப, விசாலமான அல்லது இறுக்கமான பரப்புக்களைக் கொண்டிருக்கும், குறிப்பாகக் கதையமைப்பும், நீட்சியும் கொண்ட இலக்கிய வகையாகிய நாவலுக்கு இத்தகைய எல்லைப்பரப்பும் அதன் படைப்பாக்க நிகழ்ச்சிகளும், நீண்ட காலப்பகுதிகளில் பல களங்களில் நடைபெறலாம். இவற்றை நாவலின் கட்டமைப்புக்குள் சிதைவுறாமல் கொண்டு வரவேண்டும். இதனைச் சார்ந்தே நாவலின் வெற்றி அமைகின்றது.

பதினேழாம் நூற்றாண்டின் காலப்பகுதியில், தெலுங்கு மொழியினத்தவர்கள், ஆந்திரப்பகுதியிருந்து தமிழ்நாட்டின் தெற்குபகுதியில் குடியேறத் தொடங்குவதிலிருந்து கும்பினியார் ஆட்சி இங்கு கால்கொள்ளத் தொடங்கிய 1858 வரையிலான அம் மக்களின் அனுபவங்களைக் கதைவடிவமாக்கியுள்ளது. கி.ராஜநாராயணனிள் 'கோபல்ல கிராமம்' எனும் நாவல். நாட்டுப்புற மக்களின் கதை சொல்லுகின்ற மரபைப் பின்பற்றி அமைந்தது. இந்நாவல் ஏறத்தாழ இருநூறு ஆண்டுக்காலப்பகுதி, இந்நாவலின் கட்டமைப்புக்குள் இடம்பெற வேண்டியதாகிறது.

கம்மவார்களில் சில குழுவினர், ஆந்திரப்பகுதியிலிருந்து இடம்பெயர்ந்து, தமிழகத்தின் தென்பகுதியில் காடு கெடுத்து நாடாக்கி பயிர் செய்து இனம் பெருக்கி, வழக்கு நடத்தி நிர்வாகம் செய்து, வாழ்ந்த வாழ்க்கையென்பது-நாவலின் இயக்கம. அதற்குரிய நிகழ்ச்சிகளை நிரல்படுத்தி ஒரே சீரான இயக்கமாகக் காட்டுதல் அல்லது படைத்தல் என்பது நிலைம விதி என்பதாகக் கொள்ளுவோமேயானால், நிகழ்ச்சிகளுக்குரிய மனிதர்களின் அனுபவ, ஆளுமைவேறுபாடுகளும்,

நிகழ்ச்சிக்குரிய மனிதர்களின் அனுபவ, ஆளுமைவேறுபாடுகளும் , நாவல் எனும் கட்டுமானத் தேவையும், அழகியலும், இதன் புறவிசைகளாகக் கொள்ளத் தகுந்தனவையாகும். இந்தப் 'புறவிசைகளின் தூண்டுதலினால் நிகழ்ச்சிகளின் திசைவேகம் துரிதப்படுத்தப்படுகிறது. இந்த துரித கதியே நாவலின் கட்டமைப்பில மிக முக்கியமானதாகும்.

தன்வீட்டிலிருந்து கோபித்துக்கொண்டு வெளியேறிய கம்மாளர் இனத்துப் பெண்ணொருத்தியை நகைக்கு ஆசைப்பட்டுக் கொன்றுவிட்ட ஒருவனை ஊர்ச்சபையில் விசாரிப்பது என்பது நாவலின் தொடக்க நிகழ்ச்சி இதனை அதன் போக்கில் போக விடாது.

## 14.12 சார்பியல் கோட்பாட்டில் காலமும் இலக்கியமும்

எதையும் ஒருவர் கண்டுபிடித்த பின்னர் எங்களுக்கு அன்றே தெரியும் இது என்று சொந்தம் கொண்டாடுவது நியாயம் இல்லைதான் இருந்தபோதிலும் காரண காரியங்களை ஆராய்வதில் தவறே இல்லை.

காலம் (Concept of time) என்பது பற்றி மேலை நாட்டினருக்கு பழங்காலத்தில் கொஞ்சமும் விஞ்ஞான பூர்வ அணுகுமுறை கிடையாது உலகமே கி.மு. 4004 –ல் தோன்றியது என்ற கிறிஸ்துவ மதம் பிரச்சாரத்துக்கு ஏற்றப்படி எல்லாவற்றையும் எழுதி வந்தனர் (tamilandvedas.com/tag/written by London Swaminatha – Swami – 48@ yahoo.com. Date 28July – 2014 time uploaded in London 10.16

நாமோ உலகம் வியக்கும் கொள்கையை புராணங்களிலும் அனைத்துவகை இலக்கிய இலக்கணங்களிலும் எழுதி வைத்துள்ளோம் 'ஒருவன் மலை உச்சியில் ஏறி நின்று கொண்டு ஓடும் ஒரு நதியைப் பார்தால், எப்படி ஆற்றில் சென்ற தண்ணீர், செல்லுகின்ற தண்ணீர் செல்ல இருக்கும் நீர் ஆகிய மூன்றையும் பார்ப்பானோ அதுபோல முனிவர்கள் முக்காலத்தையும் காண முடியும் என உணர்த்தினோம். ஆனால் நதிக்கரையில் நிற்பவனுக்கு அப்பொழுது ஓடும் தண்ணீர் நிகழ்காலம் (Present) மட்டுமே தெரியும். இதே போல் டேப்ரிகார்டரில் அல்லது வீடியோ ரெகார்டரில் பதிவு செய்து எப்படி பார்க்கிறோமோ அது போல் சந்யாசிகளும் காலம் என்னும் விஷயத்தில் செய்ய முடியும் என்றும் சொல்லிக் கொடுத்தோம்.

### 14.12.1 பகவத்கீதையில்

பகவத்கீதையில் விஸ்வரூப தரிசனம் என்னும் அத்தியாயம் இதை மெய்ப்பிக்கிறது. நிகழப்போகும் நிகழ்ச்சிகளை அர்ஜுனனுக்கு முன்கூட்டியே காட்டி விடுகிறான் கண்ணபிரான் இப்பொழுது கருந்துளைகள் (BLACKHOLE பிளாக் ஹோல்) ஜோடியான பிரபஞ்சம் (Parallel universe பாரல்லல் யுனிவெர்ஸ்) என்னும் விஷயங்கள் பற்றி வியப்பான செய்திகள் வெளியாகி வருகின்றன பகவத்கீதை விஸ்வரூப தரிசன யோகம் இவைகளை எல்லாம் விளக்கும் வண்ணம் அமைந்துள்ளது. பிளாக்ஹோலில் மஹத்தான வேகத்தில் எல்லாப் பொருட்களும் உள்ளே இழுக்கப்பட்டு மாயமாய் மறைவது போல

விஸ்வரூபத்தின் வாயில் படைகள் அனைத்தும் மஹத்தான வேகத்தில் நுழைந்து மறைகின்றன.

முதல் அணுகுண்டு வெடித்ததைப் பார்த்தவுடன் அணுகுண்டின் தந்தை என்று அழைக்கப்படும் ராபர்ட் ஓபன் ஹைமரும் பகவத்கீதை ஸ்லோகத்தைச் சொல்லி வியந்தார் (ROBERT OPPEN HEIMER, THEORETICAL PHYSICIST) ஸ்லோகம் இதோ…

வானத்தில் ஆயிரம் சூரியன்களின் பிரகாசம் ஒரே நேரத்தில் உதிக்குமானால் எவ்வளவு பிரகாசம் இருக்குமோ அவ்வளவு பிரகாசத்தில் விஸ்வரூபம் தோன்றியது (கீதை 11-12)

ரவீந்திரநாத் தாகூர் உள்ளிட்டவர்களை ஐன்ஸ்டீன் சந்தித்து அளவளாவியுள்ளார். அவருடைய நூல் நிலையத்தில் ப்ரம்ம ஞான சபையில் வெளியிட்ட ‘தி ஸீக்ரெடம் (The Secret Doctrine by Theosphrical Society) என்னும் புத்தகம் இருந்தது. இது இந்து மத நூல்களை அவர் விரும்பிப் படிக்கும் பழக்கத்தைக் காட்டுகிறது. ஆனால் இதில் சார்பியல் கோட்பாட்டுக்கான மூலம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. இருந்த போதிலும் நமது நூல்களைப் படித்தால் சார்பியல் கொள்கையை உருவாக்கத் தேவைப்பட்ட டுயவநசயட வூமைெ மமைெ ‘லேடரல் திக்கிங்’ பன்முக சிந்தனை கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

## 14.12.2 தமிழ் இயக்கியங்களில் இயற்பியல்

சார்பியல் கோட்பாடுகளை இலக்கியங்களில் காலமும் இலக்கிமும் எனும் கோணத்தில் நோக்கும் பொழுது சங்க காலம் தொடங்கி தற்காலம் வரை இலக்கிய இலக்கண நூல்களில் காலம் பற்றிய செய்திகள் ஏராளமாக தமிழில் அறிவு சார்ந்த நிலையில் இடம் பெற்றுள்ளன. பௌதீக (இயற்பியல்) நோக்கில் கூறப்போனால் பிரபஞ்சம், ஞாயிற்று மண்டிலம், நட்சத்திரங்கள், கோள்கள் பற்றிய குறிப்புகள், அண்டம் பற்றிய செய்திகள் யாவும் இலக்கியத்தின் ஊடே அமைந்திருப்பதை காணமுடிகிறது. நேரத்தை குறிக்கும் மணற் கடிகை இருந்ததை அறிய முடிகிறது. ஞானசம்பந்தரின் கோளறு திருப்பதிகம், மாணிக்கவாசகரின் ‘திருவண்டப்பகுதி’ ஆகியவை கோள்கள் பற்றிய செய்திகளை அறிவியல் நுட்பத்தோடு கூறியிருப்பது வியப்பளிக்கிறது, மழை வரும் நேரத்தை துள்ளியமாக கூறும் ‘ பள்ளுநூல்கள்’ காற்று, மேகம் மண்ணின் மணம் ஆகியவற்றை வைத்தும் மரங்களின் அசைவு கொண்டும் கணித்து கூறியுள்ள செய்திகள் வியப்பளிக்கின்றன. ஒலியின் வேகத்தைவிட ஒளியின் வேகம் விரைந்து நம்மிடம் சேரும் என்பதை மின்னல் மற்றும் இடியை வைத்தும் பூக்கள் மலரும் தருணம் கண்டு பொழுதை அறிந்ததையும் அறிகிறோம்.

காலத்தை பெரும் பொழுதாகவும் சிறுபொழுதாகவும் பிரித்து கணித்து கூறியுள்ள பாங்கினை தொல்காப்பிய காலம் தொட்டு நாம் அறிந்து வருகிறோம் சிறுபொழுது நாலின் கூறு, பெரும்பொழுது

ஆண்டின்கூறு, சிறுபொழுதினை அறிவதற்குரிய வரையரைகளை நோக்கும் பொழுது ஆச்சர்யமாக உள்ளது. சங்க இலக்கியங்களில் கடிகாரம் இருந்த செய்தியும், சங்க இலக்கியத்திலும் மற்றுமுள்ளஇலக்கியங்களிலும் வானூர்திபற்றிய குறிப்புகள் உள்ளதை அறிகிறோம். அவை இயற்பியல் எனும் அறிவியல் துறையாக வளர்ச்சி பெற்றுள்ளது.



குறிப்பு

**வானவியல்**

இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த சங்கத் தமிழர் மேடம் (Aries), இடபம்(Taurus), மிதுனம்(Gemini), கடகம்(Cancer), சிம்மம் (Leo), கன்னி (Virgo), துலாம்(Libra), விருச்சிகம் (Scorpius), தனுசு (Segattarius), மகரம் (Capricornus), கும்பம் (Aquarius), மீனம்(Pisces), முதலான உடுக்கணங்களில் (Constellations) துல்லியமாகப் பொலிவும் அசுவினி (Beta Arietis), பரணி (41-Arieties), கார்த்திகை (Pieiades), ரோகிணி (Aldeberan), மிருகசீரிடம் திருவாதிரை (Betalgeuse), புனர்பூசம் (Pollux), பூரம் (Dekta Canceri), ஆயில்யம் (Epsilon Hydrea), மகம் (Regulus), பூரம் (Delta Leonis), உத்திரம் (Denibolo), அஸ்தம்(Delta Corvi), சித்திரை (Alpha virginis), சுவாதி (Aruturus), விசாகம் (Alpha Libra), அனுஷம் (Delta Scorpi), கேட்டை (Alpha Scorpi), மூலம் (Lamda Scorpi), பூராடம் (Delta Sagattari), உத்திராடம் (Gamma Pegasii), ரேவதி (Delta Piscium) ஆகிய 27 நாள் விண்மீன்களையும் புதன் (Mercury), வெள்ளி (Venus), செவ்வாய் (Mars), வியாழன்(Jupiter), சனி (Saturn) ஆகிய கோள்மீன்களையும்(Planets), அவற்றிலும் பொலிவு மிகத் தோன்றும் திங்களையும்(Moon) ஒளிமிக்க ஞாயிறு (Sun) விண்மீன்களையும் பற்றி அறிந்திருந்தனர் எனலாம்.

நாள், கோள், திங்கள், ஞாயிறு, களையழல் (பதிற்றுப் பத்து 2:14) என வரும் வான்பருப் பொருட்களின் வரிசையில் ‘கனையழல்’ என்பதென்ன? பல இலட்சம் சூரியன்கள் திரண்ட உடுமண்டலக் கொத்தான ‘காலக்சி (Galaxy) தானோ? ஆம், கனையழல் பண்டைத் தமிழர் கண்டறிந்த உடுமண்டலம்.

அவ்வாறே, சிறுபாணாற்றுப்படையில் வரும்

**“வாணிற விசும்பில் கோள்மீன் சூழந்த**
**இளங்கதிர் ஞாயிறு”** **(242-243)**

என்ற வரிகளே பிற்காலத்தில் கெப்ளின் ஞாயிறு நாயகக் கோட்பாடு (முநிடநச’ள ஞரவெ-ஊநவெநசநன வுநழசல) எனலாம்.

மேலும், கி.பி.16 ஆம் நூற்றாண்டு வாக்கில் வடிவமைக்கப்பட்ட தற்காலத்திய சூரியக் கடிகை(Sun dial) தொழில் நுட்ப ஆதாரம் நெடுநல்வாடையிலும் இடம் பெறக் காண்கிறோம்.

வான நடுவரையாகிய சூரியவீதி (Ecliptic)க்குச் செங்குத்தாக நிறுத்தி வைக்கப்பட்ட கோலினைச் சுற்றி வட்டம் அமைத்து கிழக்கு,

குறிப்பு

மேற்கில் வரையிட்டு, அதில் விழும் நிழல் அளவைக் கொண்டு காலத்தைக் கணிக்கும் உத்தியினை நம் முன்னோர் அறிந்திருந்தனர்.

**விரிகதிர் பரப்பிய வியன்வாய் மண்டிலம்**
**இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்**
**பொழுதிற் சாரா அரைநாள் அமையத்து**
**நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டு**
**தேஎங் கொண்டு தெய்வம் நோக்கி**
**பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து''**

**(நெடுநல்வாடை:73:76)**

வாழ்ந்தனர் நம் முன்னோர். ஆயின் இன்றைய நவீன அணுவியல் கடிகாரம் (Atomic Clock)நம் தொழில் நுட்ப வளர்ச்சி.

அவ்வாறே, ''தினையளவு போதாச் சிறுபுல்நீர் நீண்ட பனையளவு காட்டும் படிமம்'' (llmage) பற்றிய கபிலர் சிந்தனையே இன்று அண்டவெளி ஆராய்ச்சியில் காலங்காட்டிகளாக விளங்கும் தொலைகாட்டி வில்லைகள்!

''வலவன் ஏவா வானவூர்தி'' (புறம் 27:9) என்கிற உறையூர் முது கண்ணன் சாத்தனார் கருத்தோட்டமே இன்றைக்கு வலவன் (Pilot) அல்லது ஓட்டுநர் இன்றி விண்சுற்றித் திரும்பும் ரஷிய நாட்டு எனர்ஜியா – புரான் (Energia - Buran) அதிபிரம்மாண்ட விண்வெளி ஓடத்தின் முன்னோடிச் சிந்தனை எனலாம்.

தவிர ஆடு, எருது, இரட்டையர், நண்டு, சிங்கம், தேவதை, துலாக்கோல், தேள், அம்பு, கடலாழி, குடம், மீன் ஆகிய உருவங்களில் அமையும் உடுக்கணங்களான பன்னிரண்டு இராசிகளின் வழியே சஞ்சரிக்கும் சூரியனோடு முரண்பட குளிர்விளங்கும் சந்திரனாகிய ''செல்வனொடு நிலை இய உரோகிணி'' யை நினைத்துத் தன்னிலைக்கு இரங்கும் பாண்டிமாதேவி நிலையை நக்கீரர் நெடுநெல்வாடையில் சித்திரிக்கிறார்.

**''வானூர் மதியம் சகடமையை வானத்து**
**சாலி ஒருமீன் தகையாளைக் கோவலன்''**

**(சிலம்பு: மங்கல வாழ்த்து:50-51)**

மணம் புரிவதாகப் பாடுகிறார் இளங்கோ அடிகள். சந்திரன் உரோகிணி (சகடம்) இணைகின்ற நாளில் சாலினி மீனாகிய அருந்ததி ஒத்த கண்ணகியைக் கோவலன் மன்றல் புரிந்ததாக வரலாறு.

வடதிசையின் சப்தரிஷி மண்டலத்தின் பெருங்கரண்டி (Great Dipper) அல்லது பெருங்காடி (Ursa Major) வடிவ உடுக்கணத்தில் வால் நுனியிலிருந்து இரண்டாவதான 'மிர்சார்' (Mizar) எனும் வசிட்ட விண்மீனை நெருங்கியுள்ள அல்கோர் (Alcor) எனும் அருந்ததி விண்மீனே ''கடவுளொரு மீன் சாலினி'' (பரிபாடல் 5:44) என்றும், ''விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த செம்மீன்'' (பதிற்றுபத்து 31:28) என்றும் சங்கத் தமிழர் வியந்து போற்றினர்.

குறிப்பு

**“கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்**
**விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்”**
**(சிலம்பு:நாடுகாண்காதை 102-103)**

வற்றாது காவிரி என்பது இளங்கோ கூற்று. இங்கு கரியவன் - சனி, புகைக்கொடி தூமகேது. வால்விண்மீன். எனினும் இந்த இடத்தில் வெள்ளி என்பது வடதுருவ விண்மீனையே சுட்டுவதாகும் சுக்கிரனை அன்று. பெருங்கரண்டி வடிவ சப்தரிஷி மண்டல முனை விளிம்பின் இரண்டு விண்மீன்களை இணைக்கும் நேர்கோடு சுட்டும் திசையில் அடிவானில் தோன்றும் போலாரிஸ் (Polaris) விண்மீனே இன்று நம் வடவிண்மீன்.

**சார்பியல் கோட்பாடும் அசோக மித்திரனின் காலமும் ஐந்து குழந்தைகளும் சிறுகதை – ஒப்பாய்வு.**

ஒப்பிலக்கியக் கல்விக்கு ஹெச்.ஹெச்.ஹென்றி ரிமாக் கூறிய வரைவிலக்கணத்திற்கு ஏற்ப, ஒரு கையில் சிறுகதையையும் மற்றொரு கையில் சார்பியல் தத்துவத்தையும் எடுத்துக்கொண்டு ஆராய்கிறது இக்கட்டுரை.

சார்பியல் தத்துவம் காலம் பற்றித் தரும் விளக்கத்தின் அடிப்படையிலும் காலத்தின் இயக்கம் நேர்க் கோட்டுத் தன்மையதா? முன்னும் பின்னும் தாவிச் செல்லும் தன்மையதா? கடந்த காலத்தின் தாக்கம் நிகழ் காலத்தில் உண்டா? இல்லையா? எதிர்காலம் பற்றிச் சார்பியல் கோட்பாடு கூறும் கருத்துகள் போன்றவற்றின் அடிப்படையில் அசோகமித்திரனின் ‘காலமும் ஐந்து குழந்தைகளும்’ என்ற சிறுகதை ஆராயப்படுகிறது.

ஒரு இக்கட்டான, விரைந்து செயல்பட வேண்டிய சூழலில் காலத்தின் இயக்கம் பாய்ச்சலாகவும் கதை மாந்தரின் உளநிலைக்கு ஏற்ப மெதுவாய்ப் போவது போலவும் வேகமாகப் போவது இக்கதையாசிரியர் காலத்தைப் பின்னணியாக மட்டுமின்றி கதை உராய்வைச் சித்தரிக்கிறார் என்பதை எடுத்துரைக்கும் கட்டுரையாளர் காலம் என்ற ஒன்று தனியாக வெளியே ஒன்றும் இல்லை. மனிதனின் செயல், எண்ணம் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்டது சார்புத் தன்மை உடையது. காலத்தை உணர்ந்து கொண்டிருக்கும் ஒரு மனிதனின் உணர்வும் அறிவும் தான் காலத்தின் வேகத்தை உணரமுடியும் என்பதை அசோகமித்திரனின் கதையில் வரும் நாயகன் - மறுநாள் நடக்கவிருக்கும் நேர்முகத் தேர்விற்கு புகைவண்டி பிடித்துச் செல்ல வேண்டிய அவசரத்தில் இருப்பவன் - செயல்களும் மன நிலைகளும் சொல்லப்பட்ட விதத்திலிருந்து எடுத்து விளக்குகிறார். மனம் எனும் நிலைமைச் சட்டகத்தின் மூலம் காலத்தின் வேக இயக்கத்தை உணரவும் உணர்த்தவும் இக்கதை முயற்சி செய்வதாகவும் அதற்கு புறவிசை உராய்வுகளின் விவரிப்பு துணையாவதையும் எடுத்துக்காட்டுகிறார்.

இக்கதையில் காலம் என்பதை நிகழ்காலத்தில் இருந்து எதிர் காலத்திற்கும் கடந்த காலத்திற்கும் தாவிச் செல்லும் ஒன்றாகக் காட்டி காலம் நிகழ்காலத்திலிருந்து முன்னும் பின்னும் பாயக் கூடியது என்ற உணர்வை ஏற்படுத்துகிறது. டிக்கட் கவுண்டரில் நிகழ்காலத்தில் நிற்பவன், திடுமென நிராசை, ஏமாற்றம் என்னும் எதிர்காலத்திற்கு தாவி, அதில் சஞ்சரிக்கும் போதே கடந்த காலத்திற்கும் சென்று மீண்டும் நிகழ்காலத்திற்கு வருவதாகக் காட்டுகிறார் கதாசிரியர் என்று விளக்கும் கட்டுரையாளர். இவ்வாறு ஒப்பீட்டுப் பார்வையுடன் சார்பியல் கோட்பாட்டுக் கூறுகளைச் சிறுகதையுடன் இணைத்துக் காணும்போது சிறுகதையின் நோக்கத்தை, சிறுகதையை முழுமையாகப் புரிந்து கொள்ள முடிகிறது. அதுவே ஒப்பீட்டாய்வின் பயன் என்று முடிவும் கூறுகிறார்.

## 14.13 சார்பியல் கோட்பாடுகள் காலமும் இலக்கியமும்-விளக்கம்

ஒப்பிலக்கிய உலகின் அறிவியல் சார்ந்த இலக்கிய ஒப்பீட்டு முறையை உலகளாவிய அளவில் கண்டுணர இக்கூறு துணை புரிகிறது.

அறிவு சார்ந்த இலக்கியங்கள் அறிவியல் சார்ந்தும் உள்ளதை காட்டுகிறது.

இயற்பியல் உலகில் ஆல்பெர்ட் ஐன்ஸ்டைன் அவர்களின் சார்பியல் கோட்பாடுகளில் காலம் பற்றிய அவரது கருத்துகள் இந்திய இலக்கியங்களிலும் குறிப்பாகத் தமிழ் இலக்கியங்களிலும் உள்ளதை அறியுமாறு இக்கூறு உள்ளது.

## கூறு: 14 வினா – விடை பயிற்சி

**I இரண்டு மதிப்பெண் வினா – விடை**

1. **நேரம் தொடர்பாக ஆரம்பத்தில் கருத்து வெளியிட்டவர்களுள் முதலிடம் பெறுபவர் யார்?**

   ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்

2. **நியூட்டனின் மூன்றாம் விதி என்ன கூறுகிறது?**

   'ஒவ்வொரு தாக்கத்திற்கும் எதிரானதும் சமமானதுமான மறு தாக்கம் உண்டு' என்பதாகும்.

3. **சிறப்புச் சார்பியல் கோட்பாட்டை இலகு தமிழில் கூறுவதாயின் எவ்வாறு கூறலாம்?**

   'நகரும் கடிகாரம் மெதுவாக இயங்கும்'

4. **ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் எதை கண்டு பிடித்ததற்கு நோபல் பரிசு பெற்றார்?**

